# பொருளடக்கம்

ஸ்ரீ:

ஸ்ரீக்ருஷ்ணாய நம:

# ஸ்ரீபாகவதம்.

## சதுர்த்த ஸ்கந்தம்.

### { ஸ்வாயம்புவ மனுவின் புதல்விகளுடைய ஸந்ததியைக் கூறுதல். }

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:— வாராய் விதுரனே! நீ ஸ்வாயம்புவ மனுவின் சரித்ரத்தையும் அவனுடைய ஸந்ததியையும் பற்றி வினவினாய். அதில் ஸ்வாயம்புவ மனுவின் சரித்ரத்தை மொழிந்து அவனுடைய ஸந்ததியைச் சொல்லுவதாகத் தொடங்கி முதலில் தேவஹூதியின் வ்ருத்தாந்தத்தை ஆரம்பித்துக் கபில சரித்ரம் வரையில் சொன்னேன். இனி மனுவின் ஸந்ததியைப் பற்றியே சொல்லுகிறேன், கேட்பாயாக. மனுவுக்குச் சதரூபையென்பவள் பார்யை. அவனுக்கு அந்தச் சதரூபையிடத்தில் ஆகூதியென்றும் தேவஹூதியென்றும் ப்ரஸூதியென்றும் பேர் பெற்ற மூன்று பெண்கள் பிறந்தார்களென்று முன்னமே மொழிந்தேன். அம்மூவரில் தேவஹூதியின் வ்ருத்தாந்தத்தை உனக்கு விரிவாகச் சொன்னேன். அம்மனு மன்னவன் தனக்கு ப்ரியவ்ரதனென்றும் உத்தானபாதனென்றும் இரண்டு புதல்வர்கள் இருப்பினும் இன்னம் புதல்வர்கள் வேண்டுமென்னும் விருப்பத்தினால், தன் புதல்வியாகிய ஆகூதியை 'இவளுக்குப் பிறக்கும் புருஷ ப்ரஜையை எனக்குப் புதல்வனாகக் கொடுக்கவேண்டும்' என்னும் ஏற்பாட்டுடன் ருசியென்பவருக்குக் கொடுத்தான். அதற்குச் சதரூபையும் அபிநந்தனம் செய்தாள். அவர் ப்ராஹ்மண ச்ரேஷ்டர்; ப்ராஹ்மணவர்ணத்திற்கு

ஏற்பட்ட தர்மங்களையெல்லாம் குறைவற அனுஷ்டித்துக் கொண்டு வருகையால் மிகுந்த ப்ரஹ்மதேஜஸ்ஸையுடைய வர்; மஹானுபாவர்; ப்ரஜாபதிகளில் ஒருவர். அவர் ஆகூதியைப் பார்யையாகப் பெற்றுக் கடுந்தவம் செய்து பகவானை ஆராதித்து அந்த ஆகூதியிடத்தில் ஒரு பெண் ணையும் ஒரு புதல்வனையும் பெற்றார். அவருக்குப் பிறந்த குழந்தைகளில் புருஷ ப்ரஜையானது யஜ்ஞஸ்வரூபியாகிய ஸாக்ஷாத் விஷ்ணுவின் அம்சமே. ஆனதுபற்றியே அவன் யஜ்ஞனென்னும் பேர் பெற்றான். ஸ்த்ரீப்ரஜை தக்ஷிணை யென்னும் பேருடையது. அது ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அம் சம். ஆகையால் அப்பெண்மணி என்றும் அழிவில்லா திருக்குந் தன்மையள். பிறகு ஸ்வாயம்புவ மனு தன் புதல் விக்குப் பிள்ளை பிறந்ததைக் கேட்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்து முன்பு தான் செய்த ஏற்பாட்டின்படி, மஹா தேஜஸ்வியாகிய அந்தப் புருஷ ப்ரஜையைத் தன் வீட்டிற்கு எடுத்துக்கொண்டு வந்தான். ருசியும் தக்ஷிணையென்கிற அந்தப் புதல்வியையே பிள்ளையாகப் பாராட்டி வளர்த்துக் கொண்டு வந்தார். அந்த ருசியின் புதல்வியாகிய தக்ஷிணை வளர்ந்து பர்த்தாவை மணம்புரிய விரும்புகையில், யஜ்ஞ ஸ்வரூபியும் ஸ்வாயம்புவமனுவுக்குப் புதல்வனுமாகிய யஜ்ஞ பகவான் அவளை மணம் புரிந்தான். (அவர்களிருவரும் ஒரு தாய் வயிற்றில் பிறந்தவராகையால் உடன் தோன்றல்க ளாயினும், ஸ்ரீ மஹா விஷ்ணுவும் ஸ்ரீ மஹா லக்ஷ்மியுமே அங்ஙனம் பிறந்தார்களாகையால் அவர்கள் ஒருவரை யொருவர் மணம்புரிவதில் விரோதமில்லை). அந்தத் தக்ஷிணை யும் யஜ்ஞனைக் கணவனாகப் பெற்று மிக்க மனக்களிப் புற்றிருந்தாள். யஜ்ஞனும் தக்ஷிணையைப் பார்யையாகப் பெற்று ஸந்தோஷம் அடைந்து அவளிடத்தில் பன் னிரண்டு புதல்வர்களைப் பெற்றான். அவர்கள் தோஷன், ப்ரதோஷன், ஸந்தோஷன், புத்ரன், சாந்தி, இடஸ்பதி, இத்மன், கவி, விபு, வஹ்னி, ஸுதேவன், ரோசனன் என்னும் பேருடையவர். அவர்கள் துஷிதரென்னும் பேர்பூண்டு

தேவதைகளானார்கள். அந்த ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் மரீசி முதலிய ரிஷிகளும் தேவர்களுக்குத் தலைவனாகிய யஜ்ஞனும் துஷிதரென்று பேர்பெற்ற தோஷன் முதலிய தேவர்களும் தமது ஸந்ததியை மேன்மேலும் வளர்த்தி லோக மர்யாதையைப் பாதுகாத்து வந்தார்கள். ஸ்வாயம்புவ மனுவின் புதல்வர்களாகிய ப்ரியவ்ரதனும் உத்தானபாதனும் மஹாதேஜஸ்விகள். அவர்களுடைய புதல்வர்களும் பேரன்மார்களும் கொள்பேரன்மார்களும் அவர்களுடைய வம்சங்களுமே மன்வந்தரம் முழுவதும் வ்யாபித்து உலகங்களைப் பரிபாலனஞ் செய்தார்கள். இங்ஙனம் ஆகூதியின் ஸந்ததியைச் சொன்னேன். ஸ்வாயம்புவமனு தன் புதல்வியாகிய தேவஹூதியைக் கர்த்தமருக்குக் கொடுத்தான். அவளுடைய வ்ருத்தாந்தத்தைப் பெரும்பாலும் நான் மொழியக் கேட்டனை யல்லவா? இனி ப்ரஸூதியின் வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. மஹானுபாவனாகிய மனு ப்ரஸூதியென்னும் புதல்வியை ப்ரஹ்மபுத்ரராகிய தக்ஷ ப்ரஜாபதிக்குக் கொடுத்தான். அந்த ப்ரஸூதியின் ஸந்ததியே பெரியதாகி வளர்ந்து மூன்றுலோகங்களிலும் நிரம்பிற்று. கர்த்தமருக்கு தேவஹூதியிடத்தில் கலை முதலிய பெண்கள் பிறந்தார்களென்றும், அவர்கள் மரீசி முதலிய ப்ரஹ்மரிஷிகளை மணம் புரிந்தார்களென்றும் முன்னமே மொழிந்தேனல்லவா? அந்தக் கர்த்தம புத்ரிகளின் ஸந்ததியைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. கர்த்தமருடைய புதல்வியாகிய கலை யென்பவள் மரீசி மஹர்ஷியின் பத்னி. அவள் கச்யபனென்றும் பூர்ணனென்றும் இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். அவ்விருவருடைய வம்சங்களால் இந்த ஜகத்து முழுவதும் நிறைந்ததாயிற்று. வாராய் நல்லியற்கையுடையவர்களில் சிறந்தவனே! அந்த மரீசியின் புதல்வர்களில் ஒருவனாகிய பூர்ணிமன், விரஜன் விச்வகன் என்று இரண்டு பிள்ளைகளையும் தேவகுல்யையென்கிற ஒரு பெண்ணையும் பெற்றான். த்ரிவிக்ரமாவதாரகாலத்தில் ஸ்ரீ விஷ்ணுவின் பாதத்தை

ப்ராஹ்மதேவன் விளக்கும்பொழுது பெருகின ஜலம் கங்கை யென்னும் நதியாய்ப் பாய்ந்ததல்லவா? அந்தக் கங்கா நதியே இந்தத் தேவகுல்யையென்பவள். கர்த்தமருடைய இரண்டாம் புதல்வியாகிய அனஸூயை அத்ரிமஹர்ஷியின் பார்யை. அவள் தத்தன், துர்வாஸஸ்ஸு, ஸோமன் என்று மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். அம்மூவரும் சிறந்த புகழுடையவர். அவர்களில் தத்தன் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அம்சம். துர்வாஸஸ்ஸு ருத்ரனுடைய அம்சம். ஸோமன் ப்ராஹ்மாவின் அம்சம்.

ஸ்ரீவிதுரர் சொல்லுகிறார்:—வாரீர் மைத்ரேய மஹர்ஷியே! ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாக்களும் தேவ ஸ்ரேஷ்டர்களுமாகிய ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் அத்ரியின் பார்யையிடத்தில் என்ன கார்யத்தை உத்தேசித்துப் பிறந்தார்கள்? அஜ்ஞானமாகிற பெரிய இருட்டைப் போக்குந் திறமை அமைந்தவரே! இதை எனக்கு மொழிவீராக.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:— பரப்ராஹ்மத்தை அறிந்தவர்களில் தலைவராகிய அத்ரிமஹர்ஷி ப்ராஹ்மதேவனால் ஜகத்தைப் படைக்கும்படி தூண்டப்பெற்றுத் தன் பத்னியாகிய அனஸூயையுடன் தவம் செய்வதற்காக ருக்ஷமென்னும் குலபர்வதத்திற்குப் போனார். பூங்கொத்துகள் நிறைந்த பலாசக்காடுகளும் அசோக வனங்களும் அமைந்திருப்பதும் நிர்விந்த்யை யென்னும் நதியின் ஜலப்ரவாஹ கோஷங்களால் நாற்புறங்களிலும் சப்தித்துக்கொண்டிருப்பதுமாகிய அந்த ருக்ஷபர்வதத்தில் அம்முனிவர் ப்ராணாயாமத்தினால் மனத்தை அடக்கிக் குளிர் வெய்யில் முதலிய வருத்தங்களை யெல்லாம் வென்று வாயுபக்ஷணம் செய்பவராகி ஒற்றைக் காலால் பூமியை ஊன்றிக்கொண்டு நூறுவர்ஷங்கள் வரையிலும் தவம் செய்தார். 'எவன் ஜகத்காரணனோ, அந்தப் பரம புருஷனையே நான் பரணம் அடைகின்றேன். அவன் எனக்குத் தன்னைப்போன்ற புதல்வனைக் கொடுப்பானாக' என்று சிந்தித்துக்கொண்டு தவஞ் செய்தார். அம்முனிவர் செய்யும் ப்ராணாயாமங்

களே காஷ்டங்களாகப் பெற்று எரிவதும் அவருடைய சிரக் கபாலத்தினின்று வெளிவருவதுமாகிய தவமாகிற அக்னியால் மூன்று லோகங்களும் பரிதபிக்கக் கண்டு, ப்ரபுக்களாகிய ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் தமது புகழ்களைப் பாடிக்கொண்டு வருகின்ற அப்ஸர மடந்தையர் முனிவர் கந்தர்வர் ஸித்தர் வித்யாதரர் உரகர் ஆகிய இவர்களால் சூழப்பெற்று அவ்வத்ரி மஹர்ஷியின் ஆச்ரமத்திற்கு வந்தார்கள் (அத்ரிமஹர்ஷி ப்ரஹ்ம ருத்ரர்களைக் கருதாமலிருப்பினும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாவான பரமபுருஷனைச் சரணம் அடைந்தமையால், ஸ்திதியை ஈச்வரன் தானே நேரில் நடத்திக்கொண்டிருப்பினும் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை ப்ரஹ்ம ருத்ரர்களுக்கு அந்தர்யாமியாயிருந்து நடத்துகிறுனாகையால் அவர்களும் அவ்விடம் வந்தார்கள்.) அந்த ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் ஸ்பஷ்டமாக ஸமீபத்தில் வந்து தோற்றுகின்றமையால் மிகவும் வெளிச்சங்கொண்டு ப்ரகாசிக்கின்ற மனமுடைய அம்முனிவர் ஒற்றைக்காலால் நின்றுகொண்டே தேவச்ரேஷ்டர்களான அவர்களைக் கண்டார். பிறகு பூமியில் தண்டம் போல் விழுந்து நமஸ்காரம் ஸமர்ப்பித்துப் பூஜைக்குரிய புஷ்பம் முதலியவற்றைக் கையில் ஏந்திக்கொண்டு ஸமீபத்தில் நின்று இங்ஙனம் ஸ்தோத்ரம் செய்தார். அப்பொழுது ருத்ரன் வ்ருஷப வாஹனத்தின்மேலும், ப்ரஹ்மா ஹம்ஸ வாஹனத்தின் மேலும் ஸ்ரீமஹாவிஷ்ணு கருடவாஹனத்தின் மேலும் வீற்றிருந்தார்கள். அம்முனிவர் அந்த வ்ருஷபம் முதலிய வாஹனங்களாலும் அவரவர்க்கு அஸாதாரணமாயுள்ள அடையாளங்களாலும் இவரிவர் இன்னின்னவரென்று தெரிந்துகொண்டார். மற்றும், அவர்கள் கருணை பொழிகின்ற கண்ணோக்கத்திலும் முறுவல் படைத்த முகத்திலும் தனக்கு அநுக்ரஹம் செய்ய வந்திருப்பதையும் அறிந்துகொண்டார். அம்முனிவர் அந்த ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களின் தேஜஸ்ஸினுல் தடைபட்ட கண்களை மூடிக்கொண்டு தேவச்ரேஷ்டர்களான அவர்க

ளிடத்தில் மனத்தை நிலை நிறுத்திக் கைகளைக் குவித்துக் கொண்டு இனிய உரையுடன் இங்ஙனம் ஸ்தோத்ரம் செய்யத் தொடங்கினார்.

அத்ரி மஹர்ஷி சொல்லுகிறார் :—ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்காக யுகங்கள் தோறும் ஸத்த்வ ரஜஸ்தமோ குணங்களில் ஒவ்வொன்றை ஒவ்வொருவராக ஏற்றுக்கொண்டு தேஹங்களை க்ரஹித்து விளங்கும் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களல்லவோ நீங்கள்? அத்தகையரான உங்களுக்கு நமஸ்காரம். நான் எவனை ஜக்தீஶ்வரனென்று அழைத்தேனே, அவன் உங்களில் யாவன்? அவனை எனக்குச் சொல்வீர்களாக. அனைவரிலும் மேன்மையுற்ற ஒரு பகவானையே நான் பலவகை உபசாரங்களால் ஆராதித்து, தன்னைப்போன்ற புதல்வனைக் கொடுக்கும்படி என் மனத்தில் நினைத்துக்கொண்டு உபாஸித்தேன். நீங்கள் ப்ராணிகளின் கண்களுக்குப் புலப்படாமை மாத்ரமேயன்றி அவர்களுடைய மனத்தினாலும் க்ரஹிக்க முடியாதவர். அப்படிப்பட்ட நீங்கள் மூவரும் எப்படி இங்கு வந்தீர்கள்? அதற்குக் காரணம் என்னவோ? தெரியவில்லை. அதை எனக்குச் சொல்வீர்களாக. என்மீது அருள்புரிவீர்களாக. நீங்கள் மூவரும் இங்கு வந்தமையால் எனக்கு மிகவும் ஆச்சர்யமாயிருக்கின்றது.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார் :—வாராய் ப்ரபுவான விதுரனே! இங்ஙனம் அவ்வத்ரிமஹர்ஷி மொழிந்த வசனத்தைக் கேட்டு தேவஶ்ரேஷ்டர்களான அந்த ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் மூவரும் அம்முனிவரைப் பார்த்துச் சிரித்து இனிய உரையுடன் இங்ஙனம் மறுமொழி கூறினார்கள்.

தேவதைகள் சொல்லுகிறார்கள் :—வாராய் முனிவனே! நீ எங்ஙனம் நினைத்தனையோ, அது அப்படியே ஆகுமன்றி மாறாது. நீ ஸத்யஸங்கல்பன். 'ஆனல் நான் ஒருவனை த்யானிக்கையில் நீங்கள் மூவரும் வந்ததற்குக்

காரணம் என்ன ?' எனில், சொல்லுகிறோம், கேட்பாயாக. வாராய் அந்தணர் தலைவனே! நீ ஜகதீஶ்வரனென்று எந்த ஒரு தத்த்வத்தை த்யானம் செய்கின்றனையோ, அந்தத் தத்த்வமே நாங்கள். (அந்த ஒரு தத்த்வமே தான் நேரே விஷ்ணுவாகவும் ப்ரஹ்மருத்ரர்களுக்கு அந்தர்யாமியாகவும் மூன்று மூர்த்திகளாய்த் தோன்றுகின்றது. நீ மூர்த்தி விசேஷங்களைப் பாராட்டாமல் ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகிற ஈஶ்வரனையல்லவா த்யானித்தனை? ஆகையால் மூன்று மூர்த்திகளாகி ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகிற அவ்வீஶ்வரன் மூன்று மூர்த்திகளாகத் தோற்றினனென்று நினைப்பாயாக. வாராய் முனிவனே! எங்கள் மூவருடைய அம்சங்களால் உனக்கு மூன்று புதல்வர்கள் பிறப்பார்கள். அம்மூவரும் உலகமெங்கும் புகழ் பெற்றிருப்பார்கள். மற்றும், அவர் உன் புகழைப் பரவச் செய்யப்போகிறார்கள். உனக்கு க்ஷேமம் உண்டாகுக.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அந்த ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் அம்முனிவர்க்கு அபீஷ்டமான வரத்தைக் கொடுத்து, அவரால் நன்கு பூஜிக்கப்பெற்று, அந்த அத்ரியும் அவர் பத்னியாகிய அனஸூயையும் பார்த்துக் கொண்டிருக்கையில் புறப்பட்டுப் போனார்கள். பிறகு ப்ரஹ்மாவின் அம்சத்தினால் ஸோமனும், விஷ்ணுவின் அம்சத்தினால் தத்தனும், ருத்ரனுடைய அம்சத்தினால் துர்வாஸஸ்ஸும் பிறந்தார்கள். மேல் அங்கிரஸ முனியின் ஸந்ததியைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. அங்கிரஸ்ஸின் பத்னி ஶ்ரத்தையென்பவள். இவள் கர்த்தமருடைய மூன்றாம் புதல்வி. அவள் நான்கு பெண்களைப் பெற்றாள். அவர்களில் ஒருத்தி ஸினீவாலியென்றும், மற்றொருத்தி குஹூவென்றும், மற்றொருத்தி ராகையென்றும், மற்றொருத்தி அநுமதியென்றும் பேர்பெற்றவள். அந்த அங்கிரஸ முனிவர்க்கு உசத்யரென்றும் ப்ருஹஸ்பதியென்றும் இரண்டு பிள்ளைகள் இருந்தார்கள். அவ்விருவரும் ஜ்ஞானுதி

குணங்களெல்லாம் அமைந்தவர்; பரப்ரஹ்மத்தில் நிஷ்டையுடையவர்; பெரும் புகழ்பெற்றவர். அவ்விருவரும் ஸ்வாரோசிஷ மன்வந்தரத்தில் இருந்தார்கள். புலஸ்த்யமஹர்ஷியின் பார்யை ஹவிர்ப்புக்கென்னும் பேருடையவள். இவள் கர்த்தமருடைய நான்காம் புதல்வி. அம்முனிவர் தன் பார்யையாகிய அந்த ஹவிர்ப்புக்கென்பவளிடத்தில் ஒரு புதல்வனைப் பெற்றார். அவரே அகஸ்த்யர். இவர் ஜன்மாந்தரத்தில் ஜாடராக்னியாயிருந்தார். அந்தப் புலஸ்த்ய மஹர்ஷிக்கு மற்றொரு புதல்வனும் உண்டு. அவன் விஸ்ரவஸ்ஸென்னும் பேருடையவன். அவன் பெருந்தவமுடையவனுயிருந்தான். அந்த விஸ்ரவஸ்ஸுக்கு இலபிலையென்பவளிடத்தில் ஒரு பிள்ளை பிறந்தான். அவனே யக்ஷர்களுக்கு ப்ரபுவாகிய குபேரன். அந்த விஸ்ரவஸ்ஸுக்குக் கைகஸியென்ற மற்றொரு பார்யையிடத்தில் ராவணன் கும்பகர்ணன் விபீஷணன் என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். புலஹருடைய பார்யை ரதியென்பவள். இவள் கர்த்தமருடைய ஐந்தாம் புதல்வி, பதிவ்ரதை. அவள் மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். வாராய் மஹாமதியான விதுரனே! அவர்களில் ஒருவன் கர்மஸ்ரேஷ்டனென்பவன். மற்றொருவன் வரீயானென்பவன். மற்றொருவன் ஸஹிஷ்ணுவென்பவன். க்ரதுவின் பார்யை க்ரியையென்னும் பேருடையவள். இவள் கர்த்தமருடைய ஆரும் புதல்வி. அவள் அறுபது பிள்ளைகளைப் பெற்றாள். அவர்கள் வாலகில்யர்களென்னும் பேர் பெற்றவர்; ப்ரஹ்மதேஜஸ்ஸினுல் ப்ரகாசிப்பவர்; மஹர்ஷிகள்; வானப்ரஸ்தாஸ்ரமத்தில் இருப்பவர். வஸிஷ்டருடைய பார்யை ஊர்ஜையென்னும் பேருடையவள். இவள் கர்த்தமருடைய ஒன்பதாம் புதல்வி. வாராய் பரந்தபனே! இவளே அருந்ததி. வஸிஷ்ட மஹர்ஷிக்கு இந்த அருந்ததியிடத்தில் ஏழு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் சித்ரகேதுவென்பவர் முதல்வர். அவ்வேழுபேர்களும் ப்ரஹ்மரிஷிகள்; பரிசுத்தமான ஆசாரமுடையவர்கள்; சித்ரகேது,

ஸ்ஹரோசி, விரஜன், மித்ரன், உல்பணன், வஸுப்ருத், யானன் என்னும் பேருடையவர். சக்தி முதலியவர்கள் அவ்வஸிஷ்ட மஹர்ஷிக்கே மற்றொரு பார்யையிடத்தில் பிறந்தவர். எல்லோரும் மஹாதேஜஸ்விகள். அதர்வ மஹரிஷியின் பார்யை சாந்தை யென்னும் பேருடையவள். இவளுக்குச் சித்தியென்ற மற்றொரு பேரும் உண்டு. அவளுக்கு த்ருதவ்ரதரென்றும் தத்யஞ்சரென்றும் அச்வ பிரஸ்ஸென்றும் மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். இதற்கு மேல் ப்ருகுவின் வம்சத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. ப்ருகுவின் பார்யை க்யாதியென்னும் பேருடையவள். இவள் கர்த்தமருடைய ஏழாம் புதல்வி. அவளிடத்தில் ப்ருகுவுக்கு தாதாவென்றும் விதாதாவென்றும் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அம்சமாகிப் பகவானிடத்தில் ப்ரீதியும் விருப்பமுமுடையவளுமாகிய ஒரு புதல்வியும் பிறந்தாள். மேருவென்பவர்க்கு ஆயதியென்றும் நியதியென்றும் இரண்டு புதல்விகள் இருந்தார்கள். அவர்களில் ஆயதியைத் தாதாவுக்கும், நியதியை விதாதாவுக்கும் கொடுத்தார். அந்த தாதாவுக்கு ஆயதியிடத்தில் ம்ருகண்டுவென்னும் புதல்வனும், விதாதாவுக்கு நியதியிடத்தில் ப்ராணனென்னும் புதல்வனும் பிறந்தார்கள். ம்ருகண்டுவுக்கு மார்க்கண்டேயரும், ப்ராணருக்கு வேதசிரஸ்ஸென்னும் முனிவரும் பிறந்தார்கள். கவியென்றும் உசனஸ்ஸென்றும் ப்ரஸித்தனாகிய சுக்ராசார்யன் வேதசிரஸ்ஸென்பவருடைய புதல்வன். இங்ஙனம் ப்ருகுவம்சத்தில் பிறந்தவனாகையால் அவன் பார்க்கவனென்று பேர்பெற்றான். வாராய் விதுரனே! மரீசி முதலிய இவ்வொன்பது மஹர்ஷிகளும் தமது வம்சங்களால் உலகங்களைப் பரவச்செய்தார்கள். இங்ஙனம் கர்த்தம ப்ரஜாபதியுடைய பெண்களின் ஸந்ததியை மொழிந்தேன். இதை ச்ரத்தையுடன் கேட்பானாயின் அவன் உடனே பாபங்களெல்லாம் தீரப் பெறுவான். ஆகையால் இந்தக் கர்த்தமருடைய தௌஹித்ர ஸந்ததி மிகவும்

மேன்மையுற்றிருக்கும். இங்ஙனம் மனுவின் இரண்டாம் புதல்வியாகிய தேவஹூதியின் ஸந்ததியைச் சொன்னேன். அம்மனுவின் மூன்றும் புதல்வியாகிய ப்ரஸூதியின் வம்சத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. ப்ரஹ்மாவின் புதல்வராகிய தக்ஷப்ரஜாபதி ப்ரஸூதியை மணம்புரிந்தார். அந்த ப்ரஸூதியிடத்தில் அவர் பதினறு பெண்களைப் பெற்றார். அவர்களெல்லோரும் மிகுந்த ஸௌந்தர்யமுடையவர். ஸமர்த்தராகிய அந்த தக்ஷர் அப்பெண்களின் அபிப்ராயத்தை அறிந்து அவ்ர்களில் பதின்மூன்று பேர்களை தர்மருக்கும், மற்ற மூன்று பேர்களில் ஒருத்தியை அக்னிக்கும், மற்றொருத்தியை ஒருவரை யொருவர் பிரியாதிருக்குந் தன்மையுள்ள பித்ருதேவதைகளுக்கும், மற்றொருத்தியை ஜ்ஞானேபதேசத்தினல் ஸம்ஸாரத்தினின்று விடுவிப்பவனுகிய ருத்ரனுக்கும் கொடுத்தார். அவர்களில் தர்மனுடையபத்னிகள் பதின்மூவரும் ஶ்ரத்தை, மைத்ரி, தயை, சாந்தி, துஷ்டி, புஷ்டி, க்ரியை, உந்நதி, புத்தி, மேதை, திதிக்ஷை, ஹ்ரீ, மூர்த்தி என்னும் பேருடையவர். அவர்களில் ஶ்ரத்தைக்கு ஶ்ருதனென்றும், மைத்ரிக்கு ப்ரஸாதனென்றும், தயைக்கு அபயனென்றும், சாந்திக்கு ஸுகனென்றும், துஷ்டிக்கு முதனென்றும், க்ரியைக்கு யோகனென்றும், உந்நதிக்கு தர்ப்பனென்றும், புத்திக்கு அர்த்தனென்றும், மேதைக்கு ஸ்ம்ருதியென்றும், திதிக்ஷைக்கு க்ஷேமனென்றும், ஹ்ரீக்கு ப்ரஶ்ரயனென்றும் பிள்ளைகள் பிறந்தார்கள். மூர்த்தியென்பவள் ஸமஸ்த நற்குணங்களுக்கும் விளைநிலமும் மஹர்ஷிகளுமாகிய நரனென்றும் நாராயணனென்றும் இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். அவர்கள் பிறந்தபொழுது இவ்வுலகமெல்லாம் மிகுந்த ஸுகம் உண்டாகப்பெற்று மஹத்தான ஆநந்தம் அடைந்தது. ஸமஸ்த ப்ராணிகளின் மனங்களும் திசைகளும் காற்றும் நதிகளும் ஸமுத்ரங்களும் தெளிவு பெற்றன. ஆகாயத்தில் தேவதைகள் வாத்யங்களை முழக்கினர்கள். மற்றும், புஷ்ப வர்ஷங்களைப் பெய்

தார்கள். அந்தப் பூமழைகள் பூமியில் விழுந்தன. முனிவர்கள் ஸந்தோஷத்துடன் ஸ்தோத்ரம் செய்தார்கள் கந்தர்வர்களும் கின்னரர்களும் பாடினார்கள். தேவஸ்த்ரீகள் நர்த்தனம் செய்தார்கள். இங்ஙனம் மேலான மங்களம் உண்டாயிற்று. அந்த நர நாராயணர்களைப் பார்க்க விரும்பி ப்ரஹ்மதேவன் முதலிய ஸமஸ்த தேவதைகளும் அவ்விடம் வந்து ஸமீபத்தில் நாற்புறத்திலும் சூழ்ந்து நின்று ஸ்தோத்ரம் செய்தார்கள்.

தேவதைகள் சொல்லுகிறார்கள்:—நீ இந்த ஜகத்தையெல்லாம் உன் மாயையால் உன்னிடத்திலேயே படைத்தனை. ஆயினும் அவற்றின் தோஷங்கள் உன்னிடத்தில் ஸம்பந்திக்கிறதில்லை. ஆகாயத்தில் வெளுப்பு கறுப்பு முதலிய பற்பல நிறங்கள் தெரியினும், வெவ்வேறான அந்த நிறங்களால் ஆகாயத்திற்கு எவ்வித விகாரமும் உண்டாகிறதில்லை. அங்ஙனமே இந்த ப்ரபஞ்சமெல்லாம் உன்னிடத்தில் உண்டானவையாயினும், அவற்றின் தோஷங்கள் எவையும் உன்னைத் தீண்டுகிறதில்லை. மற்றும், ஜீவாத்மாக்கள் அனைவரும் ஜ்ஞான ஸ்வரூபர்களாகையால் ஒருபடிப்பட்டவர்களே. தேவமனுஷ்யாதி சரீரங்களெல்லாம் கர்மத்தினால் விளைகின்றன. அவை ப்ரக்ருதியின் பரிணாமங்கள். அவை ஜீவாத்மாக்களுக்கு இயற்கையில் ஏற்பட்டவையல்ல. ஆகாயத்தில் வெண்மை கருமை முதலிய நிறங்கள் மேகத்தின் ஸம்பந்தத்தினால் தெரிகின்றனவன்றி அவை ஆகாயத்திற்கு இயற்கையில் ஏற்பட்டவையல்ல. அங்ஙனமே தேவ மனுஷ்யாதி பேதங்கள் ஆத்மாக்களுக்கு ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் ஏற்பட்டவையேயன்றி இயற்கையில் ஏற்பட்டவையல்ல. ஆகாயம் ஒருவாறாயிருப்பினும் பலவகை நிறங்களையுடைய மேகங்களின் ஸம்பந்தத்தினால் பலவாறாகத் தோற்றுவதுபோல், ஆத்மாக்களும் ஜ்ஞானமே வடிவமாயிருக்கப் பெற்றவராகையால் ஒருபடிப்பட்டவராயினும் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் விளைகின்ற தேவ மனுஷ்யாதி தேஹ பேதத்தினால் வெவ்வேறு உரு

வங்களையுடையவர்போல் தோற்றுகிருர்கள். அங்ஙனம் தோற்றுவதும் அஜ்ஞானிகளுக்கேயன்றி ஜ்ஞானிகளுக்குத் தோற்றமாட்டார்கள். அங்ஙனம் ப்ரமிக்கின்ற அஜ்ஞானிகளுக்கு ஆத்மஸ்வரூபத்தின் உண்மையையும் உன்னுடைய உண்மையையும் அறிவிக்கும்பொருட்டு தர்மனுடைய க்ருஹத்தில் ரிஷியுருவத்துடன் இப்பொழுது நீ ஆவிர்ப்பவித்தனை. அப்படிப்பட்ட பரமபுருஷனாகிய உனக்கு நமஸ்காரம். தன்னுடைய ஸங்கல்பத்தினாலேயே ஜகத்தினுடைய பந்த மோக்ஷங்களை நடத்துந் திறமையுடைய நீ ஶாஸ்த்ரங்களால் அறியக்கூடிய உண்மையுடையவன். உன் மஹிமை எவர்க்கும் நேரே புலப்படாது. உன்னுடைய சக்திகள் பலவாருகப் பிரிந்து ஆஶ்சர்யங்களுமாயிருக்கும். அவற்றையெல்லாம் சாஸ்த்ரங்களால் அறியவேண்டுமென்றி வேறு விதத்தில் அறியமுடியாது. நீ ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்தும்பொருட்டு ஸத்த்வ ரஜஸ் தமோகுணங்களில் ஒவ்வொன்று தலையெடுக்கப்பெற்ற எங்களைப் படைத்தாய். கருணை வெள்ளம் நிறைந்ததும், ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாகி மிகவும் அழகாயிருப்பதான தாமரை மலரைத் திரஸ்கரிப்பதுமாகிய உன் கண்களால் எங்களை நோக்குவாயாக.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிருர்:—அப்பா விதுரனே! பகவானுடைய கருணையமைந்த கண்ணோக்கம் பெற்ற தேவதைகள் இங்ஙனம் ஸ்தோத்ரம் செய்கையில், மஹானுபாவர்களான அந்த நர நாராயணர்கள் கந்தமாதன பர்வதத்திற்குப் போனுர்கள். ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அம்சமாகிய அந்த நர நாராயணர்களே பூமியின் பாரத்தைப் போக்கும்பொருட்டு யதுகுலஶ்ரேஷ்டர்களான இந்த ஸ்ரீக்ருஷ்ணனும் அர்ஜுனனுமாக இவ்வுலகத்தில் அவதரித்தார்கள். இங்ஙனம், தர்மனுடைய பத்னிகளும் தக்ஷருடைய புதல்விகளுமான ஶ்ரத்தை முதலிய பதின்மூவரின் ஸந்ததியை மொழிந்தேன். மேல் தக்ஷருடைய பதினன்காம் புதல்வியைச் சொல்லுகிறேன். அவள் அக்னி

யின் பார்யை யென்று முன்னமே மொழிந்தேன். அவள் அவனுக்கு மிகவும் அனுகூலையாயிருந்தாள். ஆகையால் அவ்வக்னிதேவன் அவளிடத்தில் மிகுந்த அபிமானம் உண்டாகப் பெற்றிருந்தான். அவன் மூன்று பிள்ளைகளைப் பெற்றான். அவர்கள் பாவகனென்றும் பவமானனென்றும் ஶுசியென்றும் பேருடையவர். அம்மூவரும் தேவதைகளை உத்தேசித்துக் கொடுக்கும் சருபுரோடாசம் முதலிய ஹவிர்ப்பாகங்களைப் புஜிக்குந் தன்மையர். அம்மூவரே த்ரேதாக்னிகளுக்கு அபிமானி தேவதைகளானார்கள். அவர்களிடத்தினின்று நாற்பத்தைந்து அக்னிகள் உண்டானார்கள். அவர்களோடு பித்ருக்கள் மூவரும் பிதாமஹனொருவனும் சேர்ந்து நாற்பத்தொன்பது அக்னிகளென்று கூறப்படுகின்றார்கள். வைதிகர்கள் யஜ்ஞங்களிலும் வேதோக்தமான மற்ற கர்மங்களிலும் எந்த அக்னிகளின் பேர்களைச் சொல்லி ஆக்னேயமென்ற யாகங்களை நடத்துகிறார்களோ, அவர்களே இந்த நாற்பத்தொன்பது அக்னிகளாம். பித்ருதேவதைகள் அக்னிஷ்வாத்தர்களென்றும் பர்ஹிஷதர்களென்றும் இருவகைப் பட்டிருப்பர். அக்னிஷ்வாத்தர்களைக் குறித்து அக்னியில் ஹோமம் செய்கிறதில்லை. ஆகையால் அவர்கள் அனக்னிகளென்று ப்ரஸித்தி பெற்றவர். அவர்கள் ஆஜ்யத்தையே பானம் செய்பவர். பர்ஹிஷதர்களைக் குறித்து அக்னியில் ஹோமம் செய்வதுண்டு. ஆகையால் அவர்கள் ஸாக்னிகளென்று கூறப்படுவார்கள். அவர்கள் ஸோமபானம் செய்பவர். இருவகையர்களான அந்தப் பித்ருதேவதைகளின் பத்னி ஸ்வதையென்பவள். இவள் தக்ஷனுடைய பதினைந்தாம் புதல்வி. அந்த ஸ்வதை பித்ருதேவதைகளிடத்தினின்று மேனையென்றும் வைதாணியென்றும் இரண்டு பெண்களைப் பெற்றாள். அவர்களுக்கு ஸந்ததி இல்லை. அவ்விருவரும் ப்ரஹ்மோபதேசம் செய்யுந் திறமை யமைந்தவர்கள். ஶாஸ்த்ராப்யாஸத்தினால் விளையும் ஜ்ஞானம் விவேகாதிகளால் விளையும் ஜ்ஞானம் ஆகிய இவற்றின் கரைகண்டவர். ருத்ரனுடைய பத்னி

ஸதியென்னும் பேருடையவள். இவள் தக்ஷருடைய பதி ஞரும் புதல்வி. அவள் குணசீலாதிகளால் தனக்கு அநு ரூபனை பர்த்தாவாகிய ருத்ரனை எப்பொழுதும் தவருமல் பணிந்துகொண்டிருப்பினும் புதல்வன் உண்டாகப்பெற வில்லை. அதற்குக் காரணம் என்ன? எனில் சொல்லு கிறேன், கேட்பாயாக. அந்த ஸதியின் தந்தையாகிய தக்ஷர் நிரபராதியான ருத்ரன் விஷயத்தில் கோபத்தினுல் ப்ரதி கூலராயிருக்கையில், அதைப் பொறுக்கமுடியாமல் அவள் பால்யத்திலேயே தன் தேஹத்தை யோகாப்யாஸம் செய்து துறந்தாள். (யோகாக்னியில் பஸ்மம் செய்தாள்). ஆகை யால் அவளுக்குப் புதல்வன் உண்டாகவில்லை. ஒன்ருவது அத்யாயம் முற்றிற்று.

---

{ ருத்ரனுக்கும் தக்ஷப்ராஜாபதிக்கும் த்வேஷம் உண்டானதின் காரணத்தைக் கூறுதல். }

ஸ்ரீவிதுரர் சொல்லுகிருர்:—தக்ஷர் பெண்களிடத்தில் மிகுந்த ப்ரேமம் உடையவர். ருத்ரனும் சீலமுடையவர் களில் சிறந்தவன். அப்படியிருக்க, அவர் தன் புதல்வி யாகிய ஸதியின் மனத்தையும் பின் செல்லாமல் அவளை அநாதரித்து ருத்ரனிடத்தில் எந்தக்காரணத்தினுல் த்வே ஷம் கொண்டார்? ருத்ரன் ஜங்கம ஸ்தாவரங்களான ஸமஸ்த லோகங்களுக்கும் ஜ்ஞாநோபதேசம் செய்ய வல்ல வன். (அசேதனங்களான ஸ்தாவரங்களுக்கும் ஜ்ஞானத் தை விளைவிக்க வல்லனுயின் ஜங்கமங்களான ப்ராணி களுக்கு ஜ்ஞாநோபதேசம் செய்வானென்பதில் ஸந்தே ஹம் இல்லையல்லவா?) ஜ்ஞானத்தைப்பெற விரும்புமவர்க ளால் ஆராதிக்கப்படும் தெய்வம். அவர்களுக்கு அவன் மேலான தெய்வமாயிருப்பவன். அவன் எந்த ப்ராணிக ளிடத்திலும் த்வேஷமில்லாதவன்; சாந்தமான உருவ முடையவன்; தன்னையே தான் அநுபவிப்பவனுகி ஆநந் தத்தில் ஆழ்ந்திருப்பவன். அப்படிப்பட்ட ருத்ரனைத்

தக்ஷப்ரஜாபதி ஏன் த்வேஷித்தார்? வாரீர் அந்தணர் தலைவரே! மணவாளனுன ருத்ரனுக்கும் மாமனுரான தக்ஷருக்கும் எந்தக் காரணத்தினுல் த்வேஷம் உண்டாயிற்று, அதை எனக்கு மொழிவீராக. ஸதியென்பவள் அந்த த்வேஷத்தைப் பற்றியல்லவோ விடக்கூடாத ப்ராணன்களையும் துறந்தாள்? ஆகையால் அந்த த்வேஷம் அற்பமாயிராது. அதன் காரணத்தை எனக்குச் சொல்லுவீராக.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறுர்:— வாராய் விதுரனே! முன்பு மரீசிமுதலிய ப்ரஜாபதிகள் ஸத்ரயாகம் செய்யும் பொழுது, மஹர்ஷிகளும் இந்த்ரன் முதலிய தேவக் கூட்டங்களும் அவரவருடைய ப்ருத்யர்களும் அக்னியின் அபிமானி தேவதைகளும் அவ்விடம் வந்து கூட்டங் கூடினுர்கள். அந்த யாகம் நடந்த இடத்திற்கு தக்ஷப்ரஜாபதியும் வந்தார். அவர் வந்ததைக் கண்டு ப்ரஹ்மதேவனும் ருத்ரனும் தவிர ஸபையிலிருந்த மற்றவர் எல்லாரும் அந்த தக்ஷருடைய தேஜஸ்ஸினுல் தந்தாமுடைய தேஜஸ்ஸு மழுங்கப்பெற்று அக்னிதேவதைகளுடன் தம்முடைய ஆஸனங்களினின்று எழுந்து நின்றுர்கள். அந்த தக்ஷர் தன் தேஹகாந்தியால் ஸூர்யன்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தார். அவருடைய தேஜஸ்ஸினுல் அந்த ஸபை முழுவதும் இருளற்று மிகவும் வெளிச்சம் உண்டாகப்பெற்றது. அப்பால் மஹானுபாவராகிய அந்த தக்ஷப்ரஜாபதி ஸபையிலுள்ள பெரியோர்களால் நன்கு பூஜிக்கப்பெற்று லோகங்களுக்கெல்லாம் குருவாகிய ப்ரஹ்மதேவனை நமஸ்கரித்து அவனுடைய அனுமதியின் மேல் உட்கார்ந்தார். அவர் தான் உட்காருவதற்கு முன்னமே வந்து உட்கார்ந்திருக்கின்ற ருத்ரனைப் பார்த்து, அவன் தான் வரும்பொழுது எழுந்து எதிர்கொள்வது முதலிய மர்யாதைகள் எவையும் செய்யாமல் தன்னை அனுதரித்ததைக் கண்டு, அந்த ருத்ரனைக் கண்களால் தஹிப்பவர்போல் வக்ரமாகப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார்.

தக்ஷர் சொல்லுகிறார்:— வாரீர் மஹர்ஷிகளே! அக்னிதேவதைகளோடும் மற்றுமுள்ள தேவதைகளோடும் கூடியிருக்கின்ற நீங்கள் ஸாதுக்களுடைய ஆசாரத்தை எடுத்துக் கூறுகின்ற என் வசனத்தைக் கேட்பீர்களாக. நான் அஜ்ஞானத்திலாவது த்வேஷத்திலாவது சொல்லுகிறேனல்லேன். இவன் லோகபாலர்களின் புகழைப் பாழ் செய்கின்றவன்; வெட்கமில்லாதவன். இவன் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட தர்மங்களை அனுஷ்டிக்காமல் துறக்கின்றான்; ஆனதுபற்றியே மூர்க்கனாகின்றான். ஸத்புருஷர்களால் ஆதரிக்கப்பெற்று வருகின்ற வைதிகாசாரத்தைக் கெடுத்துவிட்டான். இவன் மூர்க்கனென்பதை விவரித்துச் சொல்லுகின்றேன், கேட்பீர்களாக. இந்த ருத்ரன் எனக்குச் சிஷ்யனாகவேண்டும். ஏனென்னில், இவன், ப்ராஹ்மணர்களையும் அக்னியையும் ஸாக்ஷியாக வைத்துக்கொண்டு ஸாவித்ரியை ஸத்யவத்தன்போல், என் புதல்வியாகிய ஸதியை மணம்புரிந்தான். நல்ல யோக்யன்போல் என் புதல்வியை மணம்புரிந்து இயற்கையில் இவன் அஸத்தாகையால் எனக்குச் சிஷ்யனாயிருந்தும் என்னை அவமதிக்கின்றான். குரங்கின் கண்போன்ற கண்களையுடைய இவன் இளமான் கண்போன்ற கண்களையுடைய எனது புதல்வியைப் பாணிக்ரஹணம் செய்துகொண்டு எதிர்கொண்டு வந்து வந்தனம் செய்து கௌரவிக்கத் தகுந்த என்னிடத்தில் கேவலம் வாயால் செய்யக்கூடிய ஸத்காரத்தையுங்கூட இவன் செய்யவில்லை. மானேய் நோக்கியாகிய என் புதல்வியை இந்தக் குரங்குக் கண்ணனுக்குக் கொடுத்தேன். இவன் அதைச் சிறிதும் நினைக்காமல் என்னை அவமதிக்கின்றான். மற்றும், இவன், ஸதாசாரம் சிறிதுமில்லாதவன்; ஆனதுபற்றியே அஶுசியாயிருப்பவன் (அபரிசுத்தன்); அஹங்காரமுடையவன்; தர்ம மர்யாதையைப் பாழ்செய்தவன். விசித்ருஷ்டமான வேத மந்த்ரத்தைச் சூத்ரனுக்கு உபதேசிப்பதுபோல், இப்படிப்பட்ட அவலக்ஷணனுக்கு என் புதல்வியைக் கொடுத்தேன். எனக்கு

இஷ்டமே இல்லை. ஆயினும் மதிகெட்டு இந்தக் கார்யம் செய்தேன். இவன் ப்ரேதங்களுக்கு வாஸஸ்தானமாகிய ஶ்மஶானங்களில் பயங்கரமான பூதகணங்களால் சூழப் பட்டு அரையில் ஆடையின்றி விரிதலையனுமாகிப் பிச்சேறி னவன்போல் சிரிப்பதும் அழுவதும் செய்துகொண்டு திரி கின்றான்; மற்றும், ஶ்மஶான பஸ்மங்களால் ஸ்னானம் செய்து ப்ரேதங்களின் பூமாலைகளை எடுத்து அணிந்து மனிதர்களின் எலும்புகளையே பூஷணமாகக் கொண்டு, தான் அசிவனாயினும் (அமங்களனாயினும்) சிவனென்று பேர் மாத்ரம் பூண்டு தான் மதிகெட்டு அங்ஙனம் மதிகெட் டவர்க்கு அன்பனுமாகிக் கேவலம் தமோகுணத்தையே ஸ்வபாவமாகப் பெற்ற ப்ரமத கணங்களுக்கு நாதனுமா யிருக்கின்றான். மற்றும், இவன் உன்மாதங்களென்கிற சில பூதங்களுக்கு ப்ரபு; துஷ்ட ஹ்ருதயன்; ஆசாரஹீனன். இப்படிப்பட்ட இவனுக்கு நல்லியற்கையளான என் புதல் வியை ப்ரஹ்மாவின் தூண்டுதலால் கொடுத்தேன். இந்த ப்ரஹ்மதேவன் என்னை நிர்ப்பந்தம் செய்யாத பக்ஷத்தில் நான் என் பெண்ணை இந்த அமங்களனுக்குக் கொடுத் திருக்கமாட்டேன். ஆ! இதென்ன வருத்தம்? இப்படிப் பட்ட பாபிஷ்டனோடு ஸம்பந்தம் செய்யும்படி நேர்ந்ததே!

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:— அந்த தக்ஷப்ரஜா பதி எவ்விதத்திலும் ப்ரதி செய்யமுடியாமல் ஒன்றையும் செவியில் ஏற்றுக்கொள்ளாமல் உதாஸீனனாயிருக்கின்ற ருத்ரனை இங்ஙனம் நிந்தித்து, பிறகு ஜலத்தையெடுத்து ஆசமனம் செய்து கோபாவேசத்துடன் அவனுக்குச் சாபங்கொடுக்க ஆரம்பித்தார்.

தக்ஷர் சொல்லுகிறார்:— இந்த ருத்ரன் தேவக்கூட் டங்களில் அதமனாகையால், தேவதைகளைக் குறித்து மானி டவர் செய்யும் யாகங்களில் இந்த்ரன் உபேந்த்ரன் முதலிய தேவதைகளோடு ஹவிர்ப்பாகம் பெறுதற்கு உரியவனல் லன். ஆகையால் இவன் இன்று முதல் யாகங்களில் ஹவிர்ப்பாகத்தை இழப்பானாக.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார் :— வாராய் விதுரனே! அந்த தக்ஷர் ஸபையிலுள்ள பெரியோர்களால் வேண்டாமென்று தடுக்கப்பெறினும், கோபம் வளர்ந்தவராகி ருத்ரனுக்கு இவ்வாறு சாபம் கொடுத்து அந்த யாகபூமியினின்று வெளியே வந்து தனது இருப்பிடம் போய்ச் சேர்ந்தார். அப்பொழுது ருத்ரனைப் பின்சென்ற பூதகணங்களில் ப்ரமுகனாகிய நந்தீஸ்வரன் தக்ஷருடைய சாப வசனத்தைக் கேட்டு ரோஷத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று, தக்ஷருக்கும் அந்த ருத்ரனை அவர் நிந்தித்ததைக்கேட்டு 'இது யுக்தமே,' என்று எவரெவர் அபிநந்தித்தார்களோ அவர்களுக்கும் சாபம் கொடுத்தான்.

நந்தி சொல்லுகிறான் :— எவன் தேஹாதிகளைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் உண்மையை அறியாதவனும் பரப்ரஹ்மத்திற்கு உட்படாமல் ஸ்வதந்த்ரமான வஸ்துவும் உண்டென்று பேதபுத்தி யுடையவனுமாகி, தனக்கு த்ரோஹம் செய்தவர்க்கும் ப்ரதி த்ரோஹம் செய்யாதவனும் பகவானுடைய அம்சாவதாரமுமாகிய ருத்ரனை மிகவும் நிக்ருஷ்டனாக நினைத்து த்ரோஹம் செய்தானோ; அந்த தக்ஷன், ப்ரக்ருதி புருஷன் ஈஸ்வரன் என்கிற மூன்று தத்த்வங்களின் உண்மையை அறியாமல் அஜ்ஞானியாவானாக. மற்றும், ப்ரக்ருதி ஸம்பந்தம் கர்மங்களை விளைக்காமல் தவறாதாகையால் எவ்வகையிலும் தடுக்க முடியாத கர்மங்களையுடைய க்ருஹஸ்த தர்மங்களில் அற்பமான ஸம்ஸார ஸுகங்களைப் பெறுவதற்காக மனம் தாழப்பெற்று, அற்பங்களும் அஸ்திரங்களுமான பலன்களை விளைக்குந் தன்மையுடைய கர்மங்களை அறிஞரும் மயங்கும்படி புகழ்கின்ற அர்த்தவாதங்களால் மதிகெட்டு அத்தகைய கர்மங்களை நடத்திக்கொண்டு ஸம்ஸாரத்தினின்று மீட்சியைப் பெறாதிருப்பானாக. மற்றும், அந்த தக்ஷன், ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதான தேஹத்தையே ஆத்மாவென்று நினைக்குந் தன்மையுடையதான புத்தியால் ஜீவாத்ம பரமாத்மாக்களின் ஸ்வரூப நிலைமையை மறந்து

பசுவைப்போன்று மிகுதியும் ஸ்த்ரீகளிடத்தில் காமம் மிகுந்தவனாகிச் சீக்கிரத்திலேயே ஆட்டின் முகம் போன்ற முகமுடையவனாவானாக. மற்றும், இவன் அவித்யை யென்று கூறப்படுவதான காமத்தில் 'இதுவே தத்த்வ வித்யை' என்னும் புத்தியுடையவனாகிப் பசுவைப்போல் ஒன்றும் அறியாதிருப்பானாக. இங்ஙனம் ருத்ரனை அவமதித்த இந்த தக்ஷனை அனுஸரித்து இவன் இட்ட சாபத்தை எவரெவர் அபிநந்தித்தார்களோ, அவர்கள் இந்த லோகத்தில் ஜன்ம ஜரா மரணாதி வருத்தங்களி னின்று மீட்சி அடையாதிருப்பார்களாக. எவர் சம்புவை த்வேஷிக்கின்றார்களோ, அவர்கள் கேவலம் மேலுக்கு அழகியதுபோல் தோற்றுவதும் பூவின் மணம்போல் க்ஷண காலமே அனுபவிக்கத் தகுந்த ஸ்வர்க்காதி ஸுகங்களைச் சொல்லி மதியை மயக்குவதுமாகிய வேத பூர்வபாகத்தின் வசனங்களுடைய வாஸனையை மோந்து மனம் கலங்கி மோஹத்தை அடைவார்களாக. (நித்ய தர்மமான பரமாத்மாவைச் சரணம் அடைந்து கரையேறாமல் அநித்ய தர்மங்களான யாகாதி கர்மங்களில் கால்தாழ்ந்து மதி கேடராய் அழிந்து போவார்களாக). மற்றும், அவர் ஆஹாரத்தில் நியதியின்றி அகப்பட்டதையெல்லாம் பக்ஷிப்பவரும் சரீரத்தையும் அதைத் தொடர்ந்த பிள்ளை பெண்டிர் முதலியவர்களையும் போஷிப்பதற்காகவே கல்வியைக் கற்பவரும் தவங்களைச் செய்பவரும் வ்ரதங்களை ஆசரிப்பவரும் ஆத்மஸ்வரூபத்தின் ஆராய்ச்சியில் கண் வைப்பதின்றிப் பணம் தேஹம் முதலியவற்றில் மனக்களிப்புற்றவரும் யாசிப்பவர்களுமாகித் திரிவார்களாக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ப்ராஹ்மண குலம் முழுவதற்குமே சாபம் கொடுக்கின்ற அந்த நந்தியின் வசனத்தைக் கேட்டு ப்ருகு ப்ரஹ்மதண்டம் போல் எவ்விதத்திலும் தடுக்க முடியாத சாபத்தை இங்ஙனம் பதிலுக்குக் கொடுத்தார்.

ப்ருகு சொல்லுகிறார் :— ருத்ரனுடைய வ்ரதத்தை எவர் ஆசரிக்கின்றார்களோ, எவர் அவர்களை அனுஸரித்திருக்கின்றார்களோ, அவர்களெல்லோரும் வேதத்திற்கு இணங்காத கர்மங்களை ஆசரித்துக்கொண்டு பாஷண்டர்களாகி பகவச்சாஸ்த்ரங்களென்கிற பஞ்சராத்ர சாஸ்த்ரம் முதலியவற்றிற்கு ப்ரதிகூலர்களுமாயிருப்பார்களாக. துராசாரர்களும் மூடபுத்திகளும் (பராவர தத்த்வங்களைப் பற்றின அறிவில்லாதவர்களும்) ஜடை பஸ்மம் எலும்பு இவைகளைத் தரித்துக்கொண்டு பைஷ்டியென்கிற ஸுரையும் ஆஸவமென்கிற பனங்கள்ளு முதலிய மத்யங்களும் நிறைந்த குடங்களை ஸ்தாபித்து அவற்றையே தெய்வமாகக் கொண்டு பூஜிப்பதாகிய சிவதீக்ஷையில் ப்ரவேசித்துப் பாழாவார்களாக. நீங்கள் பாஷண்ட தர்மத்தைக் கைப்பற்றியிருப்பவர்; மற்றும், வர்ணாச்ரம தர்மங்களைத் தவறாமல் அனுஷ்டிக்கும் புருஷர்களுக்கு அனேகமாயிரம் மாதா பிதாக்களைக்காட்டிலும் மேலான ப்ரேமத்துடன் ஹிதோபதேசாதிகளால் க்ஷேமங்களை விளைப்பதான வேதத்தையும் அத்தகைய வேதத்தை ஓதியுணரும் தன்மையுள்ள ப்ராஹ்மணர்களையும் நிந்தித்தீர்கள். ஆகையால் நீங்கள் பாஷண்ட தர்மத்தையே கைப்பற்றிப் பாழடைவீர்களாக. 'வேதத்திற்கு என்ன விசேஷம்? அதை நிந்தித்தால் தோஷம் என்?' என்னில், சொல்லுகிறேன். இந்த வேதமே வர்ணாச்ரம வ்யவஸ்தையில் நிலை நிற்பவர்களுக்கு க்ஷேமத்தை விளைவிக்கும் மார்க்கமாம். (யஜ்ஞாதி கர்மங்களையும் பகவானுடைய உபாஸனங்களையும் அறிவித்து ஸ்வர்க்க மோக்ஷங்களை நிறைவேற்றிக்கொடுக்கும் ஸாதனமாயிருக்கும்). இந்த வேதத்திற்கு ஆதியுமில்லை; அந்தமும் இல்லை. இந்த வேதத்தில் விதிக்கப்பட்ட யஜ்ஞோபாஸனாதி தர்மங்களையே முன்புள்ள ஸாத்த்விகர்களான ரிஷிகளும் மற்றவர்களும் அனுஷ்டித்தார்கள். சைவாகமங்களைப்போல் பாஷண்டர்களால் ஆதரிக்கப்படுவதன்று. சிஷ்டர்கள் ஆதரிக்கும்படியான மேன்மையுடையது. பரப்ரஹ்மத்தை

அறிவதற்கு இந்த வேதமே முக்ய ப்ரமாணமாயிருக்கும். இந்த வேதத்தை ஸ்ரீஜனார்த்தனனே ஆதியில் ப்ரஹ்ம தேவன் மூலமாய் வெளியிட்டான். ஆகையால் இவ்வேதம் எவ்வகை தோஷங்களும் தீண்டப்பெறுமல் ஸமஸ்த நன்மைகளையும் விளைவிக்க வல்லதாயிருக்கும். ஆனது பற்றியே மற்ற ப்ரமாணங்களைக்காட்டிலும் மேலானது; புருஷனால் நிர்மிக்கப்படாததாகி நித்யமாயிருக்கின்றமையால் பரிசுத்தமுமாயிருக்கும்; அனுதி; பெரியோர்கள் ஆதரிக்கும் வழி. இப்படிப்பட்ட வேதத்தை நிந்திக்கின்றீர்களாகையால் நீங்கள் பாஷண்ட தர்மத்திலேயே நிலைநின்று பாழாவீர்களாக. பாஷண்டதர்மத்தில் தாமஸர்களான பூதங்களுக்குத் தலைவனுகிய ருத்ரனே தேவதையாகையால் அதில் ப்ரவேசித்தவர் நசிக்கவேண்டுமேயன்றிக் கடைத்தேற வழியில்லை. நீங்கள் அத்தகைய பாஷண்ட தர்மத்திலேயே நிலைநின்றிருப்பீர்களாக.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறுர்:—வாராய் நல்லியற்கையுடைய விதுரனே! அந்த ப்ருகு மஹர்ஷி இங்ஙனம் சாப வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருக்கையில், ருத்ர பகவான் தனது ப்ருத்யர்களுடன் சிறிது மனவருத்தமுற்றவன்போல் அவ்விடத்தினின்று புறப்பட்டுப்போனுன். வில்லாளிகளில் சிறந்த விதுரனே! புருஷ ஸ்ரேஷ்டனை ஸ்ரீமஹாவிஷ்ணுவையே ஆராத்ய தேவதையாகப் பெற்றதும் ஆயிரமாண்டுகள் நடத்தி முடிக்கத்தக்கதுமாகிய ஸத்ரயாகத்தை அந்த ப்ரஜாபதிகள் செய்து முடித்துக் கங்கையும் யமுனையும் கலக்குமிடமாகிய ப்ரயாக க்ஷேத்ரத்தில் அவப்ருதஸ்னனம் செய்து அப்பால் தந்தமது இடங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஸதீதேவி தந்தையின் யாகத்திற்குப் போக வேண்டுமென்ன ருத்ரன் வேண்டாமென்று காரணம் சொல்லித் தடுத்தல்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:— இங்ஙனம் தக்ஷர் மணவாளனான ருத்ரனிடத்தில் த்வேஷம் கொண்டதற்குக் காரணம் சொன்னேன். இனி, அவர் புதல்வியாகிய ஸதீ ப்ராணன்களை விட்டதற்குக் காரணம் சொல்லுகிறேன், கேட்பாயாக. இப்படி மணவாளனும் மாமனுருமாகிய ருத்ரன் தக்ஷப்ரஜாபதி இவர்கள் ஸர்வகாலமும் ஒருவர் மேல் ஒருவர் த்வேஷம் கொண்டு அது மாறாமல் பிடிவாதத்துடனிருக்கையில், அப்படியே நெடுங்காலம் கடந்தது. பிறகு ஒரு காலத்தில் நான்முகன் தக்ஷரை ப்ரஜாபதிகளனைவரிலும் தலைவராக ஏற்படுத்தி அபிஷேகம் செய்தான். அப்பொழுது அவர்க்கு நாமெல்லோரிலும் மேன்மையுற்றோமென்னும் கர்வம் உண்டாயிற்று. அவர், ப்ரஹ்ம நிஷ்டையில் மிக்க ஊக்கமுடையவனான ருத்ரனையும் அவனைப் பின் தொடர்ந்தவர்களையும் அவமதித்து 'யஜ்ஞத்தில் இவர்களுக்கு பாகம் கொடுக்கலாகாது' என்று ஸங்கல்பித்துக்கொண்டு வாஜபேயமென்னும் யாகம் செய்து ப்ருஹஸ்பதி ஸவமென்னும் மற்றொரு சிறந்த யாகம் செய்யத் தொடங்கினார். அவர் அந்த ப்ருஹஸ்பதிஸவம் செய்யத் தொடங்கி நடத்துகையில், ஸமஸ்த ப்ரஹ்மரிஷிகளும் தேவரிஷிகளும் பித்ருதேவதைகளும் தேவதைகளும் அவ்விடம் வந்தார்கள். அவரவர்களுடைய பத்னிகளும், ப்ரயாணகாலங்களில் செய்யவேண்டிய மங்கள கார்யங்களையெல்லாம் பண்ணிக்கொண்டு ஸர்வாலங்காரங்களையும் அணிந்து தந்தமது பர்த்தாக்களுடன் அவ்விடம் வந்து பேரானந்தத்துடன் உட்கார்ந்தார்கள். அப்பொழுது தக்ஷரது பெண்ணாகிய ஸதீதேவி அங்ஙனம் பேசிக்கொண்டு ஆகாச மார்க்கமாய்ப் போகின்ற தேவதைகளின் வார்த்தையால் தன் தந்தை யஜ்ஞமஹோத்ஸவம் நடத்துவதைக் கேட்டு ஸமஸ்த திக்குக்களினின்றும் புறப்பட்டு விமானங்களில் ஏறிக்கொண்டு கழுத்தில் ஸ்வர்ணமயமான

அலங்காரங்களை அணிந்து பளபளவென்று ஜ்வலிக்கின்ற காதணியுடையவரும் சிறந்த ஆடைகளை உடுத்தவரும் சஞ்சலமான கண்கள் அமைந்தவருமாகிக் காதலருடன் தனது மாளிகையின் அருகாமையில் போகின்ற கந்தர்வ மடந்தையர்களைக் கண்டு தானும் போகவேண்டுமென்கிற மனவிருப்பம் உண்டாகப் பெற்றவளாகித் தன் பர்த்தாவான பூதநாதனை (ருத்ரனை)ப் பார்த்து இங்ஙனம் மொழிந்தாள்.

ஸதி சொல்லுகிறாள் :— வாராய், நல்லியற்கை யுடையவனே! உலகங்களுக்கெல்லாம் க்ஷேமத்தை விளைவிப்பவனே! சம்பூ! உன் மாமனாராகிய தக்ஷப்ரஜாபதி யஜ்ஞமஹோத்ஸவம் நடத்துகிறாராம். அதற்காக தேவதைகள் போகின்றார்கள். விருப்பம் உளதாயின், நாமும் போகலாம். அந்த யாகமஹோத்ஸவத்தில் எனது உடன் பிறந்தவர்கள் தந்தமது கணவர்களுடன் தாய் தந்தை முதலிய நண்பர்களைக் காண விரும்பி வருவார்களென்பது நிச்சயம். அம்மஹோத்ஸவத்தில் நானும் உன்னுடன் சென்று எமது தந்தை முதலியவர் கொடுக்கிற ஆடையாபரணம் முதலிய பரிசுகளைப் பெற விரும்புகின்றேன். உலகங்களுக்கு ஸந்தோஷம் விளைவிப்பவனே! மற்றும், நான் நெடுநாளாய் எனது தாய் தந்தை முதலியவர்களைப் பார்க்க வேண்டுமென்னும் விருப்பம் உண்டாகப் பெற்றிருக்கின்றேன். எனது உடன் பிறந்தவர்கள் எல்லாரும் தந்தமது பர்த்தாக்களால் அழைத்துக்கொண்டு வரப்பெற்று அவ்விடம் வந்திருப்பார்கள். அவர்கள் தமது பர்த்தாக்களால் வெகுமதி செய்யப் பெற்றிருப்பதுபோல் நானும் உன்னால் வெகுமதி செய்யப் பெறுவேனாக. என்னை அவ்விடத்திற்கு நீ அழைத்துக்கொண்டு போவாயாயின், எனக்கு அதுவே பெரிய வெகுமதியாம். அன்றியும் அந்த மஹோத்ஸவத்திற்காக என் தாயோடுகூடப் பிறந்தவர்கள் அனைவரும் வந்திருப்பார்கள். என் தாய் நெடுநாளாக என்னைப்பார்க்க நேராமையால் மனவருத்தமுற்றிருப்பாள். அவள் என்

னிடத்தில் மிகுதியும் ப்ரேமத்தினால் மனம் உருகப்பெற்ற வள். அவர்களெல்லோரையும் நான் பார்க்கவேண்டு மென்று விரும்புகின்றேன். மற்றும், யஜ்ஞத்தில் மஹர்ஷி கள் உயரெடுத்து நிற்கவைக்கின்ற யஜ்ஞ த்வஜமான யூப ஸ்தம்பத்தையும் நான் பார்க்க ஆசைப்படுகின்றேன். 'ஆ! அந்த யாகத்தில் என்ன ஆச்சர்யம் இருக்கிறது? நீ போய்ப் பார்க்கவேண்டுமென்று விரும்புகிறாயே' என்னில் வாஸ் தவமே. உனக்கு அவ்விடத்தில் போய்ப்பார்க்க வேண்டிய ஆச்சர்யம் ஒன்றும் இல்லை. கர்மத்தினால் விளையும் உற் பத்தி இல்லாதவனாகிய பரமாத்மாவான ஸ்ரீமஹாவிஷ்ணு வின் ஸங்கல்பத்தினால் நிர்மிக்கப்பட்டதும் ஸத்த்வ ரஜஸ் தமோ குணங்களையுடைய ப்ரக்ருதியின் பரிணாமமும் பல வகைப்பட்ட ஆச்சர்யமான ஸந்நிவேசங்களை யுடையது மாகிய ஜகத்தே உனக்கு ஆஶ்சர்யமாய்த் தோற்றுகிறது. ஜ்ஞானியாகிய உனக்கு இதுவே ஆச்சர்யமன்றி இதைக் காட்டிலும் மேலான ஆச்சர்யத்தை விளைவிப்பது மற் றொன்றும் இல்லை. ஆயினும், நான் பெண்பிள்ளை. ஸ்த்ரீ கள் இயற்கையாகவே மன நிலைமை யில்லாதவரென்பது வெளிச்சமே. அதிலும் நான் பராவர தத்த்வங்களை அறிந் தவளல்லேன். ஆகையால் நான் பிறந்த அகத்திற்குப் போய் அங்குள்ள பந்துக்களைப் பார்க்கவேண்டுமென்று விரும்புகிறேன். என் விருப்பத்தை நிறைவேற்றுவாயாக. வாராய் அப்பனே! என் தந்தையோடு எவ்வித ஸம்பந்தமு மில்லாத பிறருடைய பெண்டிர்களும் நன்கு அலங்கரித்துக் கொண்டு கணவர்களை ஸஹாயமாகப் பெற்றுக் கூட்டங் கூட்டமாய் என் தந்தையினுடைய யாக மஹோத்ஸவத் திற்குப் போகின்றார்கள்; பார். வாராய் நீலகண்டனே! இவர்கள் கலஹம்ஸங்கள்போல் வெளுத்திருக்கின்ற விமா னங்களில் ஏறிக்கொண்டு போகின்றார்களே. அது உனக் குப் புலப்படவில்லையா? அவ்விமானங்களால் ஆகாயமெல் லாம் அலங்கார முற்றாற்போலிருக்கின்றதே. இது உனக் குத் தெரியவில்லையா. வாராய் தேவஶ்ரேஷ்டனே! தந்தை

யின் க்ருஹத்தில் மஹோத்ஸவத்தைக் கேட்டுப் புதல்வி யின் தேஹம் எங்ஙனம் பார்க்கப் போகாதிருக்கும்? நான் போகவேண்டாமென்றிருப்பினும், என் தேஹம் போகா திருக்கப் பொறுக்குமோ? 'ஆயினும், அவர்கள் நம்மை அழைக்காதிருக்கையில், நாம் அவ்விடம் போவது யுக்தமோ?' என்னில் போவது யுக்தமே. எப்படியென் னில், நண்பன் கணவன் ஆசார்யன் தந்தை ஆகிய இவர்க ளின் க்ருஹத்தில் ஒரு விசேஷம் நடக்குமாயின், அவர் அழையாதிருப்பினும், அங்குப் போவது பெரியோர்களின் நடத்தையேயன்றி நான் புதிதாகச் சொல்லும் வார்த்தை யன்று. வாராய் தேவனே! ஆகையால் எனக்கு அருள் புரிவாயாக. நீ கருணைகூருந் தன்மையனல்லவா? அத் தகைய நீ என் விருப்பத்தை நிறைவேற்றுவாயாக. நீ என் னிடத்தில் பெரிய கண்ணோக்கங்கொண்டு என்னை உன் தேஹத்தின் பாதியில் வைத்துக்கொண்டாயல்லவா. அதைப்பற்றியல்லவோ உனக்கு அர்த்த நாரீஶ்வரனென் னும் பேர் உலகமெங்கும் க்யாதியடைந்திருக்கின்றது. அப்படி அருள்செய்த நீ இப்பொழுது நான் வேண்டுவதற் காக என்னை அனுக்ரஹித்து என் விருப்பத்தை ஈடேற்று வாயாக.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—கைலாஸ நாதனாகிய ருத்ரன் இங்ஙனம் அன்பிற்கிடமான காதலியின் வார்த்தை யைக் கேட்டு, அவளுக்கு ப்ரீதியைச் செய்யுந் தன்மையுள்ள நண்பனாயினும் தக்ஷர் ப்ரஜாபதிகளின் முன்னிலையில் மர் மங்களை அறுக்கும்படி நிந்தித்து மொழிந்த வார்த்தைக ளாகிற பாணங்களை நினைத்து மேலுக்குச் சிறித்துக் கொண்டே இங்ஙனம் மறுமொழி கூறினான்.

ஶங்கரன் சொல்லுகிறான்:—வாராய் மங்கள ஸ்வபாவ முடையவளே! பந்துக்கள் அழைக்காதிருப்பினும் அவ் விடம் போகவேண்டுமென்று நீ மொழிந்தது அழகியதே. அவர்கள் தேஹாத்மாபிமானம் தலையெடுக்கப்பெற்று அத னால் எங்குமில்லாத மதமும் கோபமும் கொண்டு குணங்களை

யும் தோஷமாக நினைத்து அவமதி செய்யாதிருப்பார்களாயின், அவர்கள் அழையாதிருப்பினும் நாம் போகவேண்டியது யுக்தமே. வித்யை தவம் தனம் சரீரம் வயது குலம் இவை ஆறும் ஸத்புருஷர்களிடத்தில் இருக்குமாயின் குணங்களே. இவையே அஸத்துக்களிடத்தில் சேருமாயின் அத்தனையும் தோஷங்களேயாம். ஆகவே அந்த ஆறும் அஸத்துக்களிடத்தில் தோஷங்களாகி அவர்களுக்கு விவேகத்தை அடியோடு பாழ்செய்து விடுகின்றன. விவேகம் பாழாகையில், 'நான் வித்வான், நான் தவம் செய்தவன், நான் தனிகன்' என்று கர்வம் நிரம்பவும் உண்டாகின்றது. அதனால் கண்கெட்டுப்போகின்றது. அத்தகையர் பெரியோர்களின் மஹிமையை உள்ளபடி அறியப்பெறுகிறதில்லை. இது உனக்கும் நன்றாகத் தெரிந்திருக்குமல்லவா? ஆகையால் இங்ஙனம் மன நிலைமையில்லாதவர்களின் வீட்டிற்கு பந்துக்களென்கிற எண்ணத்துடன் போகலாகாது. 'தக்ஷர் வித்யை தவம் முதலிய குணங்களுடையவர். ஆகையால் அவர் உன்னிடத்தில் எப்படி தோஷம் நினைப்பார்? நீயும் அத்தகைய வித்யாதி குணங்களுடையவனே. ஆகையால் நீயும் அப்படி நினைக்கமாட்டாய்' என்று எண்ணுகின்றனையோ? அப்படியில்லை. அவர் இயற்கையில் அஸத்தாகையால் அவருடைய வித்யாதி குணங்கள் தோஷங்களேயாகி அவருக்கு கர்வத்தை விளைவித்து விவேகத்தைப் போக்கின. ஆகையால் அவர் 'நாம் வித்வான், நாம் தாபஸர், நாம் தனிகர், நமக்கு தேஹம் அழகாயிருக்கின்றது, திடமாயிருக்கின்றது, நாம் நல்ல வயதுடையவர், நாம் நற்குலத்தில் பிறந்தவர்' என்று கர்வங் கொண்டு பிறருடைய பெருமையைப் பொறாமல் அவரிடத்தில் தோஷத்தையே ஏறிடுந்தன்மையாயிருக்கின்றார். அப்படிப்பட்ட அவரை நாம் பந்துவாக நினைத்துப் போவது யுக்தமன்று. எவர் வக்ர புத்தி யுடையவராகிப் புருவங்களை நெரித்துக்கொண்டு கோபம் வழியப்பெற்ற கண்களுடன், தமது வீடேறிவந்தவர்களை வக்ரமாகப் பார்க்கின்றார்

களோ, அவர்கள் மன நிலைமையில்லாதவர்களே. அவர்க ளோடு ஸஹவாஸம் வைத்துக்கொள்வது நலமன்று. அவர் களைப் பந்துக்களாக நினைத்து எப்படி அவர் வீடுகளுக்குப் போகலாம்? உன் தந்தையாகிய தக்ஷர் இத்தகையரே. ஆகையால் நாம் அவ்விடம் போவது யுக்தமன்று. வக்ர புத்திகளான பந்துக்களின் கொடிய வசனங்களால் மர்மங் களில் அடியுண்டவன் மனவருத்தமுற்று இரவும் பகலும் பரிதபிப்பான். சத்ருக்களின் கூரான பாணங்களால் சரீர மெல்லாம் பிளக்கப் பெறுவானாயினும் அவ்வளவு வருந்த மாட்டான். பந்துக்களாயிருப்பவர் வக்ரபுத்திகளாகிக் கொடிய வசவுகளைப் பேசுவார்களாயின், அவை மனத்தில் பொற்றுக்கொண்டு பெரிய வேதனையை விளைவிக்கும். வசவுகளைப் பொறுக்க முடியாதாகையால் அவர் வீட்டிற் குப் போகலாகாது. 'நீ வரவேண்டாம், நான் போகிறேன்' என்னில், உனக்கும் அவமதியே நேருமன்றி வெகுமதி நேராது. அழகிய புருவங்களுடையவளே! தக்ஷர் ப்ரஜா பதியாயிருக்கையாகிற மேலான அதிகாரம் பெற்றவர், மேன்மையுடையவர். அவர்க்குப் பெண்களெல்லோரினும் நீ மிகவும் ப்ரீதிக்கிடமானவளென்பது எனக்குத் தெரியும். இது நிச்சயமே. ஆயினும், என் ஸம்பந்தத்தைப்பற்றி உன் பிதா உனக்கு வெகுமதி செய்யமாட்டார். ஏனென் னில், என்னோடு ஸம்பந்தம் நேரிட்டதைப்பற்றி உன் தந்தை யாகிய தக்ஷப்ரஜாபதி பரிதபிக்கின்றார். 'ஆமாம், நீ ஏன் தக்ஷரை அவமதித்தாய். அதைப்பற்றியல்லவோ அவர் உன்னை த்வேஷிக்கின்றார்' என்னில் சொல்லுகிறேன், கேட் பாயாக. ப்ரக்ருதி புருஷர்களின் உண்மையை ஸாக்ஷாத் கரித்தவர்களான (எல்லாம் ப்ரஹ்மஸ்வரூபமேயென்றும் பரப்ரஹ்மத்திற்கு உட்படாதது ஒன்றுமேயில்லை யென்றும் நிச்சயித்துப் பரப்ரஹ்மத்தின் மஹிமையை அறிந்தவர்க ளான, பெரியோர்களின் புண்யமான புகழ் முதலிய ஸம் ருத்திகளைக் கண்டு அற்பர்கள் பரிதபிக்கின்றவரும் அவ ருடைய மேன்மையைத் தாங்கள் வருந்தியும் பெறமுடியா

மையால் இந்த்ரியங்கள் வருந்திக் கலங்கப்பெற்றவருமாகி அந்தப் பெரியோர்களை வீணாகவே த்வேஷிக்கின்றார்கள். அஸுரர்கள் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பெருமையைப் பொறு தவராகி அவனை த்வேஷிப்பதுபோல், தாங்கள் மூர்க்கர்களும் அஜ்ஞர்களும் துரத்ருஷ்டமுடையவருமாயிருப்பவர் பெரியோர்களோடு ஒக்கப்பெறுமல் வீணாகவே அவர்களை த்வேஷிக்கின்றார்கள். 'தக்ஷர் உன்னால் கௌரவிக்கத் தகுந்தவரல்லவா? அவரை நமஸ்காரம் முதலியவற்றால் கௌரவிக்காமல் அவமதித்தாயல்லவா? ஆகையால் அவர் உன்னை த்வேஷிப்பது யுக்தமே' என்கிறாயோ? சொல்லுகிறேன், கேள். அழகான இடையுடையவளே! தேஹத்தை ஆத்மாவாக நினைக்கை முதலிய அவிவேகமற்ற பேரறிஞர் ஒருவர்க்கொருவர் எழுந்து எதிர்கொள்வது வணக்கமாயிருப்பது தண்டன் ஸமர்ப்பிப்பது முதலிய மர்யாதைகளை நடத்திக்கொள்வார்கள். (அவர்கள் மனது வாக்கு கருமம் ஆகிய உவை மூன்றிலும் ஒத்திருப்பவர். அவர் மனத்தில் நினைப்பதும் வாயால் சொல்லுவதும் சரீரத்தினால் செய்வதும் ஒன்றோடொன்று மாறுதிருக்கும். அஸத்துக்கள் மனத்தில் ஒன்று நினைப்பார்கள். வாயால் ஒன்று மொழிவார்கள். கார்யத்தில் ஒன்று செய்வார்கள்). பேரறிஞர்களும் அறிவிலா மூடர்களும் ஒன்று சேருவார்களாயின் அறிஞராயிருப்பவர் அந்தர்யாமியான பரம புருஷனுக்கு மாத்ரம் மனத்தினால் மாத்ரமே மர்யாதை செய்வார்கள். தேஹாபிமானியாகிய மூடனுக்கு மனோவாக்காயங்கள் மூன்றாலும் மர்யாதை செய்யமாட்டார்கள். ஆகையால் தேஹாத்மாபிமானியாகிய தக்ஷன் வரும்பொழுது நான் அந்தர்யாமியான ஸர்வேஶ்வரனை உத்தேசித்து மானஸிகமாய் எழுந்து எதிர்கொள்வது முதலிய மர்யாதைகளை நடத்தினேன். அந்த க்ரமத்தில் நான் தவிரவில்லை. துரபிமானியாகையால் அவனுக்கு நான் மனோவாக்காயங்கள் மூன்றில் ஒன்றாலும் மர்யாதை செய்யவில்லை. 'ஆயினும் அந்தர்யாமியான பரம புருஷனைக் குறித்து மனத்தினால்

மாத்ரம் நமஸ்காரம் முதலிய மர்யாதைகள் செய்வதேன்? மனோவாக்காயங்கள் மூன்றாலும் செய்யவேண்டாமோ?' என்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக. ரஜஸ் தமோ குணங்கள் தீண்டப் பெறாமல் கேவல ஸத்த்வகுணமே தலையெடுக்கப்பெற்றுப் பரிசுத்தமா யிருக்கின்ற மனத்தை வஸுதேவமென்று சொல்லுவார்கள். அம்மனத்தில் வஸுதேவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளெல்லாம் ஸ்பஷ்டமாகத் தோற்றும். அம்மனத்தில் வாஸுதேவன் நித்ய வாஸம் செய்வான். அது ஸத்த்வகுணமே முக்யமாகப் பெற்று வெளிச்சமுற்றிருக்கும். அவ்வாஸுதேவன் மற்ற இந்த்ரியங்களுக்கு விஷயமாகாமல் அத்தகைய மனத்திற்கே விஷயமாவான். ஆகையால் அந்தப் பகவானை அம்மனத்தினால் நமஸ்கரிப்பது யுக்தமே. ஆனதுபற்றி நான் அவனை மனத்தினால் மாத்ரமே நமஸ்காரம் செய்தேன். மற்றும், அந்தர்யாமியைக்குறித்து மனோவாக்காயங்கள் மூன்றாலும் மர்யாதை நடத்துவோமாயின், அறிவில்லாத மூடர்கள் அந்த மர்மத்தை அறியாமல் அந்த துராபிமானிக்கே மர்யாதை நடத்தினானென்று நினைத்துத் தாமும் அங்ஙனம் செய்து அழிந்துபோவார்கள். ஆகையால் அவன் உனக்குப் பிதாவாயினும் உனக்கு தேஹத்தை விளைவித்தவனாயினும், எனக்கு த்வேஷியாகிய அந்த தக்ஷனை நீ பார்க்கலாகாது. அவன் அதற்கு உரியவனல்லன். எவரெவர் அவனைப் பின்றொடர்ந்திருப்பார்களோ, அவர்களையும் நீ கணிசிக்கலாகாது. கண்ணெடுத்தும் பார்க்கலாகாது. அழகிய துடைகளுடையவளே! அந்த தக்ஷன் ப்ரஜாபதிகள் செய்த ஸத்ரயாகத்தில் நிரபராதியான என்னைத் துருக்திகளால் (வெசவுகளால்) திரஸ்கரித்தானல்லவா? அப்படிப்பட்டவனை நீ கண்ணெடுத்துப் பார்ப்பதும் யுக்தமன்று. அப்படி என் வார்த்தையை அதிக்ரமித்து நீ போவாயாயின், உனக்கு க்ஷேமம் கிடைக்காது. அன்றியும், அவமதியே நேரும். பந்துக்களிடத்தில் உண்டாகும் பரிபவம் பரிபவமே அன்று' என்று

நினைக்கிறாயோ? அப்படி அன்று. எல்லா விதங்களிலும் மேன்மையுற்ற ஒருவன் பந்துக்களால் பரிபவம் நேரப் பெறுவானாயின், அது அவனுக்கு அந்த க்ஷணமே மரணத்தை விளைவிப்பதாகும். (அனைவராலும் கௌரவிக்கப் பெற்ற ஒருவன் பந்துக்களால் அவமதிக்கப் பெறுவானாயின், அவன் அதைப் பொறுக்கமுடியாமல் உடனே ப்ராணன்களை விடுவான்). மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸதி பர்த்தாவின் வார்த்தையைக் கடந்து தந்தையின் யாகத்திற்குப் போதலும், தந்தை அவமதித்தலும், அவள் அதைப் பொறுக்காமல் தேஹத்தைத் துறத்தலும்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—ஶங்கரன் இவ்வளவே மொழிந்து, 'இவள் யாகத்திற்குப் போனால் அங்குத் தந்தையால் அவமதிக்கப் பெற்று ப்ராணன்களை விடுவது நிச்சயம். போகாதிருப்பினும் நம்மைப் போகவொட்டாமல் தடுத்தானே யென்றும், பந்துக்களைப் பார்க்க நேராமற் போயிற்றேயென்றும், உலகத்தவர்களெல்லோரும் போய்ப் பார்க்கும்படியான நமது தந்தையின் யஜ்ஞ மஹோத்ஸவத்தை நாம் பார்க்க நேராமற்போயிற்றே யென்றும் வருந்தி இவள் ப்ராணன்களை விடுவது நிச்சயம். ஆகையால் இவளுக்குப் போக அனுமதி கொடுப்பினும் போக வேண்டாமென்று தடைசெய்யினும், இரண்டு விதத்திலும் இவள் சரீரத்திற்கு நாசமே நேரும்' என்று சிந்தித்து வெறுமனே இருந்தான். அப்பால் அந்த ஸதி தாய் தந்தை முதலிய பந்துக்களைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பமுற்று, க்ருஹத்தினின்று வெளிப்புறப்பட்டு மீளவும் ருத்ரனிடத்தில் சங்கித்தவளாகி (பர்த்தாவின் வசனத்தைக் கடந்து போவேனாயின், என்ன கெடுதி வருமோ? என்று சங்கித்தவளாகி)ப் போகவும் போகாதிருக்கவும் மன உறுதி உண்டாகப் பெறாமல் இரண்டு விதமாகவும் மனம் நடையாடப் பெற்றிருந்தாள். கணவன் போக

வேண்டாமென்று தடுக்கையால் நண்பர்களைப் பார்க்க வேண்டுமென்னும் விருப்பம் தடைபட்டு மனவருத்தமுற்று பந்துக்களிடத்தில் ஸ்னேஹத்தினால் ரோதனம்செய்து கொண்டு கண்ணீர்த்துளிகளால் மிகவும் தழதழத்திருக்கின்ற ஸதியானவள் கோபத்தினால் சரீரம் நடுங்கப்பெற்றவளாகி எல்லாம் பரப்ரஹ்ம ரூபங்களே யென்று நினைத்து எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையனாகையால் எவரையும் தனக்குச் சத்ருக்களாக நினையாதவனாகிய ருத்ரனைத் தன் கண்களால் பஸ்மம் செய்பவள்போல் பார்த்தாள். பிறகு அவள், 'இவன் நமக்குப் போக அனுமதி கொடுக்கமாட்டேனென்கிறானே' என்னும் துக்கத்தினால் பெருமூச்செறிந்து, ஜ்ஞானத்தை விரும்புபவர்க்கு ப்ரியனும் ப்ரேமத்தின் மிகுதியால் தனக்கு தேஹத்தின் பாதியைக் கொடுத்தவனுமாகிய அந்த ருத்ரனைத் துறந்து ஸ்த்ரீ ஸ்வபாவத்தினால் மதிமயங்கப் பெற்றவளாகி, பந்துக்களைப் பார்க்க நேராமற் போகிறதேயென்னும் சோகத்தினாலும், போகலாகாதென்று தடுக்கையாலுண்டான கோபத்தினாலும் 'பர்த்தாவைக் கடந்து போவேனாயின், என்ன கெடுதி நேருமோ' என்னும் பயத்தினாலும் மனவருத்தமுற்றவளாகவே தாய் தந்தைகளின் க்ருஹத்திற்குப் போனாள். 'இந்த க்ஷணமே அவ்விடம் போய்க் குதிக்க மாட்டேனா' என்னும் குதூஹலத்தினால் ஸஹாயமின்றித் தனியளாகவே மிக்க விரைவுடன் அடியிட்டு நடந்து செல்கின்ற அந்த ஸதீதேவியை, ருத்ரனுடைய ப்ருத்யர்கள் பலரும் பின்றொடர்ந்து சென்றார்கள். ப்ரமத கணங்களும் யக்ஷர்களும் மணிமான் மதன் முதலியவர்களும் நந்தியை முன்னிட்டுக்கொண்டு பலிஷ்டர்களாகையால் சிறிதும் பயமின்றி, 'ருத்ரன் கூடப்போகாமையால் இவள் தனியே போகின்றாளே; நடந்து போவது இவளுக்குத் தகுமா?' என்று மனவருத்தமும் 'பர்த்தாவின் வசனத்தைக் கடந்து போகின்றாளே, என்ன அனர்த்தம் விளையுமோ' என்று பயமும் உண்டாகப்பெற்று அவளைப் பின்றொடர்ந்தார்கள்.

அவர்கள் ஓடிச்சென்று அந்த ஸதியை பலாத்காரமாக நந்தியின் மேல் ஏற்றிக்கொண்டு சாரிகை (படிக்குந் திறமையுடைய ஒரு பக்ஷி) பந்து கண்ணாடி தாமரை மலர் வெண்குடை விசிறி பூமாலை முதலியவற்றோடும் வீணை வேணு முதலிய ஸங்கீத வாத்யங்களோடும் சங்கு துந்துபி முதலிய வாத்யங்களோடும் கூடி மிக்க அலங்காரத்துடன் போனார்கள். அந்த ஸதி இங்ஙனம் சென்று நாற்புறங்களி லும் வேதகோஷங்கள் அமைந்திருப்பதும் யாகத்திற் குரிய பசுவைச் சேதிக்கும் இட முடையதும் ப்ரஹ்மரிஷி களால் சூழப்பெற்றதும் தேவதைகள் நாற்புறத்திலும் நிறைந்திருப்பதும் மண் முதலியவற்றால் இயற்றின பாத் ரங்களையுடையதுமாகிய யாக பூமிக்குப் போய்ச் சேர்ந் தாள். அங்ஙனம் அவ்விடத்திற்கு வந்த ஸதியை அவளு டைய மாதாவும் கூடப்பிறந்தவர்களும் தவிர மற்ற எவர் களும் ஆதரிக்கவில்லை. ஏனென்னில், நாம் இவளை விசா ரித்தால், யாகம் செய்கின்ற தக்ஷர் கோபித்துக் கொள்வ ரென்னும் பயத்தினால் அவளைப் பார்த்தும் 'நீ எப்பொழுது வந்தாய்? க்ஷேமமா?' என்று ஒன்றும் விசாரிக்கவில்லை. அங்ஙனம் அவமதிக்கப்பெற்ற அவளை அவளுடைய உடன் பிறந்தவர்கள் ப்ரீதியின் மிகுதியால் கிளம்பிவருகின்ற கண்ணீர்களால் கண்டம் தடுக்கப்பெற்றவராகி ஆலிங்க னஞ் செய்தார்கள். அவளுடைய தந்தையாகிய தக்ஷரும் அவளை விசாரிக்கவில்லை. அதனால் அவள், மாதாவும் மாதாவின் உடன் பிறந்தவர்களும் மேலான ஆஸனம் அளித்து வெகுமதிக்கினும், தனது உடன் பிறந்தவர் ப்ரே மத்துடன் க்ஷேமம் விசாரித்துக் கௌரவிக்கினும், அவற் றில் எதையும் அங்கீகரிக்கவில்லை. தன் தந்தையாகிய அந்த தக்ஷர் தன் கணவனை ருத்ரனுக்கு ஹவிர்ப்பாகம் கொடுக்காமல் யாகம் செய்வதையும், தேவதைகளுக்கெல் லாம் ப்ரபுவான ருத்ரனை அழைக்காமையால் அவமதித்த தையும் ஆலோசித்துப் பார்த்து, தானும் யாகஸபையில் அனாதரம் செய்யப்பெற்றவளாகி ரோஷத்துடன் உலகங்களை

தஹிப்பவள் போன்று கோபாவேசமுற்றாள். அவள் கோபாவேசத்தினால் தழதழத்த உரையுடன், ருத்ரனை அவமதித்தமை முதலியவற்றால் கோபித்து தக்ஷனை வதிக்கமுயன்ற பூதகணங்களைத் தன்பலத்தினால் தடுத்து தூமாதி மார்க்கத்தைக் கொடுக்குந் தன்மையுள்ள கர்மங்களில் ஸ்ரமப்படுகின்றவராகி அதனால் 'தனக்கு நிகர் எவருமே இல்லை' என்று கர்வமுற்றவரும் சிவனை த்வேஷிக்கின்றவருமாகிய தக்ஷரை, ஜனங்கள் எல்லோரும் கேட்டுக் கொண்டிருக்கையில் இங்ஙனம் நிந்தித்தாள்.

ஸதீதேவி சொல்லுகிறாள்:—ருத்ரன் அனைவர்க்கும் அந்தராத்மாவான பரமாத்மாவினிடத்தில் மிகுந்த பக்தியுடையவன். அவனுக்கு ப்ரியனும் இல்லை. அப்ரியனும் இல்லை. இவ்வுலகத்திலுள்ள ப்ராணிகளுக்குள் அவனுக்கு மேற்பட்டவன் எவனுமே இல்லை. அவன் ஸர்வாந்தர்யாமியான பகவானையே மிகுந்த பக்தியுடன் பணிகின்றவனாகையால் எல்லாவற்றையும் ப்ரஹ்ம ஸ்வரூபமாகவே பாவிக்கின்றவன். ஆகையால், உலகத்தவர் ஒருவனை ப்ரீதியுடன் ஆதரிப்பதும் ஒருவனை த்வேஷிப்பதுமாயிருப்பதுபோல், அவன் ஒருவனிடத்தில் ப்ரீதியையும் ஒருவனிடத்தில் த்வேஷத்தையும் செய்யமாட்டான். அவன் எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையன். ஆகையால் அவனுக்கு ப்ரியனாவது த்வேஷியாவது எவனுமே இல்லை. இப்படி எவ்விடத்திலும் வைரமில்லாதவனும் ஸமஸ்த பூதங்களுக்கும் நண்பனும் அனைவர்க்கும் ஆத்மாவைப் போல் ப்ரீதிக்கிடமா யிருப்பவனுமாகிய ருத்ரனிடத்தில் உன்னைத் தவிர எவன்தான் ப்ரதிகூலமாக நடப்பான். அந்தணனே! உன்னைப்போன்ற சில துஷ்டர்கள் தன்னைத் தவிர மற்றவர்களின் குணங்களையும் தோஷங்களாகவே நினைக்கின்றார்கள். பிறரிடத்தில் குணங்கள் இருப்பினும் அவற்றில் சிறிதும் கண்வைக்காமல் தோஷங்களையே வெளியிடுவது மாத்ரமேயன்றி இல்லாத தோஷங்களையும் ஏறிடுகின்றார்கள். இவர்களே அஸாதுக்களென்று கூறப்

படுவார்கள். எவர்கள் பிறருடைய தோஷங்களை நினைக்காமல் அவர்களிடத்தில் ஏதேனும் சிறிது குணம் இருப்பினும் அதையே வெகுவாகக் கொள்கின்றார்களோ, அவர்களே மஹாநுபாவர்கள்; ஸாதுக்களாவார்கள். ருத்ரன் அப்படிப்பட்ட மஹாநுபாவர்களில் தலைவனாயிருப்பவன். நீ அத்தகைய ஸாதுக்களிடத்தில் அபராதம் செய்தனை. சவம்போன்ற தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து அங்ஙனமே வாயால் பேசுகின்றவருமான உன்னைப்போன்ற துஷ்டர்கள் எப்பொழுதும் பொறுமையுடன் பெரியோர்களைப் பழிப்பது ஆச்சர்யமன்று. அங்ஙனம் நிந்திக்கப்பெற்ற ஸாதுக்கள் தம்மை நிந்திக்கின்றவர்களைப்பற்றி ஒன்றும் நினைக்கமாட்டார்களாயினும், அந்த மஹாபுருஷர்களின் பாதாரவிந்தங்களில் படிந்த பராகங்கள் அவர் நிந்திப்பதைப் பொறாமல் அவருடைய தேஜஸ்ஸைப் பாழ்செய்யும். அத்தகைய துஷ்டர்களுக்குப் பெரியோர்களைப் பழிப்பதே உரியதன்றி, பழியாதிருக்கை அவர்க்குப் பொருந்தாது. 'நான் பெரியோர்களிடத்தில் என்ன அபசாரப்பட்டேன்' என்னில், சொல்லுகிறேன், கேட்பாயாக. ருத்ரனுக்கு இரண்டு எழுத்துக்கள் அடங்கின சிவனென்னும் ஒரு பேர் உண்டல்லவா. அதை ஏதேனும் ஒரு ப்ரஸங்கத்தினால் ஒருகால் வாக்கினால் எவரேனும் மொழிவார்களாயின், அவர்களுடைய பாபத்தையெல்லாம் அது போக்கிவிடுகின்றது. (பகவானுடைய நாமத்தை உச்சரித்தால் உண்டாகும் பலன் அந்தப் பகவானிடத்தில் பக்தி அமைந்த பெரியோர்களின் நாமத்தை உச்சரிப்பதனாலும் உண்டாகுமென்பது யாவர்க்கும் தெரிந்த விஷயமே). அவனுடைய ஆஜ்ஞை ஒருவர்க்கும் தாண்டத்தகாதது. அப்படிப்பட்ட மஹாநுபாவனாகிய அந்தச் சிவபெருமானை அமங்கள ஸ்வபாவனாகிய நீ த்வேஷிக்கின்றனை. இப்படியும் சிலர் த்வேஷிப்பவர் உண்டோ? ஆ! என்ன வருத்தம்? பெரியோர்களின் மனங்களாகிற வண்டுகள் ப்ரஹ்மாநந்தமாகிற மதுவைப் பானஞ்செய்ய விரும்பி, தன்னைப்

பணிந்து வேண்டுவோர்களின் விருப்பங்களையெல்லாம் செய்யுந் தன்மையுடையதான எந்த ருத்ரனுடைய பாதாரவிந்தத்தைப் பணிகின்றனவோ, அப்படிப்பட்ட லோகபந்துவாகிய ருத்ரன் விஷயத்தில் நீ த்ரோஹம் செய்கின்றனை. 'அவன் அமங்களமான ஆசாரமுடையவனாகையால் அவனுடைய நாமத்தை நெஞ்சாலும் நினைக்கலாகாது' என்கிறாயோ? சொல்லுகிறேன், கேள். ருத்ரன் ஶ்மஶானங்களில் ஜடைகளை விரித்துக்கொண்டு அங்கு எறிந்து கிடக்கிற ப்ரேதங்களின் பூமாலைகளையும் சிதையிலுள்ள சாம்பலையும் ப்ரேதங்களின் மண்டையோடுகளையும் தரித்துப் பிசாசங்களோடு வாஸம் செய்தானென்றும் ஆனதுபற்றியே அவன் அமங்களாசாரனென்றும் பிதற்றுகின்றனையே. அப்படிப்பட்ட அமங்களனான ருத்ரனுடைய பாததூளியை ப்ரஹ்மதேவன் முதலாக உன்னையொழிந்த மற்ற மரீசிமுதலிய ப்ரஜாபதிகள் தமது சிரங்களால் தரிக்கின்றார்களே, அவர்களுக்கு அவனுடைய அமங்களாசாரம் தெரியாதோ? உனக்கு மாத்ரம் தான் தெரியுமோ? அவனை எல்லோரும் சிவனென்றே பேசுகிறார்களன்றி அசிவனென்று எவரும் பேசுகிறதில்லை. ஆனால் அந்த ஶ்மஶான வாஸம் ஏதுக்காகவென்னில், அது அறிவிலா மூடர்களை மதிமயங்கச் செய்கைக்காகவே. அதுவே சிறந்த செயலென்று அவன் செய்கிறானல்லன். ஸ்ரீபகவான் பௌத்தாவதாரம் செய்து சிலரை மதிமயக்கினாற்போல், இவனும் சில பாபிஷ்டர்களை மயக்குவதற்காக அங்ஙனம் செய்கிறானன்றி அதுவே அவனுக்கு இயற்கையென்று கொள்ளலாகாது. அவன் தர்மத்தைப் பாதுகாக்கின்றவன்; ஸர்வேஶ்வரனுடைய அம்சாவதாரம்; மஹானுபாவன். அப்படிப்பட்ட அவன் விஷயத்தில் துர்ப்புத்திகள், எவரும் தடுப்பாரின்றி அவமதிக்கிடமான பேச்சுக்களைப் பேசுவார்களாயின், ஸாதுவாயிருப்பவன் அதைக் கேட்கும்படி நேரப்பெற்றால், தான் அந்த துஷ்டர்களைச் சிக்ஷிக்குந் திறமையற்றிருப்பானாயின், காதுகளை மூடிக்

கொண்டு அவ்விடத்தினின்று புறப்பட்டு அப்புறம் போக வேண்டும். சிக்ஷிக்குந் திறமையுடையவனாயிருப்பானாயின், பெரியோர்களைப் பழிக்கின்றமையால் துஷ்டமாகிய அந்த நாக்கைத் தோண்டி அறுக்கவேண்டும். பிறகு தானும் ப்ராணன்களைத் துறக்கவேண்டும். அதுவே தர்மமாகும். ஆகையால் சங்கரத்வேஷியாகிய உன்னிடத்தினின்று உண்டான இந்த தேஹத்தை நான் வைத்துக்கொள்ள மாட்டேன். தெரியாமையால் அசுத்தமான அன்னத்தைப் புசிப்பானாயின் அதை வாந்தி செய்கையே மீளவும் சுத்தியென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். 'ஏன் இப்படி வீணாக ஆக்ரஹப்படுகின்றாய்? ருத்ரன் அமங்களன். வைதிகமார்க்கத்தை அதிக்ரமித்து நடக்கின்றான். ஆகையால் வைதிகமார்க்கத்தை அனுஸரித்து நடக்கின்றவனும் ப்ரேஷ்டனுமாகிய நான் அவனை ஆக்ஷேபித்தேன்' என்கிறாயோ? அப்படியே உன்னிஷ்டப்படி வைத்துக்கொண்டு பார்க்கினும், நீ செய்தது யுக்தமன்று. ஹ்ருதய கமலத்தில் வீற்றிருப்பதும் பரிசுத்தமான மனஸ்ஸினால் அறியக் கூடியதுமாகிய பரப்ரஹ்மத்தினிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி ஆநந்தத்தை அனுபவிக்கின்ற ருத்ரனுடைய புத்தி யாகாதிகர்மங்களைப் புகழ்ந்து சொல்லுகிற வேதத்தின் அர்த்தவாதங்களைத் தொடர்ந்து செல்லாது. நிவ்ருத்தி மார்க்கத்தில் நிலைநின்றவனுக்கு ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் ருசி உண்டாகாதல்லவா? ஆகையால் நிவ்ருத்தி மார்க்க நிஷ்டனாகிய ருத்ரன் ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் மனம் செல்லப் பெறுகிறதில்லை. இதை அறியாமல் அவன் வைதிக மார்க்கத்தை உல்லங்கனம் செய்கிறானென்பது யுக்தமன்று. ப்ரவ்ருத்தி மார்க்க நிஷ்டர்களுடைய ஆசாரமும் நிவ்ருத்தி மார்க்க நிஷ்டர்களுடைய ஆசாரமும் ஒன்றோடொன்று பொருந்தாது. வெவ்வேறாகவே இருக்கும். எப்படி தேவதைகளுடைய கதியும் மனுஷ்யர்களுடைய கதியும் ஒன்றோடொன்று பொருந்தாமல் வெவ்வேறாகவே இருக்குமோ, அங்ஙனமே இதுவும்

வெவ்வேறா யிருக்கும். தேவதைகளுக்கு ஆகாயத்தில் மாத்ரமே கதி. மனுஷ்யர்களுக்கு பூமியில் மாத்ரமே கதி; அங்ஙனமே ப்ரவ்ருத்தி தர்ம நிஷ்டர்கள் வேதத்தில் விதித்த கர்மங்களில் மாத்ரமே கால் தாழ்ந்திருப்பார்கள். நிவ்ருத்தி தர்ம நிஷ்டர்கள் அந்தக் கர்மங்கள் நச்வர பலன்களைக் கொடுப்பவை யென்றும் ப்ரம ஸாத்யங்களென்றும் ஸ்வரூபத்திற் கிணங்காதவைகளென்றும் அவற்றில் கண்வைக்காமல் பகவானையே சரணம் அடைந்து அவனுடைய பாதாரவிந்தங்களையே த்யானித்துக் கொண்டிருப்பார்கள். கர்மங்களைத் துறந்து பகவானைச் சரணம் அடைகையே மேலான தர்மமாகையால் அதுவே அந்த வேதத்தின் உட்கருத்து. அதை அனுஷ்டிப்பவர்களே வைதிகோத்தமர்களாவார்கள். கேவல கர்மங்களை அனுஷ்டிப்பவர் வேதத்தின் கருத்தை அறியாதவர்களே. ஆகையால் அவர்களை வைதிகர்களென்றே சொல்லலாகாது. அங்ஙனம் கேவல கர்மங்களை ஆசரிக்கின்ற நீ வைதிகனாக மாட்டாய். உன்னிஷ்டப்படி நீயே வைதிகனும் ச்ரேஷ்டனுமாயிருப்பாயாக. ஆயினும், மேன்மையுடையவன் தன் தர்மத்தில் நிலைநின்றவனாகிப் பிறன் அற்பனாயினும், அவனை நிந்திக்கலாகாது. இதுவே தர்மமாம் 'ப்ரவ்ருத்தி தர்மமும் வேதத்தில் விதிக்கப்பட்டதேயன்றி வேறன்று. ஆகையால் அந்த ப்ரவ்ருத்தி தர்மத்தை ருத்ரன் ஏன் அனுஷ்டிக்கிறதில்லை?' என்னில், சொல்லுகிறேன், கேட்பாயாக. ஸ்வர்க்காதி பலன்களை விரும்பிச் செய்யும் கர்மம் ப்ரவ்ருத்தி கர்மமென்றும், எவ்வகைப் பலன்களையும் விரும்பாமல் செய்யும் கர்மம் நிவ்ருத்தி கர்மமென்றும் கூறப்படுகின்றன. ஸ்வர்க்காதி பலன்களை விரும்புகையும் பலனையே விரும்பாமையுமாகிய இவையே ப்ரவ்ருத்தி கர்மத்திற்கும் நிவ்ருத்தி கர்மத்திற்கும் அடையாளங்களாம். இவையே ப்ரவ்ருத்தி தர்மமென்றும் நிவ்ருத்தி தர்மமென்றும், ப்ரவ்ருத்தி மார்க்கமென்றும், நிவ்ருத்தி மார்க்கமென்றும் கூறப்படுகின்றன. இவ்விரண்டு மார்க்கங்களையும் வேதம் நன்றாகப் பிரித்து

விவரிக்கின்றது. அவ்விரண்டும் ஒன்றுக்கொன்று விருத்தங்களாகையால், அவற்றை ஒரே ஸமயத்தில் ஒருவன் அனுஷ்டிக்க முடியாது. ஆகையால் ப்ரஹ்மஜ்ஞானத்திற்கு ப்ரவ்ருத்தி கர்மம் நிவ்ருத்தி கர்மம் ஆகிய இவையிரண்டும் ஸாதனமாகமாட்டா. நிவ்ருத்தி கர்மம் மாத்ரமே ஜ்ஞான மார்க்கத்திற்குப் பொருந்தும். அந்த நிவ்ருத்தி கர்மத்தைச் சிவனும் அனுஷ்டித்துக்கொண்டிருக்கின்றான். ப்ரவ்ருத்தி கர்மத்தை உன்னைப்போன்ற மூடர்கள் கைப்பற்றி வருந்துகிறார்கள். வாராய் பிதாவே! நாங்கள் கைப்பற்றியிருக்கிற அணிமாதி ஸித்திகள் உங்களுக்குக் கிடைக்கமாட்டா. 'எங்களுடைய ஸித்திகளும் உங்களுக்கு நேரமாட்டா' என்கிறாயோ? ஸ்வர்க்காதிபதவிகளல்லவோ உங்களுடைய ஸித்திகள்? தூமாதி மார்க்கத்தைக் கொடுப்பவைகளான யஜ்ஞாதி கர்மங்களை அனுஷ்டிப்பவர்களும் யாகத்தில் சமைத்த குத்ஸிதமான அன்னத்தைப் புசித்து அவ்வளவில் த்ருப்தி அடைந்தவர்களுமாகிய ப்ராணிகளே அந்த ஸ்வர்க்காதி பதவிகளை ஸ்தோத்ரம் செய்வார்கள். அதுவும் அந்த யாகசாலைகளிலிருக்கும் வரையிலுமேயன்றி அதை விட்டு வெளியே போவார்களாயின், அவர்களுக்கு அந்த புத்தியும் மாறிப்போம். நாங்கள் கைப்பற்றியிருக்கிற அணிமாதி ஸித்திகளோவென்றால், பிறர்க்கு அறிய முடியாத அடையாளங்களையுடையவை. ஜரா மரணாதியான ஸாம்ஸாரிக தர்மங்களையெல்லாம் துறந்த பெரியோர்களால் அங்கீகரிக்கப் பெற்றவை. ஆகையால் ப்ரவ்ருத்தி மார்க்கத்திற்கும் நிவ்ருத்தி மார்க்கத்திற்கும் பலத்திலும் அனுஷ்டானத்திலும் மஹத்தான வைலக்ஷண்யம் உண்டு. அனதுபற்றியே பெரியோர்களுக்கு ப்ரவ்ருத்தி தர்மத்தில் ருசியே உண்டாகிறதில்லை. இங்ஙனம் நிவ்ருத்தி மார்க்கத்தில் நிலைநின்ற மஹானுபாவனாகிய ருத்ரனை த்வேஷிக்கின்ற உன்னுடைய தேஹத்தினின்று உண்டான இந்தப் பாபிஷ்ட ஜன்மத்தினால் எனக்கு என்ன ப்ரயோஜனம்? இந்த தேஹத்தினால் கிடைத்த ப்ரயோஜனம் போதும் போதும்.

அழகான இந்த தேஹத்தை ஏன் விடுகிறாய்?' என்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக. துர்ப்புத்தியாகிய உன்னுடைய ஸம்பந்தத்தினால் நான் வெட்கமுற்றிருக்கின்றேன். பெரியோர்களுக்கு அப்ரியத்தைச் செய்கின்ற பாபிஷ்டனிடத்தினின்றுண்டான தேஹத்தைச் சுடவேண்டுமல்லவா? நீ மேன்மையுடைய ருத்ரனைப் பழிக்கின்றனையாகையால் பாபிஷ்டன். ஆகையால் உன்னுடைய தேஹத்தினின்று உண்டான என் தேஹத்தை நான் துறந்து விடுகின்றேன். மற்றும், எருத்துக் கொடியனான ருத்ரன் பரிஹாஸ காலங்களில் என்னை 'தாக்ஷாயணி!' (தக்ஷனது புதல்வி!) என்று உன் ஸம்பந்தத்தை உட்கொண்ட நாமத்தினால் அழைப்பானாயின், அப்பொழுது நான் பரிஹாஸமும் புன்னகையுமின்றி மிகவும் மனவருத்தம் அடைகின்றேன். ஆகையால், உன்னிடத்தினின்று உண்டானதும் பிணம்போன்றதுமாகிய இந்த தேஹத்தை நான் நிச்சயமாய் விடப்போகின்றேன். இதில் ஸந்தேஹமில்லை.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—வாராய் சத்ருக்களை அழிக்குந் திறமையுடைய விதுரனே! இங்ஙனம் ஸதி யாகத்தில் தக்ஷரைப் பார்த்து மொழிந்து வடதிசையில் சென்று வாக்கு முதலியவற்றையும் மனத்தையும் அடக்கிக்கொண்டு உட்கார்ந்தாள். அங்கு ஆசமனம் செய்து கண்களை மூடிக்கொண்டு உடுத்திருந்த பொன்னிறமான பட்டு வஸ்த்ரத்தோடு கூடவே, யோகிகள் தேஹத்தை விடுவதற்கு எங்ஙனம் செய்வார்களோ, அங்ஙனமே செய்யத்தொடங்கினாள். நிந்தைக்கிடமல்லாத அந்த ஸதீதேவி, நெடுநேரம் உட்கார்ந்திருப்பினும் சிறிதும் வருத்தம் உண்டாகாதிருக்குமாறு ஆஸனத்தை ஜயித்து மேலே செல்லுந்தன்மையுள்ள ப்ராண வாயுவையும் மேலும் கீழும் போகவொட்டாமல் ஒரே நிலையாயிருக்கும்படி நாபி சக்ரத்தில் நிறுத்தி அந்த நாபி சக்ரத்தினின்று உதானவாயுவைக் கிளப்பி புத்தியுடன் மெல்ல மெல்ல ஹ்ருதயத்தில் நிறுத்தி மார்பிலிருக்கின்ற அந்த உதான வாயுவைக் கண்டத்தின் வழியாய் புருவங்களினிடையில்

கொண்டு போய்ச் சேர்த்தாள். பெரியோர்களனைவரினும் மிகுந்த பெருமை அமைந்தவனாகிய ருத்ரன் அடிக்கடி தன் மடியில் ஏற்றிக்கொண்டு புகழ்ந்ததாகிய தன் தேஹத்தை இங்ஙனம் தக்ஷரிடம் கோபத்தினால் துறக்க விரும்பி, நினைத்தபொழுது மரணம் அடையும்படி ஸ்வதந்த்ரை யாகையால் ருத்ரனுடைய பத்னியாகிய அந்த ஸதீதேவி அங்கங்களில் அநிலாக்னிதாரணை யென்னும் தாரணை யைச் செய்தாள். அப்பால், ஜ்ஞானத்தை விரும்புவோர்க் கெல்லாம் குருவும் தன் பர்த்தாவுமாகிய ருத்ரனுடைய பாதாரவிந்தங்களைப் பணிகையாலுண்டாகும் ஆநந்தத்தை அனுபவித்துக்கொண்டு அதனால் சிறிதும் பாபமற்றவளாகி பர்த்தாவைத் தவிர மற்றெதையும் சிந்திக்காதிருந்தாள். அவளுடைய தேஹம் அந்தக்ஷணமே ஸமாதியால் விளையும் அக்னியால் எரிந்துபோயிற்று. பூமியிலுள்ளவர்களும் ஆகாயத்திலுள்ளவர்களும் அந்த ஆச்சர்யத்தைக்கண்டு 'ஆ! ஆ!' என்று பெருங்கோஷம் செய்தார்கள். மற்றும், அந்த ப்ராணிகள் 'தேவஶ்ரேஷ்டனாகிய ருத்ரனுடைய அன்பிற்கிடமான பார்யை (ஸதி) தக்ஷரால் கோபம் விளையு மாறு அவமதிக்கப் பெற்றவளாகி ப்ராணன்களைத் துறந் தாள். ஆ! ப்ரஜாபதியான தக்ஷருடைய தௌர்ஜன்யத் தைக் காண்பீர்களாக. இவர்க்கு ஏன் இப்படி புத்தி கெட் டுப்போயிற்றோ? இப்பொழுது இவர் செய்த கார்யத்தைக் கண்டீர்களா? இப்படியும் செய்யலாகுமா? ஜங்கம ஸ்தாவர ரூபமான ஜகத்தெல்லாம் தன் ப்ரஜைகளைப்போல் எவனுக்கு மிகவும் ப்ரீதிக்கிடமாயிருக்கின்றதோ, அப்படிப்பட்ட ருத்ர னுடைய பார்யையாகிய ஸதீதேவி தக்ஷரால் அவமதிக்கப் பெற்று ப்ராணன்களைத் துறந்தாள். ஜகத்தை யெல்லாம் தன் ப்ரஜைகளைப்போல் பார்க்க வேண்டியவரான இந்த தக்ஷர் தன் வயிற்றில் பிறந்த புதல்வியை இங்ஙனம் அவம திப்பது யுக்தமா? இவர் ஸதியை அவமதித்தமையால் ருத்ரனொருவனுக்கு மாத்ரமே மனஸ்தாப மல்லாமல் ஜகத்திற்கெல்லாம் மனஸ்தாபமேயல்லவா? ஏனென்னில்,

ஜகத்திற்கெல்லாம் ப்ரியனுன ருத்ரன் மனவருத்தமுறுவா ஞயின், அவனுடைய ப்ரஜைகள்போன்ற ஜகத்தும் மன வருத்தம் உறுமல்லவா? இப்படி உலகமெல்லாம் வருந்தும் படியான கெடுதியை இவர் செய்யலாகுமா? ஸதீதேவி இவ ருக்குப் புதல்வி. மற்றும் அவள் கம்பீரமான மனமுடைய வள்; மிகுந்த குணங்கள் அமைந்தவள்; ஆனதுபற்றியே அடிக்கடி வெகுமதி செய்யத்தகுந்தவள். அப்படிப்பட்ட வளை இவர் மஹர்ஷியாயிருந்தும் அவமதித்தமை அழ கன்று. இவருடைய ஹ்ருதயம் மிகவும் பொறாமையுடை யது. ப்ராஹ்மணனென்று வ்யாஜமேயொழிய ப்ராஹ்ம ணர்க்கு இயற்கையில் ஏற்பட்ட குணங்கள் இவருக்கு எவையுமே இல்லை. இந்த தக்ஷர் உலகமெங்கும் அபகீர்த்தி யையும், கடைசியில் நரகத்தையும் பெறுவாரென்பதில் ஸந் தேஹமில்லை. ஏனென்னில், இவர் தம்முடைய அங்கத்தி னின்றுண்டான புதல்வி தம்முடைய அபராதத்தினுல் மரணம் அடைவதாக முயற்சி கொள்ளுகையில், சிவ னிடத்திலுள்ள த்வேஷத்தினுல் அவளை வேண்டாமென்று தடுக்காமல் வெறுமனே இருந்து விட்டாரல்லவா?' என்று பலவாறு மொழிந்தனர். இங்ஙனம் தக்ஷரது புதல்வியாகிய ஸதீதேவி அற்புதமாயிருக்குமாறு ப்ராணத்யாகம் செய்த தைக் கண்டு ஜனங்கள் இவ்வாறு மொழிந்து கொண் டிருக்கையில், ருத்ரனுடைய அனுசரர்களாகிய ப்ரமத கணங்கள் தக்ஷரைக் கொல்வதற்காக ஆயுதங்களை எடுத் துக்கொண்டு கிளம்பினுர்கள். நாற்புறத்திலும் கிளம்பி வருகின்ற பாரிஷதர்களின் (ப்ரமத கணங்களின்) வேகத் தைக் கண்டு மஹானுபாவராகிய ப்ருகுவானவர், யஜ்ஞத் திற்கு விக்னம் செய்பவர்களை அழிக்குந் திறமையுடைய யஜுர்வேத மந்த்ரத்தினுல் தக்ஷிணுக்னியில் ஹோமம் செய்தார். அது மிகவும் ஆச்சர்யமாயிருந்தது. அந்த தக்ஷருடைய யாகத்தில் அத்வர்யுவாயிருந்த ப்ருகு மஹர்ஷி இங்ஙனம் ஹோமம் செய்கையில், எவர் தவமஹிமையால் ஸோம யாகங்களில் கொடுக்கிற ஹவிர்ப்பாகத்தைப் பெற்று

புசிக்கும்படியான மேன்மையை அடைந்து ருபுக்களென்னும் பேரால் வழங்கிவருகின்றார்களோ, அந்த தேவதைகள் மிகுந்த ஒளியுடன் ஆயிரமாயிரமாய்த் தோன்றிக் கிளம்பினார்கள். அவர்களெல்லோரும் கொள்ளிக்கட்டைகளையே ஆயுதமாகக் கொண்டிருந்தார்கள். தக்ஷரை வதிக்க வந்த ப்ரமதகணங்களும் யக்ஷர்களும் ப்ராஹ்மதேஜஸ்ஸினால் ஜ்வலிக்கின்ற அந்த ருபுக்களென்னும் தேவதைகளால் தஹிக்கப்பெற்றுத் திசைகளைப்பற்றிப் பறந்தோடினார்கள். நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

ருத்ரன் தன் பத்னியாகிய ஸதீதேவியின் தேஹ த்யாகத்தைக் கேட்டுக் கோபத்தினால் தக்ஷாது யாகத்தை த்வம்ஸம் செய்தல்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—ருத்ரன், தன் பத்னியாகிய ஸதி தக்ஷப்ராஜபதியால் அவமதிக்கப்பெற்று மரணம் அடைந்ததையும், தக்ஷரை வதிக்க முயன்ற தன் ப்ரமத ஸைன்யம் முழுவதும் தக்ஷரது யாகத்தைச் சேர்ந்த ருபுதேவதைகளால் துரத்தப்பெற்று ஓடிப்போனதையும் நாரதமுனிவர் மூலமாய்க் கேள்விப்பட்டுப் பெறுங்கோபாவெசமுற்றான். அப்பால் அந்த ருத்ரன் பயங்கரனாகிக் கோபாவேசத்தினால் உடம்பு தெரியாமல் உதட்டை நன்றாகக் கடித்துக்கொண்டு, மின்னல்கள்போலும் அக்னி ஜ்வாலைகள்போலும் பயங்கரமான ஒளியுடைய ஜடையைப் பிடுங்கிக்கொண்டு எழுந்து பெரிய ஸிம்ஹநாதத்துடன் அந்த ஜடையைக் கீழே போகட்டான். உடனே அதினின்று பெரிய தேஹமுடைய வீரபத்ரன் தோற்றினான். அவன் தன் தேஹத்தினால் ஆகாயத்தை அளாவி மிகவும் உயர்த்தியுடையவனாயிருந்தான். மற்றும், காளமேகத்தின் நிறம்போன்ற நிறமும் ஸூர்யன்போல் ஜ்வலிக்கின்ற மூன்று கண்களும் பயங்கரமான கோரைப்பற்களும் எரிகின்ற அக்னியைப்போன்ற தலைமயிர்களும் உடையவன்; மண்டையோடுகளை மாலையாகத் தரித்திருப்பவன்; பலவகை ஆயு

தங்களை ஏந்திக்கொண்டிருந்தான். அவன், 'என்ன செய்ய வேண்டும்?' என்று மொழிந்துகொண்டு ருத்ரனுக்கெதிரில் அஞ்சலி ஹஸ்தனாய் நின்றான். பூதங்களுக்கு நாதனாகிய ருத்ரன் அவ்வீரபத்ரனைப் பார்த்து 'நீ என்னுடைய அம்சமேயாகையால் நீயும் ருத்ரனே. நீ யுத்தத்தில் ஸாமர்த்யமுடையவன். நீ இங்கிருந்து புறப்பட்டுப் போய், தக்ஷருடைய யாகத்தையும் தக்ஷரையும் த்வம்ஸம் செய்து வருவாயாக' என்று மொழிந்தான். கோபாவேச முற்றிருக்கின்ற ருத்ரனால் இங்ஙனம் ஆஜ்ஞை செய்யப்பெற்ற அவ்வீர பத்ரன் அவனை ப்ரதக்ஷிணம் செய்து அப்பொழுது, தடையில்லாத வேகத்துடன் கூடி, மிகவும் பலிஷ்டர்களுடைய பலத்தையும் பொருள் செய்யாமல் யுத்தம் செய்யுந்திறமை தனக்கு உண்டென்று நினைத்தான். (ப்ரமத கணங்களால் பொறுக்க முடியாத மஹா பலமுடைய ருபுதேவதைகளையும் தான் அனாயாஸமாகவே ஜயித்துவிடலாமென்று நினைத்துக்கொண்டான்). அப்பனே! அவ்வீரபத்ரன், ஸிம்ஹநாதம் செய்கின்ற ப்ரமத கணங்களால் சூழப்பட்டு மிகவும் பயங்கரமாகத் தானும் ஸிம்ஹநாதம் செய்தான். அப்பால் அவன், ஜகத்தையெல்லாம் ஸம்ஹாரம் செய்கின்ற ம்ருத்யுவையும் ஸம்ஹரிக்கும்படியான சூலாயுதத்தை ஏந்திக்கொண்டு வீரத்தண்டை முதலிய ஆபரணங்களால் ஒலிக்கின்ற பாதங்களையுடையவனாகி தக்ஷருடைய யாகபூமியைக் குறித்துப் புறப்பட்டுப் போனான். பிறகு தக்ஷருடைய யாகத்தில் ருத்விக்குகளும் யஜமானராகிய தக்ஷரும் மற்றும் ஸபையிலுள்ள ப்ராஹ்மணர்களும் அவரது பத்னிகளும் வடதிசையில் தூள் கிளம்புவதைக் கண்டு 'இதென்ன? இருட்டா?' என்று ஸந்தேஹித்து, 'இது இருளன்று. தூளே' என்று தெரிந்துகொண்டு 'இந்த தூள் எதனால் உண்டாயிற்று?' என்று ஆலோசித்தார்கள். 'காற்றும் பலமாக வீசவில்லை. பெருங்காற்று வீசுமாயின், தூள் கிளம்பக் கூடும். அதுவும் இல்லை. திருடர் முதலியவர்களுக்கும் ப்ரஸக்தி இல்லை. ஏனென்னில், கொடிய

தண்டனை செய்யுந்தன்மையுள்ள ப்ராசீனபர்ஹியன்றோ இப்பொழுது மன்னவனுயிருக்கின்றான். அவன் ஜீவித்திருக்கையில், திருடர் முதலிய துஷ்டர்கள் தலைகாட்ட மாட்டார்கள். ஆ! இதென்ன? பசுக்களை வேகமாகத் துரத்தினால் தூள் உண்டாகக்கூடும். அதுவும் இல்லை. ஆகையால் இந்த தூள் எங்கிருந்து உண்டாயிற்று? இப்பொழுது உலகமெல்லாம் நசிக்கும்போல் தோற்றுகிறது. ஒரு காரணமும் இல்லாமல் திடீலென்று தூள் கிளம்புகிறது. இது உத்பாதமாயிருக்க வேண்டும். ஆகையால் உலகங்களுக்கு ப்ரளயமே நேரும்போல் தோற்றுகிறது' என்றார்கள். தக்ஷரது பத்னியாகிய ப்ரஸூதியும் மற்றுமுள்ள ஸ்த்ரீகளும் பயந்த மனமுடையவராகி 'இந்த ப்ரஜாபதியாகிய தக்ஷர், பெண்கள் எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கையில், ஒரு அபராதத்தையும் அறியாத புதல்வியாகிய ஸதியை அவமதித்தார். அந்தப் பாபத்தின் பலனே இது. ருத்ரன் ப்ரளய காலத்தில் ஜடைகளை விரித்துக்கொண்டு தன் சூலத்தின் நுனியில் திக்கஜங்களைக் குத்திக் கோர்த்து அஸ்த்ரங்களை ஏந்தி த்வஜங்கள்போன்ற புஜங்களை நீட்டிப் பெரிய அட்டஹாஸங்களாகிற கர்ஜனங்களால் திசைகளெல்லாம் பிளந்து போம்படி ஸந்தோஷத்துடன் நர்த்தனம் செய்பவன்; எப்படிப்பட்டவர்க்கும் பொறுக்க முடியாத தேஜஸ்ஸுடையவன். அப்படிப்பட்ட ருத்ரனைக் கோபிக்கும்படி செய்தார். ருத்ரன் கோபமுறுவானாயின், அவனைக் கண்ணெடுத்துப் பார்க்கவுங்கூட முடியாது. புருவ நெறிப்புக்களாலும் பயங்கரமான கோரைப்பற்களாலும் நக்ஷத்ரக்கூட்டங்களையெல்லாம் உதறிவிடுவான். அப்படிப்பட்ட ருத்ரனுக்குக் கோபம் விளைத்தவன் ப்ரஹ்மாவாயினும், அவனுக்கு என்ன க்ஷேமம் உண்டாகும்? அழிந்து போகவேண்டுமேயன்றி எவ்வித க்ஷேமமும் உண்டாகாது. ப்ரஹ்மாவுக்கே இந்த கதியானால் மற்றவனைப்பற்றிச் சொல்லவேண்டுமோ?' என்றார்கள். இங்ஙனம் ஜனங்கள் பயம்வழிகின்ற கண்ணோக்கமுடையவராகிப் பலவாறு பேசிக்கொண்டிருக்கையில், கிலே

நின்ற மனமுடைய தக்ஷருக்கும் பயத்தை விளைவிக்கும்படியான பெருப்பெரிய பற்பல உத்பாதங்கள் ஆகாயத்திலும் பூமியிலும் நாற்புறங்களிலும் உண்டாயின. விதுரனே! அப்பால் ருத்ரனுடைய ப்ருத்யர்களாகிய வீரபத்ரன் முதலியவர், தக்ஷர் செய்கின்ற மஹத்தான யாகத்தைத் தகைந்து நாசம் செய்தார்கள். அவர்கள் பலவகை ஆயுதங்களை ஏந்திக்கொண்டிருந்தார்கள். மற்றும், அவர் மிகவும் குள்ளர்களும் பொன்னிறமுடையவர்களும் மகர மீனுடைய உதரம்போன்ற உதரமும் முகம் போன்ற முகமும் அமைந்து பயங்கரமாயிருந்தார்கள். அவர்கள் நாற்புறங்களிலும் ஓடி அந்த யாகத்தை த்வம்ஸம் செய்தார்கள். அந்த ருத்ரனுடைய ப்ருத்யர்களான ப்ரமதகணங்களில் சிலர் ப்ராசீனவம்சத்தையும், சிலர் பத்னீசாலையையும், சிலர் யஜ்ஞசாலைக்கு முன்னேயிருக்கிற ஸதஸ்ஸென்னும் மண்டபத்தையும், சிலர் ஆக்னீத்ர சாலையையும், சிலர் யஜமான க்ருஹத்தையும், சிலர் யாக சாலையையும், சிலர் போஜனசாலையையும், சிலர் யாகத்திற்கு வேண்டிய பாத்ரங்களையும் முறித்தார்கள். சிலர் யாகத்தின் அக்னிகளை அணைத்தார்கள். சிலர் அக்னி குண்டங்களில் மூத்ரம் பெய்தார்கள். சிலர் உத்தரவேதியிலுள்ள ஸீமாஸூத்ரங்களை அறுத்தார்கள். சிலர் ரிஷிகளைப்பிடித்துப் பீடித்தார்கள். சிலர் அவரது பத்னிகளை விரட்டினார்கள். சிலர் பயந்து ஓடிப்போகின்ற தேவதைகளைத் துரத்திக்கொண்டு ஓடிப்போய்ப் பிடித்துக் கொண்டார்கள். ருத்ரனுடைய ப்ருத்யர்களில் தலைவனாகிய மணிமானென்பவன் ப்ருகுவைப் பிடித்துக் கட்டினான். வீரபத்ரன் தக்ஷப்ராஜாபதியைப் பிடித்துக்கட்டினான். சண்டேசன் பூஷதேவதையையும், நந்திகேஶ்வரன் பகதேவதையையும் பிடித்துக்கொண்டார்கள். ஸமஸ்தமான தேவதைகளும் யாகஸபையிலுள்ள மற்ற ப்ராஹ்மணர்களும் ருத்விக்குகளும் ருத்ரனுடைய ப்ருத்யர்களால் ப்ருகு முதலியவர் வதிக்கப்படுவதைக் கண்டு தாம் கற்களால் அடிக்கப் பெற்றுப் பலவாறு ஓடிப்போனார்கள். ஸ்ருவமென்கிற ஹோம

பாத்ரத்தைக் கையில்கொண்டு ஹோமம் செய்கின்ற ப்ருகு வின் மீசை தாடிகளை வீரபத்ரன் பிடுங்கினான். ஏனென்னில், அந்த ப்ருகு முன்பு ஸத்ரயாகத்தில் தக்ஷர் சிவனைப் பழிக் கும்பொழுது மீசை தாடிகளைக் காட்டிக்கொண்டு சிரித்தா ரல்லவா? ஆகையால் அவருடைய மீசைதாடிகளை வேரோடு பிடுங்கினான். மஹாபலமுடைய அவ்வீரபத்ரன் முன்பு தக்ஷர் நிந்திக்கும்பொழுது அவரை பகன், 'இன்னும் நடக்கட்டும். நன்றாக நடக்கட்டும்' என்று கண்களால் தூண்டினானாகை யால், மிகுந்த கோபத்துடன் அவனைப் பூமியில் தள்ளி அவனுடைய கண்களைப் பிடுங்கினான். முன்பு தக்ஷர் மஹானு பாவனாகிய ருத்ரனைப் பழிக்கும்பொழுது பூஷன் தனது பற்களைக் காட்டிக்கொண்டு சிரித்தானாகையால், பலதேவன் களிங்கதேசத்து ராஜாவின் பற்களை உதிர்த்தாற்போல், அந்தப் பூஷனுடைய பற்களை உதிர்த்தான். அப்பொழுது அவ்வீரபத்ரன் தக்ஷருடைய மார்பில் காலை வைத்து அழுத் திக்கொண்டு மிகுந்த கூருடைய கத்தியினால் அவர் தலையை அறுக்கப் பார்க்கினும், அதை அறுக்க வல்லவனாகவில்லை. பசுபதியாகிய அவ்வீரபத்ரன், கேவல ஆயுதங்களாலும் மந்த்ரங்களோடு கூடின ஆயுதங்களாலும் அந்த தக்ஷ ருடைய தோலைச் சிறிதும் அறுக்க முடியாதிருக்கக் கண்டு மிகவும் ஆச்சர்யமுற்று, 'இவன் தலையை அறுக்கும் உபா யம் என்?' என்று நெடுநேரம் ஆலோசித்தான். அந்தப் பசுபதி, யாக பசுவைக் கொல்வதுபோல் இவனை வதிக்க வேண்டுமென்று ஆலோசித்து, அங்ஙனமே அந்த தக்ஷ ருடைய சரீரத்தினின்று சிரஸ்ஸை அறுத்துத் தள்ளினான். அப்பொழுது பூதம் ப்ரேதம் பிசாசம் முதலியவை அவ் வீரபத்ரன் தக்ஷருடைய தலையைச் சேதித்த கார்யத்தைப் புகழ்ந்துகொண்டு 'நல்லது நல்லது' என்றன. மற்றும், ப்ராஹ்மணர் முதலிய மற்றவர் அதற்கு விபரீதமாக 'இப் படியும் ஒரு கோபம் உண்டோ?' என்று நிந்தித்தார்கள். மிகவும் கோபாவேசமுற்றிருக்கிற அவ்வீரபத்ரன் அந்த தக்ஷப்ரஜாபதியின் தலையை யாகத்தைச் சேர்ந்த தக்ஷி

ணுக்னியில் போகட்டான். இங்ஙனம் அவ்வீரபத்ரன் தக்ஷ ருடைய யாகத்தை நாசம்செய்து யக்ஷர்களின் வாஸஸ்தான மாகிய கைலாஸ பர்வதத்திற்குப் போனுன். ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

தேவதைகள் ப்ராஹ்மதேவனிடம் போதலும், ப்ராஹ்மதேவன் தேவதைகளுடன் ருத்ரனிடம் போய் அவனை ஸமாதானப்படுத்துதலும்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—அனந்தரம் ருத்விக்கு களும் ஸபையிலுள்ள மற்ற அந்தணர்களும் ஸமஸ்த தேவ தைகளும் ருத்ரனுடைய ஸைன்யங்களால் சூலம் பட்டயம் கத்தி கதை உழல்தடி இரும்புத்தடி இவை முதலிய ஆயு தங்களைக் கொண்டு ஸமஸ்த அங்கங்களும் கிழிக்கவும் பிளக்கவும் பெற்றுத் தோல்வி அடைந்து பயந்து வருந்தி ப்ராஹ்மதேவனிடம் சென்று அவனுக்கு நமஸ்காரம் செய்து இந்த வ்ருத்தாந்தம் முழுவதையும் விண்ணப்பம் செய்தார் கள். நாராயணனுடைய நாபீகமலத்தில் பிறந்தவனும் மஹானுபாவனுமாகிய ப்ராஹ்மதேவனும் அனைவர்க்கும் அந்தராத்மாவாகிய நாராயணனும் தக்ஷருடைய யாகம் த்வம்ஸமாகப்போகிற தென்பதை முன்னமே தெரிந்து கொண்டு அந்த தக்ஷருடைய யாகத்திற்குப் போகாமலே இருந்தார்கள். ப்ரபுவாகிய ப்ராஹ்மதேவன் தேவதைகள் அங்ஙனம் வந்து மொழிந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்டு இங்ஙனம் மொழிந்தான்.

ப்ராஹ்மதேவன் சொல்லுகிறுன்:—க்ஷேமத்தை விரும்பு பவர் மிகவும் தேஜஸ்வியாகிய ருத்ரனிடத்தில் அபராதம் செய்வார்களாயின், பிறகு அவனை அவர்கள் எவ்வளவு அருள்புரியச் செய்யினும், அவன் பெரும்பாலும் அவர்க ளுக்கு மேன்மேலும் க்ஷேமத்தை விளைவிப்பவனுகமாட் டான். யாகத்தில் ஹவிர்ப்பாகம் பெறுதற்கு உரியவனுகிய ருத்ரனை அவனுக்குப் பாகம் கொடுக்கலாகாதென்று அவ மதித்தீர்களாகையால், நீங்கள் அவன் விஷயத்தில் பாபம்

செய்தீர்கள். ஆயினும் நீங்கள் மனத்தில் கபடமில்லாமல் அவனுடைய பாதாரவிந்தங்களைப் பிடித்துக்கொண்டு அவனை அருள்புரியச் செய்வீர்களாக. 'அவன் அபராதம் செய்தவர் விஷயத்தில் அருள் புரியமாட்டானென்றீர். பாதங்களைப் பிடித்துக்கொண்டு அருள்புரியச்செய்யும்படி சொல்லுகிறீர். அவன் அவ்வளவில் அருள் புரிவானோ?' என்னில் சொல்லுகிறேன், கேளுங்கள். அவன் சீக்ரத்திலேயே அருள்புரியுந் தன்மையன். ஆனால் மனத்தில் கபடம் இருந்தால் எவ்வளவு அனுஸரித்தாலும் அருள்புரியமாட்டான். மனத்தில் கபடமில்லாமல் அவனுடைய பாதங்களைப் பிடித்துக் கொள்ளில், 'காலைப்பிடித்தால் கடக்கலாகாது' என்பதை ஆலோசித்து விரைவில் அருள்புரிவான். நீங்கள் யாகத்தை மீளவும் ஒருவழியாய் நடத்தி முடிக்கவேண்டுமென்று விரும்புவீர்களாயின், எவன் கோபித்தால் திக்பாலர்களோடுகூடின உலகங்களெல்லாம் பாழாய் விடுமோ, அப்படிப்பட்டவனும் தக்ஷாதிகளின் துர்ப்பாஷணங்களால் ஹ்ருதயத்தில் அடிக்கப்பெற்றவனும் இப்பொழுது பார்யையை இழந்திருப்பவனுமாகிய அந்த ருத்ரனைச் சீக்ரத்தில் அருள்புரியச் செய்வீர்களாக. 'நாங்கள் அவனிடம் போகப் பயப்படுகின்றோம். நீரே இதற்கு ஓர் உபாயத்தை ஆலோசிப்பீராக' என்னில், சொல்லுகிறேன். ருத்ரனுடைய உண்மையையும் அவனுடைய பலவீர்யங்களின் அளவையும் நான் அறிய வல்லனல்லேன். இந்த்ரனும் அதை அறிய வல்லனல்லன். நீங்களும் அதை அறிய வல்லரல்லீர். முனிவர்களும், இந்த்ரியங்களால் அறியமுடியாத வஸ்துக்களையும் மனத்தினால் கண்டறியுந் திறமையுடைய மற்றுமுள்ள ப்ராணிகளும் அறிய வல்லரல்லர். (அவன் ஸாக்ஷாத் பரப்ரஹ்மத்தின் ஆவேசாவதாரம். அவனுடைய மஹிமையை உள்ளபடி எவரும் அறிய வல்லரல்லர்). பரமாத்மாவின் ஆவேசாவதாரமாகிய அந்த ருத்ரன் விஷயத்தில் தகுந்த உபாயத்தை எவன் செய்யமுடியும்? ஒருவனும் செய்ய முயலமாட்டான். (நீங்கள் நேரில் போய் அவன்

பாதங்களைப் பிடித்துக்கொண்டு அவனை அருள்புரியச் செய்வது தவிர, மற்ற எவன் எந்த உபாயத்தைச் செய்ய முடியும்?).

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—அந்த ப்ரஹ்மதேவன் தேவதைகளுக்கு இங்ஙனம் ஆஜ்ஞாபித்து அந்த தேவதைகளோடும் ப்ரஜாபதிகளோடும் பித்ருதேவதைகளோடும் தன் ஸ்தானத்தினின்று புறப்பட்டு ருத்ரனுக்கு ப்ரியமான வாஸஸ்தானமும் பர்வத ஶ்ரேஷ்டமுமாகிய கைலாஸ பர்வதத்திற்குப் போனான். ஜன்மத்தினாலும் ஔஷதிகளாலும் தவத்தினாலும் மந்த்ரங்களாலும் ஸித்திபெற்ற தேவஜாதிகளும் கின்னரர்களும் கந்தர்வர்களும் அப்ஸர மடந்தையர்களும் மற்றும் பலவகையர்களும் அந்தக் கைலாஸ பர்வதத்தில் எப்பொழுதும் சூழ்ந்திருப்பார்கள். மற்றும், அந்தப் பர்வதத்தின் சிகரங்கள் பலவகையான ரத்னங்கள் நிறைந்து ரத்னங்களால் ஏற்பட்டவை போன்றிருக்கும். அவற்றில் கைரிகம் முதலிய பலவகை தாதுக்களும், பலவகை மரம் செடி கொடி புதர்களும், பலவகை மிருகக் கூட்டங்களும், நிர்மலமான பலவகை அருவிகளும், பலவகை குஹைகளும், பலவகை தாழ்வரைகளும் அமைந்திருக்கும். ஆகையால் அந்தப் பர்வதம் காதலருடன்கூடி விளையாடுகின்ற ஸித்த ஸ்த்ரீகளுக்கு மிகவும் மனக்களிப்பை விளைவிப்பதாயிருக்கும். மற்றும், அம்மலையில், மயில்கள் கேகாவென்று சப்தித்துக்கொண்டிருக்கும். வண்டுகள் தேன்களைப் பருகி மதித்துப் பாடிக்கொண்டிருக்கும். குரல் அழகாயிருக்கப்பெற்ற குயில் பறவைகள் கூவென்று நீட்டிக் கூவிக்கொண்டிருக்கும். மற்றுமுள்ள பற்பல பறவைகளும் ஆங்காங்கு அழகாய்க் குலாவிக்கொண்டிருக்கும். அங்குள்ள வ்ருக்ஷங்கள் விரும்பின விருப்பங்களையெல்லாம் கைகூடுவிக்குந் திறமையுடையவை. அவை உயர்ந்த கிளைகளுடன் காற்றினால் அசைந்துகொண்டு வண்டுகள் ஒலிக்கப் பெற்றிருக்கையால் பக்ஷிகளை 'வாருங்கள்' என்று கையைத் தூக்கி அசைத்து அழைப்பவை போன்றிருந்தன. அன்றி

யும், அம்மலை நடந்துபோகின்ற யானைகளால் நடப்பது போலவும், மலையருவிகளின் கோஷங்களால் ஸம்பாஷணம் செய்வதுபோலவும் தோற்றிற்று. அம்மலையில் மந்தார மென்னும் கல்ப வ்ருக்ஷங்களும் பாரிஜாதமென்னும் கல்ப வ்ருக்ஷங்களும் பவளமல்லி மரங்களும் ஸரள மரங்களும் பச்சிலை மரங்களும் மராமரமென்கிற ஸாலவ்ருக்ஷங்களும் பனைமரங்களும் மலையகத்தி மரங்களும் வேங்கைமரங்க ளும் மருதமரங்களும் மாமரங்களும் கடப்பமரங்களும் நீர்க் கடம்ப மரங்களும் சிறு நாகமரங்களும் புன்னை மரங்களும் செண்பக மரங்களும் பாதிரி மரங்களும் அசோக மரங்க ளும் மகிழமரங்களும் குருந்தமரங்களும் மருதாணி மரங்க ளும் நிறைந்திருக்கும். மற்றும், அம்மலையில் ஸ்வர்ணமய மான இதழ்களையுடைய தாமரைகளும் சிறந்த ஏலக்கொடி களும் ஜாதிமல்லிக்கொடிகளும் வெப்பாலைமரங்களும் மல்லிச்செடிகளும் முல்லைச் செடிகளும் அலங்காரமாயிருக் கும். பலா மரங்களும் அத்தி மரங்களும் அரச மரங்களும கல்லாலை மரங்களும் ஆலமரங்களும் ஹிங்கு மரங்களும் பூர்ஜ மரங்களும் பலவகை ஓஷதிகளும் பாக்கு மரங்களும் ராஜபூக வ்ருக்ஷங்களும் நாவல் மரங்களும் பேரீச்சை மரங்க ளும் ஆம்ராதக வ்ருக்ஷங்களும் தேன்மாமரங்களும் முறளஞ் செடிகளும் இலுப்ப மரங்களும் மற்றும் பலவகை வ்ருக்ஷஜாதிகளும் ஸாதாரண மூங்கில்களும் கீசக மூங்கில் களும் (காற்றினால் சப்திக்கின்ற மூங்கில்களும்) விளக்க முற்றிருக்கும். ஆம்பல்களும் நெய்தல்களும் செங்கழுநீர் களும் தாமரைகளும் அங்கு ஸம்ருத்தமாயிருக்கும். அங்குத் தாமரையோடைகளில் பற்பல பறவைகள் கூட்டங் கூட்டமாய்ச் செவிக்கின்பமாகக் கூவிக்கொண்டிருக்கும். மான்களும் குரங்குகளும் பன்றிகளும் ஸிம்ஹங்களும் கரடி களும் முள்ளம்பன்றிகளும் கவய ம்ருகங்களும் சரப ம்ருகங் களும் புலிகளும் கறுப்புச்சாரலையுடைய கலைமான்களும் கடாக்களும் மற்றும் பலவகை ம்ருகங்களும் அம்மலையில் உலாவிக்கொண்டிருக்கும். மற்றும், கோகர்ணங்களென்கிற

ஊர்ணு ம்ருகங்களும் ஏகபதங்களான (ஒற்றைக்குளம்புடைய) குதிரை முதலியவைகளும் கஸ்தூரி ம்ருகங்களும் அம்மலையில் அபாரமாயிருக்கும். தாமரை யோடைகளின் மணற்குன்றுகளில் வாழை மரங்கள் புதர்புதராயிருக்கும். மற்றும், அம்மலையில், ஸ்நானம் செய்த மாத்ரத்தில் புண்யத்தை விளைவிக்கும்படியான ஜலப்ரவாஹத்தையுடையதும் நிர்மலமாயிருப்பதுமாகிய கங்காநதி சுற்றிலும் சூழ்ந்து பெருகிக்கொண்டிருக்கும். இங்ஙனம் இவ்வகைகளால் மிகவும் அழகாயிருக்கின்ற ருத்ரனுடையவாஸஸ்தானமாகிய அந்தக் கைலாஸ கிரியைப் பார்த்துத் தேவதைகள் வியப்படைந்தார்கள். அந்தத் தேவதைகள் அம்மலையில் ருத்ரனுடையதான அலகையென்னும் பட்டணத்தைக் கண்டார்கள். அது மிகவும் அழகாயிருக்கும். அங்கு ஸௌகந்திகமென்னும் ஒரு வனத்தையும் கண்டார்கள். அவ்வனத்தில் ஸௌகந்திகமென்னும் தாமரை மலர் இருக்கின்றமையால் அதற்கு ஸௌகந்திக வனமென்னும் பேர் விளைந்தது. அந்த அலகாபுரிக்கு வெளியில், தீர்த்தபாதனுன ஸ்ரீமஹா விஷ்ணுவின் பாதாரவிந்தங்களில் படியும் பராகங்களால் மிகவும் பரிசுத்தமான நந்தையென்றும் அலகநந்தையென்றும் இரண்டு நதிகள் பெருகிக்கொண்டிருக்கின்றன. வாராய் விதுரனே! தேவஸ்த்ரீகள் தமது விமானங்களினின்று இறங்கி மன்மத க்ரீடைகளால் இளைப்புற்றவராகி இந்நதிகளில் இழிந்து தமது காதலர்களை ஜலங்களால் நனைத்துக்கொண்டு ஜலக்ரீடை செய்வார்கள். அந்த தேவஸ்த்ரீகள் ஸ்நானம் செய்யும்பொழுது அவரது தேஹங்களினின்று நழுவின புதிய குங்குமங்கள் பட்டுப் பொன்னிறமுடையதான இந்நதிகளின் ஜலத்தைக் கண்ட யானைகள் தண்ணீர் குடிக்க வேண்டுமென்னும் விருப்பம் இல்லாதிருப்பினும் அந்த ஜலத்தைத் தாமும் குடித்துத் தமது பெண்யானைகளையும் குடிக்கச் செய்கின்றன. அந்த அலகாபுரியில் வெள்ளியாலும் பொன்னாலும் விலையுயர்ந்த ரத்னங்களாலும் இயற்றின பற்பல விமானங்கள் ஆங்

காங்கு நிறைந்திருக்கும். புண்யஜனங்களும் அவரது பெண் மணிகளும் அந்நகரியில் உலாவிக்கொண்டிருப்பார்கள். அத்தகையதான அந்நகரம் மின்னல்களும் மேகங்களும் சூழப்பெற்ற ஆகாயம்போல் விளங்கும். இப்படிப்பட்டதான அந்தக் குபேர பட்டணத்தைக் கடந்து அந்த ஸௌகந்திக வனத்தைக் கண்டார்கள். அவ்வனம் குயிலினங்களின் கண்ட ஸ்வரங்களுடன் கலந்து மிகவும் அழகாயிருக்கின்ற வண்டுகளின் பாடல்களை யுடையதும் கலஹம்ஸங்களுக்கு ப்ரீதியை விளைப்பதும் தாமரை மலர்கள் நிறைந்த ஜலா தாரங்களையுடையதும் காட்டு யானைகளால் முறிக்கப்பெற்ற ஹரிசந்தன வ்ருக்ஷங்களில் பட்டுப் பரிமளத்துடன் வீசுகின்ற மந்தமாருதத்தினால் புண்யஜன ஸ்த்ரீகளின் மனத்தை மன்மத விகாரமுற்று மயங்கும்படி செய்வதுமாயிருந்தது. மற்றும், அவ்வனத்தில் வைடூர்யமணிகளால் இயற்றின படிக்கட்டுகளுடையவைகளும் நெய்தல்மலர்கள் வரிசை வரிசையாய் மலரப்பெற்றவைகளும் கிம்புருஷர்கள் நிறைந்திருப்பவைகளுமான நடைவாவிகள் ஆங்காங்குத் திகழ்வுற்றிருக்கும். இங்ஙனம் அழகியதான அந்த ஸௌகந்திக வனத்தைக் கண்டு அதனருகாமையில் ஆலமரத்தைக் கண்டார்கள். அவ்வாலமரம் நூறு யோஜனைதூரம் உயர்ந்திருக்கும்; எழுபத்தைந்துயோஜனை தூரம் வளர்ந்த கிளைகளுடையதும் நாற்புறங்களிலும் என்றும் மாறாத நிழலுடையதுமாயிருக்கும். அம்மரத்தில் ஒரு பறவைக் கூடாயினும் புலப்படாது. அம்மரத்தடியில் ஸூர்யகிரணங்களால் விளையும் தாஹம் சிறிதும் உண்டாகாது. அம்மரத்தடியில் ஸூர்ய கிரணங்கள் எப்பொழுதும் நுழைந்தறியா. மற்றும், அவ்வாலமரத்தின் கீழ் மஹாயோக நிஷ்டர்களான புருஷர்கள் கணக்கின்றி நிறைந்திருப்பார்கள். ஆகையால் அம்மரம் முழுவதும் மஹாயோகமயமாயிருக்கும். அஜ்ஞானத்தினின்று விடுபட விரும்பும் புருஷர்கள் ருத்ரனை உபாஸித்துக்கொண்டு அம்மரத்தின் கீழ் ஓயாது வாஸம் செய்துகொண்டிருப்பார்கள். தேவதைகள் அத்தகைய

தான அந்த ஆலமரத்தின் அடியில் உட்கார்ந்திருப்பவனும் கோபத்தைத் துறந்த அந்தகன்போன்றவனுமாகிய சிவ பெருமானைக் கண்டார்கள். அவன், மஹாஸித்தர்களும் (ஸித்தி பெற்றவர் அனைவரிலும் மேன்மை யுற்றவர்களும்) சாந்தர்களுமாகிய ஸனந்தனுதிகளாலும் யக்ஷர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் ப்ரபுவும் தனக்கு நண்பனுமாகிய குபேர னுலும் உபாஸிக்கப்பெற்று வடிவில் சாந்தி தோற்றும்படி சாந்தமூர்த்தியும் அபராதம்செய்த தேவதைகளிடத்திலும் வைரமின்றி தயைசெய்பவனுமாயிருந்தான். மற்றும் அவன் ஜ்ஞானயோகம் கர்மயோகம் இவைகளால் உதவி செய்யப் பெற்ற பக்தியோகத்தில் நிலைநின்று அதனுல் பகவானை ஆராதித்துக்கொண்டிருப்பவன்; 'ஜங்கம ஸ்தாவரங்க ளான பூதங்களெல்லாம் பகவானுடைய சரீரமே. ஆகை யால் அவற்றிற்கெல்லாம் நான் ப்ரதிகூலனுகாமல் அனுகூல னுகவே யிருக்கவேண்டும்' என்னும் நினைவினுல் ஜகத்திற் கெல்லாம் அனுகூலனுயிருப்பவன்; ஆனதுபற்றியே வாத் ஸல்யத்தினுல் உலகங்களுக்கெல்லாம் நன்மையையே ஆச ரித்துக்கொண்டிருப்பவன்; ஸந்த்யாகால மேகம்போல் சிவந் திருக்கின்ற அங்கத்தினுல் தாபஸர்களுக்கு இஷ்டமான பஸ்மம் தண்டம் ஜடை க்ருஷ்ணுஜினம் இவைகளையும் சந்த்ர கலையையும் அவன் தரித்துக்கொண்டிருந்தான். தர்ப் பத்தினுல் இயற்றின ஆஸனத்தின்மேல் உட்கார்ந்து வினவு கின்ற நாரதருக்கு ஸத்துக்களான ஸனந்தனுதிகள் கேட் டுக்கொண்டிருக்கையில், ஸனுதனமான ப்ரணவத்தின் பொருளாகிய பரமபுருஷனை உபதேசித்துக்கொண்டிருந் தான். மற்றும், அவன் இடக்காலை வலத்துடையின் மேலும், வலபுஜத்தை இட முழங்கால்மேலும் அக்ஷ மாலையை வலமணிக்கட்டிலும் வைத்துக்கொண்டு வலக்கை யில் ஜ்ஞான முத்திரையுடன் உட்கார்ந்திருந்தான். ஆநந்த ரூபமான ப்ரஹ்மத்தை த்யானிக்கையாகிற ஸமாதியில் ஆழ்ந்திருப்பவனும் யோகமார்க்கத்தில் விசேஷமாய்க் கால் தாழ்ந்திருப்பவனும் முனிவர்களுக்குள் முதன்மையாயுள்ள

முனிவனுமாகிய அந்த ருத்ரனைக் கண்டு லோக பாலர்களோடு கூடின முனிவர்கள் அஞ்சலிஹஸ்தராய் நமஸ்காரம் செய்தார்கள். அந்த கிரிசன், தேவதைகளாலும் தேவேந்த்ரனாலும் அஸுரர்களாலும் அஸுரேந்த்ரனாலும் வணங்கப் பெற்றபதாரவிந்தங்களையுடைய ப்ரஹ்மதேவன் அவ்விடம் வந்திருப்பதைக்கண்டு தான் உட்கார்ந்திருந்த ஆஸனத்தினின்று எழுந்து ஸ்ரீமஹாவிஷ்ணுவை நமஸ்கரிப்பதுபோல், தலையை வணக்கி அந்த ப்ரஹ்மதேவனுக்கு நமஸ்காரம் செய்தான். ருத்ரனுக்கு ஸர்வேஸ்வரனான ஸ்ரீ மஹாவிஷ்ணு எங்ஙனம் பூஜிக்கத் தகுந்தவனோ, அங்ஙனம் ப்ரஹ்மதேவனும் பூஜிக்கத் தகுந்தவனே. (ப்ரஹ்மாவினிடத்தினின்றல்லவோ ருத்ரன் உண்டானான்). ஆகையால் அந்த ப்ரஹ்மதேவனுக்கு நமஸ்காரம் செய்தான். மற்றும், அவ்விடத்தில் அந்த ருத்ரனை உபாஸித்துக்கொண்டிருந்த ஸித்தக் கூட்டங்களும் மற்றுமுள்ள மஹர்ஷிகளும் அந்தப்ரஹ்மதேவனை நமஸ்கரித்தார்கள். ப்ரஹ்மதேவனும் நமஸ்காரம் செய்து நிற்கின்ற சந்த்ரசேகரனைப் பார்த்துப் புன்னகையுடன் மொழிந்தான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—வாராய் ஜகதீசனான ருத்ரனே! ஜகத்தெல்லாம் சேதநா சேதன ரூபமாயிருக்கின்றதல்லவா? இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கு ப்ரக்ருதி க்ஷேத்ரம்போலவும் ஜீவன் பீஜம்போலவும் இருக்கின்றன. உலகத்தில் க்ஷேத்ரத்தில் பீஜத்தை இட்டால் அது முளைத்து எப்படி வளர்ந்து பலிக்குமோ, அப்படியே இந்த ஜீவனாகிற பீஜம் ப்ரக்ருதியாகிற க்ஷேத்ரத்தில் விழுந்து சரீரஸம்பந்தம் பெற்று ஜகத்தை விளைவிக்கின்றது. அந்த ப்ரக்ருதிஜீவர்களைக்காட்டிலும் பரமபுருஷன் விலக்ஷணனாயிருப்பான். அவனே பரப்ரஹ்மமென்று கூறப்படுவான். அவன் ஸமஸ்த வஸ்துக்களிலும் உள்புகுந்திருப்பவனாகையால் ஜகத்தெல்லாம் தானேயாகித் தன்னைக்காட்டிலும் வேறுபட்ட வஸ்து எதுவுமே இல்லையென்னும்படி இருப்பான். அப்படிப்பட்ட பரமபுருஷன் நீயே. இது எனக்கு

நன்றாகத் தெரியும். (ஜகத்தெல்லாம் பரம புருஷனாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்குச் சரீரமாயிருக்குமென்பது வெளிச் சமே. அந்த ஜகத்தில் ஒருவனாகிய நீயும் அந்தப் பரம புருஷனுக்குச் சரீரமே. மற்றும் அந்த ஸர்வேஶ்வரன் உன்னிடத்தில் விசேஷமாக ஆவேசித்து துஷ்டர்களைச் சிக்ஷிப்பதும் சிஷ்டர்களைப் பாதுகாப்பதுமாகிற கார்யங் களை நடத்திக்கொண்டிருக்கிறானாகையால் நீ அந்தப் பரம புருஷனே யென்னும்படி விளங்குகின்றனை). வாராய் பக வானே! நீயே உனது அம்சங்களான ப்ரக்ருதி புருஷர்களின் ஸம்பந்தத்தினால் விளையக்கூடிய இந்த ஜகத்தை யெல்லாம் சிலந்திப்பூச்சிபோல் அனாயாஸமாகவே ஸ்ருஷ்டிக்கின்றனை. ஸ்ருஷ்டித்த ஜகத்தைப் பாதுகாக்கின்றவனும் நீயே. அதைக் கடைசியில் அழிப்பவனும் நீயே. 'பரம புருஷ னன்றோ ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகின்றான். உங்களைப்போல் நானும் ஒரு ஜீவ னல்லவா? என்னை இங்ஙனம் ப்ரமிப்பது யுக்தமன்றே' என்னில், நீ சொல்லுவது வாஸ்தவமே. உனக்கு அந்த ராத்மாவாயிருந்து எவன் ஜகத்தையெல்லாம் ஸம்ஹரிக் கின்றானோ, அந்த ஸர்வேஶ்வரனே ஜகத்தைப் படைப் பதும் பாதுகாப்பதும் செய்கின்றான். நீ உலகங்களை ஸம்ஹ ரிப்பது அந்தப் பரமபுருஷனுடைய செயலே யென்றும், உனக்கு அதில் ஸம்பந்தம் நேராக இல்லை யென்றும் நான் நன்றாகவே அறிவேன். ஆயினும், அந்தப் பரமபுருஷ னுக்குச் சரீரமாகி அவனுக்குச் சேஷப்பட்டு உனக்குள்ள அந்த நிலைமைகளை உள்ளபடி அறிந்து 'அந்தப் பரம புருஷனே நான்' என்று பாவித்து அவனை மறவாமல் எப் பொழுதும் த்யானித்துக்கொண்டிருக்கிறாயாகையாலும், அவனும் உன்னை விசேஷமாக அபிமானித்து உன்னிடத் தில் விசேஷமாக ஆவேசித்திருக்கின்றானாகையாலும், நீயே அந்தப் பரம புருஷனென்று சொல்லும்படி விளங்கு கின்றனை. ஆனதுபற்றியே உனக்கு அந்தர்யாமியான ஸர்வேஶ்வரனைக் குறித்தே, 'நீ ஸ்ருஷ்டித்தனை' என்றும்

'நீ பாதுகாக்கின்றனை' என்றும், 'நீ ஸம்ஹரிக்கின்றனை' என்றும் சொல்லுகின்றேனன்றி நான் ப்ரமித்துச் சொல்லவில்லை. ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்தும் மஹானுபாவனான பரமபுருஷனை மறவாமல் எப்பொழுதும் ப்ரேமத்துடன் அவனையே த்யானித்துக் கொண்டிருக்கிறனை. உன்னுடைய மேன்மையை நாங்கள் என்னென்று சொல்லுவோம். நீ உன்னைப் பணியுமவர்களுக்குத் தர்ம அர்த்தங்களைக் கறக்கின்றனை. நீ, ஜனங்கள் புருஷார்த்தங்களைப் பெறும்படி, ஸமர்த்தமான சாஸ்த்ரத்தின் மூலமாய் அத்வரத்தை (யாகத்தை)ப் படைத்தனை. புருஷார்த்தங்களை நிறைவேற்றிக்கொடுக்கும் ஸாதனமான தர்மஅர்த்தங்களை இன்னின்ன உபாயங்களால் ஸாதிக்க வேண்டுமென்று அவற்றிற்குரிய உபாயங்களை அறிவிப்பதான சாஸ்த்ரத்தை வெளியிட்டவன் நீயே. வர்ணாஸ்ரம தர்ம மர்யாதைகளையும் நீயே ஏற்படுத்தினை. நீ ஏற்படுத்தின அந்த தர்ம மர்யாதைகளையே ப்ராஹ்மணர்கள் வ்ரதநியமங்களில் நிலைநின்று ஸ்ரத்தையுடன் அனுஷ்டிக்கின்றார்கள். மங்களஸ்வபாவனாகையால் சிவனென்று பேர் பெற்றவனே! புண்யகர்மங்களைச் செய்பவர்களுக்கு அவரவர் விருப்பத்தின்படி ஸ்வர்க்கலோகத்தையும் மேலான மோக்ஷத்தையும் கொடுக்கின்றனை. பாபகர்மங்களைச் செய்பவர்களுக்குப் பயங்கரமான நரகத்தைக் கொடுக்கின்றனை. பாபகர்மங்களைச் செய்பவர்களுக்கு ஸ்வர்க்க மோக்ஷங்கள் விளைகையாகிற மாறுதலானது எந்தக் காரணத்தினால் உண்டாகக்கூடும்? எதனாலும் உண்டாகாது. புண்யம் செய்பவர்களுக்கு ஸ்வர்க்காதி பலன்களும், பாபம் செய்பவர்களுக்கு நரகாதிபலன்களும் விளையுமேயன்றி அதற்கு மாறுதலே இல்லை. உனது பாதாரவிந்தங்களில் நிலைநின்ற மனமுடையவர்களும் ஸர்வபூதங்களும் நீயே யென்று நினைப்பவர்களும் (எந்த வஸ்துவைப் பார்க்கிலும், 'பரமபுருஷன் உள்புகாத வஸ்து எதுவுமே இல்லை யாகையால், இது பரப்ராஹ்ம ஸ்வரூபமே' என்று நினைப்பவர்களும்) ஸமஸ்த பூதங்களும்

பரமாத்மாவினிடத்தில் நிலைநின்றிருக்கின்றன வென்று பாவிப்பவர்களுமான பெரியோர்களை, உலகத்தில் அனர்த்தங்களுக்கிடமென்று ப்ரஸித்தமான கோபமானது சிறிதும் பாதிக்கிறதில்லை. உன் பாதங்களைப் பணிபவர்களுக்கே இப்படியானால், அந்தக் கோபம் உன்னைச் சிறிதும் பரிபவிக்க மாட்டாதென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? ஆகையால் நீ, கோபம் செய்வது யுக்தமன்று. ஸமஸ்த வஸ்துக்களும் பரப்ரஹ்மத்திற்கு உட்படாமல் ஸ்வதந்த்ரமாயிருப்பவை யென்று நினைப்பவர்களும் தேவ மனுஷ்யாதி தேஹங்களையே ஆத்மாவாக ப்ரமிப்பவர்களுமாகிய சில துஷ்டர்கள் கேவல யாகாதி கர்மங்களில் கண்வைத்துக் கெட்ட மனமுடையவரும் பிறர் பெருமையைக் கண்டால் ஹ்ருதயத்தில் ஆணி அடித்தாற்போல் வருந்துபவர்களுமாகி, மர்மங்களை அறுக்கும்படியான துர்ப்பாஷணங்களால் பிறரை வருத்துவார்கள். அவர்களுக்கு தெய்வத்தின் மூலமாய்த்தானே வதம் நேருமேயன்றித் தவறாது. அப்படிப்பட்டவர்களை உன்னைப்போன்ற தயாகுணமுடையவன் வதிக்கலாகாது. (நீ பரம புருஷனை த்யானித்துக்கொண்டு அதனால் பொழுது போக்கிக்கொண்டிருப்பவன்; மற்றும், மிகுந்த மன முடையவன். இத்தகையனான உனக்கு இந்த வீணெல்லாம் தகுமோ?) மற்றும், ஸாதுக்களின் நடத்தையை ஆலோசித்தால், நீ அனுக்ரஹம் செய்வதே யுக்தமாயிருக்கின்றது. ஜனங்கள் எப்படிப்பட்டவர்க்கும் தாண்ட முடியாததான பகவானுடைய மாயையால் மதிமயங்கப் பெற்று ஆத்மாவினிடத்தில் தேவ மனுஷ்யாதி பேதங்களை ஏறிடுகின்றார்கள். மற்றும், ஆத்மாக்கள் ஸ்வதந்த்ரர்களென்றும் ப்ரமிக்கின்றார்கள். அதைக் கண்ட ஸாதுக்கள், 'ஐயோ! இவர்கள் இப்படிக் கெட்டுப்போகின்றார்களே' என்று வருந்தி மன இரக்கத்துடன் அவர்களிடத்தில் தயை செய்வார்களேயன்றி, அவர்களுக்கு அப்ரியத்தை ஆசரிக்க மாட்டார்கள். அப்படிப்பட்ட அவிவேகிகள் தம் விஷயத்தில் ஏதேனும் கெடுதி செய்யினும், ஸாதுக்களாயிருப்பவர்

இது தெய்வாதீனமாய் நேரிட்டது. நம்முடைய தெய்வம், இத்தகையது. இவர்மேல் என்ன அபராதம்?' என்று நினைத்து அந்த அவிவேகிகளிடத்தில் அனுக்ரஹத்தையே செய்வார்கள். ஸாதுக்கள் எல்லாவற்றையும் தெய்வாதீன மென்றே நினைத்துப் பிறரிடத்தில் எப்பொழுதும் கோபம் கொள்ளமாட்டார்கள். நீ பகவானைச் சரணம் அடைந்த வன். ஆகையால் பரமபுருஷனாகிய அந்தப் பகவானுடைய மாயையால் நீ மதிகலங்கப் பெறாதவன்; ஆனதுபற்றியே ஸமஸ்த அர்த்தங்களையும் உள்ளபடி அறிந்தவன். அத் தகையனான நீ அந்த பகவானுடைய மாயையால் மதிமயங்கப் பெற்றவர்களும் கர்மானுகுணமாய்ச் செல்லும் மனமுடைய வர்களுமாகிய அபராதி ஜனங்களிடத்தில் அனுக்ரஹம் செய்வதே யுக்தம், வாராய் ப்ரபுவே! உனக்கு அஸாத்ய மானது எதுவுமே இல்லை. வாராய் ருத்ரனே! தக்ஷப்ரஜா பதியின் யாகத்தை, அது முடியாதிருக்கும்பொழுதே, நீ நடுவில் பாழ்செய்தனை. அந்த தக்ஷன் விதிப்படி யாகம் செய்யத் தெரியாதவன். ஆனதுபற்றியே அவனை நான் குத்ஸிதனென்றே நினைக்கின்றேன். ஏனெனில், யாகத்தில் ஹவிர்ப்பாகம் பெறுதற்கு உரியனாகிய உனக்குப் பாகம் கொடாமலே யாகம் நடத்தினானல்லவா? அனதுபற்றியே நீ அந்த யாகத்தை முடிய வொட்டாமல் இடையில் பாழ் செய்தனை. ஆயினும், பெரியோனாகிய நீ அவனிடத்தில் அருள் செய்து அந்த யாகத்தை உத்தரிப்பாயாக. உன் னிடத்தில் அபராதப்பட்டமையால் பாழான அந்த யாகம் உன்னுடைய அனுக்ரஹத்தினால்தான் நிறைவேறவேண்டும். இந்த யாகத்தைச் செய்யத் தொடங்கின தக்ஷன் பிழைக் கட்டும். பகன் கண்களைப் பெறுவானாக. ப்ருகுவுக்கு மீசை தாடிகளும், பூஷனுக்குப் பற்களும் முளைக்குமாக. இங் ஙனம் நீ அருள் புரிவாயாக. ஆயுதங்களாலும் கற்களாலும் அங்கங்களெல்லாம் முறியப்பெற்ற தேவதைகளுக்கும் ருத்விக்குகளுக்கும் சீக்ரத்தில் ஆரோக்யம் உண்டாகும்படி அனுக்ரஹம் செய்வாயாக. வாராய் ருத்ரனே! யாகம்

செய்தபின்பு ஹவிஸ்ஸு எவ்வளவு மிகுருகின்றதோ, அது உனக்குப் பாகமாகட்டும். ருத்ரனே! யாகத்தை அழித்தவனே! இப்பொழுது உனக்குப் பாகம் ஏற்பட்டமையால் இனி யாகம் நடக்கும்படி ஸங்கல்பிப்பாயாக. ஆருவது அத்யாயம் முற்றிற்று.

---

{ ஸ்ரீ மஹாவிஷ்ணு ஆவிர்ப்பவித்தலும், தக்ஷாதிகள் அவனை ஸ்தோத்ரம் செய்தலும், அவன் தக்ஷரைக் கொண்டு யாகத்தை நடப்பித்தலும். }

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிருர்:—இங்ஙனம் ப்ரஹ்மதேவனுல் ப்ரார்த்திக்கப்பெற்ற ருத்ரன் மனக்களிப்புற்ருன். வாராய் மஹாபாஹுவாகிய விதுரனே! அந்த வ்ருஷபத்வஜன் சிரித்து ப்ரஹ்மதேவனைப் பார்த்து 'நான் சொல்லுகின்றேன், கேட்பாயாக' என்று அவனை அழைத்து இங்ஙனம் மொழிந்தான்.

ருத்ரன் சொல்லுகிருன்:—வாராய் ப்ரஹ்மதேவனே! நீ மேன்மையுடைய எங்களெல்லோர்க்கும் மேலானவன். தேவதேவனுன பகவானுடைய மாயையால் மதி மயங்கப்பெற்று மூர்க்கர்களாயிருக்கின்ற இந்த பாலர்களின் அபராதத்தை நான் சொல்லவில்லை. நான் அதை மனத்திலும் நினைக்கவில்லை. ஆனுல், அபராதம் செய்த ஸமயத்தில் அதற்குத் தண்டனை செய்தேனன்றி மற்றென்றும் இல்லை. தக்ஷிணுக்னியில் தலை பஸ்மமாகப்பெற்ற தக்ஷப்ரஜாபதிக்கு ஆட்டின் முகம்போன்ற முகமுடைய தலை உண்டாகட்டும். மித்ரனுக்கும் தக்ஷனைப்போலவே தலை உண்டாகட்டும். பகனும் போன கண்கள் உண்டாகப்பெற்று யாகத்தில் தனக்குநேரும் ஹவிர்ப்பாகத்தைக் கண்களால் கண்டு களிக்கட்டும். பூஷனும் பற்கள் முளைக்கப்பெற்று யஜமானன் கொடுக்கின்ற பிஷ்டத்தை அந்தப் பற்களால் புஜிப்பானுக. யாகத்தில் மிகுந்ததை எனக்குப் பாகமாகக்கொடுக்க ஒப்புக்கொண்ட தேவதைகள் எல்லாரும் அடிபட்டு முறிந்த அங்கங்களெல்லாம் நன்கு நேரப்பெற்று ஆரோக்யம் அடைவார்களாக. அத்வர்யுக்களும் ருத்விக்குகளும் அம்வி

தேவதைகளின் புஜங்களாலும் பூஷதேவதையின் ஹஸ்தங்களாலும் புஜங்களும் ஹஸ்தங்களும் உண்டாகப் பெறுவார்களாக. ப்ருகு ஆட்டின் தாடிபோன்ற தாடிமீசைகள் முளைக்கப்பெறுவாருக.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறூர்:—அப்பா! விதுரனே! அப்பொழுது மங்களஸ்வபாவனுன ருத்ரன் இங்ஙனம் மொழிந்ததைக் கேட்டு ஸமஸ்த பூதங்களும் மனக்களிப்புற்று 'நல்லது நல்லது' என்று மொழிந்தன. பிறகு ருத்ரனைப் பார்த்து 'நீயே நேரில் வந்திருந்து கார்யங்களையெல்லாம் நடத்தவேண்டும்' என்று ப்ரார்த்தித்து இந்த்ரன் முதலிய தேவதைகளும், ப்ருகு ஹோமம் செய்த தக்ஷிணுக்னியினின்று தோற்றின ருபுதேவதைகளும் ருத்ரனேடும் பரஹ்மதேவனேடும் கூடி மீளவும் அந்த யாக பூமிக்கு வந்து சேர்ந்தார்கள். மஹானுபாவனுகிய ருத்ரன் மொழிந்தபடியே அவரவர்க்கு அந்தந்த அங்கங்கள் உண்டாயின. பிறகு யாகபசுவின் தலையை தக்ஷனுடைய சரீரத்தில் ஒட்டவைத்தார்கள். அங்ஙனம் வைத்தவுடனே அவன் ருத்ரனல் வீக்ஷணம் செய்யப்பெற்று, உறங்கினவன் எழுந்திருப்பதுபோல் எழுந்திருந்து எதிரில் நிற்கின்ற ருத்ரனையும் பார்த்தான். முன்பு ருத்ரனிடத்தில் த்வேஷத்தினுல் மனம் கலங்கப் பெற்றிருந்த தக்ஷப்ரஜாபதி அந்த ருத்ரனுடைய கண்ணேக்கத்தினுல், சரத்காலத்து மடுபோல், மனம் தெளியப்பெற்றுன். அந்தத் தக்ஷனுக்கு ருத்ரனை ஸ்தோத்ரம் செய்யவேண்டுமென்னும் புத்தி உண்டாயிற்று. ஆயினும், அவன் பரலோகம் அடைந்த புதல்வியாகிய ஸதியை ப்ரேமத்தினுல் நினைத்துக்கொண்டு சோகத்தினுல் கண்ணீர் ததும்பப்பெற்று ஸ்தோத்ரம் செய்ய வல்லமையற்றிருந்தான். ப்ரேமத்தினுல் தழுதழுத்த அந்தத் தக்ஷன் மிகவும் ப்ரயாஸப்பட்டு மனத்தை அடக்கி ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு ஸ்தோத்ரம் செய்யுந்திறமையமைந்த மதியுடையவனுகையால் ருத்ரனை ப்ரீதி அமைந்த பாவத்துடன் ஸ்தோத்ரம் செய்தான்.

தக்ஷர் சொல்லுகிறார்:—நான் உன்னை அவமதித்தேன். ஆயினும் நீ என்னை உபேக்ஷிக்காமல் அந்த அபராதத்திற்குத் தகுந்த தண்டனை செய்து என்னைப் புனிதமாக்கினை. அற்ப ப்ராஹ்மணர்களிடத்திலும் உனக்கும் ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கும் அவஜ்ஞை கிடையாது. தமது வர்ணாஸ்ரம தர்மங்களைத் தவறாமல் விதிப்படி நடத்தும் ப்ராஹ்மணோத்தமர்களிடத்தில் உங்களிருவர்க்கும் எப்படி அவஜ்ஞை உண்டாகும்? உண்டாகாது. வாராய் மஹானுபாவனே! நீ என் விஷயத்தில் பெரிய அனுக்ரஹம் செய்தனை. நீ செய்த சிக்ஷையை நான் சிக்ஷையாகவே பாவிக்கவில்லை. இது ஒரு பெரிய அனுக்ரஹமென்றே நினைக்கின்றேன். நீ ப்ராஹ்மஸ்வரூபனாகி ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் ஜீவாத்ம பரமாத்மாக்களின் உண்மையைத் தானும் அனுபவித்துப் பிறர்க்கும் உபதேசித்து அதை அழியாமல் பாதுகாக்கும்பொருட்டு வித்யை தவம் வ்ரதம் ஆகிய இவற்றை ஆசரிக்குந் தன்மையரான ப்ராஹ்மணர்களை முகத்தினின்று ஸ்ருஷ்டித்தனை. எல்லாரிலும் மேன்மையுடையவனே! ஆகையால் ப்ராஹ்மணர்களை ஸமஸ்த ஆபத்துக்களிலும் பசு மேய்க்கின்றவன்போல் பாதுகாக்கின்றவன். வழிதப்பிப் போகின்ற பசுக்களைத் தடியால் அடித்து வழியில் திருப்பிக்கொண்டு வருவதுபோல், அபராதம் செய்தவர்களைச் சிக்ஷித்து நல்வழியில் தவறாமல் நடக்கச் செய்கின்றனை. நான் தத்த்வத்ருஷ்டியில்லாதவன். ஆனதுபற்றியே நான் உன்னைப் பொருள்செய்யாமை மாத்ரமேயன்றி ஸபையில் துர்ப்பாஷணங்களாகிற பாணங்களால் உன்னை அடித்தேன். நீ மிகவும் பூஜிக்கத் தகுந்தவன். அப்படிப்பட்ட உன்னை நிந்தித்தமையால் நான் அதோலோகங்களான நரகங்களில் விழப்பெற்றேன். அங்ஙனம் நரகங்களில் விழுகின்ற என்னை, எனது அபராதத்தைச் சிறிதும் பாராமல் உன் கருணையமைந்த கண்ணோக்கத்தினால் பாதுகாத்தனை. நீ செய்த உபகாரத்தையே நினைத்து

நீ ஸந்தோஷம் அடைவாயாக. அந்த உபகாரத்திற்கு நான் பதில் செய்ய வல்லனல்லேன்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—அந்த தக்ஷப்ராஜாபதி ருத்ரனை இங்ஙனம் ஸ்தோத்ரம் செய்து பொறுப்பித்து அருள்புரியும்படி வேண்டி அந்த ருத்ரனும் ப்ரஹ்ம தேவனும் அனுமதி செய்யப்பெற்று உபாத்யாயர்களோடும் ருத்விக்குகளோடும் கூடி யாக கார்யத்தை நடத்தினன். யாகத்தின் இடையில் விச்சேதம் நேர்ந்தமையின் பரிஹாரத்திற்காகவும் வீரர்களான ப்ரமதகணங்களின் ஸம்பந்தத்தினால் வந்த தோஷத்தின் சுத்திக்காகவும் தாமஸனான வீரபத்ரனுடைய ஸம்பந்தத்தினால் வந்த தோஷத்தினுடைய பரிஹாரத்திற்காகவும் ஸ்ரீ மஹா விஷ்ணுவை தேவதையாக உத்தேசித்து மூன்று கபாலங்களில் பக்வம் செய்த புரோடாசமென்னும் ஹவிஸ்ஸை அக்னியில் ஹோமம் செய்தார்கள். வாராய் விதுரனே! ஹோமம் செய்வதற்காக ஹவிஸ்ஸை எடுத்துக்கொண்டிருக்கிற அத்வர்யு உத்தேஶ்ய தேவதையான விஷ்ணுவை நிர்மலமான புத்தியால் த்யானம் செய்தான். அப்பொழுது யஜமானனாகிய தக்ஷனும் அங்ஙனமே அந்த விஷ்ணுவை த்யானம் செய்தான். அப்பொழுது அவர்கள் த்யானம் செய்த ப்ரகாரமாகவே அம்மஹாவிஷ்ணு ஆவிர்ப்பவித்தான். பத்துத் திசைகளையும் விளங்கச் செய்கின்ற தன் தேஹ காந்தியால் யாகஸபையிலுள்ளவர்களின் கண்களை மழுங்கச் செய்பவனாகி, ப்ருஹத்தென்றும் ரதந்தரமென்றும் ப்ரஸித்தமான ஸாம ஸ்தோத்ரங்களைச் சிறைகளாகவுடைய கருடப் பறவையின்மேல் ஏறிக்கொண்டு அவ்விடம் வந்தான். அவன் கறுத்த நிறமும் பீதாம்பரமும் பொன்னால் இயற்றின அறைநாண் மாலையும் ஸூர்யன் போல் ஜ்வலிக்கின்ற கிரீடமும் அமையப்பெற்று வண்டுகள் போல் கறுத்த முன்னெற்றி மயிர்களால் அலங்காரமுற்று அழகாயிருக்கின்ற முகமுடையவனுமாயிருந்தான். மற்றும், அவன் சங்கு சக்கரம் தாமரைமலர் பாணம் தனுஸ்ஸு

கதை கத்தி கேடயம் ஆகிய இவ்வாயுதங்களோடுகூடி ப்ருத்யர்களைப் பாதுகாப்பதில் விரைகின்றவைகளும் ஸ்வர்ணமயமான தோள்வளை முதலிய ஆபரணங்களால் விளங்குகின்றவைகளுமான புஜங்களால் திகழ்பவனாகி, புஷ்பங்கள் நிறைந்த கிளைகளுடன் கூடின கர்ணிகார வ்ருக்ஷம்போல் ப்ரகாசித்தான். மார்பில் மடந்தையர்மணியான மஹாலக்ஷ்மியும் வனமாலை யென்னும் பூமாலையும் அமைந்து அழகான புன்னகையோடு கூடின கடைக்கண் ணோக்கத்தினால் ஜகத்தையெல்லாம் மனக்களிப்புறச்செய்யுந் தன்மையன். அம்மஹானுபாவனுக்கு இரண்டு பக்கங்களிலும் விசிறியும் சாமரமும் வீசிக்கொண்டிருந்தார்கள். அவன் அந்தச் சாமரம் விசிறி இவைகளால் இரண்டு பக்கங்களிலும் இரண்டு ராஜஹம்ஸங்கள் உலாவப்பெற்றவன் போல் தோற்றினான். அவன் சந்த்ரன்போல் ப்ரகாசிக்கின்ற வெண்கொற்றக்குடையால் மிகவும் விளக்கமுற்றிருந்தான். ப்ரஹ்மதேவனும் இந்த்ரனும் ருத்ரனும் முதலாகப் பெற்ற தேவதைகளும் மற்றுமுள்ள ஸித்த சாரணாதிகளும் மஹர்ஷிகளும் ப்ராஹ்மணர்களும் ஆகிய அனைவரும் அங்ஙனம் அருகாமையில் வந்த அந்த பகவானைக் கண்டு கூட்டங் கூட்டமாய் விரைவுடன் எழுந்து நமஸ்காரம் செய்தார்கள். அவர்கள் எல்லாரும் அந்தப் பகவானுடைய தேஜஸ்ஸினால் ஒளி மழுங்கவும் வாய் தழதழக்கவும் பெற்றுப் பயந்து அவனுடைய மஹிமையை நினைத்துக் கலங்கின மனமுடையவராகிச் சிரஸ்ஸில் அஞ்சலிசெய்து அம்மஹானுபாவனை ஸ்தோத்ரம் செய்தார்கள். ப்ரஹ்ம ருத்ராதிகள் அனைவரும் அந்தப் பகவானுடைய மஹிமையை எட்டிப்பிடிக்க முடியாத மனக்கருத்துடையவர்களே. ஆயினும், அவர்கள் தம்மை அனுக்ரஹிக்கும்பொருட்டு அழகிய திவ்யமங்கள விக்ரஹத்துடன் புலப்படுகின்ற அந்தப் பகவானைத் தமது மதிக்கு எட்டினவளவு ஸ்தோத்ரம் செய்தார்கள். (அவன் வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாமல் கரையற்ற மஹிமை யுடையவன். அப்படிப்பட்ட அந்த பகவானை அவர்கள்

வாக்கினாலும் மனத்தினாலும் துதிசெய்யத் துடங்கினார்களே. ஆ! இதென்ன ஆச்சர்யம்). தக்ஷர், தான் பூஜைக்காகக் கொடுத்த கந்த புஷ்பாதிகளை அங்கீகரித்து அவற்றுடன் ப்ரகாசிப்பவனும் அவரவர் விரும்பும் புருஷார்த்தங்களை நிறைவேற்றிக்கொடுக்கும் உபாயங்களில் சிறந்தவனுமாகிய அம்மஹாவிஷ்ணுவை ஸ்தோத்ரம் செய்தார். அவன், தன்னை ஆராதிக்கும்பொருட்டுத் துடங்கின யாகத்தின் அங்கங்களான ப்ரயாஜாதி கர்மங்களைக் காட்டிலும் மேலாகி அந்த யாகத்தைத் தானே நிறைவேற்றுகின்றவன்; யாகத்தில் கொடுக்கும் ஹவிர்ப்பாகங்களை இந்த்ராதி தேவதைகளுக்கு அந்தர்யாமியாயும் தானே நேராகவும் நின்று புஜிக்கின்றவன். யாகத்தின் பலனைப் கொடுப்பவன்; ஆனதுபற்றியே யஜ்ஞேஶ்வரனென்று கூறப்படுகின்றவன்; ப்ரஜாபதிகளான மரீசி முதலியவர்க்கும் அவர்களுக்கு ப்ரபுவான ப்ரஹ்மாதிகளுக்கும் ரக்ஷகன். அவர்களைப் படைத்தவனும் அவனே; அவ்வப்பொழுது அவர்களுக்கு ஹிதங்களை உபதேசிப்பவன். இத்தகையனும் ஸுநந்தன் நந்தன் முதலிய ப்ருத்யர்களால் சூழப்பட்டவனுமாகிய பகவானைக் கண்டு தக்ஷப்ரஜாபதி அஞ்சலிஹஸ்தராய் ஸ்தோத்ரம்செய்துகொண்டு மனவூக்கத்துடன் அவனைச் சரணம் அடைந்தார்.

தக்ஷர் சொல்லுகிறார்:—நீ பாபஸம்பந்த மில்லாமல் பரிசுத்தமான ஸ்வரூபமுடையவன்; உனக்குக் கர்ம ஸம்பந்தம் கிடையாது. நீ ஜீவனைப்போல் புண்ய பாபரூபமான கர்மத்திற்கு உட்பட்டவனல்லன். ஆகையால் நீ ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் விளையும் தோஷங்கள் எவையும் தீண்டப் பெறாமல் அந்த ப்ரக்ருதியை அண்டவொட்டாமல் தடுத்து ஜ்ஞானானந்தமயமான தன் ஸ்வரூபத்தில் நிலைநின்றிருப்பவன். ப்ரக்ருதியின் பரிணாமங்களான உள்ளிந்த்ரியமான மனதும் வெளியிந்த்ரியங்களான கண் காது மூக்கு முதலியவற்றும் ஆகிய இவற்றின் வ்யாபாரங்கள் எப்பொழுதும் இல்லாதவன். நீ இந்த்ரியங்களின் உதவியின்றியே எல்லா

வற்றையும் எப்பொழுதும் ஸாக்ஷாத்கரிக்குந் திறமையுடையவன்; ஆநந்தமயமான தன் ஸ்வரூபத்தையே அனுபவித்துக்கொண்டிருப்பவன். உன்னேடொத்தவனாவது உனக்கு மேற்பட்டவனாவது எவனுமே இல்லை. நீ ஜ்ஞான ஸ்வரூபன். இங்ஙனம் நீ பரிசுத்தனாயிருப்பது மாத்ரமேயன்றி உன்னை அடைந்தவர்களுக்கும் சுத்தியை விளைத்து அசுத்திக்கிடமான ஸம்ஸார பயத்தினின்று அவர்களை விடுவித்துப் பாதுகாக்கின்றனை. நீ இந்த ஸ்வரூப ஸ்வபாவங்கள் என்றும் மாறாதிருக்கப்பெற்றவன். நீ எந்த மாயையென்னும் ப்ரக்ருதியால் தீண்டப்பெறாமல் பரிசுத்தனாயிருக்கின்றனையோ, அம்மாயையைக்கொண்டே தேவ மனுஷ்யாதி சரீரங்களைப் படைத்து அவற்றில் ஜீவன் மூலமாய் உள் புகுந்து தான் ஸ்வதந்த்ரனாயிருந்தும் அம்மாயையில் கர்ம வம்யன்போல் இருக்கின்றனை. இதுவே நீ ஸர்வசக்தியென்பதற்குப் போதுமான த்ருஷ்டாந்தம். உன் சக்தியின் மேன்மையை என்னென்று சொல்லுவேன்.

ருத்விக்குகள் சொல்லுகிறார்கள்:—புண்ய பாபங்களென்கிற மலங்களற்றவனே! நாங்கள் நந்தியின் சாபத்தினால் கேவலமான யாகாதி கர்மங்களை அனுஷ்டிப்பதில் அநுராக்ரஹங்கொண்ட மனமுடையவரா யிருக்கின்றோம். நாங்கள் உன்னுடைய உண்மையை அறியப் பெற்றிலோம். வாராய் பகவானே! ஸத்த்வ ரஜஸ் தமோ குணங்களை அனுஸரித்து வேதங்களால் விதிக்கப்பெற்றனும் தேவதைகளின் அனுக்ரஹத்தை விளைவிப்பதுமாகிய இந்த யஜ்ஞாதி கர்மங்கள் மாத்ரமே எங்களுக்குத் தெரியும். இந்த யஜ்ஞாதி கர்மங்களுக்குப் பலன் கொடுக்கும்பொருட்டு இந்த்ராதி தேவதைகளில் நீ மறைந்து நிற்கின்றனை யென்று நாங்கள் கேள்விப்படுகின்றோம்.

ஸபையிலுள்ளவர் சொல்லுகிறார்கள்:—வாராய் சரணங்கொடுக்குந்தன்மையுள்ள மஹானுபாவனே! ஸம்ஸார மார்க்கத்தில் உழல்கின்ற அறிவிலா மனிதர்கள் காமத்தினால் பீடிக்கப்பட்டு வருந்துகின்றார்கள். இவர்கள், கல்ப

வ்ருக்ஷத்தின் நிழல்போல் ஸ்ரமங்களை யெல்லாம் போக்கும்படியான உன் பாதமூலத்தை எப்பொழுது சரணம் அடைந்து வாழப்போகின்றார்கள்? 'ஸம்ஸாரத்தில் அப்படி என்ன வருத்தம்' என்னில், சொல்லுகிறோம், கேட்பாயாக. இந்த ஸம்ஸார மார்க்கத்தில் இளைப்பாறும் இடம் சிறிதும் அகப்படாது. இதில் ஜன்ம ஜரா மரணாதியான க்லேசங்களாகிற புதர்கள் பலவும் அடர்ந்திருக்கையால் எடுத்த அடி வைக்கமுடியாதிருக்கும். இதில் [1] அந்தகனாகிற வேடன் இந்த அறிவிலா மூடர்களாகிற ம்ருகங்களை அடிப்பதற்குச் சுற்றி உலாவிக்கொண்டிருப்பான். இங்குச் சப்தாதி விஷயங்களாகிற கானல் ஓடிக்கொண்டிருக்கும். நானென்கிற அபிமானத்திற்கிடமான தேஹமும் என்னுடையதென்கிற அபிமானத்திற்கிடமான க்ருஹ க்ஷேத்ர புத்ராதிகளும் சுமக்க முடியாத பெரும் பாரங்களாயிருக்கும். ஸுக துக்கங்கள் முதலியவை இடரிவிழும் பள்ளங்கள்போல் பெரிய ஆபத்திற்கிடமாயிருக்கும். இதில் துர்ஜனங்களாகிற புலி கரடி ஸிம்ஹம் முதலிய கொடிய ம்ருகங்கள் உலாவிக் கொண்டிருக்கும். அதனால் பெரும்பயத்தை விளைவிக்கும். மற்றும், இதில் சோகமாகிற காட்டுத்தீ புகமுடியாமல் படர்ந்தெரியும். இப்படிப்பட்ட ஸம்ஸார மார்க்கத்தில் திரிகிற அறிவிலா மூடர்கள் உன் பாதாரவிந்தங்களைப் பணிந்து எப்பொழுது வாழப்போகிறார்களோ?

ருத்ரன் சொல்லுகிறான்:—வாராய் வரதனே! விரும்பின விருப்பங்களை யெல்லாங் கொடுக்கும் நன்மையனே! இவ்வுலகத்தில் பிள்ளை பெண்டிர் முதலியதும் வீடு வாசல் நிலம் நீர் முதலியதுமான தந்தமது விருப்பங்களெல்லாம் கைகூடும்பொருட்டு அனைவராலும் ஆராதிக்கத் தகுந்ததும் ஸம்ஸாரத்தில் விருப்பமின்றி மோக்ஷத்தையே விரும்புகின்ற பெரியோர்களால் மிகுந்த ப்ரேமத்துடன் பூஜிக்கத்தகுந்ததும் மேன்மை நன் மணம் முதலிய குணங்களெல்லாம் அமைந்து செவ்விமலர்போல் சிரத்தில்

1. அந்தகன்—யமன்.

கூடத்தகுந்ததுமாகிய உன் பாதாரவிந்தங்களில் நிலைநின்ற மனமுடையவனாகிய என்னை அறிவில்லாத மூடர்கள் ஆசார ஹீனனென்று பிதற்றுகிறார்கள். ஆயினும் நான் அதை ஒரு பொருளாக நினைக்கவேயில்லை. ஏனென்னில், நீ பிறர்களை அனுக்ரஹிக்கும் தன்மையனாகையால், உன்னைப் பணிகின்ற நமக்கும் பிறிடம் அனுக்ரஹம் செய்கையே தருமென்று நினைத்து அங்ஙனம் பழிக்கின்ற மூடர்களையும் நான் நிக்ரஹிக்காமல் வெறுமனே இருக்கின்றேன்.

ப்ருகு சொல்லுகிறார்:—ப்ரஹ்மதேவன் முதலிய ஸமஸ்த ப்ராணிகளும் எவ்விதத்திலும் கடக்கமுடியாததாகிய மாயையினால் ஜ்ஞானம் மறையப்பெற்றுத் தமஸ்ஸென்று சொல்லப்படுகிற ஸூக்ஷ்ம ப்ரக்ருதியின் பரிணாமமாகிய சரீரத்தில் இருந்துகொண்டு ஜீவாத்மாக்களுக்குள் அந்தராத்மாவாயிருக்கின்ற உனது உண்மையை இன்னும் அறியாமல் ஜன்ம ஜரா மரணாதி ரூபமான ஸம்ஸாரத்தில் உழல்கின்றார்கள். நீ சரணம் அடைந்தவர் விஷயத்தில் மிகவும் ப்ரீதிக்கிடமான பந்துவாயிருப்பவன். அப்படிப்பட்ட நீ எங்கள் விஷயத்தில் அனுக்ரஹம் செய்வாயாக. நாங்கள் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் ஜ்ஞானம் மறையப்பெற்று உன் பாதாரவிந்தங்களைப் பணியாமல் உன் மஹிமையைச் சிறிதும் அறியாமல் உன் திருவுள்ளத்திற்கு இணங்காத கார்யங்களையே செய்துகொண்டு பொழுது போக்குகின்றோம். நீயோவென்னில், அபராதங்களைப் பொறுப்பதே இயற்கையாயிருப்பவன். ஆகையால் நீ எங்கள் அபராதத்தைப் பொறுத்தருள்வாயாக.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—வாராய் பகவானே! வாக்குக்கும் மனத்திற்கும் கோசரமாகாத உன் ஸ்வரூபத்தை யத்தனிக்கிற ஜீவனும் இந்த்ரியங்களால் ஸாக்ஷாத்கரிக்க வல்லனாகமாட்டான். உலகத்திலுள்ள வஸ்துக்களில் ஒன்றோடொன்றுக்குள்ள பேதத்தை இந்த்ரியங்களால் அறியலாமாயினும், உன் ஸ்வரூபத்தை அவ்விந்த்ரியங்களால் ஸாக்ஷாத்கரிக்க முடியாது. ஏனென்னில்,

இந்த ஜீவன் இந்த்ரியங்களுக்கும் ஶப்தாதி விஷயங்களுக்கும், அவ்விரண்டுக்கும் காரணமான ஸத்த்வாதி குணங்களுக்கும் இருப்பிடம் (ப்ரக்ருதி ஸம்பந்த முடையவனாகையால் ஜ்ஞானம் ஸங்கோச முடையவன்); நீயோவென்றால், ப்ரக்ருதியின் பரிணாமமாகிய தேஹாதிகளைக்காட்டிலும், அவற்றோடு ஸம்பந்தித்திருக்கிற ஜீவனைக்காட்டிலும் மிக்க விலக்ஷணமாயிருப்பவன். ப்ராக்ருதமான சக்ஷுஸ்ஸு முதலிய இந்த்திரியங்கள் ப்ராக்ருத வஸ்துவை க்ரஹிக்குமேயன்றி அப்ராக்ருதனான உன் ஸ்வரூபத்தை க்ரஹிக்க வல்லவையன்று.

இந்த்ரன் சொல்லுகிறான்:—வாராய் அச்சுதனே! (ஆஶ்ரிதர்களைக் கைவிடாதவனே!) இந்த உன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹம் உலகங்களுக்கெல்லாம் ஸுகத்தை விளைவிக்குந் தன்மையது; ஆனதுபற்றியே மனத்திற்கும் கண்களுக்கும் ஆனந்தம் கொடுக்கின்றது. நீ தர்மத்தை நிலைநிறுத்தும்பொருட்டே இந்த உருவத்தைக் கொண்டனை. அதர்மத்தை அடக்காமல் தர்மத்தை நிலைநிறுத்த முடியாதாகையால் அதர்மத்தை அழிப்பதற்காகவும் நீ இந்த உருவங் கொண்டனை. ஆனதுபற்றியே, தேவதைகளுக்கு த்வேஷிகளான அஸுரர்களை அழிக்கும்பொருட்டு தண்டங்கள்போல் நீண்ட எட்டு புஜங்களுடையவனாகி அவ்வெட்டு புஜங்களிலும் எட்டு ஆயுதங்களை ஏந்திக் கொண்டு விளங்குகின்றனை.

ருத்விக்குகளின் பத்னிகள் சொல்லுகிறார்கள்:—ஜகதீசனே! உன்னை ஆராதிக்கும்பொருட்டு தக்ஷப்ரஜாபதி இந்த யாகம் செய்யத் தொடங்கினார். அது இப்பொழுது தக்ஷரிடம் கோபம் கொண்ட பசுபதியால் இடையில் பாழ் செய்யப்பெற்றது. நீ யஜ்ஞத்தையே சரீரமாகவுடையவன். அப்படிப்பட்ட நீ எங்களுடைய இந்த யாகத்தை உன் தாமரைக் கண்களால் நோக்கிப் புனிதம் செய்வாயாக. இந்த யாகபூமி வீரபத்ரனுடைய விபரீதத்தினால் உத்ஸவங்களெல்லாம் தொலையப்பெற்று ஶ்மஶானம்போல்

பார்க்க வழங்காதிருக்கின்றது. இதை உன் திருக்கண் தாமரைகளால் நோக்கி அருள்வாயாக.

ரிஷிகள் சொல்லுகிறார்கள்:—வாராய் பகவானே! உன்னுடைய இந்த நடத்தை மிகவும் ஆச்சர்யமாயிருக்கின்றது. நீ ஜீவனைப்போல் கர்மத்திற்கு உட்படாதவனாயினும், ஆனதுபற்றியே ப்ரக்ருதி ஸம்பந்தமற்றவனாயினும் தானே புண்ய பாபங்கள்போன்ற கர்மங்களை ஆசரிக்கின்றனை. ஆயினும் அவற்றின் பலன்களால் நீ தீண்டப்பெறுகிறதில்லை. ப்ரஹ்மதேவன் முதலிய தேவதைகள் ஐச்வர்யத்திற்காக எவளைப் பணிகின்றார்களோ, அப்படிப்பட்ட ஸ்ரீ மஹாலக்ஷ்மி உன்னைப் பணிந்துகொண்டிருப்பினும் நீ அவளை நினையாதிருக்கின்றனை. நீ நிறைவாளனாகையால் அவளுடைய ஸம்பந்தத்தால் ஆகவேண்டியது உனக்கு ஒன்றுமே இல்லை.

ஸித்தர் சொல்லுகிறார்கள்:—வாராய் பகவானே! இந்த எங்கள் மனமாகிற யானை ஆத்யாத்மிகம் முதலிய ஸம்ஸார தாபங்களாகிற காட்டுத்தீக்களால் தபிக்கப்பெற்று தாஹத்தினால் வருந்தி உன் கதையாகிற மேலான அம்ருத நதியில் முழுகி அதினின்று மீண்டுவாராமலேயிருக்கின்றது; ஸம்ஸார தாபமாகிற காட்டுத்தீயினால் விளையும் வருத்தத்தை நினைக்கின்றதேயில்லை; பரப்ரஹ்மத்தை அடைந்தாற்போல் ஸுகித்திருக்கின்றது.

தக்ஷபத்னியாகிய யஜமானி சொல்லுகிறாள்:—வாராய் ஜகதீசனே! உன் வரவு நல்வரவாகவேணும். வாராய் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாயிருப்பவனே! எங்கள் மேல் அருள்புரிவாயாக. உனக்கு நமஸ்காரம். ப்ரபூ! தலையில்லாத முண்டமாயிருக்கும் புருஷன் கை கால் முதலிய அவயவங்கள் அழகாயிருப்பினும், எப்படி விளங்கமாட்டானோ, அங்ஙனமே நீ இல்லாமல், கேவலம் ப்ரயாஜம் முதலிய அங்கங்களால் அழகியதாயிருப்பினும் யாகம் விளக்கமுறா திருக்கின்றது. ஆகையால் உனது அன்பிற்

கிடமான ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன் கூடி நீ எங்களைப் பாது காப்பாயாக.

லோகபாலர்கள் சொல்லுகிறார்கள்:—நீ வாக்குக்கும் மனத்திற்கும் விஷயமாகாத ஸ்வரூப ஸ்வபாவங்களை யுடையவன். அப்படிப்பட்ட நீ எங்களுடைய மாம்ஸ மயமான கண்களுக்கு எங்ஙனம் புலப்பட்டனை. உன்னுடைய ஸௌலப்ய குணத்திற்கு இதுவே நிதர்சனம். கண்ணுக்குப் புலப்படக்கூடாத நீ எங்கள் கண்ணுக்குப் புலப்பட்டனையே. இதற்குக் காரணம் எங்களிடத்தில் ஒன்றும் இல்லை. கேவலம் உன்னுடைய ஸங்கல்பத்தினால்தான் புலப்பட்டனை. அங்ஙனம் நீ ஸங்கல்பித்ததற்குக் காரணம் உன்னுடைய ஸௌலப்ய குணமே. ப்ராணிகள் தேஹத்தில் நானென்கிற துரபிமானமும், அதைச் சேர்ந்த வஸ்துக்களில் என்னுடையதென்கிற துரபிமானமும் மாறுதிருக்கின்றார்களே. அவர்கள் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமிப்பதற்குக் காரணம் உன்னுடைய மாயையே. மஹாநந்தஸ்வரூபனே! எல்லையில்லாத பெருமையுடையவனே! விபுவாயிருப்பவனே! ப்ராக்ருதி புருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணனாயிருக்கின்ற நீ ப்ருதிவி முதலிய பஞ்ச பூதங்களால் எற்படுகின்ற தேஹத்தில் இருந்துகொண்டு அந்த தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனான ஜீவன் போல் தோற்றுகின்றனை. இங்ஙனம் தோற்றுவதும் உன்னுடைய மாயையின் கார்யமே.

யோகீஶ்வரர்கள் சொல்லுகிறார்கள்:—ப்ரபூ! சேதநாசேதன ரூபமான ப்ரபஞ்சத்தில் உள்புகுந்து தன் ஸ்வரூப ஸ்வபாவங்களுக்குச் சிறிதும் மாறுபாடின்றி அவற்றைத் தரித்துக்கொண்டிருப்பவனும் சேதநாசேதனங்களைக் காட்டில் விலக்ஷணனாயிருப்பவனுமாகிய உன்னை எவன் தன்னைக்காட்டிலும் வேறாக நினைக்கமாட்டானோ; உன்னைத் தனக்கு அந்தராத்மாவாகவும் தன்னை உனக்கு உட்பட்டவனாகவும் உனக்குச் சரீரமாகவும் நினைப்பானோ, அவனே தத்வதர்சியென்று கூறப்படுவான். அவனைக்

காட்டிலும் உனக்கு ப்ரீதிக்கிடமானவன் மற்றெவனுமே இல்லை. உன்னைத் தன்னில் வேறுபட்டவனன்றென்று தெரிந்துகொள்ளாமற்போயினும் உன்னை ஸ்வாமியாகவும் தன்னை உனக்கு ப்ருத்யனாகவும் பாவித்து உன்னைப் பணிவார்களாயின், அவர்களிடத்திலும் நீ அனுக்ரஹம் செய்வாயாக. வாஸ்தவத்தில் அவர்கள் அறிவிலா மூடர்களே. ஆயினும் நீ வாத்ஸல்ய குணமுடையவனாகையால் அவர்கள் உன்னைத்தவிர மற்றெதையும் நினைக்காமல் உன்னிடத்தில் மாறாத பக்தி யுடையவராயிருப்பதைக் கண்டு அவர்களை அனுக்ரஹிப்பதே உனக்குத் தகும். நீ ஜகத்தைப் படைப்பது வளர்ப்பது அழிப்பது ஆகிய இவற்றை நடத்தும்பொருட்டு உன் ஸங்கல்பத்தினால் ப்ரஹ்மருத்ராதிகளாகவும் தேவ மனுஷ்யாதிகளாகவும் பசு பக்ஷ்யாதிகளாகவும் மரம் கொடி செடி முதலியவைகளாகவும் பரிணமிக்கின்ற ஸத்வாதி குணங்களையுடையதான உன் மாயையால் ஆத்மாவிடத்தில் தேவமனுஷ்யாதி பேத புத்தியைப்பெற்று தேஹாத்மாபிமானிகளாயிருக்கின்ற ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாகி அவர்களைச் சரீரமாகக் கொண்டு அந்த தேவ மனுஷ்யாதி நாமங்களுக்குத் தானே பொருளாயிருப்பினும், அன்யதாஜ்ஞான விபரீதஜ்ஞானாதி ரூபமான ப்ரமமும் அவற்றிற்கு ஹேதுவான ரஜஸ்ஸு தமஸ்ஸு முதலிய குணங்களும் தன்னிடத்தில் தீண்டப்பெறாதிருக்கின்ற உனக்கு நமஸ்காரம். நாங்கள் வெறுமனே நமஸ்காரம் செய்ய வல்லரேயன்றி உன் குணங்களை எடுத்துரைக்க வல்லரல்லோம்.

ஶப்த ப்ரஹ்மம் சொல்லுகிறது:—நீ ஸத்வ ரஜஸ் தமோ குணங்களும் மற்றுமுள்ள ஹேயகுணங்களும் தீண்டப்பெறாதவன்; வேதங்களை வெளியிட்டு தர்ம அர்த்த காமாதியான புருஷார்த்தங்களைப் பிறப்பித்தவன். நீயே ஜகத் காரண வஸ்து. நீ ஸர்வஜ்ஞன்; ஸர்வசக்தி; முதலில் ப்ரஹ்மாவுக்கு வேதங்களை உபதேசித்தவன். நீ வாத்ஸல்யம் முதலிய கல்யாண குணங்களுக்கெல்லாம் இருப்பிடம்.

உன் ஸ்வரூப ரூப குண விபூதிகளின் அவதியை நான் அறியேன். மற்ற ப்ரஹ்மாதிகளும் அறியார். நானே அறிய வல்லனல்லேனாயின், என் மூலமாய் அறியவேண்டியவர்களான ப்ரஹ்மாதிகள் எங்ஙனம் அறியப்போகின்றார்கள் ?

அக்னி சொல்லுகிறான்:—உன்னுடைய தேஜஸ்ஸினால் நான் மிகவும் விளங்குகின்ற ஒளியுடையவனாயிருக்கின்றேன். நான் யாகங்களில் நெய்யால் நனைக்கப்பெற்ற ஹவிஸ்ஸை இந்த்ராதி தேவதைகளுக்குக் கொண்டுபோய்க் கொடுப்பதும் உன்னுடைய சக்தியே. யாகத்தில் வரிக்கப்படுகிற இந்த்ராதி தேவதைகளுக்கு அந்தர்யாமியாயிருந்து அந்த யாகஹவிஸ்ஸை அங்கீகரிப்பவன் நீயே; ஐந்து வகைப்பட்ட அக்னிகளைச் சரீரமாகவுடையவன். ஐந்து யஜுஸ்ஸுக்களால் நன்கு பூஜிக்கப்படுகின்றவன்; நீ யஜ்ஞ ஸ்வரூபன். அப்படிப்பட்ட உன்னை எப்பொழுதும் நமஸ்கரிக்கின்றேன்.

தேவதைகள் சொல்லுகிறார்கள்:—நீ ஸமஸ்த ஜகத்திற்கும் உபாதான காரணமாயிருப்பவன். நீயே பரமபுருஷன். நீ முன்பு படைத்த ஜகத்தையெல்லாம் முன் கல்பத்தின் முடிவில் உதரத்தில் வைத்துக்கொண்டு மஹா ஜலத்தில் ஆதிசேஷனாகிற படுக்கையின்மேல் படுத்துக் கொண்டிருந்தனை. ஜனோலோக வாஸிகளான ஸித்தர்கள் தமது ஹ்ருதயங்களில் உனது தத்வ ஜ்ஞான மார்க்கத்தை விசாரிக்கின்றார்கள். (நீ யோக பரிசுத்தமான மனத்தினால் அறியத் தகுந்தவன்). அப்படிப்பட்ட நீ இப்பொழுது எங்கள் கண்ணெதிரில் உலாவுகின்றனை. வாக்குக்கும் மனத்திற்கும் கோசரமாகாத நீ ஸௌலப்யத்தின் மிகுதியால் எங்களுக்கு ப்ரத்யக்ஷமாயினை. நீ உன் ப்ருத்யர்களைப் பாதுகாக்குந் தன்மையன். ஆகையால் எங்களைப் பாதுகாக்கும்பொருட்டு இங்ஙனம் புலப்பட்டனை.

கந்தர்வர் சொல்லுகிறார்கள்:—அளவிறந்த மஹிமையுடையவனே! ஜகத்தையெல்லாம் உள்ளும் புறமும் வ்யாபித்திருப்பவனே! தேவனே! (எல்லாரிலும் மேன்மையுற்று விளங்குந் தன்மையனே!) மரீசி முதலியவர்களும் ப்ரஹ்மா

இந்த்ரன் முதலியவர்களும் ருத்ரன் முதலியவர்களுமான இந்த தேவகணங்களெல்லாம் உன்னுடைய அம்சாம்சங்களே. இந்த ப்ரஹ்மாண்டம் முழுவதும் உனக்கு விளையாட்டின் கருவியாயிருக்கின்றது. அப்படிப்பட்ட உனக்கு நமஸ்காரம். நாங்கள் உனக்குப் பணிவிடை செய்வோமாக.

வித்யாதரர்கள் சொல்லுகிறார்கள்:—ஜீவன் புருஷார்த்தங்களை ஸாதித்துக் கொடுப்பதாகிய மனுஷ்ய தேஹம் உன் ஸங்கல்பத்தினால் உண்டாகப்பெற்று அந்த தேஹத்திலும் அதைத் தொடர்ந்த மற்றவைகளிடத்திலும் 'நான்' 'என்னுடையது' என்னும் துர்ப்புத்தியைச் செய்து சப்தாதி விஷய ஸுகங்கள் நினைத்தபடி நேரப்பெறாமல் வருந்தி, லோக மர்யாதைகளையும் வேதமர்யாதைகளையும் உல்லங்கனம் செய்து மனம் போனபடியெல்லாம் போகின்ற தன் புத்ராதிகளால் அவமதிக்கப்பெற்று ப்ரக்ருதியின் பரிணாமங்களான சப்தாதி விஷயங்களில் விருப்பம் மாறப் பெறாதிருப்பானாயினும், உன்னுடைய கதைகளாகிற அம்ருதத்தை ஆதரித்து வருவானாயின், அஹங்கார மமகாரங்களைத் துறந்து மோக்ஷத்தையும் பெறுவான். அம்ருதம் போன்ற உன் கதையின் மஹிமை இப்படிப்பட்டது. இதென்ன ஆச்சர்யம்! மோக்ஷத்தை ஸுகமாக ஸாதித்துக் கொடுக்கும் உபாயம் இதைக்காட்டிலும் மற்றொன்றும் இல்லை.

ப்ராஹ்மணர்கள் சொல்லுகிறார்கள் :— ஜகதீசனே! யாகமும் நீயே. புரோடாசம் முதலிய ஹவிஸ்ஸும் நீயே. மூன்று வகைப்பட்ட அக்னிகளும் நீயே. மந்த்ரங்களும் நீயே. ஸமித்துக்களும் தர்ப்பங்களும் யாக பாத்ரங்களும் நீயே. இந்த யாக ஸபையிலுள்ளவர்களும் நீயே. ருத்விக்குகளும் நீயே. யஜமானனும் யஜமான பத்னியுமாகிய தம்பதிகளும் நீயே. யாகத்தில் உத்தேஸ்யமான தேவதையும் நீயே. அக்னிஹோத்ரமென்கிற ஹோமமும் நீயே. ஸ்வதையும் நீயே. ஸோமலதையும் ஆஜ்யமும் நீயே. யாக பசுவும் நீயே. ஆகையால் நீ யஜ்ஞ ஸ்வரூபன். முன்பு

கல்பத்தின் ஆரம்பத்தில் நீ ஶ்வேத வராஹ ரூபியாய், மேன்மையுடைய ஓர் யானையானது தாமரை யோடையை எடுத்துக்கொண்டு வருவதுபோல், பூமியைப் பாதாளத்தி னின்று உன் கோரைப்பல்லால் பிடுங்கி எடுத்துக்கொண்டு வந்தனை. அந்த உன் செயலைக் கண்டு மனக்களிப்புற்று யோகிகளால் புகழப்பெற்றனை. வேத ஸ்வரூபனே! அங்ஙனம் யாகம் செய்வதற்கிடமான பூமியை உத்தரணம் செய்த நீயே யஜ்ஞஸ்வரூபன். உனது ஆராதன ரூபமாகையால் சிறப்புற்றதான யாகமென்னும் கர்மத்தை நாங்கள் ஆசரிக்கத் துடங்கி இடையில் அந்த ஸத்கார்யம் நஷ்டமாகப் பெற்றோம். அது நிறைவேறும்பொருட்டு நாங்கள் உன் தர்சனத்தை விரும்பிக்கொண்டிருக்கின்றோம். அப்படிப் பட்ட எங்கள் விஷயத்தில் நீ அருள்புரிவாயாக. யஜ்ஞேசனே! உன்னுடைய நாமத்தைச் சொன்ன மாத்ரத்தில் யஜ்ஞத்தினுடைய விக்னங்களெல்லாம் பறந்துபோம். அப்படிப்பட்ட பல நாமங்களையுடைய உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—வாராய் மங்கள ஸ்வபாவமுடைய விதுரனே! இங்ஙனம் ஜகத்காரண வஸ்துவாகிய பகவானை அவரவர் ஸ்தோத்ரம் பண்ணிக்கொண் டிருக்கையில், கார்யங்களைச் செய்வதில் ஸமர்த்தராகிய தக்ஷப்ரஜாபதி ருத்ரனால் தடைபட்டிருந்த யாகத்தை நடத்தினார். ஸர்வர்க்கும் அந்தராத்மாவாகையால் இந்த்ராதி தேவதைகள் மூலமாய் அவரவர்க்குக் கொடுக்கும் ஹவிர்ப்பாகங்களையெல்லாம் தானே புசிப்பவனாயினும், தனக்குக் கொடுத்த த்ரிகபால புரோடாசமென்னும் ஹவிஸ்ஸினால் மனக்களிப்புற்றவனாகி தக்ஷரை அழைத்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஹேயஸம்பந்தமில்லாதவனென்றும், ஸமஸ்த கல்யாணகுண ஸ்வரூபனென்றும் உங்களால் துதிசெய்யப்பெற்ற நானும், என்னால் உள்புகப் பெற்றவனும் ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களுக்கு வேண்டிய ஜ்ஞானமெல்லாம் கொடுக்கப்பெற்றவனும் எனக்கு உட்

பட்டவனுமாகிய ப்ரஹ்மதேவனும், அத்தகையனான ருத்ரனும் ஆகிய நாங்கள் மூவரும் உலகங்களைப் பாதுகாப்பது அவற்றைப் படைப்பது அவற்றை அழிப்பது ஆகிய இந்தச் செயல்களை நடத்திக்கொண்டு வருகின்றோம். நான் ப்ரஹ்மதேவனைப் படைத்து அவனுக்கு அந்தர்யாமியாயிருந்து உலகங்களைப் படைக்கின்றேன். அவ்வுலகங்களை நான் நேராகவும் பிறர் மூலமாகவும் பாதுகாக்கின்றேன். கடைசியில் ருத்ரனுக்கு அந்தர்யாமியாயிருந்து அவற்றையெல்லாம் ஸம்ஹரிக்கின்றேன். எனக்கு நானே ப்ரபுவாயிருப்பவன். எனக்கு மேற்பட்டவன் ஒருவனும் இல்லை. நானே ஸமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் அந்தராத்மாவாயிருந்து அவர்களை நியமித்துக்கொண்டிருக்கின்றேன். ஜீவாத்மாக்களுக்குள் புகுந்திருப்பினும், எனக்கு அந்த தேவ மனுஷ்யாதி நாமரூப ஸம்பந்தம் கிடையாது. நான் அவர்களுக்கு அந்தராத்மாவாகி அவர்களை நியமித்துக்கொண்டிருப்பவனே. ஆயினும் அவர்களுக்கு தேஹ ஸம்பந்தத்தினால் விளையும் ஸுக துக்கங்கள் எவையும் என்னைத் தீண்டமாட்டா. நாமரூபங்களுக்கிடமில்லாத ஸூக்ஷ்ம சேதனா சேதனங்களைச் சரீரமாகவுடைய காரண வஸ்துவும் நானே. நான் என்றும் ஸங்கோசமில்லாமல் மலர்கின்ற ஜ்ஞானமுடையவன். ஆகையால் நான் எல்லாவற்றையும் அறியுந் திறமையுடையவன். ஸமஸ்த சக்திகளும் அமையப்பெற்றவன். ப்ரக்ருதியின் ஸ்வபாவமான ஜடத்வமும் பரிணாமமும் எனக்குக் கிடையாது. ஜீவனுக்குள்ள ஜ்ஞான ஸங்கோசமும் துக்கம் முதலியவைகளும் எனக்குக் கிடையாது. வாராய் அந்தணர் தலைவனே! தக்ஷ ப்ரஜாபதீ! ஸத்வ ரஜஸ் தமோ குண மயமாகி எனக்குச் சரீரமுமாகிய ப்ரக்ருதியில் நான் ஜீவன் மூலமாய் ஸங்கல்பத்தினால் ப்ரவேசித்து, ப்ரஹ்மாவின் மூலமாய் ஜகத்தைப் படைப்பதும், நேரே பாதுகாப்பதும், ருத்ரன் மூலமாய் ஸம்ஹரிப்பதும் செய்கின்றேனாகையால், அந்த ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப்பற்றி ப்ரஹ்மாவென்றும் விஷ்ணுவென்றும் ருத்ரனென்றும்

மூன்று வகையான ஸம்ஜ்ஞைகளை நானே பெறுகின்றேன். ஆகையால் ஸ்தூல சேதநாசேதன ஸ்வரூபமான ஜகத்தாகிற கார்ய வஸ்துவும் நானே. ஸூக்ஷ்ம சேதநாசேதன ஸ்வரூபமான காரண வஸ்துவும் நானே. என்னை யொழிந்த வஸ்து எதுவுமே இல்லை. எனக்கு உட்படாமல் ஸ்வதந்த்ரமான வஸ்து உண்டென்னும் நினைவு ப்ராந்தியே. ஸ்தூலமாயும் ஸூக்ஷ்மமாயுமுள்ள சேதநா சேதனங்களுக்கு நியாமகனும் அவற்றிற்குள் புகுந்து அந்தராத்மாவாகி அவற்றின் தோஷங்களால் தீண்டப்பெறாதவனும் தன்னைப் போன்ற மற்றொரு வஸ்துவில்லாதவனும் தனக்கு மேற்பட்ட வஸ்து எதுவுமில்லாதவனும் நிர்த்தோஷனும் ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் மிகுந்த மேன்மையுடையவனும் ஸமஸ்த கல்யாண குணங்களுக்கும் இடமான ஸ்வரூபமுடையவனுமாகிய என்னிடத்தில், ப்ரஹ்மருத்ராதியான பூதங்களெல்லாம் நிலைநின்றிருக்கின்றன. என்னுடைய ஸம்பந்தமில்லையாயின் அவற்றிற்கு ஸத்தையே நேராது. ஆகையால் ஸமஸ்த பூதங்களும் நானே. தேஹத்தையே ஆத்மாவாக நினைக்கின்ற அறிவில்லா மூடர்களே அத்தகைய பூதங்களை எனக்கு உட்பட்டவைகளன்றென்றும், என்னைக்காட்டிலும் வேறுபட்டவைகளென்றும் ஸ்வதந்த்ரங்களென்றும் ப்ரமிப்பார்கள். தேஹாத்மப்ரமம் ஸ்வதந்த்ராத்மப்ரமம் ஆகிய இவையே 'பூதங்கள் பரமாத்மாவைக்காட்டிலும் வேறுபட்டவை' என்று ப்ரமிப்பதற்குக் காரணமாகின்றன. தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமிக்கின்ற புருஷன் தன்னைவிட்டுப் பிரிந்திருக்கமாட்டாத கை கால் முதலிய அவயவங்களில் சிலவற்றைத் தன்னுடையதன்றென்றும் பிறனுடையதென்றும் எப்படி நினைக்கமாட்டானோ, அப்படியே என்னிடத்தில் மனப்பற்றுடையவன் பூதங்கள் என்னைவிட்டுத் தனியேயிருப்பவையென்றும் எனக்கு உட்படாமல் ஸ்வதந்த்ரமாயிருப்பவையென்றும் நினைக்கமாட்டான். வாராய் ப்ராஹ்மண ஶ்ரேஷ்டனாகிய தக்ஷனே! என்னுடைய ஸங்கல்பத்தி

ஞல் என்றும் ஒருவகைப்பட்ட நிலைமையுடையவர்களும் ஸர்வ பூதங்களும் தாங்களே யென்னும்படி எல்லாம் தமது அன்பிற்கிடமாயிருக்கப்பெற்றவர்களுமாகிய ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் மூவரில் ஒருவர்க்கொருவர் வேறுபட்டவரென்று எவன் பேதம் பாராட்டாதிருப்பானே, அவன் மனது சாந்தமாயிருக்கப்பெற்று மோக்ஷம் பெறுவான்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பகவானல் மொழியப்பெற்ற தக்ஷப்ரஜாபதி தான் செய்யத்துடங்கின யாகத்தினுல் பகவானை ஆராதித்து வானவர்களையும் ப்ராஹ்மணர்களையும் அவரவர்க்குரியபடி பூஜித்தார். மற்றும், அந்த தக்ஷப்ரஜாபதி மனவூக்கத்துடன் ருத்ரனுக்கு ஏற்பட்ட பாகத்தைக் கொடுத்து அவனையும் பூஜித்துக் கடைசியில் செய்யவேண்டிய அவலானேஷ்டி யென்னும் கர்மத்தையும் நடத்தி ஸோமபானம் செய்த தேவர்களையும் அது செய்யப்பெறுத மற்ற தேவர்களையும் ஆராதித்தார். பிறகு ருத்விக்குகளோடு அவப்ருதஸ்நானம் செய்தார். தமது ப்ரபாவத்தினுல் யாக ஸித்தி கைகூடப்பெற்ற அந்தத் தக்ஷருக்கு மேன்மேலும் தர்மத்தில் புத்தி செல்லும்படி அனுக்ரஹித்து அந்த தேவதைகள் ஸ்வர்க்க லோகம் போய்ச் சேர்ந்தார்கள். இங்ஙனம் தக்ஷருடைய புதல்வியாகிய ஸதிதேவி முன் தேஹத்தைத் துறந்து ஹிமவத் பர்வதத்தினுடைய பத்னியான மேனையிடத்தில் பிறந்தாளென்று பராசராதிகள் சொல்லக் கேட்டிருக்கின்றோம். மீளவும், இரண்டாவது ஜன்மத்திலும் பார்வதியானவள் வேறொருவனிடத்தில் மனம் செல்லப்பெறுதவளாகித் தன்னையே சிந்தித்துக்கொண்டிருப்பவனும் மிகுந்த அன்பிற்கிடமுமாகிய ருத்ரனையே பர்த்தாவாக அடைந்தாள். எங்ஙனம் சேதனு சேதன ரூபமான சக்திகள் ப்ரளய காலத்தில் பரம புருஷனிடத்தில் மறைகின்றனவோ அங்ஙனமே அவள் அந்த ருத்ரனையே கணவனுகப் பெற்றாள். தக்ஷருடைய யாகத்தை த்வம்ஸம்செய்த மஹானுபாவனுகிய ருத்ரனைப்பற்றின அந்த வ்ருத்தாந்

தத்தை, ப்ருஹஸ்பதியின் சிஷ்யரும் பகவத் பக்தருமாகிய உத்தவரிடத்தில் நான் கேட்டேன். ஸர்வேஸ்வரனான பரம புருஷனையே பணியுந்தன்மையுள்ள ருத்ரனுடையதான இந்தச் சரித்ரம் யசஸ்ஸையும் ஆயுளையும் வளர்க்குந் தன்மையது; பரிசுத்தமாயிருக்கும்; ஆனதுபற்றியே எப்படிப்பட்டபாப ஸமூஹங்களையும் போக்குந் திறமையுடையது. வாராய் கௌரவ ஸ்ரேஷ்டனே! இப்படிப்பட்ட இந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்டு எவன் கேட்டபடியே பிறர்க்குச் சொல்வானோ, அவன் ஸர்வ காலத்திலும் பகவத் பக்தி நிஷ்டனாகி பகவானை அடைவதற்குத் தடையான பாபங்களெல்லாம் தொலையப்பெறுவான். ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

---

## த்ருவ சரித்ரம்.

{ த்ருவன் ஸுருசியின் துர்ப்பாஷணங்களைப் பொறாமல் தவத்தினால் ஸ்ரீமஹாவிஷ்ணுவை ஆராதித்தல். }

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—ஸனகாதிகளும் நாரதர் ருபு ஹம்ஸர் அருணி ஆகிய இவர்களும் ப்ரஹ்மாவின் புதல்வர்கள். இவர்களெல்லோரும் க்ருஹஸ்தாஸ்ரமத்தில் இழியாமல் இந்த்ரியங்களை வென்று நைஷ்டிக ப்ரஹ்ம சர்யத்தில் இருந்தார்கள். ஆகையால் அவர்க்கு வம்சமே இல்லை. அதர்மனும் ப்ரஹ்மாவின் புதல்வனே. அந்த அதர்மனுடைய பார்யை ம்ருஷையென்பவள். சத்ருக்களை வெல்லுந் திறமையுடையவனே! அந்த ம்ருஷை தம்பனென்னும் புத்ரனையும் மாயையென்னும் புதல்வியையும் பெற்றாள். தம்பன் மாயை இவ்விருவரையும் பிள்ளையில்லாத நிருதி வாங்கிக்கொண்டு, தம்பனைப் பிள்ளையாகவும் மாயையை மறுமகளாகவும் அபிமானித்து வைத்துக் கொண்டான். சிறந்த மதியுடையவனே! அந்த மாயை தம்பன் இவர்களுக்கு லோபனும் நிக்ருதியும் உண்டானார்கள். அந்த லோபன் நிக்ருதி இவரிடத்தினின்று க்ரோத

னும் ஹிம்ஸையும் உண்டானார்கள். அவரிடத்தினின்று கலியும் துருக்தியும் உண்டானார்கள். துருக்தியிடத்தில் கலி பயனையும் ம்ருத்யுவையும் பிறப்பித்தான். வாராய் நல்லியற்கையுடையவனே! அந்த பயன் ம்ருத்யு இவரிடத்தி னின்று யாதனை யென்னும் பெண்ணும் நிரயனென்னும் பிள்ளையும் உண்டானார்கள். இவர்களெல்லோரும் அதர்ம மாகிற வ்ருக்ஷத்தின் கிளைகள் போன்றவர். இவர் ஸம்ஸா ரத்தை மேன்மேலும் வளர்ப்பவராகையால், மோக்ஷத்தில் விருப்பமுடையவன் இவர்களைத் தொடலாகாது. ஸந்யா ஸாஸ்ரமத்திலிருப்பவன் இவர்களைச் சிறிதும் கண்ணெடுத் துப் பார்க்கலாகாது. அவன் மிகவும் ஜாக்ரதையுடன் இருக்கவேண்டும். பாபமற்றவனே! இங்ஙனம் ப்ரதிஸர்க் கத்தை உனக்கு நான் சுருக்கமாகச் சொன்னேன். இவற் றைத் துறப்பானாயின், புண்யம் பெறுவான். இந்த ப்ரதி ஸர்க்கத்தை மூன்றுதரம் கேட்பானாயின், தன்னுடைய பாபங்களெல்லாம் தீரப்பெறுவான். இங்ஙனம் மனு கன்னிகைகளின் ஸந்ததியைச் சொன்னேன். இனி மனு புத்ரர்களின் ஸந்ததியைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. வாராய் கௌரவ ஸ்ரேஷ்டனே! அவன் கேட்பவர்களுக்குப் புண்யத்தை விளைக்கும்படியான புகழுடையவன். அதற்குக் காரணமென்னென்னில், தன்னை நினைத்த மாத்ரத்தில் தன்னைப்பற்றினருடைய பாபங்களைப் போக்குந் திறமை அமைந்த பகவானுடைய அம்சாவதாரமான ப்ரஹ்மாவின் சரீரத்தினின்று பிறந்தவன்; அந்தப் பகவானிடத்தில் மிகுந்த பக்தியுடையவன். ஆகையால் பகவானுடைய சரித்ரம்போல் அவனுடைய புத்ரர்களின் வம்ச சரித்ரமும் பரிசுத்தமாயிருக்கும்; பக்தியை விளைக்கும். பகவத் பக்தர்க ளாகையால் மனு புத்ரர்களின் வம்சம் கேட்கத் தகுந்ததே சதரூபையின் பர்த்தாவான மனுவுக்கு ப்ரியவ்ரதனென்றும் உத்தானபாதனென்றும் இரண்டு புதல்வர்கள் உண்டு. அவ் விருவரும் ஜகத்திற்கெல்லாம் அந்தராத்மாவான பகவா னுடைய குணவிசேஷத்தின் தோற்றத்தினால் ஜகத்தைப்

பாதுகாப்பதில் நிலையுற்றிருந்தனர். அவர்களில் உத்தான பாதனுக்கு ஸுநீதியென்றும் ஸுருசி யென்றும் இரண்டு பார்யைகள் இருந்தார்கள். அவர்களில் ஸுருசி யென்பவள் பர்த்தாவுக்கு மிகவும் அன்பிற்கிடமாயிருந்தாள். ஸுநீதி யென்பவள் ப்ரீதிக்கிடமாகாதிருந்தாள். அந்த ஸுநீதிக்கு த்ருவனென்று ஓர் புதல்வன் பிறந்தான். ஒருக்கால் அந்த உத்தானபாதன் ஸுருசியின் புதல்வனாகிய உத்தமனென்பவனை மடியில் வைத்துச் சீராட்டிக்கொண்டிருக்கையில், ஸுநீதியின் பிள்ளையாகிய த்ருவன் அருகே வந்து மடியில் ஏற விரும்பினான். அதை அறிந்தும் அம் மன்னவன் அவனது விருப்பத்தை நிறைவேற்றுமை மாத்ரமேயன்றி அதை அபிநந்தனம் செய்யாமலே யிருந்தான். தனது சக்களத்தியின் புதல்வனாகிய அந்த த்ருவன் அங்ஙனம் மன்னவனது மடியில் ஏற விரும்புவதையும் மன்னவன் அதை அபிநந்தனம் செய்யாதிருப்பதையும் கண்டு ஸுருசி ராஜாவின் அபிப்ராயத்தை அறிந்துகொண்டு மிகவும் கர்வமுற்றவளாகி, அரசனது செவியில் படும்படி த்ருவனைப் பார்த்து மிக்கப் பொறாமையுடன் இங்ஙனம் மொழிந்தாள்.

ஸுருசி சொல்லுகிறாள்:—குழந்தாய்! நீ ராஜாவின் ஆஸனத்தில் ஏறுவதற்கு உரியவனல்லை. 'நான் ராஜாவின் புதல்வனாகையால் ராஜஸிம்ஹாஸனத்தில் ஏறுவதற்கு ஏன் தகுந்தவனல்லன்?' என்று நினைக்கின்றாயோ? சொல்லுகிறேன், கேள். நீ ராஜ புத்ரன்தான். ஆயினும் நீ என்னால் கர்ப்பத்தில் தரிக்கப்பெற்றவனல்லை. என் கர்ப்பத்தில் பிறந்தவனே ராஜாஸனத்திற்கு உரியவனன்றி மற்றவன் உரியவனல்லன். நீ பாலனாயினும், என் கர்ப்பத்தில் பிறவாததும் வேறொரு ஸ்த்ரீயின் கர்ப்பத்தில் பிறந்ததும் உனக்குத் தெரியாதோ? தெரியுமே. அதில் ஸந்தேஹம் இல்லையே. அப்படி இருக்க நீ ஏன் ராஜாஸனத்தில் ஏற விரும்புகின்றனை. ஒருக்கால், நீ இளமையால் உனக்குத் தெரியாதிருந்தாலும் இருக்கக்கூடும். நான் சொல்லுகிறேன், தெரிந்துகொள்வாயாக. உன் கதை எனக்குத்

தெரியும். நீ என் சக்களத்தியாகிய ஸுநீதியின் கர்ப்பத்தில் பிறந்தவன். என் கர்பத்தில் பிறந்தவனல்லே. ஆகையால் நீ ராஜாஸனத்தில் ஏறுவதற்கு உரியவனல்லே. உனக்குக் கிடைக்கக்கூடாத விஷயத்தில் நீ விருப்பங் கொண்டிருக்கின்றனே. உன் ஸ்வரூபம் தெரியாமல் நீ இங்ஙனம் ஆசைப்படுவது வீணே. இப்படி கிடைக்கக் கூடாத விஷயத்தையும் ஸாதிக்கவேண்டுமென்று உனக்குப் பிடிவாதம் உண்டாயிருக்குமாயின், இங்ஙனம் ஸாதிப்பாயாக. அதெப்படி யென்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக. நீ ராஜஸிம்ஹாஸனத்தில் ஏரவேண்டுமென்று விரும்புவாயாயின், தவத்தினுல் பரம புருஷனை ஆராதித்து, அங்ஙனம் ஆராதிக்கப்பெற்ற பரம புருஷனுடைய அனுக்ரஹத்தினுல் என் கர்ப்பத்தில் பிறந்தலே ஸாதிப்பாயாக.

மைத்ரேயர் சொல்லுகிருர் :—தனது மாதாவின் சக்களத்தியான ஸுருசியின் துர்ப்பாஷணங்களால் அடியுண்ட த்ருவன், தடியால் அடிக்கப்பெற்ற ஸர்ப்பம்போல் கோபத்தினுல் பெருமூச்செறிந்துகொண்டிருக்கின்ற தன்னைப் பார்த்தும் ஒன்றும் பேசாமல் வெறுமனே யிருக்கின்ற தந்தையைத் துறந்து மிகவும் கண்ணீர் பெருக்கிக்கொண்டு தனது மாதாவான ஸுநீதியின் அருகே சென்றுன். அங்ஙனம் தன் பாலனை த்ருவன் பெருமூச்செறிந்துகொண்டு கோபத்தினுல் கீழுதடு துடிக்கப்பெற்று அருகாமையில் வந்திருப்பதைக் கண்டு அவனை மடியில் எடுத்து வைத்துக் கொண்டு பட்டணத்து ஜனங்கள் மூலமாய், தன் சக்களத்தியாகிய ஸுருசி மொழிந்த துர்ப்பாஷணங்களைக் கேட்டு மிகவும் மனவருத்தமுற்ருள். அப்பெண்மணியான ஸுநீதி காட்டுத்தீயால் தஹிக்கப்பெற்ற ஓர் கொடிபோல் மன வருத்தத்தினுல் வாடி வதங்கி தைர்யமின்றிச் சக்களத்தியின் துர்ப்பாஷணங்களை நினைத்துத் தாமரை யிதழ் போன்ற கண்களால் நீரைப் பெருக்கினுள். சக்களத்தியின்

துர்ப்பாஷணங்களைக் கேட்ட மனவருத்தத்தினால் நெடுமூச்செறிந்துகொண்டு தன் துக்கத்திற்குக் கரை காணப்பெறாதவளாகித் தனது இளம் பிள்ளையாகிய த்ருவனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தாள்.

ஸுநீதி சொல்லுகிறாள்:—அப்பா! பிறர்மேல் அபராதத்தை நினைக்காதே. எவன் பிறர்க்கு துக்கத்தை விளைக்கின்றானோ, அவன் தானும் அந்த துக்கத்தையே அனுபவிப்பான். நாம் ஜன்மாந்தரத்தில் எவர்க்கு என்ன துக்கத்தை விளைத்தோமோ, இப்பொழுது அதன் பலனை அனுபவிக்கின்றோம். ஆகையால் இது நம்முடைய பாபத்தின் பலனேயன்றி வேறன்று. இதற்கு நாம் பிறர்மேல் தோஷத்தை நினைக்கலாகாது. அப்பா! குழந்தாய்! ஸுருசி சொன்னது உண்மையேயன்றி, அது பொய்யன்று. நீ பாக்யஹீனையாகிய என்னால் கர்ப்பத்தில் தரிக்கப் பெற்றவன். மற்றும், அடிப்பட்ட துர்ப்பாக்யசாலினியாகிய என் ஸ்தன்யத்தைப் பருகி வளர்ந்தவன். என்னை மன்னவன் பார்யையென்று வாயால் சொல்லுவதற்கும் வெட்கப்படுகிறான்; நெஞ்சில் நினைப்பதற்கு ப்ரஸக்தியே இல்லை. அப்பனே! ஆகையால் நீ பொறாமையின்றி, மாற்றாந் தாயாகிய ஸுருசி 'தவத்தினால் பரமபுருஷனை ஆராதிப்பாயாக' என்று மொழிந்த வார்த்தையைத் தோஷமாக நினைக்காமல், அதை அப்படியே நடத்துவாயாக. உத்தமன் ராஜாஸனத்தில் ஏறி உட்காருவதுபோல், நீயும் அந்த ராஜாஸனத்தில் உட்கார விரும்புவாயாயின், பகவானுடைய பாதாரவிந்தங்களை ஆராதிப்பாயாக. 'இப்படி பகவானுடைய பாதங்களை ஆராதித்து எவரேனும் தமது விருப்பம் கைகூடப்பெற்றவர் உண்டோ' என்று ஸந்தேஹிக்க வேண்டாம். உலகங்களைப் பாதுகாக்கும்பொருட்டு ஸமஸ்த கல்யாண குணங்களுக்கும் இடமான திவ்ய மங்கள விக்ரஹத்தை அங்கீகரிக்கின்ற அந்த பகவானுடைய பாத பத்மங்களை ஆராதித்து ப்ரஹ்மதேவன் பதினான்கு லோகங்

களுக்குள் எல்லாவற்றிலும் மேலான ஸத்யலோகத்தை வாஸஸ்தானமாகப் பெற்றான். அவனுடைய பாதாரவிந் தங்கள் மனத்தையும் ப்ராணவாயுவையும் வென்ற யோகிக ளால் பூஜிக்கத் தகுந்தவை. அவற்றின் மஹிமை அப்படிப் பட்ட மஹானுபாவர்க்கே தெரியுமன்றி, மற்றவர்க்குத் தெரியாது. அப்படியே, உங்கள் பாட்டனாகிய மனுவும் மாறாத பக்தியுடன் வெகு தக்ஷிணைகளையுடைய யாகங்க ளால் அந்த பகவானை ஆராதித்து மற்றவர்க்குப் பெற முடியாத பரலோக ஸுகத்தையும் இஹலோக ஸுகத்தை யும் மோக்ஷ ஸுகத்தையும் பெற்றான். ஆகையால் உங்க ளுக்கு பகவானே குலதெய்வம். அவன் மாறாத பக்தியைத் தவிர மற்ற எதனாலும் அருள்புரிய மாட்டான். அவனால் கிடைக்கக்கூடிய ஸுகம் மற்ற ப்ரஹ்ம ருத்ராதிகளால் நேராது. குழந்தாய் அப்பனே! அவன் உன் தந்தையைப் போல் பக்ஷபாதம் செய்பவனல்லன். அவன் தன்னிடத்தில் பக்தி செய்பவருடைய தோஷங்களைப் பாராமல் அவரிடத் தில் மிகுந்த ப்ரீதி செய்யுந் தன்மையன். ஆகையால் அவனைச் சரணம் அடைவாயாக. ஸம்ஸார பந்தத்தினின்று விடுபடவேண்டுமென்னும் விருப்பமுடையவர் அவனுடைய பாதாரவிந்தங்களைத் தேடி த்யானிக்கின்றார்கள். அவன் ஸம்ஸாரிகளையும் பரமபதத்திலுள்ள நித்யஸூரிகளைப் போல் தன்னை என்றும் அனுபவிக்கும்படி செய்யுந் திறமை யுடையவன். இக்கார்யம் மற்றவர்க்கு நெஞ்சிலும் நினைக்க முடியாதது. நீ மற்ற எதிலும் மனம் செல்லப்பெறாமல் உனது வர்ணாச்ரமங்களுக்குரிய தர்மங்களால் அம்மனத்தை நிர்மலமாக்கி அதில் அந்தப் பரமபுருஷனை நிலைநிறுத்தி அவனைப் பணிவாயாக. அவன் பக்தியைத் தவிர மற்ற எதனாலும் அருள்புரிய மாட்டான். ஆகையால் மற்ற எதிலும் செல்லாத மனத்துடன் அவனிடத்தில் பக்தி செய்து அவனை ஆராதிக்கவேண்டும். தாமரைக் கண்ண னாகிய அந்தப் பரமபுருஷனைத் தவிர மற்ற எவனும் உன் துக்கங்களைப் போக்க வல்லவனாக எனக்குத் தோற்ற

வில்லை. ஸம்ஸார தாபங்களையெல்லாம் போக்கி ஸுகங்களைக் கொடுப்பவன் புண்டரீகாக்ஷனொருவனே. மற்றெவனுமல்லன். ப்ரஹ்மதேவன் முதலிய தேவதைகள் அனைவரும் தமது அபேக்ஷிதங்கள் நிறைவேறும்பொருட்டு மனவூக்கத்துடன் எவனைத் தேடுகிறார்களோ, அத்தகையளும் கையில் தாமரைமலரை ஏந்திக்கொண்டிருப்பவளுமாகிய ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் இவனைத் தேடித் துடர்கின்றாள். அரைக்ஷணமும் இவனை விட்டுப் பிரிந்திருக்க முடியாதிருக்கின்றாள். அம்மஹா புருஷனுடைய பெருமையை இன்னும் என்னென்று சொல்லவேண்டும். வாராய் த்ருவனே! ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு வல்லபனும் ஸர்வேஸ்வரனும் ஜகத் காரணவஸ்துவும் ஸமஸ்த கல்யாண குணநிதியுமாகிய அந்தப் பரமபுருஷனையே பணிந்து உன் விருப்பம் கைகூடப்பெறுவாயாக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் தன் தாயான ஸுநீதி வருந்திப் புலம்புவதையும், தன் மன விருப்பம் நிறைவேறும் வழியை மொழிகின்ற அவளது வசனத்தையும் கேட்டுத் தானே தன் மனத்தை அடக்கிக்கொண்டு தந்தையினுடைய பட்டணத்தினின்று புறப்பட்டான். அப்பொழுது நாரதர் அவன் புறப்பட்டதைக் கேட்டு வருங்காலம் நிகழ்காலம் கழிகால மென்கிற மூன்று காலங்களிலுள்ளவை யெல்லாவற்றையும் தன் ஜ்ஞானசக்ஷுஸ்ஸினால் அறியுந்திறமை யுடையவராகையால் அந்த த்ருவன் மனத்தில் நினைத்திருக்கும் அபிப்ராயத்தை அறிந்து அவனிடம் வந்து பாபங்களைப் போக்க வல்லதாகிய தன் பாணியினால் அவன் தலையில் ஸ்பர்சித்து ஆஸ்சர்யத்துடன் 'மானபங்கத்தைப் பொறுதிருக்குந் தன்மையரான க்ஷத்ரியர்களின் ப்ரபாவம் மிகவும் ஆச்சர்யத்திற்கு இடமாயிருப்பது. ஏனென்னில், இந்த த்ருவன் பாலனாயிருந்தும், மாற்றாந் தாயான ஸுருசியின் துர்ப்பாஷணத்தை மறக்காமல் மனத்தில் வைத்துக்கொண்டிருக்கிறானே' என்று தன்

மனத்தில் ஆலோசித்துக்கொண்டு அவனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார்.

நாரதர் சொல்லுகிறார்:—குழந்தாய்! நீ, ஸம்ருத்திக ளெல்லாம் நிறைந்த உன் க்ருஹத்தைத் துறந்து ஸஹாய மின்றித் தனியனாக எங்குப் போகின்றாய்? அடா த்ருவனே! நீ பந்துக்களால் நேர்ந்த அவமானத்தினால் மிகவும் வருந் தினவன் போல் தோற்றுகின்றனை.

த்ருவன் சொல்லுகிறான்:—வாரீர் மஹானுபாவரான நாரதரே! இதென்ன ஆச்சர்யம்? இந்த ஸங்கதி உமக்கு எப்படி தெரிந்தது? யோகப்ரபாவத்தினால் ஸமஸ்த வஸ் துக்களையும் ஸாக்ஷாத்கரிக்கும்படியான த்யான மஹிமை உமக்கு உண்டல்லவா? அதனால் அறிந்தீரோ? இல்லையாயின் என் மனத்திலிருப்பது உமக்குத் தெரிய ப்ரஸக்தி இல்லையே. வாஸ்தவமே. நான் ஸுருசியின் துர்ப்பாஷணங்களால் புண்பட்ட மனத்தை ஸமாதானப்படுத்திக்கொள்ள வல்லமையற்றிருக்கின்றேன்.

நாரதர் சொல்லுகிறார்:—பிள்ளாய்! நீ பாலனாயிருக் கின்றனை. ஆனதுபற்றியே நீ பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடவேண்டுந் தசையிலிருப்பவன். ஆகை யால் உனக்கு இன்னும் மானாவமானங்களைப் பாராட்டுந் தசை வரவில்லையென்று நினைக்கின்றேன். பாலர்கள் மானாவ மானங்களைப் பொருள்செய்யாமல் கேவலம் விளையாடுவதி லேயே மிக்க மனவிருப்ப முடையராயிருப்பார்கள். நீயும் பாலனாகையால் உனக்கு மானாவமானங்களே தோற்றா தென்று என் அபிப்ராயம். 'நான் வயதில் பாலனேயன்றி புத்தியில் பாலனல்லேன்' என்னில் ஆயினும் சொல்லு கிறேன், கேள். மானாவமானங்களை விவேகிக்குந் திறமை உனக்கு உண்டாயிருப்பினும், மோஹத்தையொழிய மற்ற எந்தக் காரணத்தினாலும் பற்பல வகையான அஸந்தோஷ காரணங்கள் உண்டாகமாட்டா. மோஹமே அஸந்தோ ஷத்தை விளைப்பதற்குக் காரணம். ஏனென்னில், உலகத்

தில் ஸுகமும் துக்கமும் தனது கர்மங்களைப் பொருந்தி னவை. தான் ஜன்மாந்தரத்தில் செய்த சுபாசுபகர்மங் களுக்குத் தகுந்தபடி ஸுக துக்கங்கள் உண்டாகின்றன. ஆகையால் விவேகமுடையவன் அவற்றைப் பற்றி வருந்த லாகாது. மோஹமுடையவனே அங்ஙனம் வருந்துவான். நீ பாலனாயிருந்தும் விவேகம் நேரப்பெற்றிருப்பாயாயின், நீ ஸுக துக்கங்களைப்பற்றிச் சிந்திப்பதே யுக்தமன்று. நீ பாலனாகையால் முதலே மானாவமானங்களைத்தெரியாதிருக்க வேண்டியவன். அப்படியின்றி பால்யத்திலும் புத்தி தெரியப் பெற்றிருப்பாயாயின், அந்த புத்தியைக்கொண்டு கர்மத் தின் மூலமாய் விளையும் ஸுகதுக்கங்களைப் பொருள் செய்யாமல் நிச்சிந்தனாயிருக்க வேண்டுமேயன்றி அந்த ஸுக துக்கங்களைப்பற்றி வருந்தலாகாது. அப்படி வருந்துவா யாயின், உனக்கு உண்டான புத்தி புத்தியேயன்று. 'நான் பாலனாயிருந்தும் மானாவமானங்களை அறியும் புத்தி நேரப் பெற்றிருக்கிறேன்' என்னில், அப்பொழுதும் ஸந்தோஷ மில்லாமையால் விளைந்த இந்த உன் புத்தி தேஹாத்மப்ரமத் தைப் பற்றினதே, தத்வஜ்ஞானத்தினால் விளைந்ததன்று. ஜீவாத்மாக்கள் அனைவரும் ஜ்ஞானமே வடிவமாயிருக்கப் பெற்றவர். அத்தகையரான ஜீவாத்மாக்களிடத்தில் தேவ மனுஷ்யாதி பேதம் கிடையாது. அப்படியிருக்க ஸந்தோஷ மில்லாமைக்குக் காரணம் தேஹாத்ம ப்ரமமேயன்றி மற் றொன்றும் அன்று. தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து அந்த தேஹத்தைப் பற்றின அவமானங்களை யெல்லாம் ஆத்மாவுக்கு வந்ததாக நினைத்து மனக்களிப்பற்று வருந்து கிறார்கள். ஆகையால் நீ பாலனாயிருந்தும் விவேக புத்தி விளையப்பெற்றிருப்பாயாயின், தேஹாத்ம ப்ரமத்தினால் வரும் மானாவமானங்களைப் பாராட்டலாகாது. இங்ஙனம் தேஹாத்ம ப்ரமமே அஸந்தோஷத்திற்கு நிதானமாகை யால், தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்த புருஷன், ஈச்வரனுடைய ஆனுகூல்ய மில்லாமல் நம் முயற்சிகள் பலிக்கமாட்டாவென்பதை

அறிந்து தெய்வாதீனமாய் எவ்வளவு ஸுகம் ஏற்படுகின்றதோ அவ்வளவில் ஸந்தோஷமுற்றிருக்கவேண்டும். அதற்குமேல் ஆசைப்படலாகாது. இனி அதற்காக முயற்சி செய்யலாகாதென்று தனியே சொல்லவேண்டுமோ? அப்படி அடங்காத பேராசையால் ஸுகம் பெறவிரும்பி மேன்மேலும் முயற்சி கொள்வானாயின், அது வீணாகுமேயன்றிப் பயன்படாது. மற்றும் நீ கொள்ளும் முயற்சி அஸாத்யமாயிருக்கின்றது. அப்பனே! நீ, தாய் உபதேசித்த பக்தி மார்க்கத்தினால் எந்த பகவானுடைய அனுக்ரஹத்தைப் பெற விரும்புகின்றனையோ, அந்த பகவான் புருஷர்களால் எவ்வளவு வருந்தியும் ஆராதிக்க முடியாதவன். அவன் ஸங்கதி எனக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் சொல்லுகிறேன். தேஹத்திலும் தேஹத்தைத் தொடர்ந்த மற்றவைகளிடத்திலும் மனப்பற்றின்றி எத்தகைய விக்னங்களாலும் தடைபடாமல் தீவ்ரமான ஜ்ஞானயோக கர்மயோகங்களோடு கூடின பக்தி யோகத்தினால் அந்த பகவானுடைய பதவியைத் தேட முயன்ற முனிவர்கள் பல ஜன்மங்கள் கழிந்தும் அதை அறிய முடியாமலே மயங்குகிறார்கள். அப்படிப்பட்ட பகவானை ஆராதிப்பது ஸாத்யமன்றென்று என் அபிப்ராயம். இங்ஙனம் நீ நினைத்திருக்கிற பகவான் ஆராதிக்க முடியாதவனாகையால் நீ க்ருஹத்திற்கு மீண்டு போவாயாக. உன் பிடிவாதம் பயனற்றதே. 'ஆனால் ஒரு முயற்சியும் செய்யாதிருப்பின், எப்படி எனக்கு நன்மை கிடைக்கும்?' என்னில், சொல்லுகிறேன், கேள். உனக்கு நன்மைகள் விளையவேண்டிய காலம் தெய்வாதீனமாய் நேருமாயின் அப்பொழுது நீ முயற்சி செய்யலாம். இப்பொழுது உன் முயற்சி பயனற்றதேயாம். மற்றும், எந்தப் புருஷனுக்கு ஸுகமாவது துக்கமாவது தெய்வாதீனமாய் விளையுமோ, அவன் அங்ஙனம் நேர்ந்த ஸுகதுக்கங்களிரண்டாலும் மனக்களிப்புற்றவனாகவே இருப்பானாயின், அவன் கடைசியில் ப்ரக்ருதி மண்டலத்திற்கு வெளிப்பட்டதாகிய விஷ்ணுவின் ஸ்தானத்தைப் பெறுவான். தெய்வா

தீனமாய் ஸுகம் நேரில் மனக்களிப்புறலாமன்றி, தெய்வா தீனமாய் துக்கம் நேருமாயின், அதனால் எப்படி மனக்களிப் புறலாம்' என்னில், சொல்லுகிறேன், கேள். தெய்வாதீன மாய் வரும் ஸுக துக்கங்களிரண்டிலும் மனம் கலங்கப் பெறலாகாது. இரண்டிலும் மனக்களிப்பு மாறாதிருப்பதே, யுக்தம். ஸுகம் நேரில் புண்யம் க்ஷீணித்துப் போகின்றது. துக்கம் நேரில் பாபம் க்ஷீணித்துப் போகின்றது. எப்படி பாபம் துக்கத்தை அனுபவிப்பிப்பதாகி மேன் மேலும் சரீர ஸம்பந்தத்தை விளைவித்து ஸம்ஸாரத்தை வளர்க்குமோ, அப்படியே புண்யமும் ஸுகத்தை அனு பவிப்பதாகி மேன்மேலும் சரீர ஸம்பந்தத்தை விளைவித்து ஸம்ஸாரத்தை வளர்க்கும். ஆனால் பாபத்தினால் விளையும் சரீரம் துக்கானுபவத்திற்கும் புண்யத்தினால் விளையும் சரீரம் ஸுகானுபவத்திற்கும் இடமாயிருக்கு மாகையால் அனுபவம் மாத்ரமே பேதித்திருக்குமன்றி ஸம்ஸாரத்தை வளர்ப்பதில் புண்ய பாபங்கள் இரண்டும் துல்யங்களே. ஸம்ஸார வர்த்தகங்களான புண்ய பாபங்களிரண்டும் ஸுக துக்கானுபவங்களால் கழியுமாயின் உடனே ஸம்ஸாரத்தி னின்று ஜீவன் விடுபடுவானாகையால் அவ்விரண்டைப் பற்றியும் விவேகமுடையவன் ஸந்தோஷம் அடைய வேண்டுமேயன்றி வருந்தலாகாது. ஸுகானுபவத்தில் ஸுகத்தை அனுபவிக்கப் பெற்றோமென்று அதில் மனப் பற்றுடன் ஸந்தோஷிக்கலாகாது. சரீர ஸம்பந்தத்தை விளைப்பதாகிய புண்யம் க்ஷீணிக்கப் பெற்றோமென்று ஸந்தோஷிக்க வேண்டும். அங்ஙனமே துக்கானுபவத்தில் பாபம் க்ஷீணிக்கப் பெற்றோமென்று அதற்காகவும் ஸந்தோ ஷிக்கவேண்டுமேயன்றி வருந்த இடமில்லை. இப்படி தெய்வத்தினிடத்தில் பாரத்தைப் பொகட்டு ஸுக துக்கங்க ளிரண்டிலும் மனக்களிப்பு மாறப்பெறாதிருப்பானாயின், அவன் ப்ரக்ருதி மண்டலத்தைக் கடந்த பரமபதம் போய்ச் சேருவான். மற்றும், எவன் தன்னைக்காட்டிலும் குணங்க ளால் மேன்மையுற்றிருக்கின்றானோ, அவனைக் கண்டு

ஸந்தோஷம் அடையவேண்டும்; பொறாமை கொள்ள லாகாது. தன்னைக்காட்டிலும் குணங்களில் குறைந்த வனைக் கண்டு 'ஐயோ' என்று தயை செய்யவேண்டும், அவமதிக்கலாகாது. குணங்களில் தனக்கு நிகராயிருப்ப வனைக் கண்டால் அவனுடன் நட்பு செய்யவேண்டும், போட்டியிடலாகாது. இங்ஙனம் செய்பவன் ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களால் வருந்தமாட்டான்.

த்ருவன் சொல்லுகிறான் :—மஹானுபாவரே! நீர், ஸுக துக்கங்களால் மனம் கலங்கப்பெற்ற என்னைப் போன்ற புருஷர்களுக்கு எந்த வழியில் சென்றால் மன அடக்கம் உண்டாகுமோ, அப்படிப்பட்ட வழியைக் கருணை யால் இங்ஙனம் அறிவித்தீர். நாங்கள் எவ்வளவு வருந்தியும் அதைக் கண்டுபிடிக்க வல்லரல்லோம். அங்ஙனம் அருமை யான சாந்தி மார்க்கத்தை நீர் தயையினால் மொழிந்தீர். மற்றும், நீர் என்னைப் போன்றவர்க்கு ஸாதாரணமாய்ப் புலப்படுமவரல்லீர். அப்படிப்பட்ட நீர் எங்களுக்குப் புலப் பட்டதே உமது கருணையின் கார்யம். ஆயினும், நான் கோரமான க்ஷத்ரிய ஸ்வபாவத்தைப் பின்சென்றவனும் இயற்கையில் வணக்கமில்லாதவனுமா யிருக்கின்றேன். மற்றும், ஸுருசியின் துர்ப்பாஷணங்களாகிற பாணங்க ளால் என் மனம் பிளக்கப்பெற்றிருக்கின்றது. அத்தகைய என் மனத்தில் தேவரீர் மொழிகிற சாந்தி மார்க்கம் நிலை பெறாதிருக்கின்றது. ஆகையால் என்னுடைய அபிப்ரா யத்தை அனுஸரித்து அது நிறைவேறும்படியான உபா யத்தை உபதேசித்து என்னை அனுக்ரஹிப்பீராக. நான் என் தந்தை பாட்டன் முதலியவர்களுக்கும் மற்றவர்களுக் கும் கோராததும் மூன்று லோகங்களிலும் மேன்மையுற் றிருப்பதுமாகிய ஓர் ஸ்தானத்தைப் பெற விரும்பு கின்றேன். அந்த என் மன விருப்பத்தை நிறைவேற்றும்படி யான மார்க்கத்தை எனக்கு நன்கு உபதேசிப்பீராக. 'நாம் சொன்னதை இவன் கேட்கவில்லையே' என்று என்னை

நிக்ரஹிக்கலாகாது. நீர், உலகங்களுக்கெல்லாம் ஹிதத்தைச் செய்பவனான ப்ரஹ்மதேவனுடைய மடியில் பிறந்தவர். நீரும் வீணையினால் பகவானுடைய குணங்களைப் பாடிக்கொண்டு உலகங்களின் நன்மைக்காகவே ஸூர்யன் போல் ஆங்காங்குத் திரிகின்றீர். ஆகையால் நீர் எனது விருப்பத்தை நிறைவேற்றுவது யுக்தமே.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் த்ருவன் மொழிந்த வார்த்தையைக் கேட்டு நாரத பகவான் அவனுடைய மன உறுதியைக் கண்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்து, அந்த பாலனைக் குறித்து ஹிதமான வசனத்தை மொழிந்தார்.

நாரதர் சொல்லுகிறார்:—பாலனே! உன் தாயான ஸுநீதி எந்த உபாயத்தை உனக்கு மொழிந்தாளோ, அதுவே உன்னுடைய நன்மையை நிறைவேற்றிக்கொடுக்க வல்லது. உன் மாதா உனக்கு வாஸுதேவனையே உபாயமாக மொழிந்தாளல்லவா? அவனே உன்னுடைய விருப்பத்தைக் கைகூடுவிக்க வல்லவன். நீ அந்த வாஸுதேவனை மனவூக்கத்துடன் பணிவாயாக. எவன் தர்ம அர்த்த காம மோக்ஷங்களென்கிற நன்மைகளில் ஏதேனுமொன்றைப் பெற விரும்புகிறானோ, அவன் அதைப் பெறுதற்கு ஸ்ரீ ஹரியின் பாதங்களைப் பணிகையொன்றே உபாயம். மற்ற எதுவும் அதை அநுயாஸமாக நிறைவேற்றிக் கொடுக்க வல்லதன்று. அப்பனே! இங்ஙனம் பகவானுடைய பாதஸேவையே தர்மாதி புருஷார்த்தங்களை ஸாதித்துக்கொடுக்கும் உபாயமாகையால், யமுனா நதியின் கரைக்குப் போவாயாக. அது மிகவும் பரிசுத்தமானது. உனக்கு மங்களம் உண்டாகுமாக. அந்த யமுனையின் கரையில் புண்யத்தை விளைக்கவல்லதான மதுவனமென்னும் ஓர் வனம் இருக்கின்றது. அவ்வனத்தில் பகவானுடைய ஸந்நிதானம் எப்பொழுதும் மாறாதிருக்கும். அவ்விடம் சென்று பரிசுத்தமான யமுனையின் ஜலத்தில்

காலை மாலை மத்யாஹ்னம் என்கிற மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்து, அவச்யமாகச் செய்யவேண்டிய தேவதா நமஸ்காராதி கர்மங்களை முடித்து ஸுகமான ஆஸனத்தை ஏற்படுத்திக்கொண்டு அதில் உட்கார்ந்து ரேசகம் பூரகம் கும்பகம் என்ற நிலைமைகளையுடைய ப்ராணாயாமத்தை ஆசரித்து அகார உகார மகாரங்களென்கிற மூன்று வர்ணங்களையுடைய ப்ரணவத்தை அநுஸந்தித்து ப்ராணன்கள் இந்த்ரியங்கள் மனது ஆகிய இவற்றின் மலத்தைப் போக்கவேண்டும். அதனால் மனம் பரிசுத்த மாகும். இந்த்ரியங்களும் வேறு விஷயங்களில் போகாமல் அடங்கும். ப்ராணன்களும் ஸ்வாதீனப்படும். அங்ஙனம் பரிசுத்தமான மனத்தினால் பகவானை த்யானிக்கவேண்டும். பகவானுடைய உருவத்தை எத்தகையதாக த்யானிக்க வேண்டுமோ, அதைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. எப்பொழுதும் அநுக்ரஹம் செய்ய ஸித்தமாயிருப்பவனும் தெளிந்த முகமும் தெளிந்த கண்களும் அழகான மூக்கும் அழகான புருவங்களும் அழகான கபோலங்களும் அமைந்து தேவதைகளைக் காட்டில் மிக்க ஸுந்தரமா யிருப்பவனும், யௌவனப் பருவமுடையவனும் அழகான அங்கங்களுடையவனும் மேலுதடு கீழுதடுகளும் கண்களும் சிவந்திருக்கப்பெற்றுத் திகழ்கின்றவனும் அந்த அழகைப் பார்த்து பக்தர்களால் ஆச்ரயிக்கத் தகுந்தவனும் ஆநந்த ஸ்வரூபனும் தனக்கு நிதிபோன்றவனும் 'நமது விருப்பங் களை நிறைவேற்றிக்கொடுக்கும் உபாயம் இவனே' என்று உறுதியாக நிச்சயிக்கத் தகுந்தவனும் கருணை நிறைந்தவ னும் ஸ்ரீ வத்ஸமென்னும் அடையாளமுடையவனும் மேகம் போல் கறுத்திருப்பவனும் வனமாலை யென்னும் பூமாலை அணிந்தவனும் சங்கம் சக்ரம் கதை பத்மம் ஆகிய இவற்றால் திகழ்கின்ற நான்கு புஜங்களுடையவனும் க்ரீடம் குண்டலம் தோள்வளை கைவளை இவை தரித்தவனும் கழுத்தில் கௌஸ்துபமென்னும் திவ்ய ஆபரணம் அணிந் தவனும் பட்டுப் பீதாம்பரம் உடுத்தவனும் அரை நூல்

மாலையால் ப்ரகாசிப்பவனும் திகழ்கின்ற பொன் சிலம்புத் தண்டை அணிந்தவனும் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும்படி மிக்க அழகாயிருப்பவனும் சாந்தாகாரனும் த்யானம் செய்பவர்களின் மனத்திற்கும் கண்களுக்கும் மனோஹரத்தைக் கொடுப்பவனும் ரத்னங்கள் போன்ற நகங்களின் வரிசைகளோடு விளங்குகின்ற பாதாரவிந்தங்களுடையவனும் தன்னை ஆராதிக்கிற பக்தர்களின் ஹ்ருதய கமலத்தின் மத்தியில் அழுந்தி நிற்கின்றவனும் புன்னகை செய்கின்றவனும் ப்ரேமம் நிறைந்த கண்ணோக்கமுடையவனுமாகிய புருஷோத்தமனை வேறு விஷயங்களில் செல்லாததும் மிக்க ஊக்கமுடையதுமான மனத்தினால் அடி முதல் முடி வரையிலும் நன்கு த்யானிக்கவேண்டும். மிக்க மங்களமான குணங்களுக்கு நிதிபோன்ற பகவானுடைய உருவத்தை இங்ஙனம் த்யானிப்பானாயின், அவனுடைய மனது மிகுந்த ஆநந்த ஸாகரத்தில் மூழ்கி நெடுநேரம் அவ்வுருவத்திலேயே நிலைநின்றிருக்கும்; சீக்ரத்தில் திரும்பாது. அந்த பகவானுடைய உருவத்தில் மனது நிலைநின்று சீக்ரத்தில் மீளாதிருக்குமாறு அவ்வுருவத்தை மிக்க ஊக்கத்துடன் த்யானிக்கவேண்டும். வாராய் ராஜகுமாரனே! அந்த வாஸுதேவனை ஆராதிப்பதற்கு உரிய மந்த்ரத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. அது மிகுந்த மஹிமையுடையது. ஆகையால் அதை மிக்க ப்ரயத்னத்துடன் மறைத்து வைத்துக்கொள்ளவேண்டும். அதை ஒருவர்க்கும் வெளியிடலாகாது. அம்மந்த்ரத்தை ஏழு நாள் ஜபம் செய்வானாயின், ஆகாசத்தில் ஸஞ்சரிக்கின்ற ஸித்தர்களைக் காண்பான். அம்மந்த்ரம் வாஸுதேவ மந்த்ரமே. அது பன்னிரண்டு அக்ஷரங்கள் அடங்கினது. அவ்வாஸுதேவனுக்கு இம்மந்த்ரத்தைச் சொல்லி இதனால் பலவகைப்பட்ட பூஜாத்ரவ்யங்களைக் கொண்டு தேச காலங்களை அறிந்து பூஜை செய்யவேண்டும். பரிசுத்தமான ஜலங்களாலும் அத்தகைய பூமாலைகளாலும் காட்டிலுள்ள காய் கிழங்குகளாலும் சீர்மையுடைய அருகன்புல் முதலிய

வைகளாலும் அழகிய தளிர்களாலும் பூர்ஜமரத்தின் தோல் முதலிய ஆடைகளாலும் மற்றுமுள்ள அழகிய வஸ்துக்களாலும் பகவானுக்கு மிகவும் அன்பிற்கிடமான துளஸியாலும் அவனை ஆராதிக்க வேண்டும். இங்ஙனம் பரிசுத்தமான வஸ்துக்களால் பூஜித்து பூமி ஜலம் முதலிய வற்றிலும் அந்த பகவானை ஆவாஹனம் செய்து ஆராதிக்க வேண்டும். அங்ஙனம் ஆராதிக்கும்பொழுது மனவூக்கத் துடனிருக்க வேண்டும். த்யானம் செய்யாத ஸமயங்களில் சுபாச்ரயமான பகவானுடைய திருமேனியைப்பற்றி மனனம் செய்யவேண்டும். இந்த்ரியங்களை அடக்கிப் பேச்சையும் மிதமாக்கிக்கொண்டு காட்டில் அகப்படக் கூடிய காய் கிழங்குகளையே ஆஹாரமாக உட்கொள்ள வேண்டும். கர்மத்திற்கு உட்படாத பகவான் உலகங்களின் க்ஷேமத்திற்காகத் தன் ஸங்கல்பத்தினால் வராஹாதி அவதாரங்களைக் கொண்டு உத்தமச்லோகனான அந்த பகவான் கர்மவச்யரான தேவ மனுஷ்யாதியின் செயல் களோடொத்ததை யென்று நினைக்க முடியாதபடி செய் கின்ற அற்புத லீலைகளை த்யானிக்கவேண்டும். பகவானுக்கு எந்தெந்தப் பூஜைகள் செய்யவேண்டுமென்று நினைக்கி றானோ, அந்தப் பூஜைகளை யெல்லாம் முன் சொன்ன த்வா தசாக்ஷர மந்த்ரத்தை மனத்தில் அநுஸந்தித்துக் கொண்டே மந்த்ர ஸ்வரூபனான அவ்வாஸுதேவ பகவா னுக்குச் செய்ய வேண்டும். மனத்தில் கபடமின்றி பக்தி செய்கின்ற ப்ராணிகள் விஷயத்தில் அந்த வாஸுதேவன் வெகுமதி செய்யுந் தன்மையன். அத்தகையர் பக்தியுடன் செய்கின்ற பூஜையினால் பூஜிக்கப்பெற்று, அவர்க்கு தர்ம அர்த்த காம மோக்ஷங்களில் எது இஷ்டமோ அதை நிறைவேற்றிக் கொடுப்பான். மோக்ஷத்தைப் பெற விரும்பு மவன், இந்த்ரிய ஸுகங்களில் மனம் செல்லப் பெறுமல், வேறு எண்ணங்களால் மறைக்கப்படாததும் பலவகை அங்கங்களோடு கூடினதுமாகிய பக்தி யோகத்தினால் சரீர ஸம்பந்தம் நீங்கும் வரையில் அந்த பகவானை மனோ

வாக் காயங்களால் நேரே உபாஸிக்க வேண்டும். இதர தேவதைகள் மூலமாய் உபாஸித்தால் மோக்ஷம் கிடைக்காது. ஆகையால் மோக்ஷத்தை விரும்புமவன் அவனை நேரே உபாஸிக்க வேண்டும். ப்ரஹ்ம ருத்ராதி தேவதைகளை உபாஸிக்கினும், அந்த உபாஸனம் அவர்களுக்கு அந்தர்யாமியான பகவானையே சேருமாகையால் அதுவும் பகவானுடைய உபாஸனமே. ஆயினும் அவர்களுக்கு அந்தர்யாமியான பகவான் அம்மூலமாய்த் தன்னை உபாஸிப்பவர்களுக்கு ஈய்வர பலன்களைக் கொடுப்பானன்றி மோக்ஷம் கொடுக்க மாட்டான். 'ப்ரஹ்மருத்ராதி தேவதைகளே நமக்குப் பலன் கொடுக்கிறார்கள்' என்கிற எண்ணத்துடன் அந்த ப்ரஹ்ம ருத்ராதிகளை உபாஸிக்கும் அவிவேகிகள் நய்வர பலன்களையே விரும்புவார்கள். அவர்கள் பரமாத்மாவின் உண்மையை உணராதவர்களாகையால் அவிவேகிகளே. அவன் ஸ்வரூபத்தை உணர்ந்தவர் நய்வர பலன்களை விரும்பவே மாட்டார்கள். விரும்பினாலும், அதற்காகவும் அந்த ப்ரஹ்ம ருத்ராதி தேவதைகளை உபாஸிக்க மாட்டார்கள். ஸர்வேய்வரனான ஸ்ரீமந் நாராயணன் ஸமஸ்த பலன்களையும் கொடுக்க ஸித்தனாயிருக்க, அவர்கள் மற்ற தேவதைகளை ஏன் நெஞ்சிலும் நினைக்கவேண்டும். ஆகையால் மோக்ஷத்தை விரும்புமவன் ஸ்ரீ மஹாவிஷ்ணுவையே உபாஸிக்க வேண்டும். இங்ஙனம் மற்ற எவர்க்கும் ஸாத்யமல்லாத மோக்ஷத்தைக் கொடுக்க வல்லனான பகவான் தன்னை ஆராதிப்பவர்களுக்கு மற்ற தர்ம அர்த்த காமங்களைக் கொடுப்பானென்பதில் ஸந்தேஹமே இல்லை. ஆனது பற்றி நீ அந்த பகவானையே நான் சொன்னபடி பக்தியுடன் ஆராதனம் செய்யின், உன் விருப்பம் கைகூடப் பெறுவாய்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ஸ்ரீ நாரத முனிவரால் மொழியப்பெற்ற அந்த ராஜகுமாரன் அம்முனிவரை ப்ரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து, ஸ்ரீஹரியின் பாதாரவிந்தங்களால் ஸஞ்சரிக்கப் பெற்றதும் பரிசுத்தமுமான மதுவனத்திற்குப் போனான். அந்த த்ருவன் அங்ஙனம்

தபோவனம் போகையில், நாரத முனிவர் உத்தான பாதனுடைய அந்தப்புரம் சென்று, அங்கு அம்மன்னவன் கௌரவித்து ப்ரேமத்துடன் கொடுத்த அர்க்யம் முதலிய ஸத்காரங்களைப்பெற்று, அவன் அளித்த ஆஸனத்தில் ஸுகமாக உட்கார்ந்து இங்ஙனம் மொழிந்தார்.

நாரதர் சொல்லுகிறார் :—ராஜனே! முழுவதும் வாடிவதங்கின முகத்துடன் நெடுந்தூரம் எதைப்பற்றி ஆலோசிக்கின்றனை? தர்ம அர்த்த காமங்களில் ஏதேனும் ஒன்று கைசோரப் பெற்றனையா யென்? அப்படி யில்லையே? எதைப் பற்றி நீ சிந்திக்கின்றனையோ அதை எனக்கு மொழிவாயாக.

மன்னவன் சொல்லுகிறான்:—வாரீர் அந்தணர் தலைவரே! நான் ஸ்த்ரீகளுக்கு வசப்பட்டு மன இரக்கமில்லாமல் ஐந்து வயதுள்ள பாலனான என் புதல்வனை மாதாவுடன் பட்டணத்தினின்று துரத்தினேன். மாதாவைத் துரத்த வில்லையேயாயினும், அவளை உபேக்ஷித்தமையால் துரத்தினாற் போலவே. புதல்வனையும் நான் துரத்தாமற் போயினும், அவனுடைய விருப்பத்தை நிறைவேற்றாமல், அவன் பட்டணத்தினின்று புறப்பட்டுப் போகும்பொழுது வேண்டாமென்று தடுக்காமையாலும் அவனை நானே துரத்தினேனென்பதில் ஸந்தேஹமில்லை. பல பாபங்களைச் செய்தாயினும் பாலனான புத்ரனையும் பதிவ்ரதையான பார்யையையும் ரக்ஷிக்கவேண்டுமென்று தர்ம சாஸ்த்ரங்கள் முறையிடுகின்றன. நான் ஸ்த்ரீலோலனாகி பாலனான புத்ரனை ஊரை விட்டுப் போகும்படி துரத்திப் பதிவ்ரதையான பார்யையையும் உபேக்ஷித்தேன். இப்படி என்னுடைய தர்மலோபத்தை நான் என்னென்று சொல்லுவேன். புதல்வனாயினும் துர்ப்புத்தியாகிப் பலர்க்கும் உபத்ரவம் செய்பவனாயிருப்பானாயின், பல ஜனங்களின் க்ஷேமத்திற்காக அவனொருவனைத் துரக்கலாம். என் புதல்வனோ என்றால், அத்தகையனல்லனன். விநயாதி

குணங்களெல்லாம் அமைந்து மிகுந்த மேன்மையுடையவனு யிருப்பான். மற்றும், அவன், மிக்க விவேகமுடையவன். அந்தணர் தலைவரே! அவன் வனத்தில் பசியெடுக்கப்பெற்று இளைப்புற்றுத் தாமரைமலர் போன்ற முகமெல்லாம் வாடி வதங்கி நாதனற்று பூமியில் படுத்திருப்பானல்லவா? அங்ஙனம் வருந்திப் படுத்திருக்கின்ற என் புதல்வனை அங்குள்ள செந்நாய் முதலிய துஷ்ட ஜந்துக்கள் பக்ஷியாதிருக்குமா? அவன் க்ஷேமமாயிருப்பானு? ஆ! என்னுடைய துர்ப்புத்தித்தனத்தை நான் என்னென்று சொல்லுவேன்? நான் ஸ்த்ரீகளால் வெல்லப்பெற்று மதிகெட்டவனுகி என் மடியில் ஏறவிரும்பின பாலனுன புதல்வனை ப்ரீதியுடன் அபிநந்தனம் செய்யாதிருந்தேன். இதென்ன ஆச்சர்யம்? இப்படியும் ஒருவன் மதிகெட்டுப்போவதுண்டோ? இதனுல் நீர் என் மதிகேடை நிச்சயிக்கலாமல்லவா? இத்தகைய நான் என் செய்வேன்?

நாரதர் சொல்லுகிருர்:—மன்னவனே! நீ உன் புதல்வனைப்பற்றிச் சோகிக்க வேண்டாம். அவன் தெய்வத்திஞல் பாதுகாக்கப்பெற்று க்ஷேமமாயிருக்கிருன். அவன் ப்ரபாவத்தை அறியாமல் நீ சோகிக்கின்றனை. அது வேண்டாம். அவனை ஈஸ்வரன் பாதுகாத்துக்கொண்டிருக்கின்றனன். உன் புதல்வனுடைய புகழ் ஜகத்தெல்லாம் நிரம்பப்போகின்றது. அவன் இந்த்ரியங்களை வென்று லோகபாலர்களான இந்த்ராதிகளாலும் செய்ய முடியாத கார்யத்தைச் செய்து உன் புகழை விரித்து, மன்னவனே! சீக்கிரத்தில் திரும்பி வரப் போகின்றுன்.

ஸ்ரீ மைத்ரேயர் சொல்லுகிருர்:—இங்ஙனம் தேவரிஷியாகிய நாரதர் மொழிந்த வார்த்தையை ஊக்கத்துடன் கேட்டு ராஜனுகிய உத்தானபாதன் ராஜ்யலக்ஷ்மியையும் பொருள் செய்யாமல் த்ருவனையே சிந்தித்துக்கொண்டிருந்தான். இது இங்ஙனம் இருக்க, த்ருவன் மதுவனத்தில் நடத்தினதைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. அவன்

யமுனையில் ஸ்னானம் செய்து பரிசுத்தனாகித் தவம் செய்யத் துடங்கினான். அந்த மூதனாள் ராத்ரி அம்மதுவனத்தில் உபவாஸமிருந்து நாரதர் உபதேசித்த மார்க்கத்தின்படி பரமபுருஷனைப் பூஜித்தான். அவன் மூன்று ராத்ரிகள் சென்றபின்பு நான்காவது நாள் விளாம்பழங்களையும் இலந்தம் பழங்களையும் தன் தேஹதாரணத்திற்குப் போது மானவளவு புஜித்து ஸ்ரீ மஹாவிஷ்ணுவைப் பூஜித்துக் கொண்டு ஒரு மாதகாலம் கடத்தினான். இளைஞனாகிய அந்த த்ருவன் பிறகு அவ்வைந்து நாள்கள் கழிந்த பின்பு ஆறுவது நாள் தானே உதிர்ந்திருக்கிற புல் இலை முதலியவற்றை ஆஹாரமாக உட்கொண்டு ஸ்ரீ மஹாவிஷ்ணுவை ஆராதித்துக்கொண்டே இரண்டாவது மாதத்தைக் கடத்தினான். பிறகு எவ்வெட்டு நாள்கள் கழிந்த பின்பு ஒன்பதாவது நாள் ஜலத்தையே ஆஹாரமாகக் கொண்டு உத்தம ஶ்லோகனான பகவானை பக்தி யோகத்தினால் ஆராதித்துக்கொண்டு மூன்றாவது மாதத்தையும் கடத்தினான். பிறகு நான்காவது மாதம் முழுவதும் பன்னிரண்டு நாள்களுக்கு ஒரு தடவை வாயுபக்ஷணம் செய்து ஶ்வாஸத்தை ஜயித்து பகவானை த்யானித்துக்கொண்டு ஜீவித்திருந்தான். ஶ்வாஸத்தை வென்று ஸ்வாதீனப்படுத்திக் கொண்டிருக்கிற அம்மன்னவர் புதல்வன் ஐந்தாவது மாதத்தில் மொட்டைமரம் போல் அசையாமல் ஒற்றைக்காலால் நின்று பரப்ரஹ்மத்தை த்யானஞ் செய்துகொண்டிருந்தான். ஶப்தாதி விஷயங்களில் விருப்பமுடைய ஶ்ரோத்ரம் முதலிய இந்த்ரியங்களை யெல்லாம் மனத்தில் அடக்கி, அம்மனத்தையும் ஸங்கல்ப விகல்பாதி வ்யாபாரங்கள் எவற்றிலும் செல்லவொட்டாமல் தடுத்து அவன் ஹ்ருதய புண்டரீகத்தில் பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை த்யானித்துக்கொண்டு அந்த பகவானுடைய உருவத்தைக் காட்டில் மற்றொன்றையும் பார்க்க நேராதிருந்தான். பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தில் மனம் ஊன்றின்மையால் அவனுக்கு மற்றொன்றும் புலப்படவில்லை.

G

ஆகையால் அவனுக்கு பக்தியோகம் கைகூடிற்று. மஹத்து முதல் ப்ருதிவி வரையிலும் உள்ள பூதங்களுக்கும் அவற்றோடு ஸம்பந்தித்த சேதனர்களுக்கும் தாரகனும் (ஸ்தூல சேதநா சேதனங்களைச் சரீரமாகவுடையவனும்) ஸூக்ஷ்ம சேதநா சேதனங்களுக்கு உள்ளே புகுந்து நியாமகனும் அவற்றைச் சரீரமாக வுடையவனுமாகிய பரப்ரஹ்மமென்கிற பரம புருஷனை ஹ்ருதயத்தில் தரித்துக்கொண்டிருக்கிற அந்த த்ருவனுடைய தேஜஸ்ஸை மூன்று லோகங்களும் பொறுக்க முடியாமல் நடுக்கமுற்றன. அந்த ராஜகுமாரன் ஒற்றைக்காலால் நிற்கத் துடங்கினது முதல் பூமி, அவனுடைய கால் கட்டைவிரலால் அழுந்த அமுக்கப்பெற்றதாகி, வலிவுடைய பெரிய யானையால் ஏறப்பெற்ற ஓடம் ஜலத்தில் அடிக்கடி வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலுமாக அழுங்குவது போல், பாதி உள்ளே அழுங்கிற்று. மற்றும், அந்த த்ருவன் தன்னுடைய ஸமஸ்த இந்த்ரியங்களையும் ப்ராணவாயுவையும் அடக்கிக்கொண்டு வேறு விஷயங்களில்செல்லாத புத்தியுடன் பகவானை த்யானித்துக்கொண்டிருக்கையில் இந்த்ரன் முதலிய லோகபாலர்களோடு கூடின லோகங்களெல்லாம் மூச்சு விடமுடியாமல் வருந்தி, ஸ்ரீ மஹாவிஷ்ணுவைச் சரணம் அடைந்தார்கள்.

தேவதைகள் சொல்லுகிறார்கள்:—ஸ்வாமீ! பகவானே! உலகமெல்லாம் மூச்சுவிட முடியாமல் ஸ்தாவரம் போன்று வருந்துகின்றது. இத்தகைய உபத்ரவத்தை நாங்கள் எப்பொழுதும் அனுபவித்தறியோம். நீ சேதநா சேதனங்களை யெல்லாம் சரீரமாக வுடையவன். ஆகையால் நாங்களெல்லோரும் உன்னுடைய சரீரங்களே. எங்களை இந்த வருத்தத்தினின்று விடுவிப்பாயாக. உலகத்தில் அவரவர் விரும்பும் விருப்பங்களை யெல்லாம் ஸாதித்துக் கொடுப்பவன் நீயே. ஸர்வலோக சரண்யனாகிய உன்னை நாங்கள் சரணம் அடைந்தோம். நீ எங்களைப் பாதுகாப்பாயாக.

ஸ்ரீ பகவான் சொல்லுகிருன்:—நீங்கள் பயப்படவேண்டாம். தவத்தினுல் எவர்க்கும் கடக்க முடியாதவனுன பாலனுடைய இஷ்டத்தை நிறைவேற்றி நான் அவனைத் தவத்தினின்று மீட்கின்றேன். ஆகையால் நீங்கள் உங்கள் இருப்பிடம் போய்ச் சேருவீர்களாக. 'பாலன் யார்? என்னில், சொல்லுகிறேன், கேளுங்கள். உத்தான பாதனுடைய புத்ரனுகிய த்ருவன் ஐந்து வயதுள்ள பாலன் இந்த்ரியங்களையெல்லாம் வென்று ப்ராணவாயுவையும் அடக்கி என்னைத் தன் ஹ்ருதயத்தில் நிலைநிறுத்திக்கொண்டு த்யானம் செய்கின்றுன். ஸர்வ ப்ராணிகளுக்கும் ஜீவன் ஹேதுவான என்னை அவன் தன் ஹ்ருதயத்தில் தகைத்து விட்டானுகையால், ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ப்ராணவாயு தடைப்பட்டது. ஆகையால் நான் அவனை ஸமாதானப்படுத்தித் தவத்தினின்று திருப்பி அனுப்புகிறேன். அதனுல் சீக்கிரத்திலேயே உங்கள் வருத்தம் நீங்கி நீங்கள் ஸுகப்படுவீர்கள். ஆகையால் உங்களிருப்பிடம் போய்ச் சேருவீர்களாக. எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

த்ருவன் பகவானை ஸ்தோத்ரம் செய்து அவனுல் வரம் கொடுக்கப்பெற்றுப் பட்டணத்திற்கு வந்து தகப்பன் கொடுத்த ராஜ்யத்தை ஆளுதல்.

மைத்ரேயர் சொல்லுகிருர்:—இங்ஙனம் பகவான் மொழிந்த வசனத்தைக் கேட்டு தேவதைகள் பயம் தீரப்பெற்று, த்ரிவிக்ரமாவதாரம் செய்து உலகங்களை இந்த்ரனுக்கு மீட்டுக் கொடுத்த மஹோபகாரனுன அந்த பகவானுக்கு நமஸ்காரம் செய்து தேவலோகம் போய்ச் சேர்ந்தார்கள். அப்பால், ஆயிரந் தலையனுகிய பகவானும் தன் ப்ருத்யனுகிய த்ருவனைப் பார்க்க விரும்பிக் கருடன்மேல் ஏறிக்கொண்டு மதுவனத்திற்குப் போனுன். அந்த த்ருவன் பக்தியோகம் நன்கு நிறைவேறப்பெற்ற புத்தியால் தன்னுடைய ஹ்ருதய புண்டரீகத்தில் ஸாக்ஷாத்கரிக்கப்பெற்ற

பகவான் திடீலென்று மின்னல் மறைந்தாற்போல் மறைந்தமைகண்டு கண்ணைத் திறந்து பார்க்கையில், அந்த பகவான் ஹ்ருதயத்தில் தோன்றினபடியே வெளியில் திகழ்ந்து நிற்கக் கண்டான். அங்ஙனம் பகவானை நேரே ஸாக்ஷாத்கரித்தமையால் பரபரப்புண்டாகப்பெற்ற அந்த த்ருவன் தன் சரீரத்தை பூமியில் தடிபோல் சாய்த்து நமஸ்காரம் செய்தான். அவன் அந்த பகவானைப் பார்த்தவுடனே அவனைக் கண்களால் பானம் செய்பவன்போல் கண்ணாரக் கண்டான். முகத்தினால் முத்தமிடுபவன்போலும் புஜங்களால் கட்டியணைப்பவன்போலும் அவனை நமஸ்கரித்தான். அவன் அந்த பகவானுடைய குணங்களைச் சொல்லி ஸ்தோத்ரம் செய்யவேண்டுமென்று விரும்பியும் துதி செய்யத் தெரியாமல் வெறுமனே யிருந்தான். ஸமஸ்த ப்ராணிகளுடைய ஹ்ருதயத்திலும் வஸிப்பவனாகையால் பகவான் அந்த த்ருவனுடைய ஹ்ருதயத்திலும் வஸிப்பவனே. ஆகையால் அந்த பரமபுருஷன் அவனுடைய அபிப்ராயத்தை அறிந்து கருணைகூர்ந்து ப்ரணவ ஸ்வரூபமான தன் சங்கத்தினால் அந்த த்ருவனைக் கபோலத்தில் ஸ்பர்சித்தான். அந்த த்ருவன் அங்ஙனம் சங்கத்தினால் ஸ்பர்சிக்கப்பெற்றவுடனே, அந்த தேவ தேவனுடைய அனுக்ரஹத்தினால் வேதாந்தங்களெல்லாம் நிறைந்த வாக்குகளைப் பெற்றான். நினைத்தபடி வாயார வல்லனானான்; மற்றும், ஜீவாத்ம பரமாத்மாக்களின் உண்மையை உள்ளபடி அறிந்தான். அவனுக்கு சாஸ்வதமான ஸ்தானத்தைப் பெறும் பாக்யமும் ஸித்தமாயிற்று. நிரவதிகமான பக்தி பாவமும் உண்டாயிற்று. அத்தகையனான அந்த த்ருவன் பரபரப்பில்லாதவனாகி ஜகத்து முழுவதும் ப்ரஸித்தமான பெரும் புகழுடைய பகவானை ஸ்தோத்ரம் செய்தான்.

த்ருவன் சொல்லுகிறான்:—பகவானே! நான் உன்னை ஸ்தோத்ரம் செய்யவேண்டுமென்ற விருப்பம் உண்டாகப் பெற்றும், துதி செய்வதற்குரிய வாக்கு நேரப் பெறுதிருக்

தேன். அங்ஙனம் கார்யத்திற்கு உபயோகப்படாமல் உறங்குவது போன்றிருந்த என் வாக்கிந்த்ரியத்திற்குள் நீ உன் ஸங்கல்பரூப ஜ்ஞானத்தினால் புகுந்து அதைக் கிளப்பி யெழுப்பினை. நீ, சேராதவைகளைச் சேர்ப்பிக்கை முதலிய ஸர்வ சக்திகளும் அமைந்தவன். அத்தகையனான உனக்கு இது யுக்தமே. ஹஸ்தம் பாதம் ச்ரவணம் த்வக்கு முதலிய வற்றையும் மற்ற ப்ராணன்களையும் நீயே அவற்றுள் புகுந்து எழுப்புகின்றனை. நீ உட்புகாதபக்ஷத்தில் அவை தத்தமது கார்யங்களைச் செய்ய வல்லவையாக மாட்டா. அவையும் உனக்குச் சரீரங்களே. நீ ஜ்ஞானாதி குணங்களெல்லாம் நிறைந்தவன், பரமபுருஷன். அத்தகையனான உனக்கு நமஸ்காரம். வாராய் பகவானே! இதோ புலப்படுகின்ற ஜகத்தை யெல்லாம், பலவாறாகப் பரிணமிக்குந் திறமை யுடைய ஸத்வாதி குணங்கள் அமைந்ததும் உன்னுடைய சக்திபோல் உன்னைவிட்டுப் பிரியாதிருப்பதுமாகிய மாயை யென்னும் ப்ரக்ருதியால் ஸ்ருஷ்டித்தும் கார்யமாயும் காரணமாயுமுள்ள ஸத்வாதி குணமயமான ஸகல பதார்த்தங்களிலும் ஜீவன் மூலமாய் ப்ரவேசித்து, அக்னி தான் ஒருபடிப்பட்டிருப்பினும் நீண்டும் குறுகியும் பலவாறாயிருக்கையால் பலவகைப்பட்ட காஷ்டங்களில் பற்றிப் பலவாறு தோற்றுவதுபோல், நீ ஒருவனாயிருந்தும் உன் சரீரமான வஸ்துக்கள் பலவாறாயிருக்கையால் பலவாறு தோற்றுகின்றனை. காஷ்டங்கள் நெடுமை குறுமை முதலிய பல தன்மைகளுக் கிடமாயிருப்பினும், அவை அவற்றில் பற்றின அக்னிக்கு எங்ஙனம் ஸம்பந்திக்கிறதில்லையோ, அங்ஙனமே உனக்குச் சரீரமான வஸ்துக்களின் தோஷங்கள் அவற்றில் உட்புகுந்திருக்கிற உன்னிடத்தில் ஸம்பந்திக்கிறதில்லை. நீ எப்பொழுதும் உன் ஸ்வரூபம் மாறப்பெறாதவன். பகவானே! ப்ரஹ்மதேவன் முதலில் இந்த ஜகத்தைப் படைக்க விரும்பி இன்ன விதமாகப் படைக்கவேண்டுமென்று தெரியப்பெறாமல் உறங்கினவன்போல் ஒன்றுமறியாமல் கிடந்து உன்னைச் சரணம் அடைகையில்,

அவனுக்கு நீ ஜ்ஞானம் கொடுத்தனை. அப்பால் அவன் உறங்கி யெழுந்தவன்போல் நீ கொடுத்த ஜ்ஞானத்தினால் இந்த ஜகத்தையெல்லாம் உள்ளபடி அறிந்தான். இந்த வஸ்துவை இன்னவிதமாகப் படைக்கவேண்டுமென்று தெரிந்துகொண்டு அப்பால் இந்த ஜகத்தையெல்லாம் ஸ்ருஷ்டித்தான். தாபத்ரயத்தினால் வருந்தினவர்க்கு பந்துவாயிருப்பவனே! மோக்ஷத்தை ஸாதித்துக் கொடுப்பதாகிய உன் பாதமூலத்தை நீ செய்த உபகாரம் அறிந்த நான் எங்ஙனம் மறப்பேன்? மஹோபகாரகனை உன்னை அடையாதவர்கள் க்ருதக்னர்களே (செய்த உபகாரத்தை மறந்தவர்களே). தன்னைப் பற்றினாருடைய விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றிக் கொடுப்பவனாகையால் கல்பக வ்ருக்ஷம் போன்றவனும் பிறத்தலும் சாதலுமான ஸம்ஸார பந்தத்தை அழித்து மஹாநந்த ரூபமான மோக்ஷத்தைக் கொடுப்பவனுமாகிய உன்னை எவர் என்னைப்போல் தர்ம அர்த்த காமங்களாகிற வேறு காரணத்தினால் பணிகின்றார்களோ, அவர்கள் உன் மாயையால் மதிமயங்கப்பெற்ற மூடர்களே, நிச்சயம். ஏனென்னில், மோக்ஷங்கொடுப்பவனாகிய உன்னை வேறு காமங்களுக்காகப் பணிவது யுக்தமோ? யுக்தமன்று. பகவானுடைய லோகமாகிய பரமபதத்தை நினைத்தால், மற்ற லோகங்களெல்லாம் நரகங்களே. அத்தகைய நரகானுபவத்தை எவன் விரும்புவான்? ஶ்ரோத்ரம் (காது) முதலிய இந்த்ரியங்களால் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கையால் உண்டாவதும் சவம்போன்ற சரீரத்தினால் அனுபவிக்கத் தக்கதுமாகிய ஸம்ஸார ஸுகத்தையன்றோ அவர்கள் விரும்புகிறார்கள். ஆகையால் அவர்கள் அறிவில்லாத மூடர்களே. 'ஸ்வர்க்கம் ஸுகமாயன்றோ இருக்கும். ஆகையால் அந்த ஸ்வர்க்காதி ஸுகத்திற்காக பஜிக்கிறவர்களை நிந்தித்து விருப்பமில்லாமல் பஜிக்கிறவர்களைப் புகழ்கின்றனையே' என்னில், அந்த ஸ்வர்க்க ஸுகம் மோக்ஷ ஸுகத்தைப் பார்க்கில் மிகவும் அற்பமாயிருக்கும்; மற்றும், அது சீக்ரத்

தில் அழியுந் தன்மையது. மோக்ஷ ஸுகம் ஒரு நாளும் அழிவில்லாதது. அதன் பெருமையைச் சொல்லி முடியாது. ஆகையால் அந்த மோக்ஷத்தைக் கொடுக்கும் ப்ரபுவான பகவானைப் பணிந்து எவர்கள் அற்பமாயும் அஸ்திரமாயுமுள்ள ஸ்வர்க்காதி ஸுகங்களை விரும்புகிறார்களோ, அவர்கள் அறிவிலா மூடர்களென்பதில் ஸந்தேஹமென்? ஸகல ஜகந்நாதனே! ப்ராணிகளுக்கு உன் பாதாரவிந்தங்களைப் பணிவதனாலும் அங்ஙனம் உன் பாதாரவிந்தங்களைப் பணிகிற பாகவதர்களின் கதைகளைக் கேட்பதனாலும் உண்டாகக்கூடிய ஸுகம், ஆத்மாவுக்கு இயற்கையில் ஏற்பட்ட அபஹதபாப்மத்வம் (பாபமற்றிருக்கை) முதலிய எட்டு குணங்கள் தோற்றப்பெற்ற சுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தினுடைய அநுபவத்திலும் (கைவல்யத்திலும்) உண்டாகாது. அந்தகமென்னும் கத்தியினால் அடிக்கப்பட்டதாகிய விமானத்தினின்று விழுகிற ஸ்வர்கிகளுக்கு (ஸ்வர்க்க ஸுகத்தை அநுபவிக்கும் ப்ராணிகளுக்கு) இந்த ஸுகத்தில் சிறிது பாகமும் உண்டாகாது. வாராய் அனந்தனே! (அளவிறந்த ஸ்வரூப ஸ்வபாவங்களையுடையவனே!) ஸமஸ்த தோஷங்களும் தீண்டப் பெறாதவனும் எல்லாமறிந்திருக்கை மஹாநந்த ஸ்வரூபனாயிருக்கை முதலிய எல்லையில்லாத கல்யாணகுண ஸமூஹங்களுக்கு இருப்பிடமுமாகிய உன்னிடத்தில் இடைவீடின்றி எப்பொழுதும் பக்தி செய்பவர்களும் நிர்மலமான மனதுடையவர்களும் கோபமில்லாமை முதலிய ஆத்ம குணங்களெல்லாம் அமைந்தவர்களுமான பெரியோர்களோடு ஸஹவாஸம் உண்டாகும்படி அருள்புரிவாயாக. ஏனென்னில், அம்மஹாநுபாவர்கள் உன் குணங்களையும் உன் கதைகளையுமே அநுஸந்தித்துப் பொழுது போக்குவார்கள். ஆகையால் அவர்களோடு ஸஹவாஸம் உண்டாகப் பெறுவேனாயின், உன் கல்யாண குணங்களை வெளியிடுகின்ற உன் கதைகளாகிற அம்ருதத்தைப் பானம் செய்து மனக்களிப்புற்று ஸம்ஸார தாபங்களெல்லாம் துலையப்பெற்றுச் சீக்ரத்தில் பெரும் பெரிய

துக்கங்களை உட்கொண்டிருப்பதும் பொறுக்க முடியாதது மாகிய ஸம்ஸாரமாகிற ஸாகரத்தைக் கடப்பேன். ஆகையால் உன் பக்தர்களான அத்தகைய பெரியோர்களோடு எனக்கு ஸஹவாஸம் உண்டாகும்படி அருள்புரிவாயாக. மற்றும், ஸத்புருஷர்களோடு ஸஹவாஸம் நேருமாயின், அது உன் கதைகளைக் கேட்பது முதலியவற்றின் மூலமாய் மோக்ஷ ஸுகத்திற்கு ஸாதனமாயிருக்கை மாத்ரமே யன்றி, ஜீவிக்கும் நாளிலும் தேஹத்தைப்பற்றியும் அதைத் தொடர்ந்த மற்றவைகளைப்பற்றியும் விளையக்கூடிய ஸுக துக்கங்களில் மனம் செல்லவொட்டாமல் தடுத்து மஹாநந்தத்தைக் கொடுக்கும். ஜகதீசனே! தாமரையுந்தியனே! (பத்மநாப!) உன் பாதாரவிந்தங்களின் பரிமளத்தில் விருப்புற்ற மனமுடைய பாகவதர்களோடு எவர்கள் ஸஹவாஸம் செய்யப்பெறுவார்களோ, அவர்கள் மரணத்தை அடையுந்தன்மையதாயினும் மிகவும் ப்ரீதிக்கிடமாயிருப்பதான தேஹத்தையும் அந்த தேஹத்தைத் தொடர்ந்த பிள்ளை பெண்டிர் நண்பன் தனம் மனை முதலியவற்றையும் நினைக்கமாட்டார்கள். அவற்றில் அபிமானம் வைக்கமாட்டார்கள். எல்லாவற்றிலும் மேன்மையுற்றவனே! ஸ்தூலமாயும் ஸூக்ஷ்மமாயுமுள்ள சேதநாசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவனே! கர்மத்தினால் விளையும் உற்பத்தியில்லாதவனே! மஹத்து முதல் ப்ருதிவி வரையிலுமுள்ள தத்வங்கள் அடங்கினதும் சேதநாசேதன ஸ்வரூபமாயிருப்பதும் திர்யக் ஜந்துக்களான பசுக்கள் ம்ருகங்கள் இவைகளும் ஸ்தாவரங்களும் அண்டஜங்களான பக்ஷி முதலியவைகளும் ஸர்ப்பங்களும் தேவதைகளும் தைத்யர்களும் (அஸுரர்களும்) மனுஷ்யர்களும் மற்றுமுள்ள பற்பல ஜந்துக்களும் அடங்கப்பெற்றுப் பலவாறு பிரிந்திருப்பதான இந்த ப்ரஹ்மாண்டம் முழுவதும் உன்னுடைய ஸ்தூல ரூபமென்பதை அறிவேனன்றி மற்றை விசேஷங்கள் எவையும் எனக்குத் தெரியாது. இந்த ஸ்தூல ரூபத்தைக்காட்டிலும் விலக்ஷணமான உன்

திவ்ய மங்கள விக்ரஹமாகிற ஸூக்ஷ்ம ரூபத்தையும் நீ எனக்குக் காட்டக் கண்டறிந்தேன். அந்த ஸூக்ஷ்ம ரூபத்தில் தேவ திர்யக் மனுஷ்யாதிகளோடொத்திருக்கிறதென்கிறவசனம்பொருந்தாது. அது அப்ராக்ருதமாயிருப்பதாகையால் ப்ராக்ருதமான பூதங்களோடொக்கச் சொல்லலாகாது. நீ சேதனுசேதன ரூபமான இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் ப்ரளயகாலத்தில் வயிற்றில் வைத்துக்கொண்டு தன்னைத்தான் அனுபவிக்குந் தன்மையனுகி ஆதிசேஷனொருவனை ஸஹாயமாகக் கொண்டு அவன் மடியில் படுத்து யோகநித்ரை செய்கின்றனை. பரமபுருஷா! அங்ஙனம் சயனித்த உன் நாபியாகிற ஸமுத்ரத்தில் முளைத்த ப்ரபஞ்சமாகிற ஸ்வர்ணமயமான தாமரை மலரின் மத்யத்தில் மஹாதேஜஸ்வியான ப்ரஹ்மதேவன் உண்டாகின்றான். அத்தகையனுன உனக்கு நமஸ்காரம். நீ திவ்ய மங்கள விக்ரஹங்களை அங்கீகரிப்பதற்கு உன் ஸங்கல்பமே காரணமன்றிக் கர்மம் காரணமன்று. நீ யஜ்ஞங்களால் ஆராதிக்கப்படுமவன். அந்த யஜ்ஞங்களுக்குப் பலன் கொடுப்பவனும் நீயே. நீ ப்ரக்ருதி புருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன். இப்படிப்பட்ட நீ ஜகத்தைப் பாதுகாப்பதற்காகப் பற்பல திவ்யமங்கள விக்ரஹங்களை அங்கீகரிக்கின்றனை. எவ்வகையிலும் தடைபடாத ஸங்கல்ப ரூபஜ்ஞானத்தினுல் எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்கின்றனை. ஆகையால் ஸமஸ்த லோகங்களுக்கும் வேண்டிய இஷ்டங்களைக் கொடுப்பதும் அநிஷ்டங்களைப் போக்குவதுமாகிய ஜகத் ரக்ஷணத்தை நீ ஒருவனே நடத்துகின்றனை. நீ ஸமஸ்த வஸ்துக்களிலும் நிறைந்திருப்பவன். ஆகையால் அவ்வவைகளுக்கு நடத்தவேண்டிய யோகக்ஷேமங்களையெல்லாம் அறிந்து நடத்துகின்றனை. அங்ஙனம் ஸமஸ்த வஸ்துக்களிலும் நீ நிறைந்திருப்பினும் அவற்றின் தோஷங்கள் தீண்டப் பெறுதவன். ஆனதுபற்றியே, நீ அவற்றைச் சரீரமாகக் கொண்டிருப்பினும் ஜீவனைப்போல் ஜ்ஞான ஸங்கோசம் உண்டாகப்பெறுகிறதில்லை. ஆகையால் ஸர்வ

தேசங்களிலும் அந்தந்த ப்ராணிகளுக்கு நிறைவேற்ற வேண்டிய இஷ்டங்களையும் போக்கவேண்டிய அநிஷ்டங்களையும் அறிந்து அவற்றை நடத்துகின்றனை. இங்ஙனம் நீ ஸமஸ்த வஸ்துக்களிலும் நிறைந்திருப்பினும் அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாதிருக்கின்றமையால் நித்ய முக்தனென்று கூறப்படுகின்றனை. ஆகையால் அசேதனமான ப்ரக்ருதியைக்காட்டிலும் சேதனர்களைக்காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன். அசேதனமான மஹத்து முதலிய தத்வங்கள் ப்ருதிவி முதலிய தத்வங்களில் வ்யாபித்திருப்பினும் அவற்றின் தோஷங்களுக்குத் தாம் இடமாயிருக்கின்றன. நீ அத்தகையனல்லை. சேதனர்களான ஜீவாத்மாக்கள் தேவ மனுஷ்யாதி சரீரங்களில் வ்யாபித்திருக்கின்றனர். வாஸ்தவத்தில் அவர்களுக்கு அந்த தேவ மனுஷ்யாதி சரீர தோஷங்கள் ஸம்பவிக்கிறதில்லை. ஆயினும் அவர்கள் அஹங்கார மமகாரங்களால் வருந்துகிறார்களாகையால் நித்ய முக்தராகமாட்டார்கள். நீயொருவனே நித்யமுக்தன். அதற்குக் காரணமென்னென்னில், கர்மத்திற்குட் படாமையே. ஜீவாத்மாக்கள் கர்மத்திற்குட்பட்டவர். அங்ஙனம் கர்மத்திற்குட்படாமைக்குக் காரணமென்னென்னில், என்றும் ஜ்ஞானஸங்கோசம் உண்டாகப்பெறாமையே. ஜீவாத்மாக்களோவென்றால், குவிதலும் மலர்தலுமான ஜ்ஞானமுடையவர். நீ எப்பொழுதும் விகாரங்களுக்கிடமாகாத ஸ்வரூப ஸ்வபாவங்களை யுடையவன். ஜீவாத்மாக்கள் ஸ்வபாவத்தினால் விகாரமடையுந் தன்மையர். பரமபதத்திலுள்ள நித்யர்களும் முக்தர்களும் உன்னைப்போலவே கர்மத்திற்கு உட்படாமல் என்றும் ஜ்ஞானஸங்கோசமின்றிப் பரிசுத்தராயிருப்பவர்களே. ஆயினும், நீ அவர்களுக்கும் அந்தராத்மாவாகையால் அவர்களைக்காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன். நீயே ஜகத்காரணனான பரமபுருஷன்; ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கும் அவற்றின் கார்யமான ஸமஸ்த லோகங்களுக்கும் நியாமகனு யிருப்பவன். ஆகையால் உனக்கு மேற்பட்டவன் எவனுமே இல்லை. நீயே ஸர்வ

ஸ்மாத்பரன். வேறு வஸ்துக்களில் சேரக்கூடாதவைகளான ஜ்ஞானாதி சக்திகள் பற்பலவும் க்ரமமாக உன்னிடத்தில் ப்ரகாசிக்கின்றன. முதலில் உலகங்களைப் படைக்கின்றனை. இந்த சக்தி மற்ற எந்த வஸ்துவிலும் உண்டாகக்கூடிய தன்று. பிறகு, படைத்த உலகங்களில் உட்புகுந்து நியமிக்கின்றனை. இந்த சக்தியும் அத்தகையதே. அவற்றை யெல்லாம் பாதுகாக்கின்றனை. இந்த சக்தியும் உன்னைத் தவிர மற்ற எந்த வஸ்துவிலும் ஸம்பவிக்கக்கூடியதன்று. பிறகு அவ்வுலகங்களை யெல்லாம் ஸம்ஹரிக்கின்றனை. இங்ஙனம், பற்பலவகைப்பட்டவைகளும் வேறு வஸ்துக்களில் ஸம்பவிக்கக்கூடாதவைகளுமான சக்திகள் உன்னிடத்தில் ஒவ்வொன்றாக வெளியாகின்றன. உன்னிடத்தில் எல்லா சக்திகளும் எப்பொழுதும் எல்லா இடங்களிலும் மாறாமலே இருக்கின்றன. ஆயினும் க்ரமத்தில் வெளியாகின்றன. ஆகையால் நீ சேதநா சேதனங்களில் உட்புகுந்திருப்பினும் உன் சக்தியின் மஹிமையால் அவற்றின் தோஷங்கள் உன்னிடத்தில் ஸம்பந்திக்கிறதில்லை. ப்ரபஞ்சத்திற்கெல்லாம் உற்பத்தி காரணமாயிருப்பவனும் அங்ஙனம் ப்ரபஞ்சத்தைப் படைக்கும்பொழுது மற்றொரு ஸஹாயமுமின்றித் தானொருவனே ஸமஸ்த காரணங்களுமாயிருப்பவனும் எவ்வகை விகாரங்களும் தீண்டப்பெறாதவனாகி ஸ்வரூபத்தினால் மாறுந்தன்மையுள்ள அசேதனமான ப்ரக்ருதியைக்காட்டிலும் ஸ்வபாவத்தினால் மாறுந் தன்மையுள்ள சேதனனான ஜீவனைக்காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவனும், நித்ய ஜ்ஞானானந்த ஸ்வரூபனும், தேச கால வஸ்து பரிச்சேதங்களற்றவனும் ஆனதுபற்றியே நித்ய முக்தர்களைக்காட்டிலும் விலக்ஷணனும் பரப்ரஹ்மமென்று கூறப்படுபவனுமாகிய உன்னை நான் சரணம் அடைகின்றேன். பகவானே! நீ தன்னைப் பற்றினாருடைய விருப்பங்களை யெல்லாம் அவ்வப்படியே நிறைவேற்றிக் கொடுக்குந்தன்மையன். உன்னுடைய உருவம் ஸ்வயம் புருஷார்த்தமாயிருக்கும். காண்போர்க்கு மஹானந்தத்தைக் கொடுக்குமாகையால்

உன் திவ்யமங்கள விக்ரஹமே அனைவராலும் ப்ரார்த்திக்கக் கூடியதாயிருக்கும். ஆகையால் நீ புருஷார்த்த மூர்த்தி யென்று கூறப்படுவாய். ஸ்வாமீ! இத்தகையனான உன் பாதாரவிந்தங்களைத் தங்கள் விருப்பங்களுக்குத் தகுந்தபடி பணிகின்றவர்களும் தர்ம அர்த்தகாமங்களில் நிலைநின்றவர்களும் தீனர்களுமான என்னைப்போன்றவர்களையும், முதலீற்றுப் பசு தன் கன்றைப் பாதுகாப்பதுபோல், நீ அனுக்ரஹிக்குந் தன்மையனாகையால் பாதுகாக்கின்றனை.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—திடமான ஸங்கல்பமுடையவனும் சிறந்த மதியுடையவனுமாகிய த்ருவனால் துதி செய்யப்பெற்ற பகவான் பக்தர்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனாகையால் அவனுடைய ஸ்தோத்ரத்தை அபிநந்தனம் செய்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—வாராய் ராஜகுமாரனே! நீ மனத்தில் விரும்பியிருப்பதை நான் அறிவேன். நீ நினைத்திருப்பது மற்றவர்க்குக் கிடைக்கக்கூடியதன்று. ஆயினும், நீ வ்ரதங்களில் நன்கு நிலைநின்று அவற்றைக் குறைவற அனுஷ்டித்தனையாகையாலும் என்னையே சரணம் அடைந்தமையாகிற வ்ரதம் திடமாயிருக்கப்பெற்றவனாகையாலும் அதை உனக்கு அப்படியே நிறைவேற்றிக் கொடுக்கின்றேன். நல்லியற்கையுடைய த்ருவனே! சாஶ்வதமான வாஸத்தை யுடையதும் ஒளியுடன் ப்ரகாசித்துக் கொண்டிருப்பதும் மற்றெவர்க்கும் நேராததும் தேஜஸ்ஸையுடைய ஸூர்யாதி க்ரஹங்களும் அஶ்வினி முதலிய நக்ஷத்ரங்களும் தொடரப்பெற்றுத் திகழ்வதுமான ஓர் ஸ்தானத்தை உனக்குக் கொடுக்கின்றேன். புணையில் மாடுகள் கட்டுண்டிருப்பது போல், இந்த ஸ்தானத்தில் மற்ற நக்ஷத்ரங்களெல்லாம் ஸம்பந்தித்திருக்கும். அவாந்தர கல்ப வாஸிகளுக்குப் பின்பும் இந்த ஸ்தானம் நிலைநின்றிருக்கும். மூன்று லோகங்கள் அழிந்தாலும் இந்த ஸ்தானம் அழியாது. தர்மன் அக்னி கஶ்யபர் சுக்ரன் இவர்களும் ஸப்தர்ஷிகளும் நக்ஷத்ர

ரூபர்களாகி இந்த ஸ்தானத்தை ப்ரதக்ஷிணம் செய்து கொண்டிருப்பார்கள். உன் தந்தையாகிய உத்தானபாதன் உனக்குப் பூமியைக் கொடுத்துவிட்டுத் தான் காட்டுக்குப் போகையில், நீ ராஜ்யத்தைப் பெற்று இருபத்தாறாயிரம் வர்ஷங்கள் இந்த்ரியங்களை வேறு விஷயங்களில் போக வொட்டாமல் தடுத்து வர்ணாச்ரம தர்மங்களை எவரும் தவறாதபடி பூமியைப் பாதுகாப்பாய். உன் ப்ராதாவான உத்தமன் வேட்டையாடுவதற்காக வனத்திற்குச் சென்று அங்குக் காணாதுபோகையில், அவனிடத்தில் மிகுந்த மன விருப்பமுடைய அவன் மாதாவான ஸுருசி அவனைத் தேடுவதற்காக வனம் சென்று அங்குக் காட்டுத் தீயில் ப்ரவேசித்து முடியப் போகின்றாள். (இதை நீ நினைக்காமற் போயினும், என் பக்தனாகிய உன் விஷயத்தில் த்ரோஹம் செய்தமையால் இங்ஙனம் நடக்கப் போகின்றது.) மற்றும், நீ யஜ்ஞங்களால் ஆராதிக்கப் படுந்தன்மையனான என்னை தக்ஷிணைகள் நிரம்பப்பெற்ற பற்பல யாகங்களால் ஆராதித்து இந்த ராஜ்யத்தில் திடமான ஸங்கல்பங்களால் ஏற்பட்டவைகளான விருப்பங்களையெல்லாம் அனுபவித்து, அதன் பிறகு என்னை நினைக்கப்போகின்றனை. அப்பால், ஸப்தரிஷிகள் வரையிலுமுள்ள ஸமஸ்த லோகங்களாலும் நமஸ்கரிக்கப்பெற்றதும், எனது அனுக்ரஹத்தினால் ஏற்பட்டதும் ஸப்தரிஷிகளுக்குள் மேல் இருப்பதும், மனத்தை அடக்கி என்னை த்யானிக்குந் தன்மையுடையவன் எந்த இடம் சென்றால் மீளவும் ஸம்ஸாரத்தை அடையாமல் அதினின்று வைகுண்டலோகத்திற்கேபோவானோ அத்தகையதுமான முன் சொன்ன ஸ்தானத்தை அடையப் போகின்றாய்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் த்ருவனால் ஆராதிக்கப்பட்ட புட்கொடியனான பகவான் பாலனான அந்த த்ருவனுக்குக் கடைசியில் தன் பதவி நேரும்படி வரம் அளித்து, அவன் பார்த்துக்கொண்டிருக்கையில் கருட வாஹனத்தின்மேல் ஏறிக்கொண்டு தன் ஸ்தானமாகிய

வைகுண்டலோகத்திற்குப் போனான். அந்த த்ருவனும் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பாதஸேவையால் ஏற்பட்டதும் தான் தவம்செய்யத் தொடங்கும்பொழுது ஸங்கல்பித்த பலன் கைகூடினமையால் உண்டானதுமான 'நாம் ஸங்கல்பித்த கார்யத்தை முடித்தோம்' என்கிற ஸந்தோஷத்தை அடைந்தும் அவ்வளவு மனக்களிப்பில்லாதவனாகவே பட்டணத்திற்குப் போனான்.

விதுரர் சொல்லுகிறார்:—ஆச்சர்ய சக்தியுடையவனாகிய பகவானால் கொடுக்கப்பெற்றதும் பிறர்கு எவ்வகையிலும் கிடைக்கக்கூடாததும் அந்த பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பூஜித்த புண்ய மஹிமையால் ஸம்பாதிக்கப் பட்டதுமாகிய ஸ்தானத்தை அதே ஜன்மத்தில் அடையும்படி நேரப்பெற்ற பின்பும், ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்த அந்த த்ருவன் தன்னை ப்ரயோஜனம் கைகூடப்பெறாதவனாகவே நினைத்தானென்றீர். அதற்குக் காரணம் என்?

மைத்ரேயர் சொல்லுகிறார்:—மாற்றாந் தாயான ஸுருசியின் துர்ப்பாஷணங்களாகிற பாணங்களால் ஹ்ருதயத்தில் அடியுண்டு வருந்தி அந்த துர்ப்பாஷணங்களை மறக்காமல் நினைத்துக்கொண்டிருந்து, மோக்ஷங் கொடுக்க வல்லவனான பகவானிடத்தில் மோக்ஷத்தை விரும்பாமலே ஏமாறிப் போனான். அப்பால் அவன் அதை நினைத்து 'இங்ஙனம் மதி மயங்கி மோக்ஷத்தை விரும்பாமல் கெட்டேனே' என்று பச்சாத்தாபம் அடைந்தான். அவன் தன்னை வெறுத்தவிதம் சொல்லுகிறேன், கேட்பாயாக.

த்ருவன் சொல்லுகிறான்:—ஊர்த்வ ரேதஸ்ஸுக்களான (ஜிதேந்த்ரியர்களான) ஸனந்தாதிகள் அனேக ஜன்மங்களில் செய்த அப்யாஸத்தினால் விளையக்கூடிய ஸமாதியினால் எந்த பகவானுடைய ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்தார்களோ, அப்படிப்பட்ட பகவானுடைய பாதாரவிந்தங்களின் நிழலில் ஆறு மாதங்கள் வரையில் ஒதுங்கியிருந்தும் தேஹாத்மாபிமானம் ஸ்வதந்த்ராத்மாபி

மானம் இவைகளால் மதிமயங்கி அந்த பகவானுடைய பாதாரவிந்தங்களின் நிழலினின்று வெகுதூரம் ஒதுங்கப் பெற்றேன். ஆ! என்னுடைய தேஹாத்மாபிமானத்தின் கடுமையைக் கண்டீர்களா? 'இப்படியும் உண்டோ' என்று சோகிக்க வேண்டியதாயன்றோ இது இருக்கின்றது? என்னுடைய தௌர்ஜன்யத்தை என்னென்று சொல்லு வேன்? இதென்ன வருத்தம்? ஏனென்னில், கர்ப்பம் ஜன்மம் ஜரை மரணம் இவை முதலிய பலவகை துக்கங்களுக் கிடமான ஸம்ஸாரத்தினின்று உண்டாகும் பயத்தை வேரோடறுக்குந் திறமையுடையவனாகிய பகவானுடைய பாதமூலத்தை நான் ஸக்ஷாத்கரிக்கப்பெற்றும் நச்வரமான ஸாம்ஸாரிக பலனையே வேண்டினேனன்றி, மஹாநந்த ரூபமான மோக்ஷத்தை விரும்பாமற்போனேனே. இதென்ன மதிகேடோ? தந்தம்முடைய யோகங்கள் முடிந்த பின்பு ஸ்வர்க்கத்தினின்று கீழ் விழுகிறவர்களும் ஆனதுபற்றியே பிறருடைய ஸம்ருத்தியைப் பொறுக்க மாட்டாதவர்களுமாகிய தேவதைகள் என் புத்தியை ஸம்ஸார ஸுகங்களில் விருப்பம் உண்டாகச்செய்து பாழாக்கினார்கள். நான் மிகவும் துர்ப்புத்தியுடையவன். ஏனென்னில், நாரதர் மொழிந்த வார்த்தையைக் கேளாமல் பிடிவாதத்துடன் வீண் விருப்பங்கொண்டேன். உறங்கு கிறவன் தன்னைக்காட்டிலும் வெவ்வேறு வஸ்துக்களைக் கனவில் காண்பதுபோல், நான் எத்தகையர்க்கும் கடக்க முடியாத பகவானுடைய மாயையால் மதி மயங்கப்பெற்று தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்ம ஸ்வரூபம் தெரியாமல் ஆத்மாவல்லாத தேஹத்தையே ஆத்மாவாகவும் தன்னை ஸ்வதந்த்ரனாகவும் ப்ரப்ரஹ்மத்திற்காட்டில் வேறொரு ஸ்வதந்த்ர வஸ்து இல்லாதிருப்பினும், ப்ராதாவைச் சத்ருவாக நினைத்து அந்நினைவாகிற வ்யாதியினால் வருந்துகின்றேன். பகவானுடைய அனுக்ரஹம் எளிதில் பெறக்கூடியதன்று. எவ்வளவு வருந்தினாலும் அவனுடைய அருள் பெறுவது அரிதே. அத்தகையனான அவன் அருள்

செய்வானாயின் ஸம்ஸார துக்கத்தைப் போக்கி மஹாநந்த ரூபமான மோக்ஷத்தையும் கொடுக்க வல்லவன். ஸமஸ்த வஸ்துக்களிலும் அவன் அந்தராத்மாவாயிருப்பவன். அப்படிப்பட்ட அந்த பகவானை நான் தவத்தினால் அருள் புரியச் செய்தும் ஸம்ஸாரத்தையே வேண்டிக்கொண்டேன். ஆ! இதென்ன வருத்தம்! இப்படியும் ஓர் மதிகேடுண்டோ? ஆகையால் நான் பாக்யமற்றவன். தௌர்ப்பாக்யத்திற்கே இருப்பிடம். தனமற்றவனும் புண்யமில்லாதவனுமாகிய ஓர் மனிதன் பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவான ஓர் மஹாராஜனிடம் சென்று உமி நூக்குகளை வேண்டிப் பெறுவதுபோல், ஸ்வராஜ்யமென்கிற மோக்ஷத்தைக் கொடுக்குந் திறமையுடையவனான பகவானிடத்தில் நான் துரபிமானத்தையே வேண்டிப் பெற்றேன். இதைக்காட்டிலும் மற்றொரு தௌர்ப்பாக்யம் உண்டோ?

மைத்ரேயர் சொல்லுகிறார்:—வாராய் விதுரனே! அந்த ராஜகுமாரன் இங்ஙனம் தன்னைத் தான் வெறுத்துக் கொண்டான். 'கிடைக்க முடியாத பதவியைப் பெற்றும் அவன் ஏன் இங்ஙனம் வெறுத்துக்கொள்கின்றான்?' என்று நீ சங்கிக்க வேண்டாம். மோக்ஷ பூமியைக் கொடுக்குந் தன்மையனான பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பணியுந் தன்மையரான உன்னைப்போன்றவர், இந்த பகவானுக்குச் சேஷப்பட்டிருக்கையைத் தவிர மற்ற எந்த ப்ரயோஜனத்தையும் தமக்கு வேண்டுமென்று விரும்பமாட்டார்கள். ஏனென்னில் அவர்கள் தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டே மனத்தில் ஸம்ருத்தி உண்டாகப்பெற்றிருக்குந் தன்மையர். தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டே நிறைவாளராயிருப்பார்களன்றி அதற்குமேல் விரும்பமாட்டார்கள். ஆகையால் அவன் அத்தகைய பதவியைப் பெற்றும், மோக்ஷத்தை வேண்டாது போனோமே யென்று வெறுத்துக்கொண்டான். உத்தானபாத ராஜன் தன்

புதல்வனுகிய த்ருவன் திரும்பி வருவதாகக் கேட்டும், இறந்துபோனவன் பிழைத்து வந்தாற்போல் நினைத்து அதை நம்பவேயில்லை. 'பாக்ய ஹீனனுன எனக்கு இப்படிப்பட்ட மங்களம் எப்படி நேரும்' என்று அதை அவன் நம்பாமலே யிருந்தான். அப்பால் 'சீக்கிரத்தில் உன் புதல்வன் திரும்பி வருவான்' என்று தேவர்ஷியாகிய நாரதர் மொழிந்த வார்த்தையை நினைத்து 'அவன் வரக்கூடும். இவர்கள் சொல்லுவது வாஸ்தவமாகவே இருக்கலாம்' என்று நம்பிக்கை உண்டாகப்பெற்று மிகுந்த ஸந்தோஷம் அடைந்து அந்த ஸந்தோஷ வேகத்தினுல் மனம் திடமாகப் பெற்று, அந்த ஸமாசாரத்தை மொழிந்த ப்ருத்யனுக்குப் பெருவிலையுள்ள ஓர் முத்துமாலையை எடுத்து மிகுந்த ப்ரீதியுடன் கொடுத்தான். அம்மன்னவன் சிறந்த குதிரைகள் பூட்டப்பெற்றதும் ஸ்வர்ணமயமான அலங்காரங்களால் விளங்குவதுமான ரதத்தில் ஏறிக்கொண்டு குலத்தில் வயது சென்றவர்களான ப்ராஹ்மணர்களும் அத்தகையரான மந்த்ரிகளும் பந்துக்களும் சூழ்ந்து வரப்பெற்றுப் பெரிய ஸ்வஸ்திவாசன கோஷத்தோடும் சங்கம் துந்துபி முதலிய வாத்யகோஷங்களோடும் கூடிப் புதல்வனைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பத்தினுல் மிக்க விரைவுடன் பட்டணத்தினின்று புறப்பட்டான். இம்மன்னவனுடைய பட்டமஹிஷிகளான ஸுநீதி ஸுருசி என்கிற இருவர்களும் ஸுருசியின் புதல்வனுன உத்தமனுடன் ஸ்வர்ணத்தினுல் அலங்காரம் செய்யப்பெற்ற பல்லக்கின்மேல் ஏறிக்கொண்டு த்ருவனை எதிர்கொண்டார்கள். அம்மன்னவன் பட்டணத்தின் அருகாமையிலுள்ள உபவனத்தின் ஸமீபத்தில் வருகின்ற அந்த த்ருவனைக் கண்டு வேகமாக ரதத்தினின்று இறங்கி ப்ரேமத்தினுல் மெய்மறந்தவனுகி அப்புதல்வனுடைய அருகே சென்றுன். அவன் நெடுநாளாய் 'நான் என் புதல்வனை எப்பொழுது பார்க்கப் பெறுவேன்?' என்று அதையே பெரிய ஆவலுடன் சிந்தித்துக்கொண்டிருந்தானுகையால் பெருமூச்செறிந்துகொண்டு, பகவா

னுடைய பாதாரவிந்தங்கள் படுதலால் ஸம்ஸாரத்திற்கு ஹேதுவான பாபங்களெல்லாம் தொலையப்பெற்று மிகவும் பரிசுத்தனாயிருக்கின்றவனும் தன் சரீரத்தினின்று பிறந்தவனும் ஆனதுபற்றியே ப்ரீதிக்கிடமாயிருப்பவனுமாகிய அந்த பாலனை இரண்டு புஜங்களாலும் கட்டியணைத்தான். பெரிய மனோரதத்துடன் பார்த்துக்கொண்டிருந்த அவ்வரசன் தன் விருப்பம் கைகூடப்பெற்று மனக்களிப்புற்றிருக்கின்ற அந்த த்ருவனை அங்ஙனம் அணைத்து உச்சி மோந்து ஸந்தோஷத்தினால் குளிர்ந்திருக்கின்ற கண்ணீர்களால் அவனைத் தழும்பநனைத்தான். நல்லோர்களில் தலைவனாகிய அந்த த்ருவன் தந்தையான உத்தானபாதனுடைய பாதங்களை வணங்கி அவனால் பற்பலவாறு ஆசீர்வாதங்களும் ஸம்பாஷணமும் ஸத்காரமும் செய்யப்பெற்றுத் தாய்மார்களான ஸுருசி ஸுநீதிகளை நமஸ்கரித்தான். ஸுருசி தன் பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்கின்ற பாலனாகிய அந்த த்ருவனை எடுத்து அணைத்துக் கண்ணீர்களால் தழதழத்த உரையுடன் 'பல்லாண்டுகள் க்ஷேமமா யிருப்பாயாக' என்று மொழிந்தாள். மைத்ரி முதலிய குணங்களால் பகவான் எவனிடத்தில் அருள்புரிவானோ அவனிடத்தில், ஜலம் பள்ளத்திற்கு ஓடுவதுபோல், ஸமஸ்த பூதங்களும் வணக்கமுறுகின்றன. ஆகையால் மைத்ரி முதலிய குணங்கள் நிறைந்தவனும் பகவானால் அருள்புரியப் பெற்றவனுமாகிய அந்த த்ருவனிடத்தில், ஸுருசி மனவுருக்கத்துடன் இருந்தமை நேரக்கூடியதே யன்றி நேராததன்று. ஆகையால் 'அவனிடத்தில் பெரும் பொறாமையுடன் மனம் கலங்கப்பெற்றிருந்த ஸுருசி அவனைக் கண்டு ப்ரீதியுடன் வாரி அணைத்தெடுத்து ஆனந்த நீர் பெருக்கி ஆசீர்வதித்தாள்' என்பது எங்ஙனம் பொருந்து மென்று சங்கிக்க வேண்டாம். ப்ராதாக்களான (உடன் பிறந்தவர்களான) உத்தமன் த்ருவன் இருவரும் ப்ரீதியினால் தழதழப்புற்று ஒருவரை யொருவர் ஆலிங்கனம் செய்தமையால் மயிர்க்கூச்சல் உண்டாகப்பெற்று ஆநந்தத்தினால் அடிக்கடி

கண்ணீர்களைப் பெருக்கினார்கள். இந்த த்ருவனுடைய தாயான ஸுநீதி இவனை அணைத்துக்கொண்டு அந்தப் புதல்வனுடைய அங்கங்களின் ஸ்பர்சத்தினால் ஸுகித்தவளாகி மனவருத்தத்தைத் துறந்தாள். வாராய் வீரனான விதுரனே! வீரனைப்பெற்றவளான ஸுநீதியின் ஸ்தனங்கள் அவளது குளிர்ந்த கண்ணீர்களால் நனைந்து பாலைப் பெருக்கின. அப்பொழுது ஜனங்கள் உத்தானபாதனைக் கொண்டாடினர். 'வாராய் மன்னவனே! உன் மனவருத்தங்களைத் தீர்ப்பவனாகிய உன் புதல்வன் இத்தனை நாள் காணாது போயிருந்து இப்பொழுது உன் பாக்யத்தினால் உனக்கு அகப்பட்டான். இவன் பூமண்டலத்தைப் பாதுகாப்பான். நீ தரித்துக்கொண்டிருக்கிற பூபாரத்தைத் தான் ஏற்றுக்கொண்டு உனக்கு ஸுகத்தை விளைப்பான். பக்தர்களின் துக்கங்களைப் போக்குந்தன்மையனான பகவானை நீ ஜன்மாந்தரத்தில் (பூர்வ ஜன்மத்தில்) நன்றாக ஆராதித்தனை. எந்த பகவானை த்யானிப்பவர், எப்படிப்பட்டவர்க்கும் தமது ப்ரயத்னங்களால் வெல்ல முடியாத ஸம்ஸாரத்தை வென்று ஸுகமாயிருக்கின்றார்களோ அப்படிப்பட்ட பகவானுடைய அனுக்ரஹம் உண்டாயிருப்பின், எந்த விருப்பந்தான் கைகூடாது? எல்லாம் கைகூடும். ஆகையால் நீ ஜன்மாந்தரத்தில் பகவானை ஆராதித்து அவனுடைய அனுக்ரஹம் பெற்றிருக்கவேண்டும். இல்லாவிடின், இது எப்படி நேரும்? காணாது போன உன் புதல்வன் இங்ஙனம் வந்து சேர்ந்தது பகவானுடைய அனுக்ரஹமே என்று ஜனங்கள் அம்மன்னவனைப் புகழ்ந்தார்கள். இங்ஙனம் ஜனங்களால் புகழப்பெற்ற அம்மன்னவன் த்ருவனையும் அவனது ப்ராதாவான உத்தமனையும் யானையின்மேல் ஏற்றிக்கொண்டு ஜனங்களால் துதிசெய்யப் பெற்றவனாகிப் பட்டணத்திற்குள் ப்ரவேசித்தான். அப்பொழுது அந்தப் பட்டணத்தில் ஒவ்வொரு வீட்டு வாசலிலும் மகர தோரணங்களும் காயும் பூவும் அமைந்த வாழை மரங்களும் அத்தகைய இளம் பாக்கு மரங்களும் கட்டியிருந்தன. மாந்

தளிர்களும் புதிய வஸ்திரங்களும் பூமாலைகளும் முத்து மாலைகளும் தொங்கவிட்டிருந்தன. பூர்ண கும்பங்களும் தீபங்களும் வைத்திருந்தன. ப்ராகாரங்களும் உப்பரிகைகளும் ஸ்வர்ண அலங்காரங்கள் செய்யப்பெற்றிருக்கையால், அந்நகரம் மிகவும் அழகாயிருந்தது. உப்பரிகைகளின் சிகரங்கள் தேவ விமானங்கள்போல் ப்ரகாசித்தன. அதனால் அந்தப் பட்டணம் மிகுந்த சோபை உண்டாகப் பெற்று ஸகல ஸம்ருத்திகளும் அமைந்திருந்தது. நாற்சந்தி வீதிகளும் ராஜமார்க்கமும் ப்ராகாரத்தின்மேல் இயற்றப் பெற்ற உப்பரிகைகளும் சிறுச் சிறிய வீதிகளும் எல்லாம் விளக்கிச் சந்தனத் தண்ணீர் தெளித்துப் பொரிகளும் அக்ஷதைகளும் புஷ்பங்களும் பழங்களும் அரிசிகளும் பலிகளும் இடப்பெற்றிருந்தன. இங்ஙனம் அலங்காரம் செய்யப்பெற்ற அந்நகரத்தில் உத்தானபாத மன்னவன் புதல்வனுடன் ப்ரவேசித்தான். ஆங்காங்கு உப்பரிகைகளின் மேல் ஏறியிருக்கின்ற பட்டணத்து மடந்தையர் வழியில் யானையின்மேல் ஏறிக்கொண்டு வருகின்ற த்ருவனைக் கண்டு அவன்மேல் வெள்ளைக் கடுகுகளையும் அக்ஷதைகளையும் தயிர் ஜலம் அருகம் புல் புஷ்பம், பழம் இவைகளையும் இறைத்து ப்ரீதியின் மிகுதியால் பற்பல ஆசிர்வாதங்களைச் செய்தார்கள். அவர்கள் தூயமனத்தரும் மிகுந்த வாத்ஸல்ய முடையவருமாகையால் அவருடைய ஆசிர்வாதங்களெல்லாம் தடைபடாமல் அப்படியே நிறைவேறக் கூடியவைகளாயிருந்தன. த்ருவன் அந்தப் பட்டணத்து மாதரார் மணிகள் பாடுகின்ற அழகான பாட்டுகளைக் கேட்டுக்கொண்டே தந்தையின் க்ருஹத்திற்குள் ப்ரவேசித்தான். விலையுயர்ந்த மேலான ரத்னங்கள் ராசி ராசியாக் குவிக்கப்பெற்றிருப்பதும் சிறந்த ரத்னங்களால் இயற்றினதும் மேன்மை யுடையதுமான அம் மாளிகையில் தந்தையால் மிகவும் ஆதரிக்கப்பெற்று ஸ்வர்க்கத்தில் தேவன் போல் வஸித்திருந்தான். அம்மாளிகையில் யானையின் தந்தங்களால் இயற்றப்பெற்று நிர்மலமா யிருக்கையால்

பால் நுரைபோல் ப்ரகாசிப்பவைகளும் ஸ்வர்ண அலங்காரம் செய்யப்பெற்றவைகளுமான கட்டில்களும், பால் நுரை போல் வெளுத்து நிர்மலமாகி மென்மையும் அமைந்து விளங்குகின்ற படுக்கைகளும் ஸ்வர்ண மயமான பற்பல கருவிகளும் விலையுயர்ந்த ஆஸனங்களும் வெள்ளியால் இயற்றின பல வகை அலங்காரங்களும் நிறைந்திருந்தன. மற்றும், அம்மாளிகையில் ஸ்படிக ரத்னங்களால் இயற்றினவைகளும் இந்த்ர நீல ரத்னங்கள் இழைக்கப் பெற்றவைகளுமான சுவறுகளில் ப்ரதிபலிக்கின்ற மாதரார் மணிகள் மங்களத்தின் பொருட்டுச் சுவறுகளில் ஏற்றி வைத்திருக்கிற தீபங்கள் போல் ப்ரகாசித்தனர். அம் மாளிகையைச் சேர்ந்த உத்யான வனங்களில் கல்ப வ்ருக்ஷங்கள் பலவும் ப்ரகாசித்துக் கொண்டிருந்தன. அந்த வ்ருக்ஷங்களில் பக்ஷிகள் ஆணும் பெண்ணுமாய்க் கூவிக் கொண்டிருந்தன. வண்டுகளும் தேன்களைப் பருகி மதித்துப் பாடிக்கொண்டிருந்தன. மற்றும் அம்மாளிகையில் வைடூர்ய மணிகளால் இயற்றின படிக்கட்டுடையவைகளும் தாமரை நெய்தல் ஆம்பல் இவை அழியாதிருப்பவைகளும் ஹம்ஸம் நீர்க்காகம் சக்ரவாகம் ஸாரஸம் இவை முதலிய நீர்ப் பறவைகள் கூட்டங் கூட்டமாய் ஒலிக்கப்பெற்றவைகளுமான நடைவாவிகள் பலவும் விளங்கின. இங்ஙனம் அழகான உத்யான வனங்கள் அமைந்து மற்றும் பற்பல அலங்காரங் களும் செய்யப்பெற்று விளக்கொளிபோல் திகழ்கின்ற மாதரார்களோடும் கூடின அம்மாளிகையில் த்ருவன் ஸுகமாக வஸித்துக்கொண்டிருந்தான். இப்படி சில வர்ஷங்கள் சென்ற பின்பு, த்ருவன் யௌவனப் பருவம் நிறைந்திருப்பதையும் மந்த்ரிகளுக்கு ஸம்மதனாயிருப்பதை யும், அவனிடத்தில் ப்ரஜைகளெல்லாம் அனுராகமுற் றிருப்பதையும் கண்டு அவ்வுத்தானபாத மன்னவன் அவனை பூமண்டலத்திற்கெல்லாம் பதியாகும்படி ராஜ்யத்தில்

அபிஷேகம் செய்தான். அப்பால் அவ்வரசன் தான் வயது சென்றிருப்பதை ஆலோசித்து மோக்ஷகதியை ஆராய விரும்பி ஸம்ஸாரத்தில் விரக்தனாகி வனத்திற்குப் போனான். ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

உத்தமன் வேட்டைக்குச் சென்று மரணம் அடைதலும், த்ருவன் அவனைக் கொன்ற யக்ஷர்களோடு யுத்தஞ் செய்து அவர்களை வதித்தலும்.

த்ருவன், சிம்சுமாரனென்கிற ப்ரஜாபதியின் புதல்வியாகிய ப்ரமியென்பவளை மணம் புரிந்தான். அந்த த்ருவனுக்கு ப்ரமியிடத்தில் கல்பனென்றும் வத்ஸரனென்றும் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். வாயுவின் புதல்வியான இடை யென்பவளையும் அவன் மணம் புரிந்திருந்தான். அவளிடத்தில் உத்கலனென்னும் புதல்வனையும் மடந்தையர்களில் சிறந்த ஓர் புதல்வியையும் பெற்றான். அந்த த்ருவனுடைய ப்ராதாவான உத்தமன் விவாஹம் ஆகாமலே இருந்து ஒரு நாள் வேட்டைக்குப் போகையில், அங்கு ஹிமவத் பர்வதத்தில் மஹாபலனான ஓர் யக்ஷனால் அடியுண்டு மாண்டான். அவனுடைய மாதாவான ஸுருசி அவன் வரக்காணாமையால் அவன் போன வழியே போய் அவன் கதியை அடைந்தாள் (மரணம் அடைந்தாள்.) த்ருவன் ப்ராதாவான உத்தமனுடைய மரணத்தைக் கேட்டு, கோபம் பொறாமை சோகம் இவைகளால் மனம் நிரம்பப்பெற்று, ஜயசீலமான ரதத்தில் ஏறிக்கொண்டு யக்ஷர்களின் வாஸஸ்தானமான லங்காபுரிக்குப் போனான். அவன் வடதிசையில் சென்று ஹிமவத் பர்வதத்தின் தாழ்வரையில் ருத்ரனுடைய ப்ருத்யர்களால் சூழப்பட்டதும் யக்ஷர்கள் நிரம்பப் பெற்றதுமாகிய லங்காபுரியைக் கண்டான். நீண்ட புஜதண்டங்களையுடைய அந்த த்ருவன் ஆகாசத்தையும் திசைகளையும் ஒலிக்கச் செய்துகொண்டு சங்கத்தை எடுத்து ஊதினான். வாராய் விதுரனே! அந்த

சங்கத்வனியைக் கேட்டு யக்ஷரது மடந்தையர் பயத்தினால் நடுநடுங்கின கண்களுடையவராகி மிகுதியும் பயந்தார்கள். அப்பால், மஹாவீரர்களும் பலிஷ்டர்களுமான அந்த யக்ஷர்கள் த்ருவன் செய்த சங்கத்வனியைக் கேட்டு அதைப் பொறுக்க முடியாமல் ஆயுதங்களை ஏந்திக்கொண்டு அவ் வலகாபுரியினின்று யுத்தத்திற்குப் புறப்பட்டு அவனை எதிர் கொண்டார்கள். பயங்கரமான தனுஸ்ஸை யுடையவனும் மஹாரதனும் வீரனுமாகிய அந்த த்ருவன் அங்ஙனம் தன்னை எதிர்த்து வருகின்ற யக்ஷர்களில் ஒவ்வொருவனையும் மும்மூன்று பாணங்களால் ஒரே காலத்தில் அடித்தான். அந்த யக்ஷர்கள் அனைவரும் அவன் ப்ரயோகித்த பாணங் கள் நெற்றியில் பொற்றுக்கொள்ளப்பெற்று அவ்வளவில் தாங்கள் தோற்றதாக நினைத்து அவனுடைய அந்தச் செயலைப் புகழ்ந்தார்கள். ஸர்ப்பங்கள் காலால் மிதிப்பதைப் பொறுக்கமாட்டாமல் சீறிப் பாய்வதுபோல், அந்த யக்ஷர் களும் அந்த த்ருவன் தங்களை மும்மூன்று பாணங்களால் அடித்ததற்குப் பொறுமல் அவனைத் தாங்கள் ஒவ்வொருவ ரும் அவனை அவ்வாறு பாணங்களால் அடித்து அவன் செய்ததற்கு இருமடங்காகச் செய்ய விரும்பி ஒரே காலத் தில் அடித்தார்கள். அப்பால், இரும்புத்தடி கத்தி ஈட்டி சூலம் கண்டக்கோடாலி சக்தி அஷ்டி முஸுண்டி இவ்வாயு தங்களால் அவனை அடித்தார்கள். மற்றும் பதின்மூன்று பத்தாயிரங் கணக்குடையரான (லக்ஷத்து முப்பதினாயிரங் கணக்குடையரான) அந்த யக்ஷர்கள் மிகவும் கோபித்து அவனுக்கு பதில் செய்ய விசித்ரமான இறகுகளையுடைய பாணங்களை மழை பெய்தாற்போல் பெய்து அவனையும் அவன் ரதத்தையும் அவனது ஸாரதியையும் அடித்தார்கள். அப்பொழுது அவ்வுத்தான பாதனது குமாரனாகிய த்ருவன் பெருமழை போன்ற பாணவர்ஷத்தினால் மறைக்கப்பட்டு விடாமழையில் மறைந்த பர்வதம்போல் கண்ணுக்குப் புலப் படாமலே இருந்தான். அப்பொழுது ஆகாயத்தில் அந்த யுத்தத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிற ஸித்தர்கள் பயந்து

ஹாஹாகாரம் செய்தார்கள். 'ஸ்வாயம்புவமனு வம்சத்திற் பிறந்த இந்த த்ருவனென்கிற ஸூர்யன் யக்ஷர்களாகிற ஸமுத்ரத்தில் மூழ்கினனே. ஆ! இதென்ன வருத்தம்' என்று முறையிட்டார்கள். அப்பால் ராக்ஷஸர்கள் யுத்தத்தில் 'நாங்கள் ஜயித்தோம். நாங்கள் ஜயித்தோம்' என்று அறையிட்டுக்கொண்டிருக்கையில், பனியினின்று ஸூர்யன் கிளம்புவதுபோல், ரதத்தில் இருந்துகொண்டே மேற் கிளம்பினன் (புலப்பட்டான்.) அனந்தரம் பயங்கரமான தன் தனுஸ்ஸின் நாணை இழுத்து ஒலிப்பித்துக்கொண்டு சத்ருக்களான ராக்ஷஸர்களுக்கு மணல் காற்று மேகங்களைப் பாழ்செய்வதுபோல் வருத்தம் விளைவிப்பவனாகி, தனது பாணங்களால் அவர் ப்ரயோகித்த பாண ஸமூஹங்களையெல்லாம் சூர்ணம் செய்தான். அவனுடைய தனுஸ்ஸினின்று கிளம்பின பாணங்கள் மிகவும் கூராயிருக்கையால், வஜ்ராயுதங்கள் பர்வதங்களைப் பிளப்பதுபோல், அந்த ராக்ஷஸர்களின் கவசங்களைப் பிளந்து அவருடைய சரீரங்களில் நாற்புறத்திலும் ப்ரவேசித்தன. த்ருவனுடைய பல்லபாணங்களால், அழகிய குண்டலங்களை அணிந்த அந்த ராக்ஷஸர்களின் தலைகளும் ஸ்வர்ணமயமான பனைமரங்கள் போன்ற துடைகளும் வளைகளை அணிந்து அழகியவைகளான புஜங்களும் ஹாரங்களும் தோள்வளைகளும் கிரீடங்களும் விலையுயர்ந்த தலைப்பாகைகளும் அறுப்புண்டு விழுந்தன. அவைகளால் சூழப்பட்ட அந்த யுத்த ப்ரதேசங்கள் வீரர்களுடைய மனத்திற்கு ஸந்தோஷம் விளைப்பவைகளாகி ப்ரகாசித்தன. அடிபட்டு மிகுந்த ராக்ஷஸக் கூட்டங்களெல்லாம் க்ஷத்ரிய ஸ்ரேஷ்டனாகிய த்ருவனுடைய பாணங்களால் பெரும்பாலும் அவயவங்கள் அறுப்புண்டவையாகி, ஸிம்ஹத்தின் விலாஸத்தைக் கண்ட யானைகள்போல் யுத்த பூமியினின்று மூலைக்கொருவராகப் பயந்து ஓடிப்போயின. அப்பொழுது மனு குலத்தவர்களில் சிறப்புற்றவனாகிய அந்த த்ருவன் மஹத்தான யுத்தத்தில் கையில் ஆயுதம் பிடித்துத் தன்னை எதிர்ப்பவன் எவனையும் காணாமல்,

பட்டணத்தைப் பார்க்கப்போக விருப்ப முற்றவனாயினும் 'ராக்ஷஸர்கள் மாயாவிகள். அவர்களுடைய நடத்தையை நம்பலாகாது. ஓய்ந்தாற் போலிருந்து ஏதேனும் மாயை செய்யினும் செய்யக்கூடும். அவர்கள் என் செய்ய நினைத்திருக்கிறார்களோ' என்று ஆலோசித்துப் பட்டணத்திற்குத் திரும்பிப் போகாமல் அவர்களையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அற்புதமான ரதத்தையுடைய அந்த த்ருவன் தன் ஸாரதியைக் குறித்து 'மாயாவிகளின் செயலை இத்தகையதென்று எவனும் நிச்சயித்தறிய முடியாது. ஆகையால், அவர்கள் ஓடிப்போய் விட்டார்களென்று நாம் நம்பலாகாது. இருந்தாற்போலிருந்து என் செய்வார்களோ? ஜாக்ரதையாயிருக்கவேண்டும்' என்று தான் ஆலோசித்ததையே மொழிந்துகொண்டு, சத்ருக்கள் தான் செய்ததற்கு என்ன ப்ரதி செய்வார்களோவென்று சங்கித்து அதற்குத் தகுந்த ப்ரயத்னத்துடனிருக்கையில், மேக கர்ஜனம்போன்ற ஓர் சப்தம் உண்டாகக் கேட்டான். உடனே, பெருங் காற்றோடு கூட எல்லாத் திசைகளிலும் தூள் புலப்பட்டது. பளபளவென்று ஜ்வலிக்கின்ற மின்னல்களுடையதும் அனைவரும் பயமுறும்படியான பேரிடிகளோடு கூடினதும் பெருங் கர்ஜனைகள் செய்வதுமாகிய மேகக் கூட்டத்தினால் ஆகாயம் முழுவதும் ஒரு க்ஷணத்திற்குள் நிரம்பிற்று. வாராய் பயமற்ற விதுரனே! இந்த த்ருவனுடைய எதிரில் ரக்த ப்ரவாஹங்களும் கோழை சீ விஷ்டை மூத்ரம் மாம்ஸம் மேதஸ்ஸு இவைகளும் தலையில்லாத முண்டங்களும் விழுந்தன. அப்பால் ஆகாயத்தில் பர்வதம் புலப்பட்டது. எல்லா திக்குக்களிலும் கல்மழையோடு கூட கதைகளும் இரும்புத் தடிகளும் கத்திகளும் உலக்கைகளும் விழுந்தன. இடிபோன்ற மூச்சுக் காற்றுடைய ஸர்ப்பங்களும் கோபமுற்றுக் கண்களால் அக்னியைக் கக்குகின்ற யானைகளும் ஸிம்ஹங்களும் புலிகளும் கூட்டங் கூட்டமாய் அந்த த்ருவன்மேல் எதிர்த்தோடி வந்தன. பெருப் பெரிய அலைகளால் பயங்கரமாயிருக்கின்ற ஸமுத்ரமானது நாற்

புறங்களிலும் பூமியை மறைத்துக்கொண்டு ப்ரளய காலத்தைப்போல் பெருங் கோஷத்துடன் மிகவும் பயங்கரமாகி அவனுக்கு அருகாமையில் வந்தது. கொடிய செயலுடையவர்களான அவ்வஸுரர்கள் மாயையினால் இங்ஙனம்சொன்னவைகளும் இவை போன்ற மற்றும் பலவகைப்பட்டவைகளும் மன உறுதியில்லாத அஜ்ஞர்களுக்கு பயத்தை விளைவிப்பவைகளுமான பற்பலவற்றையும் ஸ்ருஷ்டித்தார்கள். அஸுரர்கள் த்ருவன் மேல் ப்ரயோகித்தவைகளும் எத்தகையர்க்கும் கடக்க முடியாதவைகளுமான அம்மாயைகளைக் கண்டு யுத்தம் பார்க்க வந்த முனிவர்கள் அனைவரும் அந்த த்ருவனுக்கு மங்களம் உண்டாகவேண்டுமென்று ப்ரார்த்தித்தார்கள். 'வாராய் த்ருவனே! நீ உத்தானபாதனுடைய புதல்வனல்லவா? அவன் பரம தர்மிஷ்டனல்லவா? உனக்கு இப்படி நேருவது யுக்தமன்றே. ஆகையால் தன்னைப் பணிந்தவர்களின் துக்கத்தைப் போக்குந்தன்மையனும் சார்ங்கமென்னும் வில்லைக் கையில் ஏந்தினவனும் தேவனுமாகிய பகவான் உன் சத்ருக்களைப் பாழ்செய்வானாக. இந்த பகவானுடைய நாமத்தைச் சொன்னாலும் பிறர் சொல்லும்பொழுது கேட்டாலும் எப்படிப்பட்ட பாபிஷ்ட ஜந்துக்களும் சீக்ரத்தில் ஸுகமாகவே எப்படிப்பட்டவர்க்கும் தாண்டமுடியாத ம்ருத்யுவையும் தாண்டுவார்கள். அப்படிப்பட்ட மஹிமையுடைய அம்மஹானுபாவனுக்கு இந்த அற்ப சத்ருக்களை அழிப்பது ஒரு பொருளோ? பொருளன்று. ஆகையால் அந்த பகவான் உன் சத்ருக்களை அழிப்பானாக' என்று அந்த த்ருவனுக்கு மங்களம் உண்டாகும்படி ப்ரார்த்தித்தார்கள்.

பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

த்ருவன் நாராயணாஸ்த்ரத்தினால் சத்ருக்களை வதித்தலும், அதனால் யக்ஷர்களெல்லோரும் பாழாவதைக் கண்டு ஸ்வாயம்புவ மனு தானே நேரில் வந்து தத்வோபதேசம் செய்து அவனை ஸமாதானப்படுத்தலும்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ரிஷிகள் சொல்லிக்கொண்டிருப்பதைக் கேட்டு த்ருவன் உடனே ஆசமனம்செய்து தன் தனுஸ்ஸில் நாராயணாஸ்த்ரத்தைத் தொடுத்தான். இந்த நாராயணாஸ்த்ரத்தை எடுத்து ப்ரயோகிக்கையில், வாராய் விதுரனே! யக்ஷர்கள் நிர்மித்த மாயைகளெல்லாம், ஜ்ஞானோதயத்தில் ராகம் த்வேஷம் முதலிய க்லேசங்களெல்லாம் தொலைவதுபோல், உடனே நாசம் அடைந்தன. ரிஷிகளில் முதன்மையான நாராயண னிடத்தினின்றுண்டானதாகிய அந்த அஸ்த்ரத்தை த்ருவன் தனுஸ்ஸில் தொடுக்கையில், ஸ்வர்ணமயமான பிடிகளுடையவைகளும் கல ஹம்ஸங்களின் இறகுகள் கட்டப் பெற்றவைகளுமான பாணங்கள் அந்த தனுஸ்ஸி னின்று வெளிப்பட்டுச் சத்ருக்களின் ஸைன்யத்தின்மேல் பயங்கரமான கோஷத்துடன் ப்ரவேசித்தன. அவைகள் அந்த சத்ரு ஸைன்யத்தின்மேல் ப்ரவேசிப்பது கண்டால், மயில்கள் பயங்கரமாக ஒலித்துக்கொண்டு வனத்தில் புகுவது போலிருந்தது. கூரிய நுனியுடைய அந்த பாணங்களால் யுத்தத்தில் அடிக்கப்பட்ட அந்த யக்ஷர்கள் கோபாவேசமுற்று, ஸர்ப்பங்கள் கருடனை எதிர்ப்பதுபோல், ஆயுதங்களை மேல்தூக்கிக்கொண்டு நாற்புறங்களிலும் அந்த த்ருவன்மேல் எதிர்த்தோடினார்கள். அங்ஙனம் எதிர்த்து ஓடி வருகின்ற அந்த யக்ஷர்களெல்லோரையும் பாணங்க ளால் கைகளும் துடைகளும் கழுத்துக்களும் வயிறுகளும் அறுப்புண்டு விழும்படி அடித்துப் பரலோகத்திற்கு அனுப்பினான். அங்ஙனம் அடியுண்ட அந்த யக்ஷர்கள், ஸம்ஸாரத்தில் ஸமஸ்த ஸங்கங்களையும் துறந்த ஸந்யாஸிகள் ஸூர்ய மண்டலத்தைப் பேதித்துக்கொண்டு போய்ச்

சேரும்படியான பரலோகத்திற்குப் போனார்கள். அற்புதமான ரதமுடைய த்ருவன் இங்ஙனம் நிரபராதிகளான அந்த யக்ஷர்களெல்லோரையும் வெகுவாய் வதித்துக்கொண்டிருப்பது கண்டு த்ருவனுடைய பாட்டனாகிய ஸ்வாயம்புவ மனு மன இரக்கம் உண்டாகப்பெற்று மஹர்ஷிகளுடன் அவனுக்கு அருகாமையில் வந்து அவனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

மனு சொல்லுகிறான் :—வாராய் குழந்தையே! மதிமயக்கமாகிற அஜ்ஞானத்திற்கு ஹேதுவாயிருப்பதும் அதன் மூலமாய் நரகத்தை விளைவிப்பதுமாகிய ரோஷத்தினால் செய்தது போதும். இந்த ரோஷத்தினால் நிரபராதிகளான இந்த யக்ஷர்களையெல்லாம் நீ வதித்து விட்டனை. அப்பனே! இக்கார்யம் பெரியோர்களால் நிந்திக்கத் தக்கதேயன்றி அவர்க்கு ஸம்மதமன்று. ஆனதுபற்றியே இத்தகைய கார்யம் நமது வம்சத்திற்குத் தகுந்ததன்று. நீ நிரபராதிகளான யக்ஷர்களை வதிக்கத் தொடங்கினை. இது தப்புக் கார்யமேயன்றி யுக்தமன்று. ஆனால், ப்ராதாவினிடத்தில் மிகுந்த ப்ரேமமுடையவன். அப்படிப்பட்ட உன் ப்ராதாவை வதித்தமைபற்றி நீ மனவருத்தமுற்று இவர்களை வதிக்கின்றனை. ஆயினும் இது யுக்தமன்று. ஏனென்னில், இவர்களில் ஒருவனே உன் ப்ராதாவைக் கொன்றவன். அவ்வொருவனுடைய அபராதத்திற்காக அவனோடு ஸம்பந்தமுடைய பலரையும் அடித்து முடித்தனை. ஒருவனுடைய அபராதத்திற்காகப் பலரையும் வதிப்பது யுக்தமன்று. மனத்தை அடக்காமல், உபேக்ஷிக்கத் தக்கதாகிய தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்துப் பசுக்களைப் போல் ப்ராணிகளை ஹிம்ஸிக்கை யென்பது, பகவானிடத்தில் பக்தியுடைய ஸாதுக்கள் ஆதரிக்கும் மார்க்கமன்று. 'ஆமாம். இது பகவத் பக்தர்கள் ஆசரிக்கும் மார்க்கமன்றென்பது வாஸ்தவம். ஆயினும் அத்தகையனல்லாத நான் இவ்வழியில் போவது யுக்தமே' என்று நீ சொல்லலாகாது. ஸமஸ்த ப்ராணிகளிலும் நிறைந்து

நிற்பவனும் அவனுக்கு உட்படாமல் ஸ்வதந்த்ரமான வஸ்துக்கள் உண்டென்று நினைக்கிற அஜ்ஞானிகளால் ஆராதிக்க முடியாதவனும் தன்னைப் பற்றினருடைய பாபங்களைப் போக்குந் தன்மையனுமாகிய பகவானை நீ ஆராதித்து, இதற்கு மேற்பட்டது மற்றொன்றும் இல்லையென்னும்படி எல்லாவற்றிலும் சிறந்ததும் ப்ரஸித்தி பெற்றதுமாகிய விஷ்ணுவின் ஸ்தானத்தைப் பெற்றனை. உனக்கு அவன் அத்தகைய ஸ்தானத்தைக் கொடுத்தான். நீ இந்த தேஹாவஸானத்தில் ஸித்தமாக அந்த ஸ்தானத்தை அடையப்போகின்றாய். இப்படி நீ பகவானை நெடுநாள் ஆராதித்து அவனிடத்தில் பக்தி யுடையவனாகையால், நீ இத்தகைய பாபிஷ்டமான கார்யத்தைச் செய்வது யுக்தமன்று. நீ பகவானிடத்தில் பக்தியுடையவனாயிருப்பதைக் கண்டு, அந்த பகவத் பக்தரான பெரியோர்கள் உன்னைக் கொண்டாடுகிறார்கள். நீ ஸாதுக்களால் பாகவதோத்தமனென்று புகழப்பெற்றவன். இப்படிப்பட்ட நீ ஸாதுக்கள் ஆசரிக்கும் நடத்தையை உலகத்திலுள்ளவர் அறிந்து தாமும் ஆசரிக்கும்படி அவர்க்குக் கற்பிக்க வேண்டியவன். அங்ஙனமே இதுவரையில் நடந்து வருகின்றனை. இப்படிப்பட்ட நீ வாயால் சொல்லவுந் தகாத பாபிஷ்ட கார்யத்தைச் செய்தனை. பகவத் பக்தனாகிய உனக்கு இது தகுதியன்று. 'ப்ராணிகளுக்கு த்ரோஹம் செய்வதனால் பகவத் பக்திக்கு என்ன கெடுதி?' என்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக. அபராதம் செய்தவரிடத்தில் பொறுமையும் துக்கிப்பவரிடத்தில் மன இரக்கமும் பற்பல வகைப்பட்ட தேஹங்களையுடைய ஸமஸ்த ஜந்துக்களிடத்திலும் ஸ்னேஹமும் ('தேவ மனுஷ்யாதி தேஹங்கள் பேதித்திருப்பினும் அவற்றிலுள்ள ஜீவாத்மாக்கள் அனைவரும் ஒருவகைப் பட்டவர்களே. ஆகையால் அவர்களுக்கு பேதமே கிடையாது' என்று பாவித்து ஸமஸ்த ஜந்துக்களையும் தன்னோடு ஸமமாக பர்வித்து அவைகளுக்கு ஹிதம் செய்கையும்) தேவாதி சரீரங்க

ளெல்லாம் ப்ரக்ருதியின் பரிணாமங்களாகையால் ஒருபடிப் பட்டவையென்றும், ஜீவாத்மாக்களெல்லோரும் ஜ்ஞானமே வடிவமாயிருக்கப் பெற்றவராகையால் ஒருபடிப் பட்டவரென்றும் பரமாத்மா ஸமஸ்த வஸ்துக்களிலும் நிறைந்திருப்பவனென்றும் நினைத்து எல்லாவற்றையும் ஸமமாக பாவிக்கையும் ஆகிய இவைகளால், ஸமஸ்த வஸ்துக்களுக்கும் அந்தராத்மாவாகிய பகவான் அருள்புரிவான். ஈஶ்வரன் ஸமஸ்த வஸ்துக்களினும் உட்புகுந்து நிறைந்து அவற்றின் ஸத்தை முதலியவற்றை யெல்லாம் நிறைவேற்றிக் கொண்டு இவையெல்லாம் ஈஶ்வரனே யென்னும்படி இருக்கிறானாகையால் எந்த ப்ராணிக்கு த்ரோஹம் செய்யினும் அது அவ்வஸ்துவில் நிறைந்து அதன் ஸத்தை முதலியவற்றை யெல்லாம் நிர்வஹித்துக்கொண்டு அதுவே இவனென்னும்படி யிருக்கிற ஈஶ்வரனுக்கு த்ரோஹம் செய்ததேயாம். ஆகையால் அந்த பகவானிடத்தில் பக்தியுடையவர் அவனுடைய சரீரங்களாகிய எந்த ப்ராணிகளுக்கும் த்ரோஹம் செய்ய நினைக்கமாட்டார்கள். ஒருவன் மற்றொருவனிடத்தில் ப்ரீதியோடிருப்பானாயின், அவன் மற்றவனுடைய சரீரத்தில் எவ்வகைக் கெடுதியையும் செய்ய நினைக்கமாட்டானல்லவா? அங்ஙனமே ஜகத்தெல்லாம் பரம புருஷனுக்குச் சரீரமாகையால், அவனிடத்தில் பக்தியுடையவர் அவனது சரீரமாகிய ஜகத்திற்கு எவ்விதமான த்ரோஹத்தையும் செய்யலாகாது. ஸமஸ்த ஜந்துக்களும் பகவானுடைய சரீரமென்னும் புத்தியால் எதற்கும் த்ரோஹம் செய்யாதிருப்பானாயின், அவனிடத்தில் பகவான் சீக்ரத்தில் அனுக்ரஹம் செய்வான். 'அவனுடைய அனுக்ரஹத்தினால் என்ன ப்ரயோஜனம்' என்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் பகவான் நிறைந்திருக்கிறானென்று தெரிந்துகொண்டு அந்தகைய பகவானை உபாஸிக்கின்ற புருஷன் தன் குணங்களைக் கண்டு ஸந்தோஷித்து பகவான் தன்னிடத்தில் நன்றாக அருள் புரியப்பெற்று, ஜீவித்திருக்கும்பொழுதே காமம் கோபம்

முதலிய துர்க்குணங்களெல்லாம் தொலைந்து கடைசியில் ப்ரக்ருதியினின்று நன்றாக விடுபட்டு மஹாநந்த ரூபமான பரப்ரஹ்மத்தை அடைவான். ஆகையால் பகவானுடைய அனுக்ரஹம் பெறுதற்காக அவனது சரீரமாகிய ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் நட்புடனிருக்கவேண்டுமேயன்றி அவற்றிற்கு த்ரோஹம் செய்யலாகாது. மற்றும், நீ உன் ப்ராதாவைக் கொன்றது பற்றியல்லவோ யக்ஷர்கள்மேல் கோபங்கொண்டு அவர்களை வதிக்கின்றனை. உன் ப்ராதாவைக் கொன்றதாக நீ நினைத்திருப்பதே ஸரியன்று. உன் ப்ராதாவும் வதிக்கப்படவில்லை. யக்ஷர்களும் வதித்தவரல்லர். தெய்வமே காரணமன்றி யக்ஷர்மேல் என்ன அபராதம்? பிறத்தலும் சாதலுமாகிய இவை சரீரத்திற்கேயன்றி ஆத்மாவுக்கு அவை கிடையாது. ஆகையால் நீ நினைத்திருப்பது யுக்தமன்று. அதைப்பற்றி நீ வருந்துவதும், அவ்வருத்தத்தினால் நிரபராதிகளான இந்த யக்ஷர்களை வதிப்பதும் சரியன்று. ஆணென்றும் பெண்ணென்றும் இரண்டு விதமாகப் பிரித்திருக்கின்ற ஜந்துக்களின் சரீரமெல்லாம் ப்ருதிவி அப்பு தேஜஸ்ஸு வாயு ஆகாசம் என்கிற பஞ்ச பூதங்களால் ஏற்பட்டவை. அந்த ஸ்த்ரீ புருஷர்கள் ஒருவரோடொருவர் கலந்து ஸம்போகிப்பதால் ஆணென்றும் பெண்ணென்றும் இருவகைப்பட்ட ப்ரபஞ்சத்திலுள்ள ஜந்துக்களெல்லாம் மேன்மேலும் வளர்ந்து வருகின்றது. பஞ்ச பூதங்களின் பரிணமமும் ஆண் பெண்ணென்று இருவகைப் பட்டதுமாகிய இரண்டு சரீரங்களின் ஸம்பந்தத்தினால் உண்டாகின்ற ப்ராணி ஸமூஹமெல்லாம் பஞ்சபூத ஸ்வரூபமாயிருப்பதேயன்றி வேறன்று. வாராய் மன்னவனே! எப்படி ஸ்த்ரீ புருஷ ஸ்வரூபமான ஜந்துக்களெல்லாம் அந்த ஸ்த்ரீ புருஷர்கள் ஒருவரோடொருவர் கலந்து புணர்ந்தால் உண்டாகின்றனவோ, அங்ஙனமே பரமாத்மாவின் சரீரமாகிய மாயையின் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களின் தாரதம்யத்தினால் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் நடக்கின்றன ஸத்வமும் தமஸ்ஸும்

அடங்கி ரஜோகுணம் மாத்ரம் தலையெடுக்கையில் ஸ்ருஷ்டியும், ரஜஸ்ஸும் தமஸ்ஸும் அடங்கி ஸத்வம் மாத்ரம் தலையெடுக்கையில் ஸ்திதியும், ஸத்வமும் ரஜஸ்ஸும் அடங்கித் தமஸ்ஸு மாத்ரம் தலையெடுக்கையில் ஸம்ஹாரமும் உண்டாகின்றன. மூன்றும் ஸமமாயிருக்கையில் மூன்றும் உண்டாகிறதில்லை. அதுவே ப்ரளய தசை. 'வாஸ்தவம். ஸ்த்ரீ புருஷ சரீரங்களும் ஸத்வாதி குணங்களும் அசேதனங்களாகையால் அவற்றிற்கு ஸ்த்ரீ புருஷ சரீரங்களையும் ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களையும் நிறைவேற்றும்படியான ஸாமர்த்யம் எப்படி உண்டாகக்கூடும்? ஸாமர்த்யம் உண்டாயினும், தேவ மனுஷ்யாதி சரீரங்கள் ஒன்றை விட ஒன்று விசித்ரமாயிருக்கையும் ஒருவன் ஸுகிக்கையும் ஒருவன் துக்கிக்கையும் ஆகிய இவை எங்ஙனம் பொருந்தும்?' என்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஸத்வாதி குணங்கள் மஹத்து முதலிய தத்வங்களாகப் பரிணமிக்கும் விஷயத்திலும், அம்மஹத்து முதலிய தத்வங்கள் தேவ மனுஷ்யாதி தேஹங்களாய்ப் பரிணமிக்கும் விஷயத்திலும் தேவ மனுஷ்யாதி சரீரங்கள் ஒன்றோடொன்று வேறுபட்டு விசித்ரமாயிருப்பதிலும், அந்த தேவ மனுஷ்யாதி ஜந்துக்களுக்கு ஸுக துக்கங்கள் உண்டாகும் விஷயத்திலும் புருஷ ஶ்ரேஷ்டனாகிய ஈஶ்வரன் நிமித்த மாத்ரமேயன்றி, அவனே இவற்றையெல்லாம் இவ்வாறு செய்கிறானல்லன். அவன் ஸ்ருஷ்டிக்கு ஸங்கல்பித்த மாத்ரத்தில் ஜீவாத்மாக்களின் புண்ய பாப ரூபமான கர்மத்தினால் அங்ஙனம் பலவாறு பரிணாமங்கள் உண்டாகின்றன. ஒருவன் ஸுகிப்பதற்கும் ஒருவன் துக்கிப்பதற்கும் அந்தந்த ஜீவனுடைய கர்மமே காரணம். அயஸ்காந்தத்தினருகில் இரும்பு சுழல்வது போல், ப்ரதானமெனப்படுகிற ப்ரக்ருதியும் அதன் கார்யமான மஹத்து முதலிய தத்வங்களும் பரம புருஷன் நிமித்தமாயிருக்கையில் தாமே தமது கார்யங்களை நடத்துகின்றன. பரம புருஷன் நிமித்த காரணமாயிருந்து ஸங்கல்பித்த

மாத்ரத்தில், ஜீவாத்மாக்களின் கர்மத்திற்குத் தகுந்தபடி ப்ரக்ருதி மஹத்து முதலிய தத்வங்களாகவும், அந்த மஹத்து முதலிய தத்வங்கள் தேவ மனுஷ்யாதி ப்ராணிகள் அடங்கின இந்த ப்ரபஞ்சமாகவும் பரிணமிக்கின்றன. பகவானுடைய ஸங்கல்பமில்லாமல் ப்ரக்ருதிக்கும் மஹத்து முதலிய தத்வங்களுக்கும் ஸ்ருஷ்டி ஸாமர்த்யம் உண்டாகாது. பகவானே அவற்றிற்கு ஸ்ருஷ்டி ஸாமர்த்யத்தை விளைக்கின்றான். அங்ஙனம் ஸாமர்த்யம் கொடுக்கப்பெற்ற ப்ரக்ருதியும் மஹதாதி தத்வங்களும் தந்தமது கார்யங்களைப் படைக்கின்றன. தேவ மனுஷ்யாதி சரீரங்கள் ஒன்றைக் காட்டிலும் ஒன்று விசித்ரமாயிருப்பதற்கும் ஸுக துக்கங்களுக்கும் ஜீவாத்மாக்களின் புண்ய பாப ரூபமான கர்மமே காரணம். பரம புருஷன் ஜீவாத்மாக்களைப்போல் ஸத்வாதி குணங்களுக்கு உட்பட்டவனல்லன். ஆகையால் அவனுக்கு ராகம் த்வேஷம் முதலிய துர்க்குணங்கள் எவையும் கிடையாது. ஆனதுபற்றி, அவன் ஒருவனைத் தேவனாகவும் ஒருவனை மனுஷ்யனாகவும் மற்றொருவனை மாடாகவும் மற்றவர்களை மற்றும் பலவாறாகவும் ஸ்ருஷ்டிக்கிறானல்லன். அவரவர் தந்தமது கர்மத்தின்படி அவ்வவ்வாறு பிறக்கிறார்கள். பக்ஷபாத முடையவனன்றோ இங்ஙனம் பேதம் பாராட்டுவான். மனத்தில் இரக்கமில்லாதவனே பிறர்க்கு துக்கத்தை விளைவிப்பான். ஈஶ்வரனுக்குப் பக்ஷபாதமாவது மன இரக்க மில்லாமையாவது சிறிதும் கிடையாது. ஆகையால் அவனே இங்ஙனம் படைக்கிறானென்று சொல்லலாகாது. அவரவர் ஜன்மாந்தரத்தில் தாந்தாம் செய்த புண்ய பாப ரூபமான கர்மங்களின் பலனாக தேவ மனுஷ்யாதியாகப் பிறப்பதும் ஸுக துக்கங்களை அனுபவிப்பதுமாயிருக்கின்றார்கள். இது ஈஶ்வரன் செய்கிறதன்று. அந்த ஸர்வேஶ்வரன் கெட்ட குணங்கள் எவையும் தீண்டப்பெறாமல் ஜ்ஞானாதி குணங்களாலும் நிறைந்திருப்பவன். அவன் காலமென்னும் தன்னுடைய சக்தியால் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற ப்ரக்ருதியின் குணங்களை விகாரம்

அடையச் செய்து அதனால் ப்ரபஞ்சத்தைப் படைக்கின்றான். அவன் தான் செய்யாதவனாகவே யிருந்து செய்கின்றான். தான் அடிக்காமலே யிருந்து அடிக்கின்றான். அவன் ஒருவனால் தூண்டப்பெற்று ஒன்றையும் செய்பவனன்றாகை யால் செய்யாமலே யிருக்கிறானென்பதும், ப்ரபஞ்சத்தை, அந்தந்தச் செயல்களில் அவனே தூண்டுகிறானாகையால், அவனே எல்லாவற்றையும் செய்கிறானென்பதும் பொருந் தும். செய்கையும் செய்யாமையுமாகிய இவ்விரண்டும் ஒரே வஸ்துவில் ஒரே ஸமயத்தில் கூடுமவையன்று. ஆயினும், அவனுடைய மஹிமையால் அவ்விரண்டும் ஒரே ஸமயத்தில் சேருகின்றன. அவனுடைய செயல் இத்தகையதென்று நிரூபிக்க முடியாதது. காலத்தைச் சரீரமாகவுடைய அந்தப் பரமாத்மாவானவன் தந்தை முதலிய ஜனங்களால் பிள்ளை முதலிய ஜனங்களைப் படைக்கின்றான். ஆகையால் அவன் ஆதிகர்த்தா வென்று கூறப்படுகிறான். அங்ஙனமே தன் ஸங்கல்பத்தினால் நாசம் அடைய முயன்ற ஜந்துக்களை ம்ருத்யுவைக்கொண்டு மரணம் அடையச் செய்கிறான். அவன் தான் ஆதி அந்த மில்லாதவன்; என்றும் நாச மில்லாதவன்; தான் முடிவில்லாதவனாகிப் பிறர்க்கு முடிவை விளைவிப்பவன்; தந்தை முதலியவர் மூலமாய் முடிவையும் நடத்துகிறானன்றித் தானே நேரில் நடத்துகிறானல்லன். எதையும் தான் நேரில் செய்யாமல் பிறர் மூலமாய்ச் செய்கிறா னாகையால், அவனிடத்தில் செய்கையும் செய்யாமையுமாகிய இரண்டும்பொருந்துகின்றன. அவன் விசித்ரமான பலவகைச் சக்திகள் அமைந்தவனாகையால், அவனிடத்தில் கூடாதவை களும் கூடுகின்றன. ஆனால் ஈச்வரனே ப்ரபஞ்சத்திலுள்ள ப்ராணிகளெல்லோரையும் அந்தந்தச் செயல்களில் தூண்டுகிறானாயின், சிலரைக் கெட்ட கார்யங்களிலும் சிலரை நற்கார்யங்களிலும் தூண்டுகிறானாகையால், அவ னுக்குப் பக்ஷபாதமும் தயையில்லாமையும் ஏற்படுமே என்று சங்கிக்கவேண்டாம். ஏனென்னில், அதற்குக் காரணம் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஜீவனைப்போல் ஸம்ஸாரத்

திற்கு உட்படாதவனும் ம்ருத்யுவைச் சரீரமாகவுடையவ னும், பக்ஷபாதமில்லாமல் அவரவர் செய்த கர்மங்களுக்குத் தகுந்தபடி அவரவர்களை நியமிக்கும்பொருட்டு அவர்க்குள் அந்தராத்மாவாய் ப்ரவேசிப்பவனுமாகிய பரம புருஷனுக்கு ஸ்வபக்ஷனென்றும் (தன்னைச் சேர்ந்தவனென்றும்) விபக்ஷ னென்றும் (தன்னைச் சேராதவனென்றும்) பேத புத்தி கிடையாது. அவன் தன்னுடையவனென்றும் பிறனென்றும் பேதம் பாராட்டுந் தன்மையனல்லன். அவன் ப்ரபஞ்சத்தி லுள்ள ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் ஒருவாறாகவே உட்புகுந்திருக்கிறானன்றி, அதில் அவன் வைஷம்யம் செய்கிறதில்லை. ஆனால் எல்லோரையும் ஏன் நற்கார்யங்களில் தூண்டுகிறதில்லை யென்னில், ப்ராணிகளை நற்கார்யத்தி லாவது கெட்ட கார்யத்திலாவது அவன் தனது விருப்பத்தின் படி தூண்டுகிறானல்லன்; அவருடைய கர்மத்தின்படி நல்ல கார்யத்திலும் கெட்ட கார்யத்திலும் தூண்டுகிறான். காற்று வீசும்பொழுது தூட்கள் அதைத் தொடர்ந்து செல்வதுபோல், அவரவர் கர்மத்தின்படி நியமனம் செய் கின்ற பரமாத்மாவை ப்ராணி ஸமூஹங்கள் தொடர்ந்து செல்கின்றன. ப்ராணிகள் எந்தக் கார்யத்திலும் தமக்குத் தாமே முயற்சி செய்யுந் தன்மையரல்லர். கர்மத்தின்படி ஈச்வரனால் தூண்டப்பெற்றே முயல்கின்றனர். அனைத் திற்கும் அந்தராத்மாவான ஸர்வேச்வரன் கர்மத்திற்கு உட்பட்டிருப்பதும் அந்தக் கர்மத்தின் மூலமாய் விளையும் ஸுக துக்கங்களை அனுபவிப்பதுமாகி இயற்கையிலேற் பட்ட நிலைமை தவிர்ந்து வருந்துகின்ற ப்ராணியின் வாழ் நாளைக் குறைப்பதும் வளர்ப்பதும் செய்கின்றான். அவன் அந்த வளர்தலும் குறைதலுமாகிய இருவகை விகாரங் களும் சிறிதும் தீண்டப்பெறாதவன். ஆனதுபற்றியே தனக்கு இயற்கையில் ஏற்பட்டதும் கெட்ட குணங்கள் எவையும் தீண்டப்பெறாததும் கல்யாண குணங்களெல்லாம் நிறைந்ததுமாகிய ஓர் நிலைமையில் என்றும் மாறாதிருப் பவன். இங்ஙனம், ஜீவாத்மாக்கள் விசித்ரமான தேவ

மனுஷ்யாதி தேஹங்களைப் பெறுதற்கும் ஸுக துக்கங்களை அனுபவிப்பதற்கும் அவரவருடைய புண்ய பாபரூபமான கர்மங்களே ஸாக்ஷாத் காரணம். ஈஸ்வரன் அந்தக் கர்மங்களைக் கொண்டு அங்ஙனம் நடத்துகிறமையால்[1] ப்ரயோஜகனே யன்றி முக்ய காரணமல்லன். இப்படி ஸர்வ பூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவனும் தன்னுடைய ஸங்கல்ப மாத்ரத்தினால் ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகின்றவனும் அந்த ஸ்ருஷ்டி முதலிய செயல்களும் ஒரு வருத்தமாகாதபடி லீலையாகவே யிருக்கப்பெற்றவனும் ஸர்வஜ்ஞனும் ஸர்வ சக்தியும் மற்றும் பல கல்யாண குணங்களுடையவனும் அவ்வவற்றின் கர்மங்களுக்குத் தகுந்தபடி ஜகத்தையெல்லாம் நியமித்துக் கொண்டிருப்பவனும் ஸர்வ பூதங்களுக்கும் நண்பனுமாகிய பரமாத்மாவை அறியாமல் சிலர், ஜீவாத்மாக்கள் மேன்மையும் தாழ்மையுமான தேவ மனுஷ்யாதி பற்பல சரீரங்களைப் பெறுதற்கும் ஸுக துக்கங்களை அனுபவிப்பதற்கும் காரணம் அவரவருடைய கர்மமேயென்று சொல்லுகிறார்கள். வரராய் மன்னவனே! வேறே சிலர் ப்ரக்ருதி புருஷர்களின் ஸ்வபாவத்தையே காரண மென்கிறார்கள். (ப்ரக்ருதிக்கு ஒன்று மற்றொன்றாக மாறுவது ஸ்வபாவம். புருஷனுக்கு ஒரு ஸ்வபாவத்தை விட்டு மற்றொரு ஸ்வபாவத்தைப் பெறுகை ஸ்வபாவமா யிருக்கின்றது. அங்ஙனம் ப்ரக்ருதிக்கும் புருஷனுக்கும் உள்ள ஸ்வபாவ பேதத்தினால் தேவமனுஷ்யாதி சரீரங்களின் பிரிவுகளும் ஸுகதுக்கங்களும் உண்டாகின்றன வென்கிறார்கள்). மற்றும் சிலர் தெய்வத்தையே காரண மென்கிறார்கள். வேறு சிலரோவென்றால், பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தையே காரணமாக மொழிகின்றார்கள். இந்த மதங்களில் கடைசியில் சொன்ன மதமே மேன்மையுடையது; பெரியோர்களுக்கு ஸம்மதமாயிருப்பது. 'ஆனால் புண்ய பாப ரூபமான கர்மமே முக்ய காரணமென்று முன்பு

1. தூண்டுகிறவன்.

மொழிந்தீரே, இப்பொழுது இந்த மதமே முக்யமென்று புகழ்கின்றீரே' என்னில், சொல்லுகிறேன், கேட்பாயாக. முன் சொன்னதற்கும் இந்த மதத்திற்கும் பேதமே இல்லை. இரண்டும் ஒன்றே. எப்படி யென்னில், புண்ய பாப ரூபமான கர்மமாவது பகவானுடைய நிக்ரஹாநுக்ரஹங்களே. பகவானுடைய அநுக்ரஹத்தையே புண்ய கர்ம மென்றும், நிக்ரஹத்தையே பாப கர்ம மென்றும் சொல்லுகிறார்கள். ஆகையால் கர்மமே முக்ய காரண மென்று முன்பு மொழிந்ததற்கும் இதற்கும் பேதமில்லை. அந்தப் புண்ய பாப கர்மங்களால் விளையும் அத்ருஷ்டமே தெய்வமாம். அதுவும் அந்த பகவானுடைய ஸங்கல்பத்தைக் காட்டிலும் வேறுபட்டதன்று. காலமும் ப்ரக்ருதி புருஷர்களின் ஸ்வபாவமும் அந்தப் பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தைப் பின்தொடர்ந்தவைகளே. ஆகையால் பரம புருஷனுடைய ஸங்கல்பமே காரணமென்னும் பக்ஷமே முக்யமானது. அப்பா! பரமபுருஷன் இந்த்ரியங்களால் அறியக் கூடியவனல்லன்; தேச கால வஸ்து பரிச்சேதமில்லாதவன்; இந்த்ரியங்களால் அறியக்கூடிய வஸ்துவல்லவோ தேச கால வஸ்து பரிச்சேத முடையதாயிருக்கும். இவன் இந்த்ரியங்களுக்கு விஷயமாகுந் தன்மையனல்லனாகையால் அந்தப் பரிச்சேதங்களொன்றையு மில்லாதவன். ஆகையால் ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன். ப்ரக்ருதி இந்த்ரியங்களால் அறியக்கூடியதாயிருக்கும். புருஷன் அணுஸ்வரூபன். ஆகையால் பரமபுருஷன் அவ்விரண்டிலும் விலக்ஷணனாயிருப்பவன். மற்றும், பலவகைச் சக்திகள் அமைந்தவன். இப்படிப்பட்ட பகவான் தன் மனத்தில் நினைத்திருக்கிற ஜகத் ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரத்தை எவன்தான் உண்மையாக அறியவல்லனாவான். பகவானுடைய ஸ்வரூபத்தையே அறியமுடியாதென்னில், அவனுடைய ஸங்கல்பத்தை எங்ஙனம் அறியமுடியும்? குழந்தாய்! இந்தக் குபேரனுடைய ப்ருத்யர்களான யக்ஷர்கள் உன் ப்ராதாவைக் கொன்றவரல்லர். கர்மத்திற்கு உட்

பட்டவனாகிய ஜீவனுடைய உத்பத்தி மரணங்களுக்கு ஈஸ்வரனே காரணம். 'ஈஸ்வரனே உத்பத்தி முதலிய வ்யாபாரங்களுக்குக் காரணமா யிருப்பானாயின், ஜீவனைப்போல் அவ்வீஸ்வரனும் ஸத்வாதி குணங்களோடு கூடியிருக்கையாலும் அந்த ஸத்வாதி குணங்கள் மூலமாய் நடக்கும் ஸ்ருஷ்டி முதலிய ஜகத் வ்யாபாரங்களாகிற செயல்களுக்கு இடமாயிருக்கையாலும் அந்த ஸத்வாதி குணங்களாலும் ஸ்ருஷ்டி முதலிய கர்மங்களாலும் ஜீவனைப்போல் ஸம்ஸார பந்தம் பெறவேண்டியதாய் வருமே' என்னில், சொல்லுகிறேன், கேட்பாயாக. அந்த ஸர்வேஸ்வரனே உலகங்களைப் படைப்பதும் அவற்றைக் காப்பதும் அவற்றை அழிப்பதும் செய்கின்றான். ஆயினும் ஜீவனைப்போல் அவனுக்கு அஹங்காரமென்று கூறப்படுகிற தேஹாத்மாபிமானம் இல்லாமையால், ஸத்வாதி குணங்களாலும் அவற்றின் மூலமாய் விளையும் கர்மங்களாலும் தீண்டப்படுகிறதில்லை. ஸத்வாதி குணங்களின் கார்யமான ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதி ரூபமான வ்யாபாரங்களை ஈஸ்வரனே நடத்துகின்றானாயினும் தன் சரீரமான ப்ரக்ருதி புருஷ ஸ்வரூபமான தேவ மனுஷ்யாதி வஸ்துக்களில் நானென்கிற அஹம்புத்தி இல்லாமையாலும் தன் ஸ்வபாவம் மாறப்பெறாதிருக்கையாலும் ஈஸ்வரன் அந்த ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரங்களால் ஸம்ஸாரபந்தம் உண்டாகப் பெறமாட்டான். அவன் ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை தன்னுடைய ஸங்கல்பத்தினாலேயே நடத்துகிறான். ஜீவனோ வென்றால் கர்மத்தினால் ஜ்ஞானஸங்கோசம் அடைந்து தன் ஸ்வபாவம் மாறப் பெறுகின்றான்; தேவாதி சரீரங்களில் அஹம் புத்தியைச் செய்கின்றான். அதுபற்றியே அவன் கர்மங்களால் ஸம்ஸார பந்தத்தை அடைகின்றான். ஆகையால் ஜீவனைப்போல் பகவானும் கர்மங்களால் ஸம்ஸார பந்தத்தைப் பெறக்கூடுமோ வென்று சங்கிக்கலாகாது. இந்த பகவான் தேவ மனுஷ்யாதியான ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாயிருப்பவன்; அங்ஙனம் உள்புகுந்து ஸமஸ்த

பூதங்களையும் அவரவர் கர்மத்தின்படி நியமிக்கும் தன்மையன். அந்த தேவ மனுஷ்யாதி பூதங்களைப் படைத்தவனும் அவனே. தன் சக்திபோல் தன்னை விட்டுப் பிரியாதிருக்கின்ற ப்ரக்ருதி புருஷர்களோடுகூடி அவன் தேவ மனுஷ்யாதி பூதங்களைப் படைப்பதும் பாதுகாப்பதும் அழிப்பதும் செய்கின்றான். ஆகையால் ஸ்வரூபம் மாறப்பெறுகையும் ஸ்வபாவம் மாறப் பெறுகையுமாகிய விகாரங்களெல்லாம் ப்ரக்ருதி புருஷர்களைப் பற்றினவைகளேயன்றி அவை ஈஸ்வரனிடத்தில் ஸம்பந்திக்கிறதில்லை. அவன் விகாரங்களெவையுமின்றி நிர்மலனாயிருப்பவன். அவன் தன்னைப் பற்றாதவர்களுக்கு ஸம்ஸார பந்தத்தை விளைவிப்பவன். பற்றினவர்களை ஸம்ஸாரபந்தத்தினின்று விடுவிப்பவன்; தன் தேஜஸ்ஸினால் ப்ரகாசித்துக் கொண்டிருப்பவன். ஸமஸ்த லோகங்களுக்கும் அவனே ப்ராப்யனும் ப்ராபகனும் ஆதாரமுமாயிருப்பவன். அப்படிப்பட்ட ஸர்வேஸ்வரனை நீ எல்லா விதத்திலும் சரணம் அடைவாயாக. 'இவனே நமக்கு அடையத்தகுந்த வஸ்துவும் அவ்வஸ்துவை அடைவதற்குரிய உபாயமும்' என்று பாவித்து அவனைச் சரணம் அடைவாயாக. அங்ஙனம் சரணம் அடையத் தகுந்தவன் மற்றெவனும் இல்லை. ஜகத் ஸ்ருஷ்டி கர்த்தாக்களான ப்ரஹ்மதேவன் மரீசி முதலியவர்களும் இம்மஹானுபாவனைப் பூஜிக்கின்றார்கள். ஜகத்தையெல்லாம் படைக்கின்றவர்களாகிய ப்ரஹ்மாதிகளுக்கும் அவனே ஈஸ்வரன். ஆகையால் சரணம் அடையத் தகுந்த வஸ்து மற்றெதுவுமே இல்லை. எருதுகள் மூக்கில் கயிறு கோக்கப் பெற்றுப் புருஷனுக்குவேலைசெய்வதுபோல், ப்ரஹ்மதேவன் முதலிய மற்றவர் அனைவரும் அந்த ஸர்வேஸ்வரனுக்குப் பணி செய்பவரேயன்றி ஸ்வதந்த்ரர்களல்லர். ஆகையால் அவன் ஜகத்தெல்லாம் தன் வசமாயிருக்கப்பெற்றவன். நாமெல்லோரும் அவனுக்கு உட்பட்டவர்களே. ஆனது பற்றி நீ அவனையே சரணம் அடைவாயாக. மற்றும் நீ ஐந்து வயது பாலனாயிருக்கும்பொழுது உன் தாயின்

சக்களத்தியாகிய ஸுருசியின் துர்ப்பாஷணங்களால் மனம் கலங்கப்பெற்றுத் தாயான ஸுநீதியைத் துறந்து வனத்திற்குச் சென்று இந்த்ரியங்கள் வேறு விஷயங்கள் எவற்றிலும் செல்லாதபடி அவற்றை அடக்கிக்கொண்டு எந்த பகவானை ஆராதித்து மூன்று லோகங்களுக்கும் மேலாயிருப்பதான ஓர் பதவியைப் பெற்றனையோ, அந்த பகவானையே பணிந்திருப்பாயாக. அவனுக்குச் சரீரமாகிய இந்த ஆத்மாவின் உண்மையை அறிந்து அவனையே தொடர்ந்து அவனது சரீரமாகிய மற்ற எந்த ப்ராணிகளுக்கும் த்ரோஹம் செய்யாதிருப்பாயாக. வாராய் த்ருவனே! தேவமனுஷ்யாதி சரீரங்களெல்லாம் எப்பொழுதும் மாறிக்கொண்டேயிருக்குந் தன்மையுடையவை. இத்தகையதான தேவமனுஷ்யாதி உருவம் ஜீவனுக்கு இயற்கையில் ஏற்பட்டதன்று. தேவமனுஷ்யாதி ரூபமான ப்ரபஞ்சம் ஜீவனிடத்தில் வாஸ்தவமாய் இருப்பதன்றேயாயினும் புண்யபாப ரூபமான கர்மத்தினால் தோற்றுகின்றது. அந்த ஜீவாத்மா அணுவாயிருப்பவன்; அவயவங்கள் எவையு மில்லாதவன். அந்த ஜீவனிடத்தில் பரம புருஷன் உட்புகுந்திருக்கிறான். அவன் கெட்ட குணங்கள் எவையும் தீண்டப் பெறாதவன்; தன்னோடொத்தவர்களாவது தனக்கு மேற்பட்டவர்களாவது எவருமில்லாதவன்; எவ்வகை விகாரங்களும் தீண்டப்பெறாதவன்; ப்ரக்ருதியினின்று என்றும் விடுபட்டவன்; ஜீவனைப்போல் ப்ரக்ருதி ஸம்பந்தம் ஒருக்காலும் உண்டாகப் பெறுமவனல்லன். நித்ய முக்தனென்று கூறப்படுவான். அப்படிப்பட்ட பரம புருஷனை அனுஸரித்திருப்பாயாக. 'நான் பகவானை முன்னமே உபாஸித்தேன். இப்பொழுது உபாஸிக்கும்படி சொல்லுகிறதென்?' என்னில், சொல்லுகிறேன், கேட்பாயாக. முன்பு நீ அஹங்கார மமகாரங்கள் தீரப்பெறாமல் தர்ம அர்த்த காமங்களையே விரும்பி உபாஸித்தனை. ஆனது பற்றியே இந்த ப்ரக்ருதி மண்டலத்தில் அடங்கின ஓர் ஸ்தானத்தைப் பெற்றனை. இப்பொழுது நீ ஒரு பலனையும்

விரும்பாமல் அவனிடத்தில் பக்திசெய்வாயாயின் மோக்ஷம் பெறுவாய். அதன் வழியைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாகி அவர்களைச் சரீரமாகவுடையவனும் ஜ்ஞான சக்தி பல ஐஶ்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களென்கிற ஆறு குணங்கள் நிறைந்தவனும் தேசகாலவஸ்து பரிச்சேதங்களில்லாதவனும் கேவலாநந்த ஸ்வரூபனும் ஜ்ஞானம் பலம் க்ரியை முதலிய ஸமஸ்த சக்திகளும் அமைந்தவனுமாகிய பரம புருஷனிடத்தில் ஒரு காரணமுமின்றி மெல்ல மெல்ல மனத்தை அடக்கிக் கொண்டு பக்தியைச் செய்வாயாயின், அஹங்கார மமகாரங்களால் வேரூன்றியிருக்கிற அஜ்ஞானமென்னும் க்ரந்தி (முடிச்சு) நிர்மூலமாக அறப்பெறுவாய். நன்மைகளையெல்லாம் மிகவும் தடை செய்வதாகிய கோபத்தைத் துறப்பாயாக. 'அதை எங்ஙனம் துறக்க முடியும்?' என்னில், பெரும்பாலும் ஜீவ பரமாத்ம தத்வங்களின் உண்மையைக் கேட்டு மனனம் செய்யின், ஔஷதத்தினால் வ்யாதி நீங்குவதுபோல், அந்தக் கோபம் தானே நீங்கும். ஆகையால் தத்வஶ்ரவணம் செய்து, மருந்தினால் நோயைப்போக்குவது போல் கோபத்தைப் போக்குவாயாக. வாராய் மன்னவனே! அதனால் உனக்கு க்ஷேமம் உண்டாகும். கோபமுற்றவனைக் கண்டு லோகமெல்லாம் மிகவும் பயப்படுகின்றது. அதனால் அதர்மத்தை அடைகின்றான். அவ்வதர்மத்தினால் புருஷார்த்தம் கைசோரப் பெறுவான். ஆகையால் நன்மையை விரும்பும் பண்டிதன் அந்த ரோஷத்திற்கு இடம் கொடுக்கலாகாது. மற்றும், நீ ருத்ரனுக்குப்ப்ராதாவான (நண்பனாகிய) குபேரனுக்கு அவமானம் செய்தாய். ஏனென்னில், ப்ராதாவைக்கொன்றார்களென்னும் நினைவினால், இயற்கையில் நிரபராதிகளான யக்ஷர்களைக் கோபத்தினால் வதித்தனையல்லவா? அந்த யக்ஷர்கள் குபேரனுடைய ப்ருத்யர்களாகையால் அவர்களைக் கொன்றது, குபேரனுக்கு அவமதி செய்ததேயாம். குழந்தாய்! ஆகையால் அந்தக் குபேரனை வணங்கி விநய வார்த்தைகளால் அருள்புரியச் செய்வாயாக.

ஆகட்டுமென்று காலதாமதம் செய்யவேண்டாம். பெரியோர்களின் தேஜஸ்ஸு நங்குலத்தைப் பாழ்செய்வதற்கு முன்னமே செய்யவேண்டிய கார்யத்தைச் செய்வாயாக. குபேரன் முதலியவர் பெருமை அமைந்தவர். அத்தகையர் விஷயத்தில் அபராதப்படுவோமாயின், அவருடைய தேஜஸ்ஸு நங்குலத்தைப் பாழ் செய்து விடும். ஆகையால் அங்ஙனம் கெடுதி நேருவதற்கு முன்னமே அந்தக் குபேரனை வணக்கத்தினாலும் விநய வார்த்தைகளாலும் அருள்புரியச் செய்வாயாக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ஸ்வாயம்புவமநு தன் பேரனாகிய த்ருவனுக்கு இங்ஙனம் நற்புத்தி சொல்லி அவனால் நமஸ்காரம் செய்யப்பெற்று ரிஷிகளோடு கூடித் தன்னிடம் போய்ச் சேர்ந்தார். பதினொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

த்ருவன் குபேரனால் அபிநந்தனம் செய்யப் பெற்றுத் தன் பட்டணம் சேர்ந்து பல யாகங்கள் செய்து ஸ்ரீவிஷ்ணுவின் ஸ்தானத்தை அடைதல்.

த்ருவன் ஸ்வாயம்புவ மநுவின் உபதேசத்தினால் கோபம் தீர்ந்து யக்ஷர்களை வதிப்பதினின்று திரும்பியிருப்பதை அறிந்து மஹானுபாவனாகிய குபேரன் அவ்விடம் வந்து சாரணர் யக்ஷர் கின்னரர் இவர்களால் துதி செய்யப்பெற்ற அக்குபேரன், கைகூப்பிக்கொண்டு நிற்கிற அந்த த்ருவனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

குபேரன் சொல்லுகிறான்:—வாராய் க்ஷத்ரிய குமாரனே! நீ யக்ஷர்களை வதித்தமையாலுண்டான பாபம் தீரப்பெற்றனை. நான் உன் விஷயத்தில் மிகுதியும் ஸந்தோஷம் அடைந்தனன். அதற்குக் காரணம் என்னெனில்; நீ உன் பாட்டனாராகிய ஸ்வாயம்புவமநுவின் உபதேசத்தினால் துறக்கமுடியாத வைரத்தையும் துறந்தனையல்லவா? அதுவே காரணம். 'நான் யக்ஷர்களை வதித்தமை

யாலுண்டான பாபத்தின் ஸம்பந்த முடையவனாயிருக்க எப்படி நான் பாபமற்றவனாவேன்?' என்னில், சொல்லுகிறேன், கேட்பாயாக. நீ யக்ஷர்களை வதித்தவனல்லை. யக்ஷர்களும் உன் ப்ராதாவை வதிக்கவில்லை. ஏனென்னில், ப்ராணிகளின் மரணத்திற்கும் உத்பத்திக்கும் காலஸ்வரூபனான ஈஶ்வரனே ஸமர்த்தனன்றி, மற்றவர்க்கு அந்த ஸாமர்த்யம் இல்லை. 'ஒருவனை யொருவர் வதித்ததையும் அதனாலுண்டான வேர்வை இளைப்பு முதலியதும் எனக்கும் யக்ஷர்களுக்கும் ப்ரத்யக்ஷமாயிருக்க, அதை நீ செய்யவில்லை. ஈஶ்வரனே அதைச் செய்தானென்பது எங்ஙனம் பொருந்தும்' என்னில், சொல்லுகிறேன். ப்ராணிகள் தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணமான ஆத்மாவின் உண்மையை அறியாமல் அந்த தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து 'நான் கொன்றேன், நீ கொன்றாய்' என்று நினைக்கின்றார்கள். 'நான், நீ' என்கிற அறிவில் தோற்றுகிற ஆத்ம ஸ்வரூபத்தை அவர்கள் அறிந்தவரல்லர். நானென்று தோன்றுகிற ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்ட தேஹத்தையே ஆத்மாவாக நினைக்கின்றார்களாகையால் அவர்கள் விபரீதஜ்ஞான முடையவர். விபரீதஜ்ஞானமாவது ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவாக நினைக்கை. முத்துச்சிப்பியைப் பார்த்து இது வெள்ளியென்று நினைக்கை விபரீத ஜ்ஞானம். ஒரு வஸ்துவுக்கு ஒரு குணம் இயற்கையில் ஏற்பட்டிருக்க, அதை விட்டு அதிலில்லாத மற்றொரு குணத்தை அதிலிருப்பதாக நினைக்கை அன்யதா ஜ்ஞானமென்று கூறப்படும். சங்கம் வெளுத்திருக்க அதைப் பொன்னிற முடையதாக நினைக்கை அன்யதா ஜ்ஞானமாம். இவர்கள், பிறரைக் கொல்லுந் தன்மையனல்லாத ஆத்மாவிடத்தில் கொல்லுந்தன்மைய ஏறிடுகிறார்களாகையால், அன்யதா ஜ்ஞானமும் உடையவர்களே. ஜீவாத்மா கொல்லுந் தன்மையனுமல்லன். ஆத்மாவுக்கு உத்பத்தியாவது தேஹ ஸம்பந்தம் உண்டாகப் பெறுகையே. மரணமாவது தேஹவியோகம் பெறுகையே. சரீரத்திற்கே

உற்பத்தியும் மரணமும் உள்ளவை. தேஹத்திற்கு உற்பத்தியாவது ஒரு அவஸ்தையைப் பெறுகையே. மரணமாவது முன்னிருந்த அவஸ்தையை விடுகையே. இந்த உற்பத்தி மரணங்கள் தேஹத்திற்கு என்றும் உள்ளவைகளே ஆகையால் பரிஹரிக்க முடியாமல் நித்யமாயிருக்கின்றன. உற்பத்தி மரணங்களைப்பற்றி நாம் சிந்திக்கவேண்டிய அவச்யமில்லை. தேஹத்திற்கும் ஆத்மாவுக்கும் கொல்லப்படுகை, கொல்லுகை ஆகிய இவை யிரண்டும் இல்லாதவைகளே. அவ்விரண்டிக்கும் அவையிரண்டும் உண்டென்று நினைப்பது அஜ்ஞான கார்யமே. உற்பத்தியாவது இல்லாத வஸ்து புதிதாக உண்டாகையென்றும், மரணமாவது உள்ள வஸ்து முதலே இல்லாமல் பாழாகையென்றும் அஜ்ஞானிகள் நினைக்கிறார்கள். தேஹத்திற்காவது ஆத்மாவுக்காவது அத்தகைய உற்பத்தி மரணங்கள் கிடையாது. ஆத்மாவுக்கு உற்பத்தி மரணங்களாவன, இல்லாத வஸ்து உண்டாகையும் உள்ள வஸ்து முதலே இல்லாமற்போகையும் அல்ல. ஓரவஸ்தையை விட்டு மற்றொரவஸ்தையைப் பெறுகையே உத்பத்தியும் மரணமுமாம். இல்லாத வஸ்து எங்கிருந்து உண்டாகும்? இருந்த வஸ்துவும் முதலே இல்லாமல் எப்படி போகும். ஆகையால் அவர்கள் நினைக்கும் நினைவு ஸ்வப்னத்தில் அநுபவம்போல் பொய்யேயன்றி மெய்யன்று. ஸ்வப்னத்தில் காண்கிற யானை குதிரை தேர் மனை மனைவி பிள்ளை முதலியவையெல்லாம் எப்படி உண்டாகின்றன வென்னில், ஈச்வரன் அந்த ஸ்வப்னம் காண்கிறவன் மாத்ரம் அந்த ஸ்வப்னகாலம் வரையிலுமே அநுபவிக்கும்படி அவரவர் புண்ய பாபங்களுக்குத் தகுந்தபடி அந்த வஸ்துக்களைப் படைத்து அநுபவிக்கச் செய்கின்றான். அந்த ஸ்வப்னம் தீர்ந்தவுடனே அவற்றை மறைந்து விடுகின்றான். ஆனதுபற்றி ஸ்வப்னங் காண்கிறவன் கண் விழித்துக்கொண்டு அந்த வஸ்துக்களைக் காண்கிறதில்லை. ஆகையால் ஸ்வப்னத்தில் காணும் வஸ்துக்கள் உண்மையே. பிறகு புலப்படுகிறதில்லை யாகையால் அவற்றைப் பொய்

யென்கிறுர்களன்றி வாஸ்தவத்தில் அவை பொய்யன்று. ஸ்வப்னத்தில் புலப்படும் வஸ்துக்கள் அக்காலத்தில் ஸுக துக்கங்களை விளைப்பது மாத்ரமே யன்றி மேன்மேலும் ஜன்ம ஜரா மரணுதி துக்கங்களுக் கிடமான ஸம்ஸாரத்தை விளைத்து மஹத்தான கெடுதியை மாருமல் நடத்திக்கொண் டிருக்கும். அதனுல் ஜீவாத்மாக்கள் தமக்கு இயற்கையில் ஏற்பட்ட அபஹதபாப்மத்வம் (பாபமற்றிருக்கை) முதலிய குணங்கள் மறையப்பெற்று வருந்துகிறுர்கள். நீ யக்ஷர்களை வதித்ததும், உன் ப்ராதாவை யக்ஷர்கள் வதித்ததும் உனக்கு ப்ரத்யக்ஷமாகவே தெரிகின்றன. அங்ஙனம் வதித்தமையாலுண்டான வேர்வை இளைப்பு முதலியவை களும் ப்ரத்க்ஷமாயிருக்கின்றன. ஆயினும் தேஹத்திற்கும் ஆத்மாவுக்கும் கொல்லப்படுகை கொல்லுகை ஆகிய இவ் விரண்டு தர்மங்களும் உண்டென்று நினைக்கை அஜ் ஞானத்தினுல் விளையுமவையென்றும், காலத்தைச் சரீரமாக வுடைய ஈஶ்வரனே கொல்லுகிறவனென்றும், வேர்வை ஶ்ரமம் முதலியவை யெல்லாம் சரீரமாகிய ப்ரக்ருதி புருஷர் மூலமாய் ஈஶ்வரனுக்கே பொருந்துமென்றும் சாஸ்த்ரங் களும் அவற்றை உணர்ந்த பெரியோர்களும் நிரூபித்துச் சொல்லுகிறுர்களாகையால், நாம் நினைப்பது ப்ரமமேயன்றி உண்மையன்று. ஆகையால் ஈஶ்வரனே காலத்தைச் சரீர மாகவுடையவனுகி அந்தந்தச் செயல்களை ஜீவன் மூலமாய் நடத்துகிறுன். ஆனதுபற்றி ப்ருதிவி முதலிய பூதங்களை யும் ஜீவாத்மாக்களையும் சரீரமாக வுடையவனும் இந்திரி யங்களால் விளையும் ஜ்ஞானங்களுக்கு விஷயமாகாதவனு மாகிய அந்த ஸர்வேஶ்வரனையே மோக்ஷத்தின் பொருட்டுப் பணிவாயாக. வாராய் த்ருவனே! உனக்கு மங்களம் உண் டாகும். ஈஶ்வரன் ஸமஸ்த சேதனங்களையும் சரீரமாக வுடையவனுகையால் இந்த யக்ஷர்களும் அவ்வீஶ்வரனுடைய சரீரங்களே. ஆகையால் அவனுடைய சரீரங்களாகிய இந்த யக்ஷர்களை நீ வதிப்பது அவ்வீஶ்வரனுக்கு த்ரோ ஹம் செய்ததேயாம். நீ இந்த முயற்சியினின்று மீண்டனை

யாகையால் உனக்கு க்ஷேமம் உண்டாகும். நீ புறப்பட்டு உன் க்ருஹத்திற்குப் போவாயாக. அந்த ஸர்வேச்வரன் இந்த்ரியங்களுக்குத் தோற்றுந் தன்மையனல்லன். ஆனால் அவனை எங்ஙனம் பணிய முடியும்? என்னில், அவன் இந்த்ரியங்களுக்கு விஷயமாகாதவனாயினும், யோகாப்யாஸத்தினால் பரிசுத்தமான மனமுடையவர்க்கு அத்தகைய மனத்தினால் பணியத் தகுந்த பாதாரவிந்தங்களுடையவன். அவன் நம்மைப்போல் ஸம்ஸாரியாயிராமை மாத்ரமேயன்றித் தன்னைப் பணிகிறவர்களின் ஸம்ஸார பந்தத்தையும் போக்கடிக்குந் திறமையுடையவன். 'ப்ரக்ருதி ஸம்பந்தமும் அதன் கார்யமுமன்றோ ஸம்ஸாரமாவது. அது ஜீவனைப்போல் பரமாத்மாவுக்கு உள்ளதே. எப்படியென்னில், அவன் ப்ருதிவி முதலிய ஸமஸ்த பூதங்களிலும் உட்புகுந்து அவற்றைச் சரீரமாக உடையவனென்கையால், அவனுக்கு ப்ரக்ருதி ஸம்பந்த முண்டென்று ஸ்பஷ்டமாய்த் தெரிய வருகின்றது. ஆகையால் அவனும் நம்மைப்போல் ஒரு ஸம்ஸாரியே யாகையால், அவன் எப்படி நம்முடைய ஸம்ஸார பந்தத்தைப் போக்க வல்லனாவான்?' என்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஸத்வாதி குண ஸ்வரூபமாகிய மாயையென்னும் ப்ரக்ருதியானது அவனுக்குச் சரீரமாக அவனிட்ட வழக்காயிருக்குந் தன்மையது. அந்த ப்ரக்ருதியை அவன் தன்னிஷ்டப்படி அடக்கி நடத்துந் திறமை யுடையவனேயன்றி அவன் அதற்கு உட்பட்டவனன்று. ஜீவனோவென்றால் அந்த ப்ராக்ருதிக்கு உட்பட்டு அதன் ஸம்பந்தத்தினால் ஜ்ஞான ஸங்கோசம் பெற்று தேஹாத்ம ப்ரமாதிகளுக்கு இடமாகி ஸம்ஸார பந்தம் மாறப் பெறாது வருந்துகிறான். ஈச்வரன் அத்தகையனன்றாகையால் ஜீவனைப்போல் அவனும் ஒரு ஸம்ஸாரியாகமாட்டான். ஆகையால் அவன் தன்னைப் பணிகின்ற நம்முடைய ஸம்ஸார பந்தத்தைப் போக்குந் திறமை யுடையவனே. வாராய் உத்தான பாதனுடைய புதல்வனாகிய மன்னவனே! தர்ம அர்த்த காமங்கள் மூன்றில் நீ எதை

மனத்தினால் விரும்புகின்றனையோ, அதை என்னிடம் வேண்டுவாயாக. நான் அதை உனக்கு நிறைவேற்றிக் கொடுக்கின்றேன். வாராய் த்ருவனே! ப்ரஹ்மாதிகளான தேவதைகளால் பூஜிக்கத் தகுந்தவனும் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனுமாகிய பத்மநாபனுடைய பாதாரவிந்தங்களில் நீ இடைவிடின்றி மிகுந்த மன விருப்ப முடையவனென்று நான் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஆகையால் உன்னிடத்தில் நான் ஸந்தோஷ முற்றிருக்கிறேன். ஆனது பற்றி நீ விரும்பும் வரத்தை நான் கொடுக்க ஸித்தமாயிருக்கின்றேன். வரம் வேண்டுவாயாக. ஆனால் மோக்ஷத்தை யொழிய மற்ற தர்ம அர்த்த காமங்களில் எதையேனும் விரும்புவாயாக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—அந்த த்ருவன் பகவானிடத்தில் பக்தியுடையவன்; மிகுந்த மதியுடையவன்; சேதன ஈச்வர தத்வங்களின் உண்மையை உள்ளபடி அறிந்தவன். பாகவதர்கள் தர்ம அர்த்த காமங்களை நரகம்போல் நினைப்பார்கள். அவர்களில் மேன்மையுற்ற அந்த த்ருவன் அத்தகைய தர்மார்த்த காமங்களை விரும்ப மாட்டானென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? அவன் இங்ஙனம் குபேரனால் வரம் வேண்டும்படி தூண்டப் பெற்றவனாகி பகவானிடத்தில் நினைவு மாறாதிருக்கும்படி வேண்டினான். பகவானிடத்தில் நினைவுமாறாதிருக்கப் பெறுவானாயின், எத்தகையர்க்கும் கடக்க முடியாத தேஹாத்ம ப்ரமத்தையும் அதன் மூலமாய் விளையும் ஸம்ஸார பந்தத்தையும் அநாயாஸமாகக் கடப்பான். ஆனதுபற்றி அவன் அதையே வேண்டினான். குபேரன் அவனுடைய வசனத்தைக் கேட்டு நிரம்பவும் மனக்களிப்புற்று அவன் விரும்பினபடியே அவனுக்கு பகவானிடத்தில் நினைவு மாறாதிருக்கும்படி அருள் செய்து, அவன் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே மறைந்தான். அந்த த்ருவனும், அங்ஙனம் வரம் பெற்றுத் தன் பட்டணத்திற்குப் போனான். அப்பால் அம்மன்னவன் புரோடாசம் முதலிய த்ரவ்யங்களும்

ருத்விக்குக்களின் வ்யாபாரங்களும் இந்த்ரன் முதலிய தேவதைகளும் கணக்கில்லாத தக்ஷிணைகளும் அமைந்த பல யாகங்களால் பகவானை ஆராதித்தான். அவனே யாகாதி கர்மங்களால் ஆராதிக்கப்படுவான்; மற்றும், அந்த யாகாதி கர்மங்களின் பலனைக் கொடுப்பவன்; அன்றியும், அவன் பாட்டன் முதலியவர் உபதேசித்தபடி ஸமஸ்த வஸ்துக்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவனும் ஸமஸ்த சப்தங்களுக்கும் பொருளாயிருப்பவனும் சுத்த ஸத்வமயமான திவ்யமங்கள விக்ரஹ முடையவனும் ஸத்வாதி குணங்கள் தீண்டப்பெறாதவனும் தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாமல் பாதுகாக்கையே பெரிய வ்ரதமாக வுடையவனும் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனுமாகிய பரம புருஷனிடத்தில் இடைவீடின்றி எவ்விதத்திலும் தடைபடாத பக்தியின் பெருக்குடையவனாகித் தன்னிடத்திலும் ஸமஸ்த பூதங்களிலும் அந்த பகவானையே ஸாக்ஷாத்கரித்தான். நல்லியற்கை நன்னடத்தை முதலிய குணங்கள் நிறைந்தவனும் ப்ராஹ்மணர்களைப் பணிவதில் உறக்க முடையவனும் தீனர்களிடத்தில் வாத்ஸல்யம் அமைந்தவனும் (தீனர்களின் தோஷங்களைப் பாராமல் அவர்களைப் பாதுகாப்பவனும்) தர்ம மர்யாதைகளை நிலை நிறுத்துமவனுமாகிய அந்த த்ருவனையே ப்ரஜைகளெல்லோரும் தந்தையாக நினைத்தார்கள். அவன் ஸுகானுபவங்களால் புண்யத்தையும் துக்கானுபவங்களால் பாபத்தையும் கழித்து (பரமபுருஷனைப் பெறுதற்கு விரோதியான புண்யபாபங்களை யெல்லாம் அனுபவத்தினால் உதறி, இருபத்தாறாயிரம் வர்ஷங்கள் வரையிலும் பூமண்டலத்தைப் பாதுகாத்து வந்தான். இங்ஙனம் பல ஆண்டுகள் நிறைந்ததும் பல யாகங்களைச் செய்து தர்ம அர்த்த காமங்களைப் பெறக்கூடியதுமான நெடுங் காலம் ஜீவித்திருப்பினும் ஒருக்காலும் தந்தமது வலிவு மாறப்பெறாமல் திடமான இந்த்ரியங்களுடையவனாயினும் அவற்றை பகவானை யொழிந்த வேறு விஷயங்களில் செல்லவொட்டாமல் தடுத்து

ஜிதேந்த்ரியனாகவே அக்காலத்தை யெல்லாம் கடத்திக் கடைசியில் ராஜஸிம்ஹாஸனத்தைத் தன் புதல்வனுக்குக் கொடுத்தான். அவன் தேவ மனுஷ்யாதி ரூபமான இந்த ப்ரபஞ்சமெல்லாம் ஜீவனிடத்தில் ப்ராக்ருத ஸம்பந்தத்தினால் ஏற்பட்டதென்றும், அந்த ப்ரபஞ்ச மெல்லாம் ப்ரக்ருதியின் பரிணாமமாகி ஸ்வப்னத்தில் புலப்படுகிற கந்தர்வ நகரம்போல் நச்வரமென்றும், ஜீவன் ஜ்ஞான ஸ்வரூபனாகி என்றும் மாறாமல் அழியாதிருப்பவனென்றும் நன்கு நினைத்திருந்தான். மற்றும், அவன், தேஹம் பெண்டிர் புதல்வர் நண்பர் இவைகளும் ஸம்ருத்தமான சதுரங்க ஸைன்யமும் அத்தகையதான கருவூலமும் அழகிய உத்யானவனம் முதலிய விளையாடு மிடங்களும் ஸமுத்ரங்களை அரைநூல் மாலையாக வுடைய பூமண்டலமும் காலத்திற்கு உட்பட்டு நிலையற்றிருப்பவை யென்று நன்றாக ஆலோசித்துத் தெரிந்துகொண்டு ஸம்ஸாரத்தைத் துறந்து பதரிகாச்ரமத்திற்குப் போனான். அவன் அந்த பதரிகாச்ரமத்தில் மங்களமான ஜலத்தில் ஸ்நானம் செய்து இந்த்ரியங்களை யெல்லாம் வேறு விஷயங்களெவற்றிலும் போகவொட்டாமல் தடுத்துப் பரிசுத்தனாகி ஸ்வஸ்திகம் முதலிய ஆஸனங்களில் இருந்து ப்ராணவாயுவை வென்று மனத்தினால் காது முதலிய இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டு ஸ்தூலமான பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தில் மனத்தை நிலைநிறுத்தி வேறு விஷயங்களில் மனம் செல்லப் பெறாதவனாகி அந்த திவ்யமங்கள விக்ரஹத்தையே த்யானித்துக்கொண்டிருந்து, அது மனத்தில் நிலைநின்ற பின்பு அதை விட்டு அந்த பகவானுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தை த்யானித்தான். இங்ஙனம் இடைவீடின்றி எப்பொழுதும் பகவானிடத்தில் மிகுந்த பக்தியை வளர்த்திக்கொண்டு வருகின்ற அந்த த்ருவன் தேஹாத்மாபிமானம் தொலையப்பெற்று ஆநந்த நீர்களால் அடிக்க வருத்தமுற்றவனும் மன உருக்கமுடையவனும் உடம்பு முழுவதும் மயிர்க்கூச்சலுடையவனுமாகி, தான் மனுஷ்யனென்றும் க்ஷத்ரியனென்றும்

உத்தானபாதனுக்கு ஸுநீதியிடத்தில் பிறந்தவனென்றும் த்ருவனென்னும் பேருடையவனென்றும் இவை முதலிய வெளி ஆகாரங்கள் எவற்றையும் நினையாமல் தன்னை மறந்திருந்தான். அந்த த்ருவன் இப்படி இருக்கையில் ஒருக்கால், ஆகாயத்தில் உதிக்கின்ற பூர்ணசந்திரன்போல் பத்துத் திசைகளையும் ப்ரகாசிக்கச்செய்வதும் ஆகாயத்தினின்று இறங்குவதுமாகிய ஓர் மேலான விமானத்தைக் கண்டான். அப்பால் அந்த விமானத்தின் நுனியில் இரண்டு திவ்ய புருஷர்களைக் கண்டான். அவ்விருவரும் யௌவனப் பருவம் தொடங்கப்பெற்றவரும் நான்கு புஜங்களுடையவரும் சிறந்தகரியர்களும் கதையை ஏந்திக்கொண்டிருப்பவரும் கிரீடம் ஹாரம் தோள்வளை இவை அணிந்தவரும் அழகிய குண்டலங்களுடையவருமா யிருந்தார்கள். அந்த த்ருவன் அவர்கள் புண்யச்லோகனான பகவானுடைய கிங்கரர்களென்று தெரிந்துகொண்டு மதுகைடபர்களைக் கொன்ற மஹானுபாவனான அந்த பகவானுடைய ஸபையில் முதன்மையுடையவரென்றும் கௌரவத்தினால் பரபரப்புற்று அவர்களுக்குச் செய்யவேண்டிய பூஜையை மறந்து பகவானுடைய நாமங்களையே மொழிந்துகொண்டு அஞ்சலிஹஸ்தனாய் நமஸ்காரம் செய்தான். அவன் பகவானுடைய பாதாரவிந்தங்களில் மிகுந்த ப்ரீதியுடன் நிலைநின்ற மனமுடையவனும் வணக்கத்தினால் தலை கவிழ்ந்தவனுமாயிருந்தான். அத்தகையனான அந்த த்ருவனைக் குறித்து பகவானுடைய கிங்கரர்களான ஸுநந்த நந்தர்களென்கிற அந்த திவ்ய புருஷர்கள் ப்ரீதியுடன் இங்ஙனம் மொழிந்தார்கள்.

ஸ்ரீவிஷ்ணு கிங்கரர்கள் சொல்லுகிறார்கள்:—வாராய் மன்னவனே! உனக்கு க்ஷேமம் உண்டாகுக. நாங்கள் சொல்லுவதை மனவூக்கத்துடன் கேட்பாயாக. நீ ஐந்து வயது பாலனாயிருக்கும்பொழுதே தவம் செய்து மஹானுபாவனான பகவானை மிகவும் த்ருப்தி அடையச் செய்தாய்.

ஸமஸ்த லோகங்களையும் படைக்குந் திறமை யுடையவனும் உலகத்தில் மேன்மை யுடையவர்களென்று ப்ரஸித்தர்களான ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கும் மேலாயிருப்பவனும் (ஸர்வேஸ்வரனும்) சார்ங்கமென்னும் வில்லேந்தின மஹானுபாவனுமாகிய பகவானுடைய கிங்கரர்கள் நாங்கள். உன்னை பகவானுடைய ஸ்தானத்திற்கு அழைத்துக்கொண்டு போவதற்காக நாங்கள் இவ்விடம் வந்தோம். அந்த ஸ்தானம் உன்னைத் தவிர மற்றவர்களால் எவ்வளவு வருந்தியும் ஸாதிக்க முடியாதது. அப்படிப்பட்ட பதவியை நீ வென்றனை. எல்லோர்க்கும் மேல் இருக்கின்ற ஸப்த ரிஷிகள் முதலிய மஹானுபாவர்களும் அந்த ஸ்தானத்தை அடைய முடியாமல் அதை வெறுமனே பார்த்துக்கொண்டிருக்கின்றார்கள். மற்றும், இந்த ஸ்தானத்தைச் சந்த்ரன் முதலிய க்ரஹங்கள் ப்ரதக்ஷிணமாகச் சுற்றுகின்றன. அத்தகையதான ஸ்தானத்திற்கு நீ வருவாயாக. அன்றியும், இந்த ஸ்தானம் ஸ்வாயம்புவமனு முதலிய உன் தந்தை பாட்டன்மார்களாலும் மற்றவர்களாலும் அடையப்படாதது. அவர்கள் இந்த ஸ்தானத்தை எப்பொழுதும் அணுகினவரன்று. வாராய் த்ருவனே! இந்த ஸ்தானம் ஸமஸ்த லோகங்களாலும் பூஜிக்கத்தகுந்த மேன்மையுடையது. எல்லாப் பதவிகளிலும் மேலாயிருப்பது; ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடையது. இப்படிப்பட்டதாகிய இந்தப் பதவியை நீ உன் தவமஹிமையால் வென்றனை. இந்த ஸ்தானத்தை நீ அடைவாயாக. வாராய் வளர்ந்த வாழ்நாளுடையவனே! உத்தம ஸ்லோகர்களில் (மிகுந்த புகழுடையவர்களில்) சிறந்த பகவான் மேன்மையுடையதான இவ்வித விமானத்தை உனக்காக அனுப்பியிருக்கிறான். இந்த திவ்ய விமானத்தின்மேல் நீ ஏறிக்கொள்வாயாக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ஸ்ரீ வைகுண்டனுடைய கிங்கரர்களில் முதன்மையுடையவரான அந்த ஸுநந்த

நந்தர்கள் மொழிந்ததும் தேன் பெருக்குபோல் மிக்க இனியதுமான அந்த வசனத்தைக் கேட்டு பகவானிடத்தில் மிகுந்த ப்ரேமம் உடையவனாகிய த்ருவன் மங்களஸ்நானம் செய்து நித்யகர்மங்களை முடித்து மங்கல அலங்காரங்களைச் செய்துகொண்டு முனிவர்களை நமஸ்கரித்து அவர்களால் ஆசீர்வாதம் செய்யப்பெற்றான். அப்பால் அந்த விமான ராஜனை ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து முன்னிருந்த உருவமே மிகுந்த ஒளிப்பெருக்குடன் கூடி விளங்கப்பெற்று அந்த விமானராஜன்மேல் ஏற விரும்பினான். அப்பொழுது துந்துபி வாத்யங்களும் ம்ருதங்கம் உடுக்கை முதலிய மற்றுமுள்ள பற்பல வாத்யங்களும் முழங்கின. மேன்மையுடையவரான கந்தர்வர்கள் மிகவும் அற்புதமாக கானம் செய்தார்கள். பூமழைகள் பொழிந்தன. அந்த த்ருவன் தீனையான தாயைத் துறந்து நான் பிறர்க்குப் பெறமுடியாத ஸ்வர்க்க லோகம் போகின்றேனே. இனி நான் அவளை எப்பொழுது காணப்பெறுவேன். அவள் வேறுகதியின்றி என்னையும் இழந்து எங்ஙனம் இருக்கப்போகிறாள்? என்று மாதாவை நினைத்துக்கொண்டான், இங்ஙனம் சிந்திக்கின்ற அந்த த்ருவனுடைய அபிப்ராயத்தை அறிந்து தேவஶ்ரேஷ்டர்களான ஸுநந்த நந்தர்கள், தேவதைகளில் தலைமையுள்ளவரால் கொண்டுவரப்பெற்ற திவ்ய விமானத்தின்மேல் ஏறிக்கொண்டு போகின்ற ஸுநீதி தேவியை அவனுக்குக் காண்பித்தார்கள். அவன் அங்ஙனம் விமானத்தின்மேல் வீற்றிருந்து போகின்ற மாதாவைக்கண்டு மனம் குளிரப்பெற்று மற்றும், ஆங்காங்கு வழியில் விமானத்தின்மேல் ஏறிக்கொண்டு உலாவுகின்ற தேவதைகளால் புகழ்ந்து புஷ்ப வர்ஷம் இறைக்கப்பெற்று ஸூர்யன் முதலிய க்ரஹங்களின் ஸ்தானங்களை க்ரமமாகக் கண்டான். அந்த த்ருவன் ஸுநந்த நந்தர்களென்கிற தேவஶ்ரேஷ்டர்கள் கொண்டு வந்த திவ்ய விமானத்தின்மேல் ஏறிக்கொண்டு மூன்று லோகங்களையும் ஸப்த ரிஷிகளையும் தாண்டி அனைத்திற்கும் மேலாயிருப்பதும் கல்பம் வரையில் அழியா

திருப்பதுமாகிய விஷ்ணுவின் ஸ்தானத்தை அடைந்தான். அந்த ஸ்தானம் மற்றொன்றை எதிர்பாராமல் தனக்குத் தானே ப்ரகாசித்துக்கொண்டிருக்குந் தன்மையது. அதனுடைய தேஜஸ்ஸினால் இம்மூன்று லோகங்களும் ப்ரகாசிக்கின்றன. ஜந்துக்களிடத்தில் மன இரக்கமில்லாதவர்கள் அந்த ஸ்தானத்தை அடையமாட்டார்கள். எவர்கள் ஸமஸ்த ஜந்துக்களிடத்திலும் க்ஷேமங்களையே செய்கின்றார்களோ, அவர்கள் அந்த ஸ்தானத்தை அடைவார்கள். (ஸத்யலோகம் சென்றவர்கள் மீண்டு வாராமல் கல்பாவஸானம் வரையில் அங்கேயே இருந்து ப்ரஹ்மாவுடன் பரமபதம் போவதுபோல் த்ருவனுடைய ஸ்தானத்திற்குப் போகிறவர்களும் அங்ஙனமே கல்பம் முடிகிறவரையில் அவ்விடம் இருந்து அப்படியே பரமபதம் பெறுவார்கள்) மற்றும், தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாத மஹானுபாவனாகிய பகவானிடத்தில் மிகுந்த ப்ரேமமுடைய பாகவதர்களையே பந்துவாகப் பெற்றவரும் சமம் தமம் முதலிய குணங்கள் அமைந்தவரும் ஸமபுத்திகளும் (தேஹங்களெல்லாம் ப்ரக்ருதியின் பரிணாமங்களாகையால் ஒருபடிப் பட்டவையென்றும், ஜீவாத்மாக்கள் அனைவரும் ஜ்ஞானமே வடிவமாகப் பெற்றவர்களாகையால், ஒருபடிப்பட்டவரென்றும் ஈஸ்வரன் ஸமஸ்த வஸ்துக்களுக்கும் அந்தர்யாமியாயிருக்கை முதலிய குணங்கள் அமைந்து ஒருவாறாயிருப்பவனென்றும் கண்டறிந்து பற்பல வகையான தேஹங்களையும் அவற்றிற்குள்ளிருக்கும் ஜீவாத்மாக்களையும் அவர்களுக்கு அந்தராத்மாவான ஈஸ்வரனையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையரும்) ஸமஸ்த பூதங்களையும் தானாநுகூலங்களால் ஸந்தோஷப்படுத்துகின்றவரும் பெரும்பாலும் ஸித்தி பெற்றவருமாகிய பெரியோர்கள் எந்த ஸ்தானத்தை ஸுகமாக அடைவார்களோ, அப்படிப்பட்ட லோகத்திற்கு அவன் போனான். சம தமாதி குணங்களாலும் ஸமஸ்த பூதங்களிடத்திலும் நட்பு செய்கை முதலிய குணங்களாலும் நிறைந்தவரான சில புருஷர்கள் ப்ரஹ்மோபாஸனத்

தில் நிலைநின்றிருப்பினும் ப்ராரப்தகர்மத்தின் மிகுதியாலும் போகேச்சையாலும் இடையூறுகளால் ப்ரஹ்மோபாஸனம் ஈடேறப்பெறாமல் ஸத்யலோகம் பெறுவதுபோல் த்ருவ லோகம் சென்று அங்கு போகங்களை அனுபவித்த பின்பு பக்தியோகம் நிறைவேறப்பெற்றவராகி மோக்ஷமும் பெறுகின்றார்கள். அப்படிப்பட்ட லோகத்தை அந்த த்ருவன் பெற்றான். பகவானையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் பற்றியிருக்கிற அந்த த்ருவன் இங்ஙனம் மூன்று லோகங்களுக்கும் மேல் சென்று நிர்மலமான ஓர் சூடாமணிபோல் ப்ரகாசித்தான். வாராய் விதுரனே! மிகுந்த வேகமுடைய எருதுகளின் கூட்டம் புணையில் கட்டுண்டிருப்பதுபோல் ஸூர்யன் சந்த்ரன் முதலிய க்ரஹங்களும் அச்விநீ முதலிய முக்ய நக்ஷத்ரங்களும் மற்றுமுள்ள தாரா நக்ஷத்ரங்களும் ஆகிய ஆகாயத்திலுள்ள ஜ்யோதிஸ்ஸமூஹங்களின் கூட்டமெல்லாம் இந்த த்ருவனிடத்தில் கொடுக்கப்பெற்று அவனையே எப்பொழுதும் சுற்றிக்கொண்டிருக்கின்றது. இத்தகையனான இந்த த்ருவனுடைய மஹிமையைப் பார்த்து மஹானுபாவரான நாரத மஹர்ஷி வீணை வாசித்துக்கொண்டே ப்ரசேதஸ்ஸுக்களின் யஜ்ஞஸத்ரத்தில் பகவானுடைய மஹிமையைப்பற்றி ப்ரஸங்கத்தில் பகவானுடைய அனுக்ரஹத்தினால் பதவியைப்பெற்ற த்ருவனுடைய மஹிமையை இங்ஙனம் பாடினார்.

நாரதர் சொல்லுகிறார்:—பதிவ்ரதையை [illegible]யாகவுடைய ஸுநீதியின் புதல்வனாகிய த்ருவனுடைய தவத்தின் ப்ரபாவத்திற்கு நேர்ந்த பலனான பதவியையும் பகவானுடைய ஆராதனரூபமான அதன் உபாயங்களையும் கண்டு, வேதத்தை ஓதி உணர்ந்த மஹர்ஷிகளும் அவ்வுபாயங்களை ஆசரித்து அந்த கதியைத் தாம் பெறுதற்கு வல்லமையற்றிருக்கின்றார்கள். இனி மன்னர்கள் அந்த கதியைப் பெற வல்லரல்லரென்பதுபற்றிச் சொல்லவும் வேண்டுமோ? இந்த த்ருவன் தன்னுடைய தாயின்

சக்களத்தியாகிய ஸுருசியின் வார்த்தைகளாகிற பாணங்களால் பிளக்கப்பெற்று வருந்துகின்ற மனத்துடன் ஐந்து வயது பாலனாயிருக்கும்பொழுதே வனத்திற்குச் சென்று அங்கு என்னுடைய கட்டளையின்படி இருந்து ஒருவராலும் வெல்லமுடியாத பகவானை, அவனிடத்தில் பக்தியுள்ளவர் ஆசரிக்கிற நற்குணங்களால் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டான். பூமியிலுள்ள மற்றொரு க்ஷத்திரியன் பலவாயிரமாண்டுகள் பிரயத்னம் செய்யினும் அந்த த்ருவன் பெற்ற பதவியைப் பெறுதற்கு நெஞ்சால் விரும்பவும் வல்லனன்று. அந்த த்ருவன் ஐந்து வயது பாலனாயிருக்கும்பொழுதே சில நாட்களிலே பரம புருஷனை அருள்புரியச்செய்து கொண்டு அப்படிப்பட்ட பதவியைப் பெற்றான்.

மைத்ரேயர் சொல்லுகிறார்.—விதுரனே! நீ என்னை எதைப்பற்றி வினவினையோ, அதையெல்லாம் உனக்கு மொழிந்தேன். த்ருவன் மேலான புகழுடையவன். அவனுடைய சரித்ரம் ஸ்ரீ விஷ்ணு பக்தர்களுக்கு மிகவும் ஸம்மதமாயிருக்கும். இந்த த்ருவ சரித்ரம் பணம் வேண்டுமென்னும் விருப்பத்தினால் கேட்கிறவர்களுக்கும் கேட்பிக்கிறவர்களுக்கும் பணத்தை ஸம்பாதித்துக் கொடுக்கும்; அங்ஙனமே யசஸ்ஸை விரும்புகிறவர்களுக்கு அதையும், ஆயுளை விரும்புகிறவர்களுக்கு அதையும் விளைக்கும். மற்றும் மங்களத்தைக் கொடுக்கும்; ஸ்வர்க்கத்தையும் கொடுக்கும்; த்ருவனுடைய ஸ்தானத்தையும் விளைக்கும்; மனவருத்தங்களையெல்லாம் போக்கும்; மேன்மையை விளைக்கும். (இதை கேட்கிறவர்களும் கேட்பிக்கிறவர்களும் அனைவரினும் சிறப்புடையவராவார்கள்.) பாபங்களையெல்லாம் தொலைக்கும். தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாத பகவானிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனாகிய த்ருவனுடைய சரித்ரத்தை எவன் அடிக்கடி ஶ்ரத்தையுடன் கேட்கின்றனோ, அவனுக்கு பகவானிடத்தில் பக்தி உண்டாகும். பகவானிடத்தில் பக்தி உண்டாகுமாயின், அதனால் ஆத்

யாத்மிகம் முதலிய ஸம்ஸார தாபங்களெல்லாம் தொலையும். இந்த த்ருவ சரித்ரம், எல்லோரிலும் மேன்மையுற்றிருக்க வேண்டுமென்று விரும்புகிறவர்களுக்கு அத்தகைய மேன்மையை விளைக்கும். இந்தச் சரித்ரத்தைக் கேட்கிறவர்களுக்கு சீலம் முதலிய குணங்கள் உண்டாகும். இந்த த்ருவ சரித்ரத்தைக் கேட்பதனால், தேஜஸ்ஸை விரும்புகிறவன் அதைப்பெறுவான்; பகவானிடத்தில் ஆழ்ந்த மனமுடையவராயிருக்குந் தன்மையை விரும்புகிறவர்களுக்கு அத்தன்மை உண்டாகும். காலை மாலை இரண்டு வேளைகளிலும் மனவூக்கமுடையவனாகி ப்ராஹ்மணர்களின் ஸபையில், புண்ய ச்லோகனாகிய (பரிசுத்தமான புகழுடையவனும், பரிசுத்தர்களால் புகழத் தகுந்தவனுமாகிய) இந்த த்ருவனுடையதான பெரிய சரித்ரத்தைப் பாராயணம் செய்வானாயின், அவனுடைய விருப்பங்களையெல்லாம் இது நிறைவேற்றிக் கொடுக்கும். பௌர்ணிமை அமாவாஸ்யை ச்ரவண நக்ஷத்ரத்துடன் கூடின தினம் ஞாயிற்றுக்கிழமை ஸப்தமி திதி இவைகளில் இந்த த்ருவ சரித்ரத்தைப் பாராயணம் செய்வானாயின், விருப்பங்களெல்லாம் கைகூடப் பெறுவான். இந்த த்ருவ சரித்ரம் எவன் எதை விரும்பினும் அதையெல்லாம் நிறைவேற்றிக் கொடுக்குந் தன்மையது. கங்கையென்னும் புண்ய தீர்த்தத்திற்கு உற்பத்தி ஸ்தானமாகிய பாதாரவிந்தத்தையுடைய பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பற்றியிருக்கும் பலனொன்றையும் விரும்பாமல் கேட்க வேண்டுமென்னும் ச்ரத்தையுடையவர்களுக்கு இந்த த்ருவ சரித்ரத்தை மொழிவானாயின், அவனிடத்தில் பகவான் ஸந்தோஷமடைந்து அவனுக்கு மோக்ஷ ஸித்தியைக் கொடுப்பான். சித்து அசித்து ஈச்வரன் என்கிற மூன்று தத்வங்களின் உண்மையை அறியாத ஒருவனுக்கு, பெரியோர்கள் கொண்டாடுவதும் அழிவில்லாததும் பகவானுடைய பதவியை அறிவிப்பதுமாகிய தத்வ ஜ்ஞானத்தை உட்கொண்டதாகிய இந்த த்ருவ சரித்ரத்தை மொழிவானாயின், அவன் தயாளுவென்றும் தேவர்களுக்கு

நாதனென்றும் புகழப்படுவான். மற்றும், அத்தகையனான அவனுக்கு தேவதைகள் அனைவரும் அனுக்ரஹம் செய்வார்கள். வாராய் கௌரவகுலாலங்காரனே! இந்த த்ருவ சரித்ரம் ப்ரஸித்தமானது; கேட்பவர்களின் பாபங்களையெல்லாம் போக்கும்படியான தூய்மை யுடையது. அப்படிப்பட்ட த்ருவ சரித்ரத்தை உனக்கு மொழிந்தேன். இந்த த்ருவன் குழந்தையாயிருக்கும்பொழுதே மாதாவினுடைய ஸந்நிதானத்தையும் விளையாட்டுக் கருவிகளான பூம்புட்டில் முதலியவைகளையும் துறந்து ஸ்ரீ மஹாவிஷ்ணுவைச் சரணம் அடைந்தான். அவனுடைய மன உறுதியை என்னென்று சொல்லுவேன்? அப்படிப்பட்ட அந்த த்ருவனுடைய சரித்ரத்தை யெல்லாம் உனக்கு மொழிந்தேன். பன்னிரண்டாவது அத்யாயம் முற்றிற்று

---

## ப்ருது சக்ரவர்த்தியின் சரித்ரம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் மைத்ரேயர், த்ருவன் வைகுண்டலோகம் ஏறின வ்ருத்தாந்தத்தை மொழியக் கேட்டு, மேலும் பகவானிடத்தில் பக்தி வளரப் பெற்ற விதுரர் அந்த மைத்ரேயரைப் பார்த்து மேல் வருமாறு வினவத் தொடங்கினார்.

விதுரர் சொல்லுகிறார்:—பகவானுடைய சரித்ரங்களைத் தவிர மற்றெதையும் நெஞ்சிலும் நினைக்கலாகாதென்கிற வ்ரதம் மாறாதிருக்கப்பெற்றவரே! மைத்ரேய மஹர்ஷீ! ப்ரசேதஸ்ஸுக்களின் ப்ரஹ்மஸத்ரத்தில் நாரத முனிவர் த்ருவனுடைய மஹிமையைப் பாடினாரென்று நீர் சொல்லக் கேட்டேன். அந்த ப்ரசேதஸ்ஸுக்களென்பவர் யாவர்? அவர் யாருடைய புதல்வர்? யாருடைய வம்சத்தில் பிறந்தவராகப் புகழ்பெற்றவர்? அவர்கள் எவ்விடத்தில் ப்ரஹ்ம

ஸத்ரம் நடத்தினார்கள்? நாரதர் பாகவதர்களில் (பகவானிடத்தில் பக்தியுடையவர்களில்) சிறந்தவரென்று நினைக்கின்றேன். தத்வோபதேசத்தினால் பகவானுடைய ஸாக்ஷாத்காரத்திற்கு உபாயமாயிருக்கிறாரல்லவா? சேதன அசேதன தத்வங்களின் உண்மையையும் அவற்றிற்கு நிர்வாஹகனான ஈச்வரனுடைய உண்மையையும் அறிவித்து உலகமெல்லாம் பரமபுருஷனை ஸாக்ஷாத்கரிக்கும்படி செய்கின்றாரல்லவா? இவர் பஞ்சராத்ரம் முதலிய சாஸ்த்ரங்களின் மூலமாய் பகவானை ஆராதிக்கவேண்டும் விதமாகிற க்ரியாயோகத்தை உலகங்களுக்கு உபதேசித்தாரல்லவா? அந்த நாரதர் பகவானிடத்தில் மிகுந்த பக்தியுடையவர். உலகத்திலுள்ளவர் அனைவரும் தந்தமது வர்ணாச்ரமங்களுக்கு உரியவைகளும் பகவானுடைய ஆராதன ரூபங்களுமான பஞ்ச மஹா யஜ்ஞாதி கர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு யஜ்ஞங்களில் கொடுக்கிற ஹவிர்ப் பாகங்களைப் புசிப்பவனும் யஜ்ஞங்களுக்கு ப்ரபுவுமாகிய பகவானை ஆராதிக்கவேண்டுமென்று உலகங்களின் க்ஷேமத்திற்காக மொழிந்தார். (மைத்ரேயனுக்கு [illegible] ஆராதிக்கப்படுமவனாகிய பகவானுடைய ஆராதனங்களை இவை யென்னும் நினைவுடன் அனைவரும் தந்தமது வர்ணாச்ரமங்களுக்குரிய தர்மங்களை அனுஷ்டிக்கவேண்டு மென்று முறையிடுகிற பஞ்சராத்ரம் முதலிய சாஸ்த்ரங்களை உலகத்திலுள்ளவர் அனைவரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி வெளியிட்டார். இப்படி மஹோபகாரம் செய்த அந்நாரத பகவானுடைய மேன்மையை என்னென்று சொல்லலாம்.) தேவரிஷியாகிய அந்த நாரத பகவான் ப்ரசேதஸ்ஸுக்களின் ப்ரஹ்ம ஸத்ரத்தில் எந்தெந்த பகவத் கதைகளை மொழிந்தாரோ, அவற்றை யெல்லாம் கேட்கவேண்டு மென்று எனக்கு மிகவும் விருப்பமாயிருக்கின்றது. ஓ ப்ராஹ்மணோத்தமரே! அவற்றை எனக்கு மொழிவீராக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—த்ருவனுடைய புதல்வன் உத்கலனென்பவன். அவன் தன் தந்தையாகிய த்ருவன் வனத்திற்குப் போகும்பொழுது பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவா யிருக்கையாகிற பெரிய ஐஶ்வர்யத்தையும், ராஜ ஸிம்ஹாஸனத்தையும் விரும்பாமலே யிருந்தான். அங்ஙனம் அவன் விரும்பாமைக்குக் காரணம் என்னென்னில், சொல்லுகிறேன், கேட்பாயாக. அந்த உத்கலன் பிறந்தது முதல் ராகாதி தோஷங்களால் கலங்காத மனமுடையவனும் ஒன்றிலும் பற்றில்லாதவனும் எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையனுமாகி, சரீரங்கள் தோறும் ஆத்மா உளனென்றும், அவன் அணுஸ்வரூபனென்றும், ஆயினும் அவன் ஜ்ஞானத்தினால் அந்தச் சரீரங்களில் கால் முதல் தலைவரையில் வ்யாபித்திருப்பவனென்றும், சரீரங்களெல்லாம் அந்த ஆத்மாவால் தரிக்கப்பட்டவை யென்றும் அறிந்து சரீரங்களில் ஆத்மாவையும், ஆத்மாவில் சரீரங்களையும் கண்டான். ஸ்வரூபத்தினால் அணுவாயிருப்பவனும் தர்மபூத ஜ்ஞானத்தினால் பெருமையுடையவனாகையால் ப்ரஹ்மமென்று கூறப்படுகின்றவனும் ஆநந்த ஸ்வரூபனும் இயற்கையில் தேஹத்தினின்று விடுபட்டவனும் (தேஹஸம்பந்த மற்றவனும்) ஜ்ஞானமே முக்ய ஸ்வரூபமாயிருக்கப்பெற்றவனும் ஜ்ஞானமில்லாத பாகம் சிறிதுமில்லாதவனும் நித்ய ப்ரகாசனும் ஆநந்த குணமுடையவனும் எவ்வகை விகாரங்களுமின்றி என்றும் அழியாதவனுமாகிய ஆத்மாவின் ஸ்வரூபத்தை அநுஸந்தித்துக் கொண்டு, என்றும் மாறாமல் தொடர்ந்து வருகின்ற அந்த ஆத்மஜ்ஞான யோகமாகிற அக்னியினால் புண்ணிய பாப ரூபமான கர்மமாகிற அழுக்கெல்லாம் பஸ்மமாகப்பெற்று நிர்மலமான மனமுடைய அவ்வுத்கலன் ஆத்ம ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறுபட்டதும் புருஷார்த்த மாகாததுமாகிய தேஹத்தையும் அதைத் தொடர்ந்த பிள்ளை பெண்டிர் முதலியவற்றையும் நினைக்காமலே இருந்தான். மூடன் குருடன் செவிடன் பித்தம் பிடித்தவன் ஊமை

இவர்களோடொத்த வேஷமுடையவனும் புத்தியில் அவர்களோடொவ்வாதவனுமாகி, ஜ்வாலைகள் ஓய்ந்து நீறு பூத்திருக்கின்ற நெருப்புபோன்று, பாலர்கள் இருக்கும் வழியில் நிலைநின்று புலப்பட்டுக்கொண்டிருந்தான். (அவன் தான் ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்து அதைத் தவிர்த்த மற்று எதிலும் மனப்பற்றின்றி அந்த ஜ்ஞானயோக மஹிமையால் பாபங்களெல்லாம் தீர்ந்து பரிசுத்தனாயிருந்தும் தான் அத்தன்மையனாயிருப்பதைப் பிறர்க்கு வெளியிடாமல் பாலர்கள் தமது பெருமையை வெளியிடத் தெரியாதிருப்பதுபோல் இருந்தான்.) அவன் அங்ஙனம் இருக்கையில், த்ருவனுடைய வம்சத்திலுள்ள வயது சென்ற க்ஷத்ரியர்கள் மந்த்ரிகளுடன் கலந்து ஆலோசித்து, அந்த உத்கலனை மூடனென்றும் பைத்யம் பிடித்தவனென்றும் நிச்சயித்து அவனைத் துறந்து ப்ரமியென்பவளுடைய புதல்வர்களில் இளையவனாகிய வத்ஸரனென்பவனை மன்னவனாக ஏற்படுத்தினார்கள். அந்த வத்ஸரனுடைய பார்யை ஸர்வருத்தியென்னும் பேருடையவள். அவள் சீலாதி குணங்களால் அந்த வத்ஸரனுக்கு மிகவும் அன்பிற்கிடமாயிருந்தாள். அவள் புஷ்பார்ணன் திக்மகேது இஷன் ஊர்ஜன் வஸு ஜயன் என்று ஆறு பிள்ளைகளைப் பெற்றாள். அவ்வறுவர்களில் மூத்தவனாகிய புஷ்பார்ணனுக்கு ப்ரபையென்றும் தோஷையென்றும் இரண்டு பார்யைகள் இருந்தார்கள். அவ்விருவர்களில் ஒருத்தியாகிய ப்ரபைக்கு ப்ராதரென்றும் மத்யந்தினமென்றும் ஸாயமென்றும் மூன்று பிள்ளைகள் உண்டானார்கள். மற்றொருத்தியாகிய தோஷைக்கு ப்ரதோஷமென்றும் நிசிதமென்றும் வ்யுஷ்டியென்றும் மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். தோஷையின் புதல்வர் மூவரில் வ்யுஷ்டியென்பவன் புஷ்கரிணியென்னும் தன் பார்யையிடத்தில் ஸர்வதேஜஸனென்னும் பிள்ளையைப் பெற்றான். அந்த ஸர்வதேஜஸன் ஆகூதியென்னும் பத்னியிடத்தில் சக்ஷுஸ்ஸென்னும் பேருடைய ஓர் புதல்வனைப் பெற்றான். அவன் மனுவென்று மற்றொரு நாம

தேயமும் பெற்றான். சக்ஷுஸ்ஸென்று ப்ரஸித்தனாகிய அந்த மனுவின் பார்யையாகிய நட்வலை யென்பவள், புருகுத்ஸன் த்ரிதன் த்யும்னன் ஸத்யவான் ருதன் வ்ரதன் அக்னிஷ்டோமன் அதிராத்ரன் ப்ரத்யும்னன் சிபி உல்முகன் என்று பன்னிரண்டு புதல்வர்களைப் பெற்றாள். அவர்கள் அனைவரும் பரிசுத்தர்களா யிருந்தார்கள். அவர்களில் உல்முகன் புஷ்கரிணியென்னும் தன் பார்யையிடத்தில் அங்கன் ஸுமனஸ்ஸு ஸ்வாதி க்ரது ஆங்கிரஸ்ஸு கயன் என்று ஸ்ரேஷ்டர்களான ஆறு பிள்ளைகளைப் பெற்றான். அவர்களில் அங்கனுடைய பார்யை ஸுநீதை யென்பவள். அவள் வேனனென்கிற ஓர் புதல்வனைப் பெற்றாள். அவன் கொடிய துர்ப்புத்தியனாயிருந்தான். அந்த வேனனுடைய துஷ்ட ஸ்வபாவத்தைப் பொறுக்கமுடியாமல், அவனுடைய தகப்பனும் ராஜர்ஷியுமாகிய அங்கன் மிகவும் வருத்தமுற்றுப் பட்டணத்தினின்று புறப்பட்டுப் போனான். வாராய் விதுரனே! முனிவர்கள் அவனுடைய துர்நடத்தையைக் கண்டு பொறுக்கமுடியாமல் கோபங்கொண்டு, வாக்கையே வஜ்ராயுதமாகவுடைய அவர்கள் அந்த வேனனைச் சபித்தார்களாம். அவன் அந்தச் சாபத்தினால் ப்ராணன்களை இழந்த பின்பு, அவனது வலக்கையை அம்முனிவர்கள் மீளவும் கடைந்தார்கள். அதற்குக் காரணம் சொல்லுகிறேன், கேட்பாயாக. அங்ஙனம் முனிவரது சாபத்தினால் வேனன் ப்ராணன்களை இழக்கையில், உலகமெல்லாம் அராஜகமாயிற்று. ஆனதுபற்றி ப்ரஜைகள் எல்லோரும் பாதுகாப்பவனில்லாமையால் திருடர்களால் பீடிக்கப்பெற்று வருந்தினார்கள். அப்பொழுது ப்ருது வென்னும் மன்னவன் உண்டானான். அவன் அரசர்களில் முதன்மையானவன்; ஸ்ரீமந்நாராயணனம்சம். அவனே இந்த பூமியில் பட்டணங்கள் க்ராமங்கள் முதலியவற்றை யெல்லாம் ஏற்படுத்தினான்.

விதுரர் சொல்லுகிறார்:—அந்த அங்கனென்னும் ராஜர்ஷி ஸீல நிதியென்னும் (நன்னடத்தைக்கு நிதிபோன்

றவனென்றும்,) ப்ராஹ்மணர்களைப் பணிவதில் மிக்க மன ஊக்கமுடையவனென்றும், பாப்ராஹ்மத்தினிடத்தில் நிலை நின்றவனென்றும், ஸர்வஜ்ஞத் ஸ்வரூபமான பரப்ராஹ்மத்தை உபாஸிப்பதில் ஸ்வாதீனமான மனமுடையவனென்றும், மஹானுபாவனென்றும், பிறர் கார்யத்தை நிறைவேற்றுந் தன்மையனென்றும் சொல்லக் கேட்டிருக்கின்றேன். அவன் தனது புதல்வனுடைய அக்ரமத்தைக் கண்டு பொறுக்க முடியாமல் மனவருத்தத்தினால் பட்டணத்தினின்று புறப்பட்டுப் போனானென்றீர். தர்மிஷ்டனாகிய அவ்வாசனுக்கு துஷ்டனான புதல்வன் எந்தக் காரணத்தினால் பிறந்தான்? துஷ்டர்களை தண்டிக்கையே வ்ரதமாகப்பெற்ற வேனராஜனிடத்தில் தர்மந் தெரிந்தவரான முனிவர்கள் எந்த அபராதத்தைக்கண்டு அவனைச் சபித்தார்கள்? முனிவர்கள் தர்மஸூக்ஷ்மத்தை நன்றாக உணர்ந்தவரல்லவா? அவர்கள் ப்ரஜைகளைப் பாதுகாக்கையாகிற தர்மத்தில் நிலைநின்ற மன்னவனைச் சபித்தது எங்ஙனம் தர்மமாகும். ப்ரஜைகளைப் பாதுகாக்குந் தன்மையுள்ள மன்னவன் அபசாரஞ் செய்திருப்பினும், ப்ரஜைகள் அவன்மேல் கோபிக்கலாகாது. ஏனென்னில், இம்மன்னவன் லோகபாலர்களின் தேஜஸ்ஸை தரிக்கின்றான். ஆனதுபற்றியே இவன் மிகுந்த ஒளியுடன் விளங்குகின்றான். ஆகையால் அத்தகைய மன்னவனாயிருந்த வேனனை, ரிஷிகள் சபித்ததற்குக் காரணம் ஏன்? வாரீர் அந்தணர் தலைவரே! மைத்ரேய மஹர்ஷீ! ஸுநீதையின் புதல்வனாகிய இந்த வேனனுடைய நடத்தையை எனக்கு மொழிவீராக. கேட்க வேண்டுமென்று விரைகின்றவனும் பக்தனுமாகிய எனக்கு இந்த வேனவ்ருத்தாந்தத்தை உரைப்பீராக. நீர் பரமாத்மஸ்வரூபத்தையும் அவனுக்கு உட்பட்ட ப்ரக்ருதி புருஷர்களின் ஸ்வரூபத்தையும் அறிந்தவர்களில் மேன்மையுற்றவர். உமக்குத் தெரியாதது மற்றொன்றும் இல்லை. ஆகையால் நீர் நான் வினவினதை மொழிய வல்லவரே. அதை மொழிவீராக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ராஜர்ஷியாகிய அங்கன் யாகங்களில் சிறந்ததாகிய அஸ்வமேத யாகத்தைச் செய்தான். அந்த அஸ்வமேத யாகத்தில் வேதங்களை ஓதி உணர்ந்தவர்களான ருத்விக்குகள் விதிப்படி மந்த்ரங்களைச் சொல்லி தேவதைகளை அழைக்கையில், அவர்கள் வரவில்லை. அப்பனே! அப்பொழுது ருத்விக்குகள் தேவதைகளை அழைத்தும் அவர்கள் வாராமையால் வியப்புற்று யஜமானனாகிய (யாகம் செய்பவனாகிய) அங்கராஜனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார்கள்.

ருத்விக்குகள் சொல்லுகிறார்கள்:—வாராய் மன்னவனே! நீ தேவதைகளை உத்தேசித்துக் கொடுத்த ஹவிஸ்ஸுக்களை நாங்கள் விதிப்படி மந்த்ரங்களைச் சொல்லி ஹோமம் செய்கின்றோம். அவை எவ்வகைக் கெடுதியுமின்றி ஸாரமுடையவைகளாகவே இருக்கின்றன. ஆயினும் அந்தப் புரோடசம் முதலிய ஹவிஸ்ஸுக்களை தேவதைகள் அங்கீகரிக்கவில்லை. வாராய் மன்னவனே! ஹவிஸ்ஸுக்கள் ஒரு தோஷமின்றிப் பரிசுத்தங்களும் உன்னால் ச்ரத்தையுடன் ஸம்பாதிக்கப்பட்டவைகளுமாயிருக்கின்றன. மற்றும், யாகத்தில் உச்சரிக்கவேண்டிய மந்த்ரங்களும் ஸ்வரம் வர்ணம் முதலிய எவ்வகையிலும் கெடுதியின்றி வீர்யமுடையவைகளாகவே இருக்கின்றன. ஸ்வரத்திலும் எழுத்திலும் எவ்வகைப் பிழையுமின்றி மந்த்ரங்களை உச்சரிக்கையாகிற வ்ரதத்தில் திடமாக ஊன்றியிருப்பவர்களான ருத்விக்குகள் மந்த்ரங்களை முறையே உச்சரிக்கின்றார்கள். தேவதைகள் நாம் செய்யும் கர்மங்களை நேரே பார்க்குந் திறமையுடையவர். அவர்கள்வாராமைக்குக் காரணமான ஒருவித பிழையும் இந்த யாகத்தில் எங்களுக்குப் புலப்படவில்லை. ஆயினும் அந்த தேவதைகள் வரக் கண்டிலோம். அவர்கள் வாராமைக்குக் காரணமான பிழை ஏதேனும் ஒன்று இருக்கவேண்டும். ஆனால் அது நமக்குத் தெரியவில்லை.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—அப்பால் யஜமானனாகிய அவ்வங்கராஜன் அங்ஙனம் ப்ராஹ்மணர்கள் மொழிந்த வசனத்தைக் கேட்டு மிகுதியும் மனவருத்தமுற்றவனாகி யாகத்தில் மௌன வ்ரதத்தை ஏற்றுக்கொண்டிருப்பினும், ஸபையிலுள்ளவர்களைப் பார்த்து அவரது அனுமதியால் மௌன வ்ரதத்தைத் துறந்து, அந்த தேவதைகள் வாராமையின் காரணத்தை வினவத் தொடங்கி இங்ஙனம் மொழிந்தான்.

மன்னவன் சொல்லுகிறான்:—இந்த யாகத்தில் தேவதைகள் அழைக்கப்பெற்றவராகியும் வரவில்லை. ஸோமரஸம் வைத்திருக்கின்ற பாத்ரங்களையும் அங்கீகரிக்கவில்லை. வாரீர் ஸபையிலுள்ள பெரியோர்களே! நான் என்ன அபராதம் செய்தேன்? அதை நீங்கள் மொழிவீர்களாக.

ஸபையிலுள்ளவர் சொல்லுகிறார்கள்:—அரசே மன்னவனே! இங்ஙனம் ப்ராஹ்மவித்தாகிய உனக்கு இந்த ஜன்மத்தில் சிறிதும் குறையாயினும் கிடையாது. ஆனால், பூர்வ ஜன்மத்தில் உனக்கு ஓர் பாபம் உண்டு. அந்தப் பாபத்தினால்தான் நீ இந்த ஜன்மத்தில் இவ்வளவு நற்குணங்கள் அமைந்திருந்தும் ஸந்ததியற்றிருக்கின்றனை. ஆகையால் தேவதைகள் நேரே வந்து ஹவிர்ப்பாகங்களை வாங்கும்படி வரவில்லை. நீ ஸந்ததியுடையவனாவாயாக. உனக்கு க்ஷேமம் உண்டாகுக. அதெப்படியென்னில், சொல்லுகிறோம். மன்னவனே! யஜ்ஞபோக்தாவான (யஜ்ஞங்களில் கொடுக்கிற ஹவிஸ்ஸுக்களையெல்லாம் இந்த்ராதி தேவதைகளுக்கு அந்தர்யாமியாயிருந்தும் தானே நேராகவும் புஜிப்பவனாகிய) பகவானை நீ பிள்ளை வேண்டுமென்னும் விருப்பத்துடன் ஆராதிப்பாயாயின், அவன் உனக்குப் புதல்வனைக் கொடுப்பான். அப்படியாயின் தேவதைகள் நேரில் வந்து தந்தமது பாகங்களை வாங்கிக் கொள்வார்கள். யஜ்ஞங்களால் ஆராதிக்கப்படும் மஹாநு

பாவனாகிய பரமபுருஷனைப் பிள்ளை வேண்டுமென்னும் விருப்பத்தினால் சரணம் அடைவாயாயின், அதைப்பற்றி அந்த பகவானுடன் தேவதைகள் அனைவரும் தாமே வருவார்கள். 'பகவானிடத்தில் மிகவும் அற்பமான விருப்பங்களை நாம் எப்படி வேண்டலாம்? அவன் தான் இந்த அற்ப புருஷார்த்தங்களை எப்படிக் கொடுப்பான்?' என்று சங்கிக்கவேண்டாம். (ஸந்ததி இல்லாத மனுஷ்யன் மனுஷ்யனே யல்லன். அவன் எவ்வளவு ஸம்பத்துடையவனாயினும் நிறைவாளனாகமாட்டான். ஆகையால் ஸந்ததியை அற்ப புருஷார்த்தமென்று உபேக்ஷிக்கலாகாது.) எவனெவன் எந்தெந்த விருப்பங்களை வேண்டுகிறானோ, அவ்வவற்றை யெல்லாம் பரம புருஷன் கொடுக்க ஸித்தமாயிருக்கின்றான். ஜனங்கள் பகவானை எங்ஙனம் ஆராதிக்கின்றார்களோ, அங்ஙனமே அவர்க்குப் பலனும் உண்டாகும். ஆகையால் புதல்வனைப் பெறவிரும்பி பரம புருஷனை ஆராதிப்பாயாக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ருத்விக்குகள் இங்ஙனம் நிச்சயித்துக்கொண்டு அவ்வங்கராஜனுக்கு ஸந்ததி உண்டாகும்பொருட்டு, சிபிவிஷ்டனென்று கூறப்படுகிற (மஹாதேஜஸ்வியாய் ப்ரகாசித்துக்கொண்டிருப்பவனாகிய) விஷ்ணுவின் பொருட்டுப் புரோடாசமென்னும் ஹவிஸ்ஸை அக்னியில் ஹோமம் செய்தார்கள். அந்த அக்னியினின்று ஸ்வர்ணமயமான ஆடைகளை உடுத்த ஓர் திவ்ய புருஷன் நன்கு பக்வமான பாயஸான்னத்தை ஸ்வர்ண பாத்ரத்தில் எடுத்துக்கொண்டு கிளம்பினான். புத்தியிற் சிறந்தவனாகிய அம்மன்னவன் ப்ராஹ்மணர்களால் அனுமதி செய்யப் பெற்றவனாகிக் கைகளில் அந்தப் பாயஸான்னத்தை வாங்கிக் கொண்டு தான் மோந்து பார்த்து ஸந்தோஷமுற்று அதைத் தன் பத்னி கையில் கொடுத்தான். அவ்வாசனது பத்னியாகிய ஸுநீதையும் பிள்ளையைப் பிறப்பிக்கும் திறமையுடையதாகிய அந்தப் பாயஸான்னத்தைப் புசித்து பர்த்தாவிடத்தி

னின்று கர்ப்பம் தரித்தாள். ஸந்ததியில்லாத அம்மாதரசி க்ரமத்தில் ப்ரஸவகாலம் வருகையில் புதல்வனைப் பெற்றாள். அப்புதல்வன் பால்யம் முதற்கொண்டே, அதர்மத்தின் அம்சமும் தனது மாதாமஹனும் (தாயைப்பெற்ற பாட்டனும்) ஆகிய ம்ருத்யு வென்பவனை அனுஸரித்திருந்தான். (ஸுநீதையென்பவள் ம்ருத்யுவின் புதல்வியென்று முன்னமே மொழிந்தோமல்லவா. அந்த ம்ருத்யு யென்பவன் அதர்மத்தின் அம்சமாகப் பிறந்தவன். ஆகையால் அவன் அதர்மிஷ்டனாயிருந்தான்). அவனுடைய பெண்வயிற்றுப் பேரனாகிய இந்த பாலனும் அவனையே தொடர்ந்து அதர்மிஷ்டனாயிருந்தான். அந்த அங்கராஜனது புதல்வன் தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு அதில் பாணத்தைத் தொடுத்து வேட்டையாடத் தொடங்கிக் காடுகளில் திரிபவனாகி, துஷ்ட ஸ்வபாவனாகையால் எவ்வகை அபராதமும் செய்யாமல் மன இரக்கத்திற்கிடமான ம்ருகங்களை ஹிம்ஸித்துக்கொண்டிருந்தான். இங்ஙனம் துஷ்ட ஸ்வபாவனாயிருக்கையால் அவனைக் கண்டவுடனே ஸமஸ்த ஜனங்களும் 'இதோ வேனன் வருகின்றான்' என்று பயந்து இரைச்சவிட்டுக் கொண்டிருந்தார்கள். கொடுந்தன்மையனாகிய அந்த அங்கராஜன் மகன், உத்யானம் முதலிய விளையாடுமிடங்களில் விளையாடிக்கொண்டிருக்கின்ற இளைஞர்களையும் யௌவனப் பருவமுடையவர்களையும் சிறிதும் மன இரக்கமின்றிக் கொன்று பசுக்களை ஹிம்ஸித்துக்கொண்டிருந்தான். அந்த அங்க மன்னவன் துர்ப்புத்தியாகிய தன் புதல்வனைப் பலவாறு (ஸாமம் முதலிய உபாயங்களால்) எவ்வளவு திருத்தப் பார்க்கினும் அவன் திருந்தாமையால் 'இவனை நம்மால் திருத்த முடியாது' என்று தெரிந்து கொண்டு அவன் மிகவும் மனவருத்தமுற்றான். அவ்வரசன் தன் மனத்தில் இங்ஙனம் வெறுப்புடன் சிந்தித்தான். 'எவர்கள் க்ருஹஸ்தாஸ்ரமத்தில் இருந்துகொண்டு பிள்ளையில்லாமல் ஸந்ததியற்றிருக்கின்றார்களோ, எவர் பிள்ளைகளைப் பெற்றும் துஷ்ட ஸ்வபாவமுடைய பிள்ளைகளால்

விளைகின்ற பொறுக்கமுடியாத பெருந்துயரத்தை அடையாமல் நல்ல பிள்ளைகளைப்பெற்று வாழ்கின்றார்களோ, அவர்கள் ஜன்மாந்தரத்தில் பெரும்பாலும் பகவானை நன்றாக ஆராதித்திருக்கவேண்டும். இல்லையாயின் அங்ஙனம் நேராது. துஷ்ட ஸ்வபாவரான புதல்வர்களைப் பெறுவதைக் காட்டிலும் பிள்ளையில்லாமையே மிகவும் மேன்மையாம். நல்ல பிள்ளைகளைப் பெறுவார்களாயின் அது ஜன்மாந்தர புண்யத்தின் பலனே. ஏனென்னில், துஷ்ட ஸ்வபாவமுடைய புதல்வர்களால் மனுஷ்யர்களுக்குப் பாபிஷ்டமான அபகீர்த்தியும் மஹத்தான அதர்மமும் உண்டாகும். அஸத்தான பிள்ளையினால் எல்லாரோடும் விரோதமும் எல்லையில்லாத மனோவியாதியும் விளைகின்றன. அங்ஙனம் அஸத்தான பிள்ளைக்குப் பிள்ளையென்று பேர்மாத்ரமேயன்றி வாஸ்தவத்தில் அவன் பிள்ளையேயல்லன். தேஹாத்மப்ரமத்தினால் விளையும் ஸம்ஸார பந்தமென்றே அவனைச் சொல்லவேண்டும். அத்தகைய புத்ரனைப் பண்டிதனாயிருப்பவன் எவன் தான் பிள்ளையென்று புகழ்ந்துகொள்வான்? இந்தப் புதல்வனைப் பற்றியல்லவோ பலவகை வருத்தங்களுக்கிடமான க்ருஹம் முதலியவற்றை ஏற்றுக்கொள்கின்றான். ஆனதுபற்றி இங்ஙனம் ஸம்ஸார பந்தத்தை வளர்க்கும்படியான பாபிஷ்ட புத்ரனை மதியுடையவன் எவனும் வெகுமதிக்கமாட்டான். ஆனால் ஒருவிதத்தில் அஸத்தான புத்ரனையும் புகழலாம். எப்படியென்னில், நல்ல பிள்ளையைப் பெறுவானாயின் மேன்மேலும் க்ருஹம் முதலியவற்றில் மனவிருப்பம் வளர்ந்து வரும். 'இவன் நல்ல குணமுடையவனா யிருக்கின்றான். சொன்னபடி நடக்கின்றான். இவனுடைய க்ஷேமத்தை நாம் தேடவேண்டும். இவனுக்கு வீடு வாசல் நிலம் நீர் முதலியவை சாச்வதமாயிருக்குமாறு நாம் ப்ரயத்னம் செய்யவேண்டும். இவனுக்கு நற்குலத்தில் பெண்ணைத் தேடி மணம் செய்விக்கவேண்டும். இவன் சரீரத்தில் நோய் நொடி யொன்றுமின்றித் திடமாயிருக்கப் பார்க்கவேண்டும். இவனுக்கு நல்ல பிள்ளை பிறக்க

வேண்டும்' என்று மேன்மேலும் ஸம்ஸாரத்தில் கால்தாழப் பெறுவான். அந்த நற்புதல்வனைக்காட்டிலும் தீய புதல்வனே மேலென்னலாம். பிள்ளை துஷ்ட ஸ்வபாவனுயிருப்பானுயின், 'ஐயோ! நாம் என்ன பாபம் செய்தோமோ. இனி நமக்கு இந்த ஸம்ஸாரமே வேண்டியதில்லை. நிலம் நீர் வேண்டியதில்லை. வீடு வாசல் வேண்டியதில்லை' என்று ஸம்ஸாரத்தில் நிர்வேதம் (வெறுப்பு) உண்டாகப் பெறுவான். பிள்ளை துஷ்டனுயிருப்பானுயின் க்ருஹம் முதலியவையெல்லாம் துக்கத்திற்கே இடமாயிருக்கும். அதனுல் ஸம்ஸாரத்தில் வைராக்யம் உண்டாகும். ஆகையால் ஸத் புத்ரனைக்காட்டிலும் அஸத் புத்ரனே மேலேன்பதில் ஸந்தேஹமில்லை' என்று அம்மன்னவன் தன் மனத்தில் பலவாறு சிந்தித்தான். இங்ஙனம் மனவெறுப்புற்ற அம்மன்னவன், பெருப்பெரிய ஐஶ்வர்யங்கள் எல்லாம் ஸம்ருத்தமாயிருக்கப்பெற்ற தன் க்ருஹத்தினின்று அர்த்த ராத்ரியில் எழுந்து துக்கத்தைத் துறந்து, உறங்கிக்கொண்டிருக்கின்ற வேனன் தாயையும் (தன் பார்யையுமான ஸுநீதையையும்) விட்டு ஒருவர்க்கும் புலப்படாமலே வனத்திற்குச் சென்றுன். மந்த்ரிகள் முதலிய ப்ரஜைகள் அனைவரும், மன்னவன் மனவெறுப்புற்று வனம் போனதை அறிந்து மிகவும் சோகித்து 'இனி நம்மைக் காப்பவன் எவனும் இல்லையே. நாம் எங்ஙனம் க்ஷேமம் பெறுவோம்?' என்று பயந்து அம்மன்னவனைப் பூமியெல்லாம் தேடினார்கள். ஹ்ருதயத்திலிருந்தும் தெரியாமல் மறைந்திருக்கின்ற பரமபுருஷனைக் குத்ஸிதயோகிகள் எவ்வளவு தேடியும் எங்ஙனம் காணமாட்டார்களோ, அங்ஙனமே அம்மன்னவன் அருகாமையில் இருந்தும் அவனை அவர்கள் காணப் பெற்றிலர். வாராய் விதுரனே! புரோஹிதன் முதலியவர் அங்ஙனம் மன்னவன் போனவழி தெரியாமல் தாம் செய்த ப்ரயத்னம் வீணுகப்பெற்றுப் பட்டணத்திற்குத் திரும்பி வந்து கண்ணும் கண்ணீருமாய் நின்று அங்குக் கூட்டமா

யிருக்கின்ற ரிஷிகளைக் கண்டு தண்டனிட்டுத் தமது மன்னவன் காணாதுபோனதை அவர்களுக்கு விண்ணப்பம் செய்தார்கள். பதின்மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

ப்ராஹ்மணர்கள் ராஜ்யத்தில் வேனனை அபிஷேகம் செய்தலும் அவன் அதர்மிஷ்டனா யிருப்பதைக் கண்டு ரோஷத்தினால் அவர்களே அவனைத் தமது தேஜஸ்ஸினால் வதித்தலும்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—லோகங்களின் க்ஷேமத்தையே நினைக்குந் தன்மையரான ப்ருகு முதலிய ரிஷிகள் இங்ஙனம் விண்ணப்பம் செய்யப்பெற்றவராகி மனிதர்களைப் பாதுகாக்குந் திறமையுடைய மன்னவன் இல்லாது போவானாயின் ஜகத்தெல்லாம் தர்மத்தை இழந்து பசுவைப் போன்றதாகுமென்பதை ஆலோசித்து, வேதங்களை ஓதியுணர்ந்த மஹானுபாவர்களான அம்மஹர்ஷிகள் வீரனாகிய வேனனுடைய மாதாவான ஸுநீதையை அழைத்து அவளுக்குத் தெரிவித்து, மந்த்ரி முதலியவர்களுக்கு அஸம்மதமாயிருப்பினும் வேறு கதி இல்லாமையால் வேனனையே பூமண்டலத்திற்கெல்லாம் நாதனாக அபிஷேகம் செய்தார்கள். கொடுந்தண்டனை செய்யுந் தன்மையனான வேனன் ராஜாஸனத்தில் ஏறினானென்று கேட்டவுடன் திருடர் முதலியவர், ஸர்ப்பங்களிடத்தில் பயந்த எலிகள் போல் எங்கும் புலப்படாமல் ஒளிந்துகொண்டார்கள். அவ்வேனன் ராஜாஸனத்தில் ஏறினவுடன் அஷ்ட திக்பாலர்களின் ஐச்வர்யங்களாலும் அணிமை முதலிய அஷ்ட ஐச்வர்யங்களாலும் கர்வமுற்றவனாகிச் சிறிதும் விவேகமின்றித் தன்னைத் தானே மேன்மையுடையவனாக பாவிப்பவனாகி யிருந்த மதியுடையவனாகவும் மஹா பாக்யமுடையவனாகவும் நினைத்துக்கொண்டான். இங்ஙனம் ஐச்வர்ய மதத்தினால் கண் தெரியாத (இது செய்யலாம், இது செய்யலாகாதென்கிற விவேகமில்லாத) அவ்வேனன், மாவெட்டி

யில்லாத யானைபோல் அடக்குவாரில்லாமல் வழி தப்பி நடக்கின்றவனாகி ரதத்தில் ஏறிக்கொண்டு ஆகாயத்தையும் பூமியையும் நடுங்கச்செய்பவன்போன்று முழுவதும் உலாவினான். அவன் ஆங்காங்குள்ள அந்தணர்களை அழைத்து 'வாரீர் ப்ராஹ்மணர்களே! யாகம் தானம் ஹோமம் இவைகளைச் செய்யலாகாது. எக்காலத்திலும் எவ்விடத்திலும் இந்த வ்யாபாரங்களைச் செய்யலாகாது' என்று பேரிவாத்யத்தை முழக்கி அனைவருக்கும் தர்மங்களைச் செய்யலாகாதென்று கட்டளையிட்டுத் தடைசெய்தான். பிறகு ப்ருகு முதலிய முனிவர்களும் யாகம் செய்விப்பவர்களான ருத்விக்குகளும் பாவத்தொழிலனாகிய அவ்வேனனுடைய நடத்வதையைக் கண்டு லோகங்களுக்கெல்லாம் வ்யஸனம் நேரிட்டதையும் ஆலோசித்து இரக்கத்துடன் இங்ஙனம் மொழிந்துகொண்டார்கள். 'அடியிலும் நுனியிலுமாக இரண்டு பக்கங்களிலும் நெருப்புப்பற்றி எரிகின்ற கட்டையினிடையிலிருக்கின்ற எறும்பு முதலிய ஜந்துக்களுக்கு ஒரு பக்கத்திலும் போகமுடியாமல் இரண்டு பக்கத்திலும் ஆபத்தாயிருப்பதுபோல், ப்ராஜைகளுக்குத் திருடர்களிடத்தினின்றும் ராஜனிடத்தினின்றும் ஆக இரண்டு விதமாகவும் துக்கம் நேரிட்டது. ராஜ்ய பரிபாலனம் செய்வதற்கு உரியவனல்லாதிருப்பினும் அராஜகத்தினால் விளையும் பயத்தைத் தீர்க்கும்பொருட்டு இந்த வேனனை ராஜனாக ஏற்படுத்தினோம். இப்பொழுது அந்த ராஜனிடமிருந்தே பயம் உண்டாயிற்று. ஆகையால் இப்பொழுது ப்ராஜைகளுக்கு எவ்வகையில் க்ஷேமம் உண்டாகும்? பாம்புக்குப் பால் வார்த்து வளர்த்தால், அது வளர்த்தவனுக்கே அனர்த்தத்தை விளைக்கும். அங்ஙனமே இந்த வேனனை ராஜ்யத்தில் நாமே அபிஷேகம் செய்தோம். அவன் இப்பொழுது நமக்கே கெடுதியைச் செய்கின்றான். ஸுநீதையின் கர்ப்பத்தில் பிறந்தவனான இவ்வேனன் இயற்கையாகவே துர்ப்புத்தியுடையவன். நாம் 'இவனை ப்ராஜாபாலனாக (மன்னவனாக) ஏற்படுத்தினோம். அவனே ப்ராஜைகளைக் கொல்ல விரும்ப

கின்றான். ஆயினும் நாம் இவனை நல்வார்த்தை சொல்லி ஸமாதானப்படுத்திப் பார்ப்போம். தர்மத்தைச் சிறிதும் நிஷேதிக்கலாகாதென்று உரிய காரணங்களை அவனுக்குச் சொல்லுவோம். நாம் சொன்னதையும் அவன் கேளாமல் மீறி நடப்பானாயின், அவனுடைய பாபம் நம்மைத் தீண்டாது. நாம் இவனுடைய துஷ்ட ஸ்வபாவம் தெரிந்திருந்தும் கெடு நடத்தையுடைய இவ்வேனனை ராஜனாகச் செய்தோம். நாம் அங்ஙனம் செய்தமைபற்றி இவன் ப்ராணிகளுக்கெல்லாம் த்ரோஹம் செய்கின்றான். நாம் இவனை நல்வார்த்தைகளால் வேண்டுவோமாயின், அவன் ஒருக்கால் அந்தப் பாவச் செயலினின்று மீண்டாலும் மீளலாம் அப்படி மீளாது மீறி நடப்பானாயின், அவனுடைய பாபம் அவனை மன்னவனாக ஏற்படுத்தின நமக்கு நேராது. அதர்மஞ்செய்யுந் தன்மையனான இவ்வேனன் நமது வேண்டுகோளை அங்கீகரிக்காது போவானாயின், லோகங்களின் நிந்தையால் தஹிக்கப்பெற்ற இவ்வேனனை நமது தவமஹிமையால் தஹித்துவிடுவோம்' என்று ஒருவர்க்கொருவர் மஹர்ஷிகள் ஆலோசித்துக்கொண்டார்கள். அவர்கள் இங்ஙனம் நிச்சயித்துக் கோபத்தை அடக்கிக் கொண்டு இவனிடம் வந்து நல்வார்த்தைகளால் இவனை ஸமாதானப்படுத்தி இங்ஙனம் மொழிந்தார்கள்.

ரிஷிகள் சொல்லுகிறார்கள்:—வாராய் மன்னவர் தலைவனே! நாங்கள் விண்ணப்பம் செய்வதைக் கேட்பாயாக. நாங்கள் சொல்லும் வார்த்தை உன்னுடைய ஆயுள் ஐஸ்வர்யம் பலம் கீர்த்தி இவைகளை வளரச் செய்யும். ப்ராணிகள், வாக்கு மனம் சரீரம் இவற்றின் வ்யாபாரங்களால் பகவானுடைய ஆராதன ரூபமான தர்மத்தை ஆசரிப்பார்களாயின், அந்த தர்மம் அங்ஙனம் தன்னை அனுஷ்டிக்கின்ற அந்த ஜனங்களை என்றும் துக்கமற்றவர்களாகச் செய்யும். அதில் பற்றின்றி ஆசரிப்பார்களாயின், அந்த தர்மம் எல்லையில்லாத மோக்ஷ ஸுகத்தையும்

கொடுக்கும். வாராய் மன்னவனே! அங்ஙனம் லோகங்களுக்கு
ஸுகத்தையும் மோக்ஷத்தையும் கொடுப்பதாகிய தர்மம்
பாழாகாதிருக்குமாக. அந்த தர்மம் பாழடைந்துபோமா
யின், மன்னன் ஐஶ்வர்யத்தினின்று நழுவப்பெறுவான்.
வாராய் ராஜனே! துஷ்டர்களான மந்திரிகளிடத்தினின்றும்,
திருடர் முதலிய துஷ்டர்களிடத்தினின்றும் மன்னவன்
ப்ரஜைகளை விதிப்படி பாதுகாத்துக்கொண்டு அவர்கள்
செய்யும் பூஜையை அங்கீகரித்து இஹலோகத்திலும் பர
லோகத்திலும் ஸுகித்திருப்பான். எந்த ராஜாவினுடைய
தேசத்திலும் பட்டணத்திலும் வஸிக்கிற ஜனங்கள் தந்
தமது வர்ண ஆஶ்ரம தர்மங்களில் நிலைநின்று யஜ்ஞங்களில்
கொடுக்கிற ஹவிஸ்ஸுக்களை புஜிப்பவனாகிய பரம
புருஷனைப் பஞ்ச மஹாயஜ்ஞாதியான தந்தமது தர்மங்க
ளால் ஆராதிக்கிறார்களோ, வாராய் மஹா பாக்யமுடைய
வனே! அந்த ராஜன் தனக்குச் சாஸ்த்ரங்களில் விதித்த
ப்ரஜாபாலனம் முதலிய கர்மங்களில் நிலைநின்றிருப்பான்.
அவனிடத்தில் ஸகல ஜகத்காரணவஸ்துவான பகவான்
மிகவும் ஸந்தோஷம் அடைவான். 'அங்ஙனம் பகவான்
ஸந்தோஷம் அடைவதால் என்ன ப்ரயோஜனம்?' என்னில்
சொல்லுகிறேம், கேட்பாயாக. உலகங்களுக்கெல்லாம்
ப்ரபுவான ப்ரஹ்மதேவன் முதலிய ஸமஸ்த தேவதை
களுக்கும் ப்ரபுவான பகவான் ஸந்தோஷம் அடைவா
னாயின், லோகபாலர்களோடு கூடின ஸமஸ்த லோகங்களும்
மிக்க ஆதரவுடன் இம்மஹானுபாவனுக்கு உபஹாரங்களைக்
கொண்டு பணிசெய்யும். ஸமஸ்த லோகங்களையும் அந்த
லோகங்களுக்கு அதிபதிகளான தேவதைகளையும் அந்த
தேவதைகளோடொத்து வாழுந்தன்மையைக் கொடுக்க
வல்ல யாகங்களையும் படைத்து அவற்றிற்கு நியாமகனா
யிருப்பவனும் வேதஸ்வரூபனும் வேதங்களைத் தவிர மற்ற
எந்த ப்ரமாணத்தினாலும் அறிய முடியாதவனும் வேதங்
களுள் பூர்வபாகத்தில் சொன்ன யஜ்ஞாதி கர்மங்களுக்கும்
மேல்பாகத்தில் சொன்ன உபாஸனங்களுக்கும் விஷயமா

யிருப்பவனுமாகிய பகவானை உன் தேசத்திலுள்ள ஜனங்கள் தம்முடைய ஸம்ஸாரம் நீங்கும்பொருட்டும் உன்னுடைய க்ஷேமத்தின்பொருட்டும் த்ரவ்யம் தேவதை முதலியவைகளால் விசித்ரங்களான யஜ்ஞங்களைச் செய்து ஆராதிக்கின்றனர். மன்னவனே! நீ அவர்களை அநுஸரித்திருப்பாயாக. அவர்கள் செய்யும் தர்மங்களைத் தடுக்க வேண்டாம். உன்னுடைய தேசத்தில் வஸிக்கிற ஜனங்கள் தர்மம் செய்வார்களாயின், அதனால் நீ இவ்வுலகத்தில் க்ஷேமமாயிருந்து கடைசியில் மோக்ஷத்தையும் பெறுவாய். ஆகையால் அவர்கள் செய்யுந் தர்மத்திற்கு நீ ஸஹாயம் செய்யாமற்போயினும் தர்மம் செய்யவேண்டாமென்று தடை செய்யாதிருப்பாயாக. வாராய் மஹாராஜனே! உன் தேசத்தில் வஸிக்கின்ற ப்ராஹ்மணர்கள் அநுஷ்டிக்கிற யாகங்களால் ஸ்ரீஹரியின் சரீரமாகிய இந்த்ரன் முதலிய தேவதைகள் சாஸ்த்ரத்தின்படி ஆராதிக்கப்பெற்று மனக்களிப்புற்று உன் விருப்பங்களை யெல்லாம் நிறைவேற்றிக்கொடுப்பார்கள். மன்னவனே! யாகாதி தர்மங்களை அநுஷ்டிக்கிற உன் தேசத்து ஜனங்களை நீ தர்மம் செய்யலாகாதென்று தடுப்பாயாயின், அது அந்த இந்த்ராதி தேவதைகளை அவமதித்ததேயாம். அதனால் உனக்குக் கெடுதி உண்டாகும். ஆகையால் நீ அங்ஙனம் செய்வது யுக்தமன்று.

வேனன் சொல்லுகிறான்:—ஆ! என்ன ஆச்சர்யம்! நீங்கள் எல்லாம் அறிந்தவர்களென்று நினைத்திருந்தேன். நீங்கள் ஒன்றும் தெரியாத மூடர்களா யிருக்கின்றீர்களே! நிச்சயம். ஏனென்னில், நீங்கள் அதர்மத்தை தர்மமென்று நினைக்கிறீர்களே. அன்னம் முதலியவைகளைக் கொடுத்து உங்களுக்கு ஜீவனத்தை நடத்துகின்ற ப்ரபுவைத் துறந்து யஜ்ஞ புருஷனென்று ஒருவனைச் சொல்லிக்கொண்டு ஒரு விதத்திலும் உபகரிக்காத அவனை உபாஸிக்கின்றீர்கள். இது கணவனைத் துறந்து கள்ள புருஷனைத் தொடர்கின்ற

மாதர்களின் நடத்தைபோல் இருக்கின்றது. எவர் மதி மயங்கப்பெற்று, ராஜாவாய்ப் புலப்படுகின்ற ஈஸ்வரனை அவமதிக்கின்றார்களோ, அந்த ஜனங்கள் இவ்வுலகத்திலும் பர உலகத்திலும் க்ஷேமம் பெறமாட்டார்கள்; துக்கத்தையே பெறுவார்கள். பர்த்தாவினிடத்தில் ஸ்னேஹமென்பது சிறிதுமின்றி அதை வெகுதூரத்தில் துறந்திருக்கின்ற கெடுமடந்தையர் ஜாரனிடத்தில் (கள்ள புருஷனிடத்தில்) பக்தி செய்வதுபோல், நீங்கள் எவனிடத்தில் இங்ஙனம் பக்தி செய்கின்றீர்களோ, அப்படிப்பட்ட யஜ்ஞ புருஷனென்பவன் யாவன்? அவன் ஒருவனுமல்லன். வரம் கொடுக்கவும் சாபம் அளிக்கவும் ஸமர்த்தர்களான விஷ்ணு ப்ராஹ்மதேவன் ருத்ரன் இந்த்ரன் வாயு யமன் ஸூர்யன் பர்ஜன்யன் குபேரன் சந்த்ரன் பூமி அக்னி வருணன் ஆகிய இவர்களும் மற்றுமுள்ள தேவதைகளும் மன்னவனுடைய தேஹத்தில் வஸிக்கின்றனர். ஆகையால் மன்னவன் ஸமஸ்த தேவஸ்வரூபன். அந்தணர்களே! வஸ்துவின் நிலைமை இங்ஙனமிருக்கையால், நீங்கள் த்வேஷமின்றி என்னையே யஜ்ஞாதி கர்மங்களால் ஆராதிப்பீர்களாக. பலியையும் எனக்கே அளிப்பீர்களாக. அனைவர்க்கும் முன்னே பூஜிக்கத் தகுந்தவன் என்னைக்காட்டிலும் மற்றொருவன் எவன் இருக்கின்றனன்?

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் விபரீத புத்தியுடையவனும் மிகவும் பாபிஷ்டனும் துர்மார்க்கத்தில் நடப்பவனுமாகிய அவ்வேனன் வெகுதூரம் நல்வார்த்தை சொல்லி வேண்டிக்கொள்ளினும் அந்த ரிஷிகளின் வேண்டுகோளின்படி அவன் அங்கிகரிக்கவில்லை. அவன் க்ஷேமத்தினின்று நழுவி அமங்கலங்களுக்கு இடமாகும் காலம் அருகாமையில் நேரப்பெற்றிருந்தான். ஆகையால் அவன் அம் மஹரிஷிகள் சொன்ன வார்த்தையை ஏற்றுக்கொள்ளவில்லை.

வாராய் விதுரனே! இங்ஙனம் தன்னைத்தானே பண்டிதனாக (எல்லாம் அறிந்தவனாக) பாவித்துக்கொண்

டிருக்கிற அந்த வேனனால் அவமதிக்கப்பெற்ற அம்முனிவர்கள் லோகங்களுக்கெல்லாம் நன்மையை விளைக்கும்படியான தமது ப்ரார்த்தனையை அவன் அங்கீகரிக்காமையால் அது வீணானமை கண்டு அவன்மேல் மிகுதியும் கோபம் கொண்டார்கள். 'இவன் இயற்கையாகவே உலகங்களுக்கு ஹிம்ஸைசெய்யுந் தன்மையன்; ஆனதுபற்றியே மிகுந்த பாபிஷ்டன். ஆகையால் இந்த வேனனைக் கொல்லத்தகும், கொல்லத்தகும், இனி இவன் பிழைத்திருப்பானாயின், சீக்கிரத்தில் ஜகத்தையெல்லாம் பஸ்மம் செய்துவிடுவான். இது நிச்சயம். துர்நடத்தை யுடையவனாகிய இவ்வேனன் இனி ராஜாஸனத்திற்கு உரியவனல்லன். இவன் சிறிதும் வெட்கமின்றி யஜ்ஞபதியான ஸ்ரீ மஹாவிஷ்ணுவை நிந்திக்கின்றான். அமங்கள நடத்தையுடைய இந்த வேனனொருவனைத் தவிர மற்ற எந்த மனிதன்தான் அந்த விஷ்ணுவை நிந்திப்பான்? எவனுடைய அனுக்ரஹத்தினால் இவன் இப்படிப்பட்ட ஐஶ்வர்யத்தை அடைந்தானோ, அப்படிப்பட்ட விஷ்ணுவை இந்த துர்ப்புத்தி நிந்திக்கின்றான். இவனைக்காட்டிலும் மற்றொரு க்ருதக்னன் எவன் இருக்கின்றான்?' என்று அம்முனிவர்கள் ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டார்கள். இங்ஙனம் அவனை வதிக்க வேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டிருக்கிற அந்த ரிஷிகள் கோபம் வெளிதோன்றப்பெற்றவராகி, விஷ்ணுவை நிந்தித்தமையால் தானே அடியுண்டு பாழாவதற்கு உரியவனாயிருக்கின்ற அவ்வேனனை ஹூங்காரங்களால் வதித்தார்கள். இப்படி அவர்கள் ஹூங்காரத்தினாலேயே வேனனைக் கொன்று தமது ஆஶ்ரமங்களுக்குப் போகையில், ஸுநீதை புத்ரசோகத்தினால் வருந்தி அவனுடைய சரீரத்தைத் தனது மந்த்ர வித்யையின் மஹிமையால் பாதுகாத்துக் கொண்டிருந்தாள். அம்முனிவர்கள் ஒருக்கால் ஸரஸ்வதி நதியின் ஜலத்தில் ஸ்நானம் செய்து விடியற்காலத்தில் செய்யவேண்டிய அக்னிகார்யங்களை முடித்துக்கொண்டு அந்த ஸரஸ்வதி நதியின் கரையில் உட்கார்ந்து பகவா

னுடைய கதைகளைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது பெரும்பெரிய உத்பாதங்கள் உண்டாவதைக் கண்டு 'இவற்றால் உலகங்களுக்கு என்ன பயம் உண்டாகுமோ?' என்று பயந்து வருந்தினவர்களாகி, 'இப்பொழுது நாதனற்றிருக்கின்ற பூமிக்குத் திருடர் முதலிய துஷ்டர் மூலமாய் எவ்வித கெடுதியும் உண்டாகாதிருக்குமா?' என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டிருந்தார்கள். இங்ஙனம் ரிஷிகள் சொல்லிக்கொண்டிருக்கையில், எல்லாத் திசைகளிலும் ஒளிந்திருந்து நாற்புறத்திலும் பணம் முதலியவற்றைக் கொள்ளையிடுகின்ற திருடர்களின் ஸஞ்சாரத்தினால் பெருந்தூள் கிளம்பிற்று. மன்னவன் மரணம் அடைகையில் தண்டிப்பாரில்லாமையால் பயமின்றித் திருடர்கள் பணங்களையும் மற்றுமுள்ள விலையுயர்ந்த வஸ்துக்களையும் கொள்ளையிடத் தொடங்கினார்கள். லோகத்திலுள்ள ஜனங்களெல்லோரும் ஒருவரையொருவர் வதிக்கத் தொடங்கினார்கள். தேசங்களெல்லாம் ராஜனற்றவையாகித் திருடர்களே நிறையப்பெற்றிருந்தன. ஜனங்களெல்லோரும் உத்ஸாஹமின்றி பலஹீனர்களாயிருந்தார்கள். இவ்வாறு உலகங்களுக்கு உபத்ரவம் நேரிட்டிருப்பதையும் தேசங்களெல்லாம் பாழடைவதையும் கண்டு வேனனைக் கொன்றாப்போல், ஹுங்காரத்தினாலேயே திருடர்களைக் கொல்ல வல்லவராயினும், அந்த ரிஷிகள் அதனால் தமக்குப் பாபம் நேரிடுமென்பதையும் 'தம்மை அடிப்பவர்களையும் அடிக்காதிருக்கையே ப்ராஹ்மணர்களின் தன்மை' என்பதையும் ஆலோசித்து அந்தத் திருடர்களைத் தடுக்காமல் வெறுமனே இருந்துவிட்டார்கள். 'ப்ராஹ்மணன் எல்லாம் பாப்ராஹ்ம ஸ்வரூபமேயென்று பார்க்குந் தன்மையனும் அதற்கு வேண்டிய சமம் தமம் முதலிய குணங்களோடு கூடினவனுமாயிருப்பினும், அநாதர்களான தீனர்களை உபேக்ஷிப்பானாயின், அவனுடைய தவம் நழுவிப்போம். உடைந்த பாத்ரத்திலிருக்கும் ஜலம் போல், தீனர்கள் வருந்துவதைக் கண்டும் அவர்களைப்

பாதுகாக்காமல் உபேக்ஷிக்கின்ற அந்தணனுடைய தவம் ஒழுகிப்போய்விடுமேயன்றி நிற்காது. ஆகையால் நாம் ஜகத்திற்குத் திருடர் மூலமாய் விளையும் பயத்தைப் போக்காமல் உபேக்ஷித்திருப்போமாயின், நமது தவம் சில்லிப் பானையில் ஜலம்போல் பாழாய்விடும். நாம் நேரே திருடர்களை வதிப்பதும் நம் தவத்திற்குக் கெடுதியே. ராஜர்ஷியாகிய அங்கனுடைய இந்த வம்சம் இங்ஙனம் ஸந்ததியற்று முடிந்துபோவதற்குரியதன்று. ஏனென்னில், இந்த வம்சத்தில் பிறந்த ராஜாக்கள் ப்ரஹ்ம ருத்ராதி ஸகல தேவதைகளுக்கும் மேலான பகவானையே அவலம்பித்திருப்பவர்கள்; ஆனதுபற்றியே விளுகாத வீர்யமுடையவர். ஆகையால் இம்மன்னவனுடைய ஸந்ததி இவ்வளவோடு முடியாதிருக்குமாறு நாம் ப்ரயத்னம் செய்ய வேண்டும். ஓர் மன்னவனை உண்டாக்கி அவன் மூலமாய் ஜகத்தையும் வாழ்வித்து நந்தவனத்தையும் அழிக்காமல் பாதுகாத்துக்கொள்ளவேண்டும்' என்று அம்முனிவர்கள் ஆலோசித்தார்கள். அவர்கள் இங்ஙனம் ஆலோசித்து நிச்சயித்துக்கொண்டு மரணம் அடைந்த அவ்வேனனுடைய துடையை வலிவுடன் கடைந்தார்கள். அங்ஙனம் கடையப்பெற்ற துடையினின்று பாஹுகனென்று ஓர் மனிதன் உண்டானான். அவன் காக்கைபோல் கறுத்த நிறமுடையவனும் மிகவும் குள்ளமான அங்கங்களுடையவனும் குட்டையான கைகளும் நீண்ட கன்னங்களும் குட்டையான முகமும் அழுங்கின மூக்கின் நுனியும் சிவந்த கண்களும் சிவப்பு நிறமுடைய தலைமயிர்களும் அமைந்திருந்தான். அவன் மிகுதியும் மன இரக்கத்திற்கிடமாயிருந்தான். அவன் 'நான் என்ன செய்யவேண்டும்?' என்று மொழிந்தான். அவனைக் கண்டு 'இவன் ராஜ்யத்திற்குரியவனல்லன்' என்று நிச்சயித்துக்கொண்டு அவர்கள் அவனைப் பார்த்து 'நிஷீத' (உட்கார்) என்று மொழிந்தார்கள். அப்பனே! அதன் பிறகு அம்மனிதன், ரிஷிகளால் 'நிஷீத' என்று சொல்லப்பெற்றமையால் நிஷாதஜாதிய

ஞானன். (வேடஜாதியில் சேர்ந்தவனானன்.) அந்த பாஹுகனுடைய வம்சத்திற் பிறந்தவர்களெல்லோரும் வேடர்களாகவே யிருந்தார்கள். அவர்கள் மலையின் காடுகளில் திரிந்துகொண்டிருந்தார்களன்றிப் பட்டணத்திற்குள் நுழைந்தவரல்லர். ஏனென்னில், பாஹுகன் பிறந்தவுடனே அவ்வேனனுடைய மஹத்தான பாபத்தையெல்லாம் தான் ஏற்றுக்கொண்டானகையால் அவனுடைய வம்சத்திற் பிறந்தவர்கள் அனைவரும் அவனுடைய பாப ஸம்பந்தத்தினுல் அத்தகையராயிருந்தார்கள். அப்பால் ஸந்ததியற்ற அம்மன்னவனுடைய புஜங்களை ரிஷிகள் கடைந்தார்கள். அவற்றினின்று ஓர் ஆணும் ஓர் பெண்ணும் உண்டாயின. ப்ரஹ்மவாதிகளான (வேதங்களை ஓதியுணர்ந்த) அந்த ரிஷிகள் அங்ஙனம் தோன்றின ஆண் பெண்களைக் கண்டு பகவானுடைய அம்சமென்று தெரிந்துகொண்டு மிகுந்த ஸந்தோஷத்துடன் இங்ஙனம் மொழிந்துகொண்டார்கள்.

ரிஷிகள் சொல்லுகிறார்கள்:—இவன் பகவானுடைய அம்சமே. ஸ்ரீ மஹாவிஷ்ணு ஜ்ஞானம் முதலிய குணங்கள் எல்லாம் நிறைந்தவனாகையால் நமது கருத்துக்களை அறிந்து உலகங்களைப் பாதுகாக்கும்பொருட்டுத் தன்னுடைய அம்சத்தினுல் இங்ஙனம் அவதரித்தான். இந்தப் பெண்மணியும் அம்மஹாபுருஷனை விட்டுப் பிரியாதவளான ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அம்சமே. இவ்வாண்பிள்ளை அரசர்களில் முக்யனுயிருப்பான். இவன் தன் புகழ் பூமியெல்லாம் நிரம்பும்படி பெரிய க்ஷேம கார்யங்களைச் செய்வான். அதனுல் பெரும் புகழுடையவனுவான்; ப்ருதுவென்னும் பேருடைய மஹாராஜனு யிருக்கப்போகின்றான். இப்பெண்மணி அழகிய பற்களுடையவள். இவளுடைய மற்றை அங்கங்களும் மிக்க அழகாயிருக்கின்றன; ஸ்த்ரீகளில் மேன்மையுடைய இவள் தேவதையே; மனுஷ்ய ஸ்த்ரீயன்று. இவள் குணங்களுக்கும் ஆபரணங்களுக்கும் அழகு கொடுப்பவளாகி அர்ச்சிஸ்ஸென்னும் பேர்பெறுவாள்.

இவள் இந்த ப்ருது மஹாராஜனையே மணம்புரிந்து இவனையே அனுஸரித்திருப்பாள். ஸ்ரீமஹாவிஷ்ணுவே உலகங்களைப் பாதுகாக்கும்பொருட்டு தனது அம்சத்தினால் இந்த ப்ருது சக்ரவர்த்தியாகப் பிறந்தான். அந்த ஸ்ரீமஹாவிஷ்ணுவைத் தவிர மற்ற எவர்க்கும் உரியளல்லாதவளும் அவனிடத்தில் மிக்க மனவூக்கமுடையவளும் என்றும் அவனை விட்டுப் பிரியாதவளுமாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மியே இப்பெண்மணியாகப் பிறந்தாள். ஆகையால் இவள் இம்மஹா புருஷனையே மணம்புரிந்து இவனையே அனுஸரித்திருப்பாள்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அவ்வந்தணர் நிச்சயித்து தெரிந்து விஷ்ணுவின் அம்சமாகிய அந்த ப்ருதுவைப் புகழ்ந்தார்கள். கந்தர்வர்களில் சிறந்தவர் கானம் செய்தார்கள். ஸித்தர்கள் ஆகாயத்தினின்று புஷ்பங்களை தாரை தாரையாகப் பெய்தார்கள். ஸ்வர்க்க லோகத்து மடைந்தையர் நர்த்தனம் செய்தார்கள். ஆகாயத்தில் சங்கம் ம்ருதங்கம் முதலிய வாத்தியங்களும் பேரி வாத்யங்களும் மற்றும் பல வாத்யங்களும் முழங்கின. தேவதைகளும் ரிஷிகளும் பித்ருக்களும் கூட்டங் கூட்டமாய் அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். ஜகத்திற்கெல்லாம் ஹிதம் உபதேசிப்பவனாகிய ப்ரஹ்மதேவன் தேவதைகளோடும் தேவஸ்ரேஷ்டர்களான இந்த்ராதி லோகபாலர்களோடும் கூடி அவ்விடம் வந்து வேனனுடைய புதல்வனாகிய ப்ருதுவின் வலக்கையில் பகவானுடைய அடையாளமாகிய சக்ரரேகையையும் பாதங்களில் பத்மரேகையையும் கண்டு 'இவன் பகவானுடைய அம்சமே' என்று நினைத்தான். வேறு ரேகைகளோடு ஸம்பந்தப்படாமல் தனியே விளங்குகின்ற சக்ரரேகையை அடையாளமாக வுடையவனும் பரம புருஷனுடைய அம்சமுமாகிய அந்த ப்ருதுவுக்கு ப்ராஹ்மணர்கள் ப்ரஹ்மதேவனை முன்னிட்டுக்கொண்டு அபிஷேகம் செய்யத் தொடங்கினார்கள். ஜனங்கள் அபிஷேகத்திற்கு

வேண்டிய ஸம்பாரங்களை யெல்லாம் ஸமஸ்த திசைகளி னின்றும் இந்த ப்ருதுவுக்காகக் கொண்டு வந்தார்கள். நதிகளும் ஸமுத்ரங்களும் பர்வதங்களும் ஸர்ப்பங்களும் பசுக்களும் பக்ஷிகளும் ஆகாயமும் பூமியும் ஆகிய ஸமஸ்த பூதங்களும் அபிஷேக மஹோத்ஸவத்தில் உபஹாரங்களைக் கொண்டு வந்தன. அந்த ப்ருது மஹாராஜன் அங்ஙனம் அந்தணர்களால் அபிஷேகம் செய்யப்பெற்று வெண்பட்டு முதலிய மேலான வஸ்த்ரங்களை உடுத்து வைஜயந்தி யென்னும் பூமாலையும் அணிந்து கிரீடம் முதலிய ஆபரணங் களும் பூண்டு அங்ஙனமே ஸமஸ்த அலங்காரங்களும் அணிந்த அர்ச்சிஸ்ஸென்னும் பார்யையுடன், ஜ்வாலையோடு கூடின மற்றொரு அக்னிபோல் ப்ரகாசித்தான். வாராய்! வீரனாகிய விதுரனே! அந்த ப்ருதுவுக்குக் குபேரன் ஸ்வர்ண மயமா யிருப்பதும் சிறப்புடையதுமான ஓர் ஸிம்ஹாஸனத் தைக் கொடுத்தான். வருணன் ஜலம் பெருகப்பெற்றதும் சந்த்ரனையொத்த ஒளியுடையதுமாகிய ஓர் குடையைக் கொடுத்தான். வாயு இரண்டு சாமரங்களையும், தர்மன் புகழை விளைவிப்பதான ஓர் மாலையையும், இந்த்ரன் சிறந்த தொரு கிரீடத்தையும்; யமன் மாயம் செய்தவர்களை தண் டித்து நல்வழியில் மூட்டுவதான ஓர் தண்டத்தையும், நான் முகன் வேதஸ்வரூபமான ஓர் கவசத்தையும், ஸரஸ்வதி விலையுயர்ந்த ஓர் ஹாரத்தையும், அவனுடைய பத்னியாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மியானவள் அழிவில்லாத ஐஸ்வர்யத்தையும், ருத்ரன் சந்த்ரனுடைய உருவம்போன்ற உருவ முடையபத்து அடையாளங்கள் அமைந்த ஓர் கேடயத்தை யும், அம்ருதம் பெருக்குந் தன்மையுடைய குதிரைகளையும், த்வஷ்டா (தேவதைகளின் தச்சன்) அழகிய தான ஒரு ரதத்தையும், அக்னி, ஆடு பசு இவற்றின் கொம்புகளால் செய்த ஓர் தனுஸ்ஸையும், ஸூர்யன் தன் கிரணங்களால் ஏற்பட்டவைகளும் கிரணம்போல் எல்லா இடங்களிலும் தடையின்றி நுழையுந் தன்மை யுடையவை களுமான பாணங்களையும், பூமி யோகமயமான பாதுகை

களையும், ஆகாயம் தினந்தோறும் பூஜைக்குரிய புஷ்பத்தையும், ஸித்த ஸாத்ய கந்தர்வாதிகள் நாட்யத்தையும் அழகான ஸங்கீதத்தையும் வாத்யத்தையும் அந்தர்த்தான சக்தியையும், ரிஷிகள் அவ்வப்படியே பலிக்கும்படியான ஆசீர்வாதங்களையும், ஸமுத்ரம் தன்னிடத்திலுண்டான மேலான சங்கத்தையும், நதங்களும் பர்வதங்களும் நதிகளும் தம்மில் தடையின்றி அவனுடைய ரதம் போகும்படியான மார்க்கத்தையும், மஹானுபாவனாகிய அந்த ப்ருது சக்ரவர்த்திக்குக் கொடுத்தார்கள். அப்பால் ஸூதர்களும் மாகதர்களும் வந்திகளும் அம்மன்னவனை ஸ்தோத்ரம் செய்யத் தொடங்கினார்கள். வேனனுடைய புதல்வனும் மிகுந்த ப்ரதாபமுடையவனுமாகிய அந்த ப்ருது மஹாராஜன், அங்ஙனம் தன்னைத் துதி செய்ய முயன்ற ஸூத மாகத வந்திகளைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே மேகத்தின் கர்ஜனம்போன்ற கம்பீரமான உரையுடன் மேல் வருமாறு கூறினான்.

ப்ருது சொல்லுகிறான்:—வாரீர் ஸூத மாகத வந்திகளே! நான் இப்பொழுதே இவ்வுலகத்திற்கு ராஜனானேன். என் குணங்கள் எவையும் இப்பொழுது வெளியாகவில்லை. அப்படியிருக்க, நீங்கள் எதைப்பற்றி என்னை ஸ்தோத்ரம் செய்யப்போகிறீர்கள்? நீங்கள் செய்யும் துதி என்னிடத்தில் எப்படி அமையும்? உலகத்தில் ப்ரஸித்தமான குணங்களன்றோ ஸ்தோத்ரத்திற்கிடமாம். ஒரு குணமும் வெளியாகப் பெறாத என்னைக் குறித்து நீங்கள் செய்யும் துதி வீணாய் விடும். ஸ்தோத்ரத்திற் குரியவைகளான உங்களது வசனங்கள் என்னிடத்தில் பாய்ந்து வீணாக வேண்டாம். ஆகையால் காலாந்தரத்தில் குணங்கள் வெளியான பின்பு என்னுடைய புகழ்களைப்பற்றி நன்றாக ஸ்தோத்ரம் செய்வீர்கள். இனிய உரையுடைய ஸூத மாகத வந்திகளே! உத்தம ஶ்லோகனான பகவானுடைய குணங்களைத் துதி செய்யவேண்டியிருக்க, அத்தகையனல்லாத என்னைப்போன்றவனைப் பெரியோர்கள் துதி

செய்யப் பொறுக்க மாட்டார்கள். 'குணங்கள் இப்பொழுது வெளியாகாமற் போயினும், மேல் வெளியாகப்போகிற குணங்களைப்பற்றித் துதி செய்வித்துக்கொள்ளலாமல்லவா?' என்னில், சொல்லுகிறேன், கேட்பீர்களாக. இப்பொழுது தன்னிடத்தில் இல்லாதவைகளான பெரியோர்களுடைய குணங்களைத் தன்னிடத்தில் காலக்ரமத்தில் ஸம்பாதித்துக்கொள்ள வல்லவனாயினும் ஸ்துதிபாடகர்களைக் கொண்டு அந்த குணங்களை எவன் ஸ்தோத்ரம் செய்வித்துக்கொள்வான்? எவனேனுமொருவன் தன்னிடத்தில் சில குணங்கள் க்ரமத்தில் நேரக்கூடுமென்று தெரிந்து அந்த குணங்களைப்பற்றித் தன்னை ஸ்தோத்ரம் செய்வித்துக்கொள்வானாயின், அவன் துர்புத்தியனேயன்றி ஸத்புத்தியனன்று (நல்ல புத்தியுடையவனன்று). மற்றும், அவன் நிந்தைக்கிடமானவன். அவன் தனக்கு ஜனங்களால் நேரும் பரிஹாஸத்தை அறியாதவன். எல்லையில்லாத ஔதார்யம் முதலிய குணங்களையுடைய பெரியோர்கள் தம்மிடத்தில் மேன்மேலும் நற்குணங்களை விளைவித்துக் கொள்ள வல்லவராயினும் பெரும்புகழ் பெற்றவராயினும் தம்மைத் துதி செய்வித்துக்கொள்ள வெட்க முற்றவராகி அற்பமான தமது பௌருஷத்தையும் அதைப்பற்றின ஸ்தோத்ரத்தையும் நிந்திப்பார்களன்றி ஒப்புக்கொள்ள மாட்டார்கள். வாரீர் ஸ்துதிபாடகர்களே! நான் இப்பொழுதே மன்னவனாக ஏற்பட்டேன். உலகத்தில் ஒருவர்க்கும் தெரிந்தவனல்லேன். புகழுக்கிடமான ஸம்மத செயல்களையும் செய்தவனல்லேன். ஆகையால் நான் அறியாதவன் போல் என்னிடத்தில் இல்லாத குணங்களை எடுத்துக் கொண்டு எங்ஙனம் ஸ்தோத்ரம் செய்வித்துக்கொள்வேன்? ஆகையால் நீங்கள் என்னைத் துதி செய்வது யுக்தமன்று.

பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---



**ஸ்துதிபாடகர் முனிவர்களால் தூண்டப்பெற்று ப்ருது சக்ரவர்த்தியை ஸ்தோத்ரம் செய்தல்.**

மைத்ரேயர் சொல்லுகிறார்:— வைதாளிகர்களும் ஹிம்சாவளி படிப்பவர்களும் ஸ்துதிபாடகர்களும் அந்த ப்ருது சக்ரவர்த்தியின் வாக்காகிற அம்ருதத்தினுடைய பானத்தினால் மனக்களிப்புற்றவராகி, பகவானுடைய அம்சமான ப்ருதுவின் கல்யாண குணங்களை அறிந்த முனிவர்களால் தூண்டப்பெற்று அம்மன்னவன் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருப்பினும் அவனை ஸ்தோத்ரம் செய்தார்கள்.

ஸ்துதிபாடகர்கள் சொல்லுகிறார்கள்:— வாராய் மஹானுபாவனே! நாங்கள் உன்னுடைய மஹிமையை வர்ணிக்க வல்லரல்லோம். ஏனென்னில், நற்குணங்களால் விளங்குந் தன்மையரான ப்ரஹ்மதேவன் முதலிய தேவதைகளுக்கும் நீ தேவனாயிருப்பவன். கல்யாண குணங்களால் அவர்களைக்காட்டிலும் மேலாக ப்ரகாசிக்குந் தன்மையன். நீ உன்னுடைய ஸங்கல்ப ரூப ஜ்ஞானத்தினால் இங்ஙனம் அவதரித்தனை. நீ ஸமஸ்த கல்யாண குணங்களும் நிறைந்த பகவானேயன்றி வேறன்று. ஆகையால் உன்னுடைய மஹிமையை நாங்கள் எங்ஙனம் வர்ணிக்க வல்லராவோம்? 'நீங்கள் சொல்லுவது யுக்தமே. பகவானுடைய குணங்கள் எல்லையில்லாதவையாகையால் அவற்றை வர்ணிக்க வல்லரல்லீர். நான் மானிடனாகையால் என் குணங்களை ஏன் வர்ணிக்கவல்லரல்லீர்?' என்னில், சொல்லுகிறோம், கேட்பாயாக. நீ வேனனுடைய அங்கத்தினின்று உண்டானவனாயினும், எல்லையில்லாத கல்யாண குணங்கள் நிறைந்த பகவானுடைய அம்சமே. ஆகையால் உன் பௌருஷங்கள் இத்தகைப்பட்டவையென்று நினைக்க முடியாதவை. அவற்றில் ப்ரஹ்மாதிகளுடைய புத்திகளும் ப்ரமிக்கின்றன. இனி, நாங்கள் அவற்றை வர்ணிக்க வல்லரல்லோமென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? நாங்கள் உன் மஹிமையை வர்ணிக்க வல்லரல்லோமாயினும்,

மிகுந்த புகழுடையவனும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அம்சவாதாரமுமாகிய உன்னுடைய கதையாகிற அம்ருதத்தைப் பானம் செய்வதில் ஆவலுடையவர்களாகிய நாங்கள் முனிவர்களால் உபதேசமாகத் தூண்டப் பெற்றவராகி ப்லாகிக்கத்தகுந்தவைகளும் தோஷமற்றவைகளுமான உன் சரித்ரங்களை விரித்துச் சொல்லுகிறோம். இந்த ப்ருது சக்ரவர்த்தி வர்ணாஸ்ரமங்களைப்பற்றின தர்மங்களை அனுஷ்டிப்பவர்களில் சிறந்தவன். இவன் தான் எல்லாம் அறிந்தவனாயினும் தெரியாத லோகங்களை நல்வழியில் நடத்தும் பொருட்டுத் தன்னுடைய வர்ணாஸ்ரமங்களுக்கு ஏற்பட்ட தர்மங்களைச் சிறிதும் தவறாமல் அனுஷ்டித்து வருகின்றான். இவனுக்கு வர்ணாஸ்ரம தர்மங்களை அனுஷ்டிப்பதினால் ஆகவேண்டியது ஒன்றுமே இல்லை. ஆயினும், 'நாம் தர்மங்களை அனுஷ்டிக்காதிருப்போமாயின், நம்மைப் பார்த்து ஒன்றும் தெரியாத ஜனங்களும் நாமும் இவனைப் போலவே யிருக்கவேண்டும். எல்லாம் தெரிந்த இவனே இங்ஙனம் செய்யாமலிருக்கின்றானே. நாம் எதுக்காகச் செய்யவேண்டும்?' என்று நம்மைப் பார்த்து அழிந்து போவார்கள். ஆகையால் நாம் தர்மங்களை அனுஷ்டித்து ஜனங்களை அனுஷ்டிக்கச் செய்யவேண்டும் என்னும் அபிப்ராயத்தினால் அவற்றைச் சிறிதும் தவறாமல் ஆசரித்து வருகின்றானன்றி மற்றொரு காரணமும் இல்லை. இங்ஙனம் தன்னுடைய அனுஷ்டானத்தினாலும் தன் கட்டளையினாலும் ஜனங்களெல்லாரும் தந்தமது வர்ணாஸ்ரமங்களைத் தவறாமல் அனுஷ்டிக்கும்படி செய்கின்றான்; தர்மத்தை அனுஷ்டிக்குந் தன்மையுள்ள ஸாதுக்களைப் பாதுகாப்பவன்; தர்ம மர்யாதைகளை அழியாமல் நிலைநிறுத்துந் திறமையுடையவன்; அந்த தர்மத்திற்கு விரோதிகளான அஸாதுக்களை தண்டிக்குந் தன்மையன். இந்த ப்ருது தன்னுருவனே ஸூர்ய இந்த்ராதி லோகபாலர்களுக்கு அஸாதாரணமான குணங்களையெல்லாம் தன் தேஹத்தில் பாகம் பாகமாகப் பிரித்து இரண்டு லோகங்களுக்கும் ஹிதமாயிருக்கும்படி

தரிக்கின்றான். இந்த லோகத்திலுள்ள ஜனங்களுக்குப் பாலன போஷணங்களாலும் பரலோகத்திலுள்ள தேவதைகளுக்கு யஜ்ஞாதி கர்மங்களாலும் ஹிதம் செய்கின்றான். ஸூர்யன் எட்டு மாதங்கள் வரையில் வெயில் காய்ந்து பூமியினின்று ஜலத்தை இழுப்பதுபோல், இவன் கப்பம் வாங்கும் காலத்தில் ப்ரஜைகளிடத்தினின்று பணத்தை வாங்கிக் கொள்கின்றான். மழைகாலங்களில் ஸூர்யன் ஜலத்தைப் பெய்வதுபோல், துர்ப்பிக்ஷகாலத்தில் ப்ரஜைகளின் க்ஷேமத்தின்பொருட்டுப் பணத்தைச் செலவிடுகின்றான். ஆதலால் இவன் ஸமஸ்த பூதங்களிடத்திலும் ஸமமாயிருப்பவன். மற்றும், இவன், மன இரக்கத்திற்கிடமான ஜந்துக்கள் தன் தலைமேல் காலைவைத்து மிதிக்கினும் அவற்றின் அதிக்ரமத்தைப் பொறுத்துக் கருணையே செய்வானாகையால் பூமியின் குணமுடையவன். பர்ஜன்யன் மழை பொழியாதிருக்கையில், இந்த்ரன்போல் மழை பொழியச்செய்து, ப்ராணன்களை இழக்கும்படியான ஆபத்தில் அழுந்தின ப்ரஜைகளைக் காப்பான். இவன் மன்னவனாய்த் தோன்றின மஹாவிஷ்ணுவே. இவன் ப்ரீதி அமைந்த கண்ணோக்கத்தோடு நிர்மலமான புன்னகையினால் அழகாயிருப்பதாகிய தன் முகமாகிற சந்த்ரனால் உலகத்தையெல்லாம் களிப்புறச் செய்வான். இவன் பிறர்க்கு அறியமுடியாத வழியும் செயலும் கருத்துமுடையவன்; பணத்தை அழிக்காமல் காத்துவைத்திருப்பவன்; எல்லையில்லாத மஹிமைகள் அமைந்தவன்; குணங்களுக்கெல்லாம் முக்யமான இருப்பிடம்; ஜலதுர்க்காதிகளால் தன்னை மறைத்துக் கொண்டிருப்பவன்; ஆகையால் வருணன் போன்றவன். இவன் ப்ரதாபத்தினால் பிறர்க்கு அணுகமுடியாதவன்; அருகிலிருப்பினும் வெகுதூரத்திலிருப்பவன்போல் பொறுக்கமுடியாதிருப்பவன்; வேனனாகிற அரணிக் கட்டையினின்று கடையப்பட்டவன்; ஆதலால் அக்னியைப் போன்றவன். இவன் சாரர்கள் மூலமாய் ப்ராணிகளின் உள்ளும் புறமும் உள்ள செயல்களை அறிபவன்; அவர்

களுக்குத் தேஹ தாரணத்தை விளைப்பவனாயினும் உதாஸீனன் போலிருப்பவன்; ஆதலால் வாயுவைப் போன்றவன். சத்ருவின் பிள்ளையாயினும் தண்டிக்கத் தகாதவனாயிருப்பின், அவனைத் தண்டிக்கமாட்டான். தன் பிள்ளையாயினும், அபராதம் செய்யின் அவனைத் தண்டித்தே தீருவான்; ஆதலால் யமனைப்போலப் பக்ஷபாதமின்றித் தர்ம மார்க்கம் தவறாதிருப்பான். ஸூர்யன் தன் கிரணங்களால் விளங்கச்செய்கின்ற மானஸபர்வதம் வரையில் இவனுடைய ஆஜ்ஞையும் ரதமும் தடைபடாமல் நடக்கின்றன. இவன் மனத்திற்கினியவைகளான தனது நடத்தைகளால் உலகத்தையெல்லாம் களிக்கச்செய்வானாகையால் ப்ரஜைகள் இவனை ராஜனென்று சொல்லுவார்கள். இவன் நினைத்ததை அப்படியே நிறைவேற்றுவான். இவன் நினைப்பதெல்லாம் நல்லதாகவே யிருக்கும். இவன் ப்ராஹ்மணர்களுக்கு நன்மை செய்வான்; ஜ்ஞான வ்ருத்தர்களைப் பணிவான்; ஸமஸ்த ப்ராணிகளையும் பாதுகாத்து அவற்றிற்கு ஸம்மானம் செய்பவன்; தீனவத்ஸலன்; பரஸ்த்ரீகளை மாதாவைப் போலவும், பத்னியைத் தன் சரீரத்தின் பாதி பாகத்தைப் போலவும், ப்ரஜைகளைத் தந்தையைப்போலவும் பார்ப்பான். வேதவாதிகளான பெரியோர்களுக்கு ப்ருத்யன் போலிருப்பான். ப்ராணிகள் இவனிடத்தில் மிகுந்த ப்ரீதி யுடையனவாயிருக்கும். இவன் நண்பர்களுக்கு ஆநந்தத்தை வளர்ப்பான்; பற்றற்றவர்களிடத்தில் மிக்க பற்றுடையவன்; அஸத்துக்கள் விஷயத்தில் யமன் போலிருப்பவன். இவன் மஹாவீரனாகையால் தன் பராக்கிரமத்தினால் பூமியினின்று ஓஷதிகளைக் கறக்கப்போகிறான்; இந்த பூமியைத் தன் தனுஸ்ஸின் நுனியால் ஸமமாக்கப் போகிறான். ஆயிரம் சொல்லி யென்ன? ஷாட்குண்ய பூர்ணனும் விகாரமற்றவனும் மூன்று லோகங்களுக்கும் பரமாத்மாவுமாகிய ஸாக்ஷாத் பரமபுருஷனே தனது அம்சமாகிய ஜீவன் மூலமாய் இங்ஙனம் அவதரித்தான். பரம புருஷனிடத்தில் தேவமனுஷ்யாதி பேதம் தோற்றினும்,

அது நமது அஜ்ஞானத்தினால் ஏற்பட்டதேயன்றி வாஸ்தவமன்று; ஜீவனுக்கு தேஹஸம்பந்தத்தினால் விளையும் பால்ய யௌவநாதிகள் எங்ஙனம் ஸம்பந்திக்கிறதில்லையோ, அங்ஙனமே பரமபுருஷன் ஜீவன் மூலமாய் அவதரிக்கினும் அந்த ஜீவனுடைய தோஷங்களாவது சரீர தோஷங்களாவது அவனிடத்தில் ஸம்பந்திக்கிறதில்லை. ஆகையால் நிர்விகாரனான பரமபுருஷன் இம்மன்னவன் மூலமாய் அவதரித்தானென்பது எங்ஙனம் பொருந்துமென்று சங்கிக்கலாகாது. பரமபுருஷ ஸ்வரூபியும் மஹா வீரனுமாகிய இம்மன்னவர் தலைவன் உதய பர்வதம் வரையிலுள்ள பூமண்டலத்தை யெல்லாம் காக்கப் போகிறான். இவன் ஜயத்தைக் கொடுக்கும்படியான ரதத்தில் ஏறித் தனுஸ்ஸைக் கையில் ஏந்தி ஸூர்யன்போல் பூமண்டலத்தை யெல்லாம் வதம் செய்யப்போகிறான். அப்பொழுது இந்த்ரன் முதலிய லோகபாலர்களும் மன்னவர்களும் ஆங்காங்கு இவனுக்கு உபஹாரங்களைக் கொண்டு வந்து கொடுக்கப்போகிறார்கள். அவர்களுடைய பத்னிகள் இவனைச் சக்ராயுதந் தரித்த பரமபுருஷனாகவே நினைத்து இவனுடைய புகழைப் பாடப்போகிறார்கள். 'இந்த ப்ருது மஹாராஜன் ப்ரஜைகளைப் பாதுகாக்க முயன்று அவர்களுக்கு ஜீவனோபாயம் கற்பிக்கும்பொருட்டுப் பசுவின் உருவம் தரித்த பூமியைக் கறந்தான். இவன் தனுஸ்ஸின் நுனியால் இந்த்ரன்போல் பர்வதங்களை யெல்லாம் அவலீலையாகப் பிளந்து பூமியை ஸமமாக்கினான். ஸிம்ஹம் வாலைத் தூக்கிக்கொண்டு திரிவதுபோல், இவன் ஆஜகவமென்கிற தன் தனுஸ்ஸை நாணேற்றி ஒலிப்பித்துக்கொண்டு சத்ருக்களால் பொறுக்கமுடியாத பராக்ரமமுடையவனாகிப் பூமண்டலத்தில் திரியும்பொழுது அஸத்துக்கள் இவனிடத்தில் பயந்து திசைகள் தோறும் மறைந்து கொண்டார்கள். இவன், ஸரஸ்வதி நதிக்கு உற்பத்தி ஸ்தானமாகிய ப்ரஹ்மாவர்த்தமென்னும் தேசத்தில் நூறு அச்வமேத யாகங்கள் செய்யவேண்டுமென்று ஸங்கல்பித்துக்

கொண்டு தொண்ணூற்றொன்பது யாகங்களை முடித்து நூறாவது யாகத்தை நடத்துகையில், இந்த்ரன் யாகக் குதிரையைப் பறித்துக்கொண்டு போனான். இவன் தன் க்ருஹத்திற்கு ஸமீபத்திலிருக்கிற ஓர் வனத்தில் சென்று அங்குத் தனியே எழுந்தருளியிருக்கிற ஸனத்குமார பகவானைப் பக்தியுடன் ஆராதித்து நிர்மலமான பரப்ரஹ்ம ஜ்ஞானத்தைப் பெற்றான்' என்று திக்பாலகர்களுடைய பத்னிகளும் ராஜாக்களுடைய பத்னிகளும் இம்மன்னவனைப் புகழப்போகிறார்கள். இவன் எங்கும் ப்ரஸித்தமான புகழுடையவன், மஹா பராக்ரமசாலி. இங்ஙனம் இவன் ஆங்காங்குத் தன்னைப்பற்றின பாசுரங்களைக் கேட்கப் போகிறான். உலகங்களுக்கு உபத்ரவம் செய்யுந் துஷ்டர்களை வேரோடு நாசம் செய்யப்போகிறான். இவனுடைய ஆஜ்ஞை எங்கும் தடையின்றி நடக்கப்போகின்றது. திசைகளை யெல்லாம் ஜயிக்கப்போகின்றான். இவனுடைய வைபவம் மஹத்தானது, இதைத் தேவச்ரேஷ்டர்களும் அஸுரச்ரேஷ்டர்களும் புகழ்ந்து பாடப்போகிறார்கள். இவன் பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவா யிருக்கப்போகின்றான். பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ப்ருது பூமியை வதிக்கத் தொடங்குகையில் பூமி அவனை ஸ்தோத்ரம் செய்தல்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:— மஹாநுபாவனான அந்த ப்ருது மன்னவன் இவ்வாறு தன் குணங்களையும் செயல்களையும் ஸ்துதிபாடகர்களால் புகழப்பெற்றவனாகி அவர்களை ஆடை ஆபரணம் முதலியவைகளால் ஸம்மானித்து அவர்கள் செய்த ஸ்தோத்ரத்தையும் அபிநந்தித்து ஸந்தோஷப்படுத்தினான். அவன் ப்ராஹ்மணர் முதலிய நான்கு வர்ணத்தவர்களையும் ப்ருத்யர்களையும் மந்த்ரிகளையும் புரோஹிதர்களையும் ஜனங்களையும் நன்கு வெகுமதித்தான்.

இங்ஙனம் மொழிந்த மைத்ரேயரைப் பார்த்து, 'பூமி பலவகை உருவங்களைத் தரிக்குந்திறமை யுடையதே. ஆயினும் எதற்காகப் பசுவின் உருவம் தரித்தது? அம்மன்னவன் அந்தப் பூமியைக் கறக்கும்பொழுது எது கன்றாயிருந்தது? எதைப் பாத்ரமாகக் கொண்டான்? பூமி இயற்கையில் மேடும் பள்ளமுமாயிருப்பது. அதை அவன் எப்படி ஸமமாக்கினன்? இந்த்ரன் அவனது யாகக் குதிரையை ஏன் பறித்துக்கொண்டு போனன்? மஹானுபாவரே? அந்த ராஜர்ஷி, ப்ரஹ்மவித்துக்களில் சிறந்த ஸனத்குமாரரிடத்தில் தத்வஜ்ஞானத்தைப் பெற்று எந்த கதியை அடைந்தான்? இவன் அழகிய புகழுடையவனும் ஸமர்த்தனுமாகிய ஸ்ரீக்ருஷ்ண பகவானுடைய முதன்மையான அவதாரமல்லவா? ஆகையால் இவனுடைய புகழ் பரிசுத்தமாயிருக்குமே. இவனுடைய புகழ் மற்றும் ஏதேனும் உளதாயின், அதையும் எனக்கு மொழிவீராக. நான் பகவானிடத்திலும் அவனை உள்ளபடி அறிந்த ஊம்மிடத்திலும் பக்தியும் ப்ரீதியும் உடையவன். எனக்கு, பகவான் ப்ருதுவாய் அவதரித்துப் பூமியைக் கறந்த வ்ருத்தாந்தத்தை உரைப்பீராக' என்று விதுரர் வினவினர். மைத்ரேயரும் அதைக்கேட்டு மனக்களிப்புடன் மறுமொழி கூறத்தொடங்கி 'விதுரனே! ப்ராஹ்மணர்கள் ப்ருதுவுக்குப் பட்டாபிஷேகம் செய்து ஜனங்களையெல்லாம் பாதுகாக்கும்படி நியமிக்கையில், பூமியிலுள்ள ப்ரஜைகளெல்லாம் ஆஹாரமின்றிப் பசியினால் தேஹம் இளைத்துப் ப்ரபுவாகிய அம்மன்னவனிடம் வந்து 'ராஜனே! வ்ருக்ஷங்கள் பொந்தில் நெருப்புப்பற்றி எரிவதுபோல், நாங்கள் ஜாடராக்னியால் தஹிக்கப்பெற்று ரக்ஷகனாகிய உன்னைச் சரணம் அடைந்தோம். எங்களுக்கு ஜீவனம் கற்பித்து எங்களைக் காக்கும் பொருட்டல்லவோ நீ ஏற்படுத்தப்பட்டனை. மன்னவர் தலைவனே! ஆகையால், பசியினால் பீடிக்கப்பட்டிருக்கிற எங்களுக்கு அன்னத்தை ஏற்படுத்திக்கொடுக்க நீ முயற்சி செய்வாயாக' என்று முறையிட்டுக்கொண்டார்கள்.

கௌரவஶ்ரேஷ்டனே! ப்ருது மன இரக்கத்திற்கிடமான ப்ரஜைகளின் புலம்பலைக் கேட்டு ஜனங்கள் ஆஹாரமின்றி வருந்துவதற்குக் காரணமென்னென்று நெடுநேரம் ஆலோசித்து அதைக் கண்டுபிடித்தான். அவன் உடனே கையில் தனுஸ்ஸை ஏந்திப் பூமியின்மேல் கோபித்துப் பாணத்தைத் தொடுத்தான். கையும் வில்லுமாய் நிற்கிற அம்மன்னவனைக் கண்டு பூமிதேவி பயந்து நடுங்கிப் பசுவின் உருவம் தரித்து வேடனால் தொடரப்பெற்ற மான்பேடுபோல் ஓடினாள். ப்ருது மன்னவன் கோபித்துக் கண்கள் மிகவும் சிவக்கப் பெற்றுத் தனுஸ்ஸில் பாணத்தைத் தொடுத்து அது ஓடுமிடமெல்லாம் தொடர்ந்தோடினான். பூமிதேவி திசைகளையும் அவற்றின் மூலைகளையும் ஆகாசம் பூமி அவற்றின் இடையிலுள்ள அந்தரிக்ஷம் ஆகிய இவற்றையும் பற்றி ஓடும்பொழுது அம்மன்னவனும் வில்லும் கையுமாய்த் தன்னை விடாமல் தொடர்ந்து வருவதைக் கண்டாள். ப்ரஜைகள் ம்ருத்யுவிடத்தில் பயப்படுவதுபோல் அந்தப் பூமி அவனிடத்தில் பயந்து உலகமெங்கும் திரிந்தும் கதியற்று மன வருத்தத்துடன் திரும்பி அம்மன்னவனை நோக்கி:—'மிகுந்த மதியுடையவனே! தர்மந் தெரிந்தவனே! வருந்தினவர்களிடத்தில் மன இரக்கமுடையவனே! நீ ப்ராணிகளைப் பாதுகாக்கையில் நிலைநின்றிருப்பவன். அத்தகைய நீ நிரபராதியும் மன இரக்கத்திற்கிடமுள்ளவளுமாகிய என்னை ஏன் வதிக்க விரும்புகின்றனை? தர்மங்களை உணர்ந்தவனென்று பேர்பெற்ற நீ பெண்ணாகிய என்னை எங்ஙனம் வதிக்கலாகும்? ராஜனே! ஸாதாரண ஜனங்கள்கூடப் பெண்கள் அபராதம் செய்யினும் வதிக்கமாட்டார்கள். தீனவத்ஸலனான உன்னைப் போன்றவரைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? என்னிடத்தில் ஜகத்தெல்லாம் நிலைநின்றிருக்கின்றது. நான் திடமான ஓடம்போல் மஹாஜலத்தின்மேல் மிதக்கின்றேன். அப்படிப்பட்ட என்னைப் பிளந்து உன்னையும் இந்த ப்ரஜைகளையும் நீ எங்ஙனம் தரிக்கப்போகின்றனை? ஆகையால் நீ என்னை

வதிப்பது யுக்தமன்று’ என்று மொழிந்தாள். அதைக் கேட்டு அம்மன்னவன்:—‘பூமி! நீ எனது கட்டளையைக் கடக்கின்றனை. நீ யாகங்களில் ஹவிர்ப்பாகங்களை வாங்கிக் கொண்டு தான்யம் முதலியவற்றை மாத்ரம் கொடாதிருக்கின்றனை. ஆகையால் உன்னை வதிக்கப்போகிறேன். ஸாதுவான பசுவைத் தண்டிப்பது யுக்தமல்லவாயினும், தினந்தோறும் புல்லைத்தின்று மடியிலிருக்கிற பாலைக் கொடாமலிறுக்கிக் கொண்டிருக்குந் துஷ்டப் பசுவைத் தண்டிப்பது யுக்தமே. ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் ப்ரஹ்மதேவன் ப்ராணிகளின் ஜீவனத்திற்காக ஓஷதிகளையும் விதைகளையும் படைத்தான். நீ புத்திக் குறைவினால் என்னை அவமதித்து அவற்றை வெளியிடாமல் உள்ளடக்கிக்கொண்டிருக்கின்றனை. என் ப்ரஜைகள் ஆஹாரமில்லாமல் பசியினால் வருந்திப் புலம்புகிறார்கள். ஆனதுபற்றி உன்னை என் பாணங்களால் வதித்து உன் மாம்ஸத்தினால் இந்த ப்ரஜைகளின் துக்கத்தைப் போக்குகிறேன். புருஷனாவது ஸ்திரீயாவது நபும்ஸகனாவது தம்மைத்தாமே வெகுமதித்து மதிகெட்டு ப்ராணிகளிடத்தில் மன இரக்கமற்றிருப்பார்களாயின், அவர்களை ஸ்த்ரீயென்றும் புருஷனென்றும் பேதம் பாராமல் ராஜாக்கள் வதிப்பது யுக்தம். அது அவர்களுக்குத் தோஷமாகாது. நீ மாயையினால் பசுவின் உருவம் தரித்திருக்கின்றனை; அதிக கர்வங் கொண்டிருக்கின்றனை. இப்படிப்பட்ட உன்னை என் பாணங்களால் துண்டக் துண்டமாகத் துண்டித்து என்னுடைய யோக ஸாமர்த்யத்தினாலேயே ப்ரஜைகளையும் என்னையும் தரிக்கப்போகிறேன்’ என்றான். இங்ஙனம் கோபங்கொண்டு யமனைப்போலப் பயங்கரனாயிருந்த அந்த ப்ருதுவுக்குப் பூமிதேவி நமஸ்காரம் செய்து நடுக்கமுற்றுக் கைகளைக் குவித்துக்கொண்டு ‘மாயையினால் தேவ மனுஷ்யாதி பல வகைச் சரீரங்களைப் படைத்த பரமபுருஷன் நீயே. நீ ப்ரக்ருதியின் மூலமாய் ஸத்வாதி குண ஸ்வபாவமுடையவன். தேஹங்களில் ஆத்மாவென்றும் ப்ரமமும் தேஹத்

தைப் பற்றினவைகளான போதல் வருதல் முதலிய செயல்களில் ஆத்மாவைச் சேர்ந்தவையென்னும் ப்ரமமும் 'நான் செய்கிறேன்' என்னும் கர்த்ருத்வ ப்ரமமும் அவற்றைத் தொடர்ந்த பசி தாஹம் முதலிய ஊர்மிகளும் உனக்குக் கிடையாது. ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய உன்னால் நான் ப்ராணிகளுக்கு ஆதாரமாகப் படைக்கப்பட்டேன். தேவ மனுஷ்யாதி ப்ரபஞ்சமெல்லாம் என்னிடத்தில் வஸிக்கின்றது. அப்படிப்பட்ட நீயே என்னைக் கையில் ஆயுதத்தைக் கொண்டு வதிக்க முயன்றனை. நீ ஸ்வதந்த்ரன். இனி நான் யாரைச் சரணம் அடைவேன்? உன்னை ஆதாரமாக வுடையதும் இத்தகையதென்று சிந்திக்க முடியாததுமாகிய உன் மாயையினால் சேதன அசேதன ரூபமான இந்த ப்ரபஞ்சத்தை யெல்லாம் நீயே படைத்தனை. அப்படிப்பட்ட நீயே அவற்றைக் காக்க முயன்றிருக்கின்றனை. ப்ரஜைகளைப் பாதுகாக்கையாகிற தர்மத்தில் நிலைநின்றிருக்கிற நீ என்னை ஏன் கொல்ல விரும்புகின்றாய்? மனத்தை அடக்கி உன்னைப் பணியாதவர்களுக்கு உன் மாயையை வெல்லமுடியாது. ஈஸ்வரனாகிய நீ அத்தகைய மாயையைக்கொண்டு செய்ய நினைப்பதை ஒருவரும் அறிய வல்லரல்லர். நீ இயற்கையில் ஒருவனேயாயினும் ப்ரஹ்ம ருத்ராதி ஜீவாத்மாக்களைச் சரீரமாகவுடையவனாகி அந்தச் சரீர பேதத்தினால் பலவாறு யிருக்கின்றனை. மஹத் தத்வம் முதல் ப்ருதிவி வரையிலுமுள்ள ஸமஷ்டி ஸ்ருஷ்டியை நடத்தி ப்ரஹ்ம தேவனையும் மரீசி முதலிய ப்ரஜாபதிகளையும் கொண்டு தேவமனுஷ்யாதி வ்யஷ்டி ஸ்ருஷ்டியையும் நடத்தின ஸர்வேஸ்வரன் நீயே. ப்ரக்ருதி கர்மம் காலம் ஜீவன் என்கிற உன் சக்திகளைக்கொண்டு நீ ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகின்றனை. நீ நினைத்த காரியத்தை நடத்தக்கூடிய பலபல விசித்ர சக்திகளுடையவன்; பரம புருஷன்; ஜகத்காரணன். அப்படிப்பட்ட உனக்கு நமஸ்காரம். ப்ரபு! உன்னால் படைக்கப்பட்டதும் பூதங்கள் இந்த்ரியங்கள் மனம் இவை அடங்கினதுமாகிய ஜகத்தை நிலைநிறுத்தும்பொருட்டு, நீ பிறவி

யற்றவனுயினும் வாராஹ உருவங்கொண்டு ஜலத்திற்குள் மூழ்கியிருந்த என்னைப் பாதாளத்தினின்று மேலுக் கெடுத்தனே. அங்ஙனம் ஆதிவாராஹ உருவங்கொண்ட நீயே இப்பொழுது மஹாஜலத்தின்மேல் ஓடம்போல் மிதந்து கொண்டிருக்கிற என்னிடத்தில் உள்ள ப்ரஜைகளைப் பாது காக்கும்பொருட்டு இவ்வாறு தோற்றிஞய். அப்படிப்பட்ட நீ இப்பொழுது கோபத்திஞல் உக்ரஸ்வரூபஞகிக் கூரான பாணத்தை ஏந்திக்கொண்டு என்னை வதிக்க விரும்பு கின்றனே. வீரர்களான பற்பல துஷ்டர்களும் வாராஹாதி உருவங்களைக் கொள்கின்ற உன்ஞல் ஸம்ஹரிக்கப்பட்டுப் பெரும்புகழ் பெறுகின்ருர்கள். உன் மாயையால் மதிமயங்கப் பெற்ற என்னைப்போன்ற ஜனங்கள் அத்தகைய உன் கருத்தை அறியமாட்டார்கள். அப்படிப்பட்ட உன் அவ தாரங்களுக்கு நமஸ்காரம்' என்ருள். பதிஞருவது அத்யா யம் முற்றிற்று.

---

## ப்ருது பூமியைக் கறத்தல்

மைத்ரேயர் சொல்லுகிருர்:—பூமிதேவி இங்ஙனம் துதிசெய்தும் கோபம் தணியாமல் உதடு துடிக்கப்பெற் றிருக்கிற அம்மன்னவனைப் பார்த்துப் பயந்து தானே ஒரு வாறு மனத்தை அடக்கிக்கொண்டு:—'ப்ருது சக்ர வர்த்தியே! கோபத்தை முழுவதும் அடக்கிக்கொண்டு நான் சொல்வதைக் கேட்பாயாக. வண்டு புஷ்பங்களினின்று தேனை ஆராய்ந்தெடுப்பதுபோல், பண்டிதஞயிருப்பவன் ஸமஸ்த வஸ்துக்களிலும் ஸாரத்தை க்ரஹிக்கவேண்டும். நன்மைகளை விரும்பும் புருஷர்களுக்கு அவை ஸித்திக்கும் பொருட்டு, உண்மையை உணர்ந்த முனிவர்கள் இவ்வுலகத் திற்குரிய க்ருஷிமுதலிய உபாயங்களையும் பரலோகத்திற் குரிய அக்னிஹோத்ரம் முதலிய உபாயங்களையும் கண்டுபிடித்து, அவற்றில் பரலோகத்திற்குரிய

உபாயங்களைத் தாங்கள் அனுஷ்டித்துக் காட்டியிருக்கிறார்கள். முன்புள்ளோர் காட்டின அந்த உபாயங்களை ஒருவன் ஶ்ரத்தையுடன் அனுஷ்டிப்பானாயின், தான் விரும்பும் நன்மைகளை அநாயாஸமாகப் பெறுவான். அவற்றை அநாதரித்துத் தன் புத்தியால் சிலவற்றைக் கைப்பற்றிக் கார்யம் செய்வானாயின், அந்த உபாயாபாஸங்கள் அடிக்கடி தொடங்கி நடத்தப்பெறினும் தடைபட்டு அவனது விருப்பத்தை நிறைவேற்றிக்கொடுக்க மாட்டா. மன்னவனே! முன்பு ப்ராஹ்மதேவன் இவ்வுலகத்தில் ப்ரஜைகளின் ஜீவனத்திற்காகவும் யாகாதி கர்மங்களின் மூலமாய் அடையக்கூடிய பரலோக ஸுகத்திற்காகவும் ஓஷதிகளைப் படைத்தான். அவற்றையெல்லாம் நன்னடத்தையில்லாத துஷ்டர்கள் அனுபவிப்பதைக் கண்டேன். உன்னைப்போன்ற லோகபாலர்கள் எவரும் அந்தத் துஷ்டர்களைத் தண்டித்து என்னை ஆதரித்துப் பாதுகாக்க நேராதிருந்தேன். உலகமெல்லாம் திருடர்கள் நிறைந்திருந்தார்கள். ஆகையால் 'இவை யஜ்ஞாதி கர்மங்களுக்கு வேண்டும்' என்று நான் ஓஷதிகளை வெளியிடாமல் உள்ளடக்கிக்கொண்டேன். நெடுநாளானபடியால் அவை என்னிடத்தில் ஜீர்ணமாயின. நீ உபாயத்தினால் அவற்றை வெளிப்படுத்திக்கொள்வாயாக. நீண்ட புஜதண்டங்களையுடைய வீரனே! பூதங்களைக் காப்பவனே! நீ உன் ப்ராணிகளுக்குப் பலங்கொடுக்கவல்ல அன்னத்தை விரும்புவாயாயின், பசுவின் உருவம் தரித்த எனக்குக் கன்றையும் கறக்கிறதற்குரிய பாத்ரத்தையும் கறக்கும் புருஷனையும் ஏற்படுத்துவாயாக. அப்பொழுது நான் கன்றின்மேல் ப்ரீதியால் உன் விருப்பங்களை நிறைவேற்றவல்ல பாலைக் கறப்பேன். வீரனே! மேகங்கள் பெய்கின்ற ஜலம் வர்ஷருது போன பின்பும் என்னிடத்தில் தங்கும்படி என்னை ஸமமாக்குவாயாக. ராஜனே! இவற்றால் உனக்கு க்ஷேமம் உண்டாகும்' என்று மொழிந்தாள். மன்னவன் ப்ரியமும் ஹிதமுமான பூமியின் வார்த்தையைக் கேட்டு ஸ்வாயம்புவ

மனுவைக் கன்றாகவும் தன் கையைப் பாத்ரமாகவும் ஏற்படுத்திக்கொண்டு தானே கறக்கும் புருஷனாயிருந்து அந்தப் பூமியினிடத்தினின்று ஸமஸ்த ஓஷதிகளுக்கும் காரணமான பாலைக் கறந்தான். மற்றுமுள்ள அறிஞர்களும் அங்ஙனமே அந்தப் பூமியினிடத்தினின்று பாலைக் கறந்து ஸமஸ்த வஸ்துக்களுக்கும் ஸாரம் உண்டாகும்படி அவற்றில் இறைத்தார்கள். மற்றவர்களும் தங்கள் விருப்பத்தின்படி, ப்ருதுவினால் ஸ்வாதீனம்செய்யப்பட்ட அந்தப் பூமியைக் கறந்துகொண்டார்கள். ஸத்துக்களில் சிறந்தவனே! அவற்றின் விவரத்தைக் கேள். ரிஷிகள் ப்ருஹஸ்பதியைக் கன்றாகவும் இந்த்ரியங்களைப் பாத்ரமாகவும் ஏற்படுத்திக்கொண்டு வேதஸ்வரூபமான பாலைக் கறந்தார்கள். தேவதைகள் இந்த்ரனைக் கன்றாகக் கொண்டு ஸ்வர்ண பாத்ரத்தில், வீர்யமென்கிற மனவலிமையும் ஓஜஸ்ஸென்கிற இந்த்ரிய வலிமையும் பலமென்கிற தேஹ வலிமையும் கொடுக்கவல்ல அம்ருதம்போன்ற பாலைக் கறந்தார்கள். அஸுரர்கள் ப்ரஹ்லாதனைக் கன்றாகக்கொண்டு இரும்பு பாத்ரத்தில் ஸுரையென்றும் ஆஸவமென்றும் சொல்லப்பட்ட இருவகையான பாலைக் கறந்தார்கள். கந்தர்வர்களும் அப்ஸர ஸ்த்ரீகளும் விஶ்வாவஸு வென்னும் கந்தர்வ ராஜனைக் கன்றாகக்கொண்டு குரலின் இனிமையும் தேஹ ஸௌந்தர்யத்தையும் விளைக்கவல்ல பாலைக் கறந்தார்கள். ஶ்ராத்தங்களில் ஆராதிக்கப்படுந் தேவதைகளான பித்ருக்கள் அர்யமனைக் கன்றாகக்கொண்டு பச்சை மண் பாத்ரத்தில் தமது ஆஹாரத்தை விளைவிக்க வல்ல பாலைக் கறந்தார்கள். ஸித்தர்கள் கபிலரைக் கன்றாகக்கொண்டு ஆகாசமாகிற பாத்ரத்தில் நினைத்தவற்றையெல்லாங் கொடுக்கவல்ல அணிமாதி ஸித்தி ரூபமான பாலைக் கறந்தார்கள். வித்யாதரர் முதலியவர் அந்தக் கபிலரையே கன்றாகவும் ஆகாயத்தையே பாத்ரமாகவும் கொண்டு ஆகாச கமனம் முதலிய வித்யைக்குக் காரணமான பாலைக் கறந்தார்கள். ஆச்சர்யமான உருவங்களைக் கொள்ளவல்ல

கிம்புருஷர் முதலிய மற்றவர் அந்தர்த்தான சக்தி அற்புத உருவங்களைக் கொள்ளும் சக்தி இவைகளை விளைவிப்பதும் தாரணையென்னும் யோகத்தினால் விளையக்கூடியதுமான மாயைக்கிடமாகிய பாலைக் கறந்தார்கள். மாம்ஸம் தின்பவர்களான யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் பூதங்களும் பிசாசங்களும் ருத்ரனைக் கன்றாகவும் கபாலத்தைப் பாத்ரமாகவும் கொண்டு ரக்தமாகிற பாலைக் கறந்தார்கள். படமுள்ளவைகளும் படமில்லாதவைகளுமான ஸர்ப்பங்களெல்லாம் தக்ஷகனைக் கன்றாகக்கொண்டு பாழிகளாகிற பாத்ரங்களில் விஷத்திற்குக் காரணமான பாலைக் கறந்தன. பசுக்கள் ருத்ரவாஹனமான வ்ருஷபத்தைக் கன்றாக்கொண்டு அரண்யமாகிற பாத்ரத்தில் புல்லுக்குக் காரணமான பாலைக் கறந்தன. மாம்ஸம் தின்பவைகளும் கோரைப்பல்லுடையவைகளுமான புலி முதலிய துஷ்ட ஜந்துக்கள் ஸிம்ஹத்தைக் கன்றாகக்கொண்டு தமது சரீரமாகிற பாத்ரத்தில் மாம்ஸத்திற்குக் காரணமான பாலைக் கறந்தன. பக்ஷிகள் கருடனைக் கன்றாகக்கொண்டு ஜங்கமமான புழு முதலிய ஆஹாரங்களுக்கும் ஸ்தாவரமான காய் பழம் முதலிய ஆஹாரங்களுக்கும் காரணமான பாலைக் கறந்தன. வ்ருக்ஷங்கள் ஆலமரத்தைக் கன்றாகக்கொண்டு தமது சரீரமாகிற பாத்ரத்தில் சாறுகிற பாலைக் கறந்தன. மலைகள் இமயமலையைக் கன்றாகக்கொண்டு தமது தாழ்வரைகளாகிற பாத்ரங்களில் கைரிகம் முதலிய தாதுக்களுக்குக் காரணமான பாலைக் கறந்தன. ஸமஸ்த வஸ்துக்களும் ப்ருதுவினால் உதவிசெய்யப்பெற்றுத் தமது ஜாதியில் முக்யமானவற்றைக் கன்றாகக்கொண்டு தத்தமக்கு ஏற்பட்ட பாத்ரங்களில், விருப்பங்களையெல்லாம் கறக்க வல்ல பூமியினிடத்தினின்று வெவ்வேறாகப் பாலைக் கறந்துகொண்டன. விதுரனே! இங்ஙனம் அன்னத்தை விரும்புகிற ப்ருது முதலிய அனைவரும் பாத்ரங்களையும் கன்றுகளையும் கறக்கிறவர்களையும் வெவ்வேறு ஏற்படுத்திக்கொண்டு தங்கள் தங்களுக்கு இஷ்டமான பாலைக் கறந்து கொண்டார்கள்.

பெண்ணிடத்தில் ப்ரீதியுடைய அம்மன்னவர் தலைவன் மனக்களிப்புற்று எல்லா விருப்பங்களையும் கறக்கின்ற அந்தப் பூமியைத் தன் பெண்ணாகப் பாவித்தான். பின்பு அந்த ராஜாதிராஜன் வல்லவனாகையால் தன் தனுஸ்ஸின் நுனியால் மலைச் சிகரங்களைச் சூர்ணம் செய்து பூமண்டலத்தைப் பெரும்பாலும் ஸமமாக்கினான். ப்ரஜைகளுக்கு ஜீவனம் கற்பித்துத் தந்தைபோல் பாதுகாப்பவனும் மஹானுபாவனுமாகிய ப்ருது பிறகு பூமியில் ஆங்காங்கு அவரவர்க்குரியபடி க்ராமங்கள் புரங்கள் பட்டணங்கள் பலவகைத் துர்க்கங்கள் இடைச்சேரிகள் பசுக்கள் இருக்குமிடம் ஸேனைகள் இருக்கும் இடம் பொன் வெள்ளி முதலியன விளையும் இடம் பயிர் செய்பவர் வஸிக்கும் சேரிகள் மலையடிவாரங்களில் இருக்குங் க்ராமங்கள் ஆகிய பற்பல வாஸஸ்தானங்களை ஏற்படுத்தினான். இவ்வுலகத்தில் ப்ருதுவுக்கு முன்பு பட்டணம் க்ராமம் முதலிய ஏற்பாடு இல்லாமலேயிருந்தது. அந்த ப்ருது ஏற்படுத்தின க்ராமம் பட்டணம் முதலிய இடங்களில் ஆங்காங்கு ப்ரஜைகள் எவ்விதத்திலும் பயமின்றி ஸுகமாக வாஸம் செய்துவந்தார்கள். பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

ப்ருது தன் யாகக் குதிரையைத் திருடின இந்த்ரனை வதிக்க முயன்றதும், ப்ரஹ்மதேவன் ஸமாதானம் செய்ததும்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—பிறகு ராஜரிஷியாகிய ப்ருது, ஸ்வாயம்புவமனு வாஸம் செய்தமையாலும் ஸரஸ்வதி நதி கிழக்கு முகமாய்ப் பெருகி வருகின்றமையாலும் பரிசுத்தமாகிய ப்ரஹ்மாவர்த்தமென்னும் க்ஷேத்ரத்தில் நூறு அச்வமேத யாகங்கள் செய்யவேண்டுமென்று ஸங்கல்பித்துக்கொண்டு யாகம் நடத்தினான். சதக்ரது என்று பேர்பெற்ற மஹானுபாவனாகிய தேவேந்த்ரன் தன்னைக்காட்டிலும் அவன் செயலில் மேற்படுவதைக் கண்டு

அவனது யஜ்ஞத்தைப் பொருதிருந்தான். ஸர்வாந்தராத்மாவும் ஸமஸ்த லோகங்களுக்கும் ஹிதோபதேசம் செய்பவனும் ஷாட்குண்ய பூர்ணனும் யஜ்ஞங்களால் ஆராதிக்கப்பெற்று அவற்றிற்குப் பலன் கொடுப்பவனும் ஸமர்த்தனும் ஸர்வேஶ்வரனுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணு ப்ராஹ்மதேவனோடும் ருத்ரனோடும் லோகபாலர்களோடும் அவரது ப்ருத்யர் கூட்டங்களாலும் முனிவர்களாலும் பாடப்பெற்றுத் தானே நேரில் புலப்பட்டான். அப்பொழுது ஸித்தர் வித்யாதரர் தைத்யர் யக்ஷர் முதலிய தேவஜாதிகளும் மனுஷ்யர்களும் ஸுநந்தன் நந்தன் முதலிய பகவானுடைய ப்ருத்யர்களும் கபிலர் நாரதர் தத்தர் முதலிய முனிவர்களும் ஸநகாதி மஹாயோகிகளும் மற்றுமுள்ள அவனுடைய பக்தர்களும் அவனைப் பின்தொடர்ந்து வந்தார்கள். பரத வம்சாலங்காரனே! அந்த ப்ராஹ்மாவர்த்த தேசத்தில் பூமி தர்மானுஷ்டானத்திற்கு வேண்டிய கருவிகளையும் மற்றை யெல்லா விருப்பங்களையும் கறக்குந் தன்மையதாகையால் யாகம் செய்கிற அம்மன்னவனுக்கு வேண்டியவற்றை யெல்லாம் கறந்தது. ஆறுகள் எல்லா ரஸங்களையும் பால் தயிர் பானகம் நெய் மோர் முதலியவற்றையும் பெருக்கின. மரங்கள் அகன்ற உருவமுடையவையாகித் தேன்களைப் பெருக்கிக்கொண்டு பூ காய் பழம் முதலியவற்றைக் கொடுத்தன. ஸமுத்ரங்கள் ரத்னங்களை ராசி ராசியாய்க் கொடுத்தன. பர்வதங்கள் பக்ஷ்யம் போஜ்யம் சோஷ்யம் லேஹ்யமென்ற நான்குவகை அன்னங்களையும் கொடுத்தன. ஸகல ஜனங்களும் தமது ப்ரபுக்களுடன் பலவகை உபஹாரங்களைக் கொடுத்தார்கள். பகவானையே நாதனாகவுடைய ப்ருதுவின் கார்யம் இங்ஙனம் பெரிய சீர்மையுடன் நடப்பதைக் கண்டு தேவேந்த்ரன் பொறுமை கொண்டு ப்ருது தொண்ணூற்றொன்பது அஶ்வமேத யாகங்களையும் செய்து நூறாவது அஶ்வமேத யாகத்தில் யஜுர்வேதத்தின் பொருளான பகவானை ஆராதித்துக்கொண்டிருக்கையில், மறைந்துவந்து யாகக்

குதிரையைத் திருடிக்கொண்டு ஆகாயமார்க்கத்தில் விரைந்தோடினான். அதை மஹானுபாவராகிய அத்ரி முனிவர் கண்டார். அவன், உண்மையில் அதர்மமாயினும் மூடர்களுக்கு தர்மமென்று தோற்றுகிற பாஷண்ட வேஷமாகிற கவசத்தை அணிந்திருந்தான். மஹாவீரனாகிய ப்ருதுவின் புதல்வன் அத்ரி மஹர்ஷியால், 'இந்த்ரன் குதிரையைக் கொண்டுபோகிறான்' என்று அறிவிக்கப்பட்டுப் பெருங்கோபங்கொண்டு அவனைக் கொல்ல விரும்பிப் பின்றொடர்ந்து 'நில் நில்' என்று மொழிந்தான். இந்த்ரன் ஜடை தரித்து உடம்பெல்லாம் சாம்பல் பூசிப் பாஷண்டவேஷம் பூண்டிருந்தானாகையால் அவனைக் கண்ட ப்ருது குமாரன் 'தர்மமே இப்படி ஒரு வடிவங்கொண்டு வந்தது' என்று நினைத்து அவன்மேல் பாணத்தை ப்ரயோகம் செய்யாமலே திரும்பினான். இந்த்ரனை வதிக்கப்போய்த் திரும்பிவிட்ட அம்மன்னவனது குமாரனை நோக்கி அத்ரிமஹர்ஷி 'அப்பா! யஜ்ஞத்தைப் பாழ்செய்கின்ற தேவாதமனாகிய இவ்விந்த்ரனை வதிப்பாயாக. இவனது வேஷத்தைக் கண்டு ப்ரமிக்கவேண்டாம்' என்று மீளவும் தூண்டினார். அவனும் அதைக் கேட்டுக் கோபாவேசமுற்று, ஸிம்ஹம் யானையைப் பின்பற்றுவதுபோல், ஆகாச மார்க்கத்தில் விரைகின்ற அவ்விந்த்ரனைப் பின்பற்றினான். ஸ்வதந்த்ரனாகிய அவ்விந்த்ரன் பயந்து குதிரையைத் துறந்து பாஷண்ட வேஷத்தையும் விட்டு மறைந்து நின்றான். வீரனான ப்ருது குமாரன் குதிரையைக் கைப்பற்றித் தந்தையின் யாக பூமிக்கு வந்தான் மஹர்ஷிகள் அவனுடைய அற்புதச் செயலைக் கண்டு அவனுக்கு விஜிதாஸ்வனென்று பெயர் கொடுத்தார்கள். வல்லமையுடைய தேவேந்த்ரன் பேரிருளை விளைவித்து அதில் மறைந்து வந்து யூபஸ்தம்பத்தில் பொற் சங்கிலியினால் கட்டுண்டிருக்கிற யாகக் குதிரையை மீளவும் திருடிக்கொண்டு போனான். அத்ரி மஹர்ஷி ஆகாயத்தில் விரைந்தோடுகிற அவ்விந்த்ரனை மறுபடியும் விஜிதாஸ்வனுக்குக் காட்டினார். அவ்விந்த்ரன் மண்டை

யோடும் கோணத்தடியும் தரித்திருந்தானாகையால் விஜிதாச்வனுக்கு அவனைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. அவன் 'இவனே இந்த்ரன்' என்று தெரிவித்து அவனை வதிக்கும்படி அத்ரிமஹர்ஷியால் மீளவும் தூண்டப் பெற்றுக் கோபத்துடன் அவன்மேல் பாணப்ரயோகம் செய்தான். அவ்விந்த்ரன் முன்போலவே குதிரையையும் பாஷண்டவேஷத்தையும் துறந்து மறைகையில், வீரனாகிய விஜிதாச்வன் குதிரையைக்கொண்டு தந்தையின் யாக பூமிக்கு வந்தான். ஜ்ஞானத்தைப் பெறுந் திறமையில்லாத மூடர்கள், பின்பு இந்த்ரன் கொண்ட நிந்தைக்கிடமான அந்தப் பாஷண்ட வேஷத்தைக் கைக்கொண்டார்கள். இந்த்ரன் கொண்ட மாறுவேஷங்களெல்லாம் பாபத்தை அறிவிக்கும் அடையாளங்களாகையால் அவை பாஷண்டம் என்று பேர்பெற்றன. அனுகூலம்போல் தோற்றுபவைகளும் மிதம்போலும் உண்மைபோலும் பேசுந்தன்மை அமைந்தவைகளும் தர்மாபாஸங்களும் திகம்பரமாயிருக்கை காவித்துணியுடுக்கை முதலியவைகளுமான பாஷண்ட வேஷங்களில் ஜனங்கள் தர்மமென்னும் ப்ரமத்தினால் விருப்பங் கொள்கின்றனர். மஹா பராக்ரமசாலியாகிய ப்ருது இந்த்ரன் தன் யாகத்திற்கு விக்னம் செய்ததை அறிந்து அவன்மேல் கோபித்துத் தனுஸ்ஸை நாணேற்றிட்டுப் பாணத்தை எடுத்தான். அம்மன்னவன் இந்த்ரனை வதிக்க விரும்பிக் கோபங்கொண்டு பொறுக்க முடியாத பய வேகத்துடன் கண்கொண்டு காணக்கூடாதிருக்கையில், அத்ரி முதலிய ருத்விக்குகள் கண்டு 'மிகுந்த மதியுடையவனே! யாகத்தில் தீக்ஷிதனான நீ சாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்ட யாக பசுவைத் தவிர மற்றெதையும் வதிக்கலாகாது. உன் யாகத்தை அழித்தவனும் உன் புகழால் ஒளி மழுங்கினவனுமாகிய இந்த்ரனை நாங்கள் விரோதமற்ற ஆஹ்வான மந்த்ரங்களால் அழைத்து உனது சத்ருவாகிய அன்னவனை மந்த்ரபலத்தினால் பசு புரோடாசத்தைப்போல் அக்னியில் ஹோமஞ் செய்கிறோம்' என்று யாகதீக்ஷிதனான

ப்ருதுவுக்கு விண்ணப்பம் செய்து ஸ்ருக்கென்னும் பாத்ரத்தைக் கொண்டு கோபத்துடன் ஹோமம் செய்கையில், ப்ரஹ்மதேவன் கண்டு அவ்விடம் வந்து அவர்களைத் தடுத்து 'அந்தணர்களே! நீங்கள் இந்த்ரனை வதிக்கலாகாது. யாகம் பகவானுடைய சரீரம். தேவதைகளும் பகவானுக்கு இஷ்டமான சரீரங்கள். அத்தேவர் தலைவனான இந்த்ரனை யாகத்தினால் நீங்கள் எப்படி வதிக்கலாம்? இந்த்ரன் இம் மன்னவனது யாகத்திற்கு விக்னம் செய்ய விரும்பி தர்ம லோபத்திற்கிடமான பெரிய அநீதம் செய்தான். இதைக் கண்டீர்களா? ஆகையால் இந்த ப்ருது மன்னவன் தொண்ணூற்றொன்பது யாகங்களோடு நிற்பானாக. இவன் இயற்கையில் பெரும்புகழுடையவன். இவனுக்கு இதனால் ஆகவேண்டியதில்லை. ப்ருதோ! நீ யாகங்களை நன்றாக அனுஷ்டித்தனை. நீ இவ்வளவோடு நிற்பாயாக. நீ மோக்ஷதர்மங்களை அறிந்தவனல்லவா? உனக்கு இது தகுதியன்று. நீ இந்த்ரன்மேல் கோபம் கொள்ளலாகாது. நீயும் இந்த்ரனும் பகவானுக்குச் சரீரமாயிருப்பவர்கள். உனக்கு க்ஷேமம் உண்டாகுக. மஹாநுபாவனே! ஊக்கத்துடன் நான் சொல்வதைக் கேட்பாயாக. உன் யாகத்திற்கு விக்னம் நேர்ந்ததைப்பற்றி நீ சிந்திக்கவேண்டாம். தெய்வத்தினால் தடைபட்ட கார்யத்தைப்பற்றி ஒருவன் சிந்திப்பானாயின் அவன் மனம் கோபாவேசமுற்றுப் பெரிய மோஹாந்தகாரத்தில் மூழ்கும். ஆகையால் உன் யாகம் நிற்குமாக. தேவதைகளுக்கு துராக்ரஹம் இயற்கையில் ஏற்பட்டது. அவர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்கமாட்டார்கள். உன் யாகத்தினால் இந்த்ரன் பாஷண்ட வேஷங்களைக் கொள்ளவே தர்மலோபம் உண்டாயிற்று. இந்த்ரன் உனது யாகத்திற்கு விக்னம் செய்ய விரும்பி யாகக் குதிரையைத் திருடும்பொருட்டு ஏற்படுத்தின இந்தப் பாஷண்ட வேஷங்களால் ஜனங்கள் மதிமயங்கி அவற்றில் கால்தாழ்கின்றனர். உன் யாகத்தினால் நேரிட்ட கெடுதியைக் காண்பாயாக. வேனனுடைய அபநீதியால் தர்மமர்யாதைக

ளெல்லாம் பாழாகையில் அவற்றைப் பாதுகாக்கும் பொருட்டு இவனது சரீரத்தினின்று நீ அவதரித்தனை. நீ மஹாவிஷ்ணுவின் அம்சாவதாரம். அத்தகைய நீ இந்த ஜகத்தின் உற்பத்தியை ஆலோசித்து இதைப் படைத்த ப்ரஜாபதிகளின் ஸங்கல்பத்தை நிறைவேற்றுவாயாக. வல்லனே! தர்மலோபத்திற்கிடமான பாஷண்ட மார்க்கமாகிற இந்த்ரனது மாயையைப் போக்குவாயாக' என்றான். ப்ரஹ்மதேவனால் இங்ஙனம் கட்டளையிடப்பெற்ற ப்ருது மன்னவன் இந்த்ரனை நண்பனாகப் பாவித்து அவனோடு ஸந்தித்தான். மிகப் பெரிய செயல்களையும் செய்து முடிக்க வல்ல அம்மன்னவன் அவப்ருதஸ்நானம் செய்து சிறக்க, தேவதைகள் ஹவிர்ப்பாகங்களால் த்ருப்தி அடைந்து வரதர்களாகையால் அவனுக்கு வரங்களை அளித்தார்கள். உண்மையான ஆசீர்வாதங்களைச் செய்யவல்ல ப்ராஹ்மணர்கள் தக்ஷிணைகளைப் பெற்று ஸந்தோஷம் அடைந்து ஸத்கரிக்கப்பெற்று அவனுக்கு ஆசீர்வாதங்களைச் செய்தார்கள். பித்ருக்களும் தேவதைகளும் ரிஷிகளும் மனுஷ்யர்களும், மற்றும் எவரெவர் வந்தார்களோ அவர்களும் அம்மன்னவனால் ப்ரீதியுடன் தானமானங்களைச் செய்து பூஜிக்கப் பெற்றார்கள். பதினெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ ப்ருதுவுக்கு ஸ்ரீ மஹாவிஷ்ணு அனுக்ரஹம் செய்து ஹிதம் உபதேசித்தல் }

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ஷாட்குண்ய பூர்ணனும் யஜ்ஞங்களைப் பாதுகாப்பவனும் அவற்றில் கொடுக்கிற ஹவிஸ்ஸுக்களை புஜிக்கின்றவனுமாகிய வைகுந்தன் ப்ருதுவின் யஜ்ஞங்களால் நன்கு ஆராதிக்கப்பெற்று இந்த்ரனுடன் அவனைப் பார்த்து 'மன்னவனே! இவ்விந்த்ரன் நூறு அஸ்வமேத யாகங்கள் செய்யவேண்டுமென்கிற உன் ஸங்கல்பத்திற்கு விக்னம் செய்தானாகையால், அந்த அபராதத்தைப் பொறுக்கும்படி வேண்டுகிறான்.

இவன் விஷயத்தில் பொறுக்கவேண்டும். உலகத்தில் மதியுடைய மன்னவர் பிறர்க்கு உபகாரம் செய்யுந் தன்மையராகி எத்தகைய பூதங்களுக்கும் த்ரோஹம் செய்யமாட்டார்கள். தேஹம் ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்டதல்லவா? அவர்கள் அதற்காகப் பிறர்மேல் த்ரோஹ சிந்தை கொள்ளார்கள். உன்னைப்போன்ற பண்டிதர்களும் ஈஸ்வரனது மாயையால் மதிமயங்குவார்களாயின், அவர்கள் நெடுநாள் பெரியோர்களைப் பணிந்ததெல்லாம் பயனற்றதேயாம். ஆகையால் பண்டிதனாயிருப்பவன் இச்சரீரம், அவித்யை காமம் கர்மம் இவைகளால் ஏற்பட்டதென்பதை அறிந்து அதில் மனப்பற்று செய்யலாகாது. ஆத்மா என்றும் இருவாருயிருப்பவன்; நிர்மலன்; ஸ்வயம்ப்ரகாசன்; ராகம் த்வேஷம் முதலிய துர்க்குணமற்றவன்; ஜ்ஞானந்தாதி குணங்களுக்கிடம்; அணுஸ்வரூபனுயினும் ஜ்ஞானத்தினுல் எங்கும் நிறைந்தவன்; மறைவில்லாதவன்; தேஹாதிகளை ஸாக்ஷாத்கரிப்பவன்; தேஹத்திற்குள் புகுந்து அதைத் தரிப்பவன்; தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன்; தேஹதர்மங்களான பசி தாஹம் முதலியவை ஆத்மாவுக்குக் கிடையாது; அவனுக்குத் தேவ மனுஷ்யாதி பேதங்கள் எவையும் கிடையாது. இதற்கு ஸுஷுப்தியே த்ருஷ்டாந்தம். அப்பொழுது நானென்பது மாத்ரம் தோற்றுமேயன்றி மற்ற பேதங்கள் எவையும் தோற்ரு. இத்தகைய ஆத்ம ஸ்வரூபத்தையும் அவ்வாத்மா பரமாத்மாவான எனக்குட்பட்டவனென்பதையும் அறிந்து என்னை உபாஸிப்பானுயின், அவன் ப்ரக்ருதியோடிருப்பினும் அதன் குணங்களால் தீண்டப்பெறமாட்டான். பலனை விரும்பாமல் வர்ணுஸ்ரம தர்மத்தினுல் என்றும் என்னை ஸ்ரத்தையுடன் ஆராதிப்பானுயின், அவன் மனம் மெல்ல மெல்லத் தெளிவுபெறும். ராகம் த்வேஷம் முதலிய தோஷங்களையெல்லாம் துறந்து தூய மனத்தனுகி ஆத்ம பரமாத்ம ஸ்வரூபங்களை நன்ருக உணர்ந்து பசி தாஹம் முதலிய வையாதிகள் தீண்டப்பெருததும் எனக்குச் சரீரமும்

குணப்பெருமையுடையதும் ப்ராக்ருதி ஸம்பந்தமற்றதுமாகிய ஆத்ம ஸ்வரூபத்தைப் பெறுவான். 'ஆத்மா இயற்கையில் நிர்விகாரன்; பஞ்சபூதங்கள் ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்கள் மனம் ஆகிய இவற்றின் ஸமுதாயமான தேஹத்திற்கு ப்ரபு; இயற்கையில் எவ்வகை விகாரங்களுமில்லாதவன். இவனுக்கு வரும் விகாரங்களெல்லாம் ப்ராக்ருத ஸம்பந்தத்தைப்பற்றினவை' என்று எவன் அறிகிறானோ, அவன் ப்ரக்ருதியோடிருக்கும்பொழுதே க்ஷேமத்தைப் பெறுவான். ஸத்வ ரஜஸ் தமோ குணங்களால் விளையும் விகாரங்களெல்லாம் சரீரத்தைச் சேர்ந்தவைகளேயாயினும் அச்சரீர ஸம்பந்தத்தினால் ஆத்மா ஜ்ஞான ஸங்கோசம் உண்டாகப்பெற்று அதனால் ஸுகதுக்கங்களை அனுபவிக்கின்றான். தேஹாத்ம விவேகமுடைய பண்டிதர்கள் என்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவராகி அங்ஙனம் தேஹத்தைப்பற்றி விளைகிற ஸம்பத்துக்களிலும் விபத்துக்களிலும் ஸுகதுக்கங்களால் கலங்கமாட்டார்கள். நீ ஆத்ம ஸ்வரூபத்தை உணர்ந்த அறிவுடைமையால் இந்த்ரியங்களை வென்று ஸுக துக்கங்களை ஸமமாகப் பாவித்து மேன்மையுள்ள தேவாதிகளிடத்திலும் தாழ்மைக்கிடமான பசுபக்ஷி முதலியவற்றிலும் நடுத்தரமான மனுஷ்யாதிகளித்திலும் பேதம் பாராட்டாமல், நான் ஏற்படுத்திய மந்த்ரி முதலிய ஸமஸ்த ஜனங்களோடுங்கூடி உலகங்களையெல்லாம் பாதுகாத்து வருவாயாக. அரசனுக்கு ப்ரஜைகளைப் பாதுகாக்கையே பெரிய தன்மையாம். அவன், ப்ரஜைகளை நல்வழி தவறாதிருக்குமாறு பரிபாலித்து வருவானாயின், அவர்கள் செய்யும் புண்யத்தில் ஆறில் ஒரு பாகத்தைப் பெறுவான். அதுவின்றி அவர்களை வருத்திக் கப்பத்தை மாத்ரம் வாங்கிக்கொள்வானாயின், தன் புண்யம் முழுவதும் சென்று தான் அவருடைய பாபத்தைப் பெறுவான். ஆகையால், ப்ராஹ்மண ஸ்ரேஷ்டர்களால் அனுமதி செய்யப்பெற்று அவர்களைப் பின்சென்று தர்மத்தையே முக்யமாகக்கொண்டு தன்னை ப்ரபுவாக நினைக்காமல்

ப்ரஜைகளில் ஒருவனாகவே பாவித்து உலகமெல்லாம் தன்னிடத்தில் ப்ரீதியோடிருக்குமாறு அதைப் பாது காத்து வருவாயாயின், சீக்ரத்திலேயே ஸித்தர்களான ஸனகாதி முனிவர்கள் உன் க்ருஹத்திற்கு வரக் கண்டு அவர்களால் தத்வோபதேசம் பெற்று மோக்ஷத்தைப் பெறுவாய். மன்னவனே! நீ என்னிடத்தில் ஏதேனும் ஒரு வரம் வேண்டிக்கொள்வாயாக. நான் உன் சமாதி குணங்களாலும் சீலத்தினாலும் உனக்கு உட்பட்டிருக்கிறேன். குண சீல மில்லாதவர்கள் யாகங்களாலும் தவங்களாலும் யோகத்தினாலும் என்னை எவ்வளவு ஆராதிப்பினும், நான் அவர்களுக்கு ஸுலபமாய்க் கிடைக்க மாட்டேன். நான், உலகத்தை யெல்லாம் ஸமமாக நினைக்கும் மனமுடையவரிடத்தில் கலந்திருக்குந் தன்மையனேயன்றி மற்றவரிடம் கலந்திருக்கமாட்டேன்' என்றான். ஐபசீலனாகிய அம்மன்னவன் ஜகத்திற்கெல்லாம் தந்தைபோல் ஹிதம் உபதேசிக்குந் தன்மையுள்ள பகவானுடைய கட்டளையைச் சிரஸாவஹித்து, தன் பாதங்களில் விழுந்து தான் செய்த பாபகார்யத்தினால் வெட்கித்திருக்கின்ற இந்த்ரனை ப்ரேமத்துடன் வாரியெடுத்து அணைத்து த்வேஷத்தைத் துறந்தான். ஆ! இப்படியும் ஒருவனுக்கு மனம் ஸ்வாதீனமாயிருப்பதுண்டோ? பிறகு ஜகத் ஸ்வரூபியாகிய பகவான் ப்ருது மன்னவனால் மேன்மேலும் வளர்ந்து வருகின்ற பக்தியுடன் பூஜை செய்து தன் பாதாரவிந்தங்களைப் பிடிக்கப் பெற்று ஸத்புருஷர்களுக்கு நண்பனாகிய அம்மஹானுபாவன் புறப்பட்டுப் போக முயன்றனனாயினும் அம்மன்னவனிடம் ப்ரீதியால் விலம்பித்துத் தனது தாமரைக் கண்களால் அவனையே பார்த்துக்கொண்டிருந்தனனன்றிப் போகவில்லை. மன்னவர் தலைவனாகிய அந்த ப்ருது கை கூப்பிக்கொண்டு ஆநந்த நீர்களால் கண்கள் நிரம்பப்பெற்று பகவானைப் பார்க்க முடியாதிருந்தான்; மற்றும் கண்ணீர்களால் தழுதழுத்து ஒன்றும் பேசாதிருந்தான். ஆனால், இந்தப் பகவானை மனத்தினால் அணைத்து அம்மனத்தி

லேயே தரித்துக்கொண்டிருந்தான். பிறகு அம்மன்னவன் கண்ணீர்களைத் துடைத்துக்கொண்டு, எத்தனை பொழுது காணினும் கண்களுக்குச் சிறிதும் திருப்தி உண்டாகாதபடி மிகவும் அழகாயிருப்பவனும் பாதங்கள் பூமியில் படும்படி நிற்கின்றவனும் பக்கத்திலிருக்கின்ற கருடனுடைய தோள்மேல் கைந்நுனியை வைத்துக்கொண்டிருப்பவனுமாகிய அந்தப் பரமபுருஷனைக் கண்குளிரக் கண்டு 'நீ வரங்களைக் கொடுக்கவல்ல ப்ரஹ்மாதிகளுக்கும் ப்ரபு. ஆயினும் ஸத்வாதி குணங்களால் கலங்கின மனமுடையவரும் நரகம் போல் பலவகை துக்கங்களுக்கிடமான ஸம்ஸாரத்தில் உழல்கின்றவருமான மூடர்கள் விரும்புகிற அற்ப வரங்களைப் பண்டிதன் எப்படி விரும்புவான்? மோக்ஷங் கொடுக்க வல்லவனே! அத்தகைய வரங்களை நான் உன்னிடத்தில் விரும்பமாட்டேன். நாதனே! பெரியோர்களின் ஹ்ருதயத்தினின்று வாய் வழியால் வெளிப்பட்டு வருகிற அம்ருதம் போன்ற உன் பாதாரவிந்தங்களின் குணங்களைக் கேட்க நேராதாயின், எனக்கு மோக்ஷங்கூட வேண்டியதில்லை. உன் குணங்கள் எல்லையில்லாதவை. அவற்றைக் கேட்க எனக்கு அனேகமாயிரம் காதுகளைக் கொடுப்பாயாக. இதுவே எனக்கு இஷ்டமான வரம். பெரியோர்களின் வாய் வழியாய் நழுவி வருகிற உன் பாதாரவிந்தங்களின் அம்ருதத்திவலையில் படிந்த காற்று வெகு தூரத்தினின்றாயினும் சிறிது வீசப்பெறுவோமாயின், தத்வமார்க்கத்தை மறந்து மனம் போனவழியெல்லாம் திரிகின்ற குத்ஸித யோகிகளான நாங்களும் உன் விஷயமான புத்தியைப் பெறுவோம். ஆகையால் எனக்கு மற்ற வரங்களால் ஆக வேண்டியது ஒன்றுமே இல்லை. நல்ல புகழுடையவனே! ஸத்புருஷர்களோடு ஸஹவாஸம் நேருமாயின், எப்பொழுதாயினும் நான் ப்ரயத்னம் செய்யாமலே மங்களமான உன் புகழைக் கேட்பேன். பசுவைத் தவிர, ஸாரஜ்ஞனாகிய மற்ற எவன்தான் உன் குணங்களைக் கேட்க நேரினும் அதினின்று மீண்டுபோவான்? நாத! ஸ்ரீமஹாலக்ஷ்மியும்

உன் குணங்களை அநுபவிக்கவேண்டுமென்னும் விருப்பத்தினாலல்லவோ உன்னை மணம் புரிந்தாள்? புருஷர்களில் எல்லாரிலும் சிறந்து குணங்களுக்கெல்லாம் நிதியுமாகிய உன்னை நான் ஸ்ரீமஹாலக்ஷ்மியைப்போல் மிக்க ஆவலுடன் பணிந்தேன். நாங்களிருவரும் உன்னையொருவனையே பர்த்தாவாக விரும்பிப் பணியினும், உனது பாதாரவிந்தங்களில் மனவூக்கமுடைய எங்களுக்குச் சக்களத்திச் சண்டை உண்டாகாது. ஜகத்திற்கெல்லாம் தாயாகிய அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மியோடு விரோதம் உண்டாயினும் உண்டாகட்டும். அவளைப்போல் நானும் உன்னைப் பணிவேனன்றி, அதற்காக அதினின்று மீளமாட்டேன். நீ அற்ப வஸ்துவையும் ப்ரீதியினால் பெரிதாகக் கொள்ளுந்தன்மையன், தீனவத்ஸலன். ஆகையால் எனக்கும் ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கும் விரோதம் வரின், நீ என்னிடத்தில் ப்ரீதி செய்வாய். மற்றும், ஆநந்தமயமான உன் ஸ்வரூபத்தை அநுபவிப்பதில் ஆழ்ந்திருக்கிற உனக்கு ஸ்ரீ மஹாலக்ஷ்மியால் ஆகவேண்டிய ப்ரயோஜனம் என்னிருக்கிறது? நீ இப்படி ஸ்ரீ மஹாலக்ஷ்மியையும் உபேக்ஷித்து உன் பக்தர்களைப் பாராட்டுந்தன்மையனாயிருப்பதைப்பற்றியே, பெரியோர்கள் ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களும் அவற்றின் கார்யமான தேஹாத்ம ப்ரமாதிகளும் தீண்டப்பெறாமல் திகழ்கின்றவனும் தன்னைப் பற்றினார்க்கும் அவை தீண்டாதபடி அருள்புரிகின்றவனுமாகிய உன்னைப் பணிகின்றார்கள். ஜகதீசனே! நாங்கள் ப்ரக்ருதி வாஸனையால் மதிமயங்கி ஸம்ஸார பலன்களை விரும்பி அவற்றிற்காக யஜ்ஞாதி கர்மங்களைச் செய்யினும், நீ எங்கள் மதிகேடைக் கண்டு மனமிரங்கி அந்த யஜ்ஞாதி கர்மங்களையும் உனது ஆராதனமாகக் கொண்டு எங்களுக்குப் பக்தியை விளைவித்து மோக்ஷத்தையே கொடுக்குந் தன்மையன். பெரியோர்கள் ஸாம்ஸாரிக பலன்களெல்லாம் துச்சமென்றறிந்து அவற்றில் விருப்பமின்றி ஜ்ஞானைகாகார ஸ்வரூபனான ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிந்து அவ்வளவோடு நிற்காமல்

அவ்வாத்மாவுக்கும் அந்தராத்மாவாகிய உன்னையே பணி கின்றார்கள். அவர்கள் உன் பாதாரவிந்தங்களை த்யானிப் பதை யொழிய மற்றை எந்தப் பலனையும் விரும்பமாட்டார் கள். நான் உன்னை ப்ரீதியுடன் பணிந்து வருகையில், என்னைப் பார்த்து 'வரம் வேண்டிக்கொள்வாய்' என்று மொழிந்தனையே. அது உலகங்களை வஞ்சிப்பதற்காக மொழிந்த வார்த்தையேயென்று எனக்குத் தோற்று கின்றது. உன் கட்டளையாகிற வேதம் பசு புத்ராதி ஐஹிக பலன்களையும் ஸ்வர்க்காதி ஆமுஷ்மிக பலன்களையும் ஸாதித்துக்கொடுப்பவைகளான யாகாதி கர்மங்களை விதித்து ஜனங்களுக்கு அவற்றில் விருப்பத்தை விளைத்துக் கயிறுபோல் பந்திக்கின்றது. அவர்கள் மதிமயங்கி யஜ்ஞாதி கர்மங்களை அனுஷ்டிக்கின்றார்கள். இல்லையாயின் அம் முயற்சியேயின்றி மோக்ஷத்தில் விருப்பம் உண்டாகப்பெறு வார்கள். ஈசனே! உன் மாயையால் மதிமயங்கி ஆத்மபரமாத் மாக்களின் உண்மையை அறியப் பெறாத ஜனங்களில் எவனேனும் ஒருவன் தெய்வாதீனமாய் உன்னைப் பணிந் தும், ஸத்ய ஸ்வரூபனாகிய உன்னிடத்தினின்று மோக்ஷத் தைத் தவிர மற்றதை விரும்புவானாயின், உன்னை விட்டு வெகுதூரம் ஒதுங்கிப்போனவனேயாவான். அப்பொழுது உன்னுடைய ஈச்வரத்வமே கழன்றுபோம். ஆகையால் தந்தை புதல்வனுக்கு ஹிதத்தைச் செய்வதுபோல், நாங்கள் வேண்டாமற்போயினும் நீ எங்களுக்கு ஹிதத்தையே செய்யவேண்டும்' என்றான். அதைக் கேட்டு பகவான்:—'ராஜனே! நீ நன்றாக மொழிந்தனை. நீ ஸம்ஸாரிகள் விரும்பும் பலன்களெவற்றையும் விரும்பாதிருக் கின்றனை. இது யுக்தமே. என்னிடத்தில் மிக்க மனவூக்க முடையவன் ஸ்வர்க்கத்தையும் ஆத்மானுபவமாகிற கைவல் யத்தையும் நரகத்தையும் துல்யமாகவே நினைப்பான். மஹாராஜ! நான் உன் விஷயத்தில் மிகவும் களிப்புற்றேன். நீ என் கட்டளையை ச்ரத்தையுடன் அங்கீகரித்துத் துறக்க முடியாத கோபத்தையும் துறந்தாய். அதுவே எனக்கு

மேலான ஆராதனம். ராஜனே! உனக்கு என்னிடத்தில் மேன்மேலும் பக்தி வளர்ந்து வருமாக. உனக்குத் தெய்வாதீனமாய் என்னிடத்தில் இப்படிப்பட்ட பக்தி உண்டாயிற்று. நீ இந்தப் பக்தியின் மஹிமையால், தாண்டமுடியாத என் மாயையையும் தாண்டினாய். (ராஜனே! நான் சொன்னபடி மனவூக்கந் தவறுதலின்றி ப்ரஜைகளைப் பாதுகாத்து வருவாயாக. என் கட்டளைப்படி நடப்பவன் எல்லா விதத்திலும் க்ஷேமத்தைப் பெறுவான்)' என்று ஸாரமுள்ள தான ப்ருதுவின் வசனத்தைப் புகழ்ந்து அவனால் பூஜிக்கப்பட்டு அவனை அனுக்ரஹித்துத் தான் புறப்பட்டுப்போக முயன்றான். அப்பொழுது தேவதைகளும் ரிஷிகளும் பித்ருக்களும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் சாரணர்களும் பன்னகர்களும் கின்னரர்களும் அப்ஸரஸ்த்ரீகளும் மனிதர்களும் பக்ஷிகளும் பற்பல பூதங்களும், எல்லாம் பகவத் ஸ்வரூபமேயென்னும் புத்தியுடைய மன்னவனால் உரை மனம் அஞ்சலி பக்தி இவற்றால் உரியபடி வெகுமதிக்கப் பெற்று வைகுந்தனைப் பின்சென்றார்கள். ப்ருது மன்னவன் உபாத்யாயர்களோடு கூடப் பார்த்துக்கொண்டிருக்கையில் பகவான் அவன் மனத்தைப் பறிப்பவன்போல் தனது லோகத்திற்குச் சென்றான். அம்மன்னவன், ப்ரஹ்மாதி தேவர்களுக்கும் தேவனாகிய அவ்வாஸுதேவன் கண்ணுக்குப் புலப்படுமளவில் அவனையே பார்த்துக்கொண்டிருந்து, மறைந்த பின்பு இங்கு நோக்கி தண்டன் ஸமர்ப்பித்துத் தன் பட்டணம் போய்ச் சேர்ந்தான். பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

ப்ருது மன்னவன் ப்ரஜைகளுக்கு ஹிதம் உபதேசித்தல்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—பட்டணத்து ஜனங்கள் மன்னவன் வருகிறானென்று தெரிந்து முத்துமாலைகளாலும் விடுதிப்பூக்களாலும் பூமாலைகளாலும் வெண்

பட்டுக்களாலும் ஸ்வர்ண தோரணங்களாலும் மிக்க பரிமள முள்ள தூபங்களாலும் ஆங்காங்கு அலங்காரம் செய்து ராஜமார்க்கங்களிலும் நாற்சந்திகளிலும் கலைவழிகளிலும் சந்தனம் அகில் முதலிய வாஸனைத் தண்ணீர்களைத் தெளித்து, புஷ்பம் அக்ஷதை பழம் யவமுளை பொரி தீபம் முதலிய மங்கள வஸ்துக்களை அமைத்துக் குலைகளோடு கூடின வாழை மரங்களையும் பாக்கு மரங்களையும் கட்டித் தளிர்த்தோரணங்களால் முழுவதும் அலங்கரித்து வைத் தார்கள். இன்னும் அவர்கள் தீபங்களையும் பூஜைக்கு வேண்டிய வஸ்துக்களையும் தயிர் முதலிய ஸமஸ்த மங்கல த்ரவ்யங்களையும் எடுத்துக் கொண்டு சிறந்த காதணிகளை அணிந்து மற்றுமுள்ள அலங்காரங்களால் திகழ்கின்ற கன்னிகைகளை முன்னிட்டு மன்னவனை எதிர்கொண்டு சென்றார்கள். வீரனாகிய ப்ருது மன்னவன் வந்திகளால் துதிசெய்யப்பெற்றும் கர்வமின்றி, சங்கு துந்துபி முதலிய வாத்யகோஷத்தோடும் அந்தணர்களின் வேதகோஷத் தோடும் பட்டணத்திற்குள் நுழையும்பொழுது அப்பெரும் புகழன் ஆங்காங்குப் பட்டணத்து ஜனங்களாலும் நாட்டு ஜனங்களாலும் பூஜிக்கப்பட்டுத் தானும் அவர்களை வெகு மதித்துக் களிப்புற்று அவரவர்க்கு வேண்டிய வரங்களையும் கொடுத்துக்கொண்டே சென்று தன் க்ருஹத்திற்குள் ப்ரவேசித்தான். அம்மன்னவன் மஹாகுணசாலி, பெரியோர் களால் பூஜிக்கத் தகுந்தவன். அவனது சரித்திரங்கள் நிந்தைக்கிடமின்றிப் பரிசுத்தமாயிருக்கும். அவன் பூமியைக் கறந்தமை முதலிய இத்தகைய பெரும் பெரிய செயல்களை நடத்திக்கொண்டே பூமண்டலத்தை யெல்லாம் நெடுநாள் பாதுகாத்து வந்து இவ்வுலகில் பெரும்புகழை நாட்டி வைகுண்டலோகம் போய்ச் சேர்ந்தான்.

இங்ஙனம் பலகுணங்கள் நிறைந்ததும் குணசாலிக ளால் கொண்டாடப்பெற்றதுமாகிய ப்ருதுவின் புகழை மைத்ரேயர் சொல்லக்கேட்ட விதுரர் பகவானிடத்தில்

மிகுந்த பக்தியுடையவராகையால் இச்சரித்ரம் மொழிந்த மைத்ரேயரைப் பூஜித்து மீளவும் அம்முனிவரைப் பார்த்து 'மஹர்ஷி! ப்ருது மன்னவன் ப்ராஹ்மணர்களால் அபிஷேகம் செய்யப்பெற்றதையும், அவன் ஸமஸ்த தேவதைகளாலும் பூஜிக்கப் பெற்றதையும், அவன் தன் புஜங்களில் விஷ்ணுவின் தேஜஸ்ஸு நிலைநிற்கப்பெற்று அவற்றால் பூமியைக் கறந்ததையும் மொழிந்தீர். அவன் அதற்குமேல் நடத்தின வ்ருத்தாந்தத்தையும் எனக்கு மொழிவீராக. தெரிந்தவன் எவன்தான் இந்த ப்ருதுவின் கீர்த்தியைக் கேட்கமாட்டான்? இம்மன்னவன் தன் பராக்ரமத்தினால் ஸம்பாதித்தனுபவிக்காத போகங்கள் எவையுமே இல்லை. இப்பொழுதுள்ள ராஜாக்களும் இந்த்ரன் முதலிய லோகபாலர்களும் அவற்றில் சிந்தினவற்றையே அனுபவித்து வருகின்றார்கள். அம்மஹானுபாவனுடைய பரிசுத்தமான சரித்ரத்தை எனக்கு மொழிவீராக' என்று வினவினார். மைத்ரேயரும் அதைக் கேட்டு மேல் வருமாறு கூறினார்:—

அந்த ப்ருது மன்னவன் கங்கா யமுனைகளின் மத்யத்திலுள்ள ப்ராஹ்மாவர்த்தமென்னும் க்ஷேத்ரத்தில் வாஸம் செய்துகொண்டு புண்யத்தைக் கழிக்க விரும்பி முன்செய்த கர்மங்களுக்குப் பலனாக ஏற்பட்ட போகங்களை அனுபவித்து வந்தான். அவன் கட்டளை எவ்விடத்திலும் தடைபடவில்லை. ஏழு தீவுகளிலும் அவனொருவனே அதிகாரம் செலுத்தி வந்தான். அவன் ப்ராஹ்மணர்களையும் பகவானிடத்தில் பக்தியுடைய அல்லாதவர்களையும் தன் அதிகாரத்திற்கு உட்படுத்தாமல் அவர்களை ப்ரீதியுடன் பாராட்டி வந்தான். ஒருகால் அவன் மஹா ஸத்ரமென்னும் யாகம் செய்யத் தீக்ஷித்துக்கொண்டான். அந்த யாகத்தில் தேவதைகளும் ப்ராஹ்மரிஷிகளும் தேவரிஷிகளும் ஸபை கூடினார்கள். அந்த ஸபையில் மேன்மைக்கிடமான பெரியோர்கள் அனைவரும் அவரவர்க்குரியபடி பூஜிக்கப்பெற்று உட்கார்ந்திருக்கையில், நக்ஷத்ரங்களின் நடுவில் சந்த்ரன் போல், அம்மன்னவன் ஜனங்களினிடையில் எழுந்து

நின்றான். அவன் உயர்ந்தவன். அவனது புஜங்கள் பருத்துருண்டு நீண்டிருக்கும். அவன் வடிவு பொன்னிறமுடையது. கண்கள் தாமரை யிதழ்போல் சிவந்திருக்கும். மூக்கும் முகமும் அழகாயிருக்கும். அவன் சந்த்ரன்போல் தெளிந்திருப்பான்; பருத்தழகிய தோள்களுடையவன்; அழகிய பற்களும் புன்னகையும் அமைந்தவன்; அகன்ற மார்பினன்; பருத்த நிதம்பமுடையவன். அவனது உதரம் அரச இலைபோன்று த்ரி வலியினால் அழகாயிருக்கும்; கொப்பூழ் நீர்ச்சுழிபோல் ஆழ்ந்திருக்கும். அவன் மஹா தேஜஸ்வி. பொன்னிறமுள்ள துடைகளும் உயர்ந்த பாதங்களும் கறுத்துச் சுருண்டு நுண்ணிய தலைமயிர்களும் சங்கு போன்ற கழுத்தும் உடையவன். அவன் விலையுயர்ந்த சிறந்த ஒரு வெண்பட்டை அரையில் உடுத்து மற்றொன்றை உத்தரீயமாகத் தரித்து யாக தீக்ஷையைப்பற்றி ஆபரணங்க ளணியாமையால் வடிவழகெல்லாம் வ்யக்தமாய் விளங்கப்பெற்றிருந்தான். க்ருஷ்ணாஜினம் தரித்துக் கையில் பவித்ரம் அணிந்து காலக்கடன்களை முடித்து நிர்மலனாகிய அம்மன்னவன் குளிர்ந்து சிருசிருத்த கருவிழிகள் அமைந்த கண்களால் நாற்புறமும் சுற்றிப் பார்த்து எல்லோரையும் களிப்புறச் செய்துகொண்டு செவிக்கினியதும் அழகிய பதங்களும் தெளிந்த பொருளும் ஆழ்ந்த கருத்தும் அமைந்து இலக்கணப் பிழையற்றதுமாகிய வாக்யத்தை இங்ஙனம் மொழிந்தான்.

ப்ருது சொல்லுகிறான்:— இந்த ஸபையில் வந்திருக்கும் ஸாதுக்களே! நீங்கள் எல்லாரும் நான் சொல்லுவதைக் கேட்பீர்களாக. உங்களுக்கு நன்மை உண்டாகுக. தர்மத்தை அறிய விரும்புவோர் தமது நெஞ்சில் பட்டதைப் பெரியோர்களிடம் விண்ணப்பம் செய்து அவர் மூலமாய் அதைத் தெளிவித்துக்கொள்ளவேண்டும். நான் ப்ரஜைகளுக்கு தண்டனை விதிக்கவும் அவர்களுக்கு ஜீவனம் கற்பித்துக் கொடுக்கவும் தந்தமது வர்ணாச்ரமங்களுக்குரிய

தர்ம மர்யாதைகளில் தவருது நடத்தவும் பகவானுல் ஏற்படுத்தப்பட்டேன். தர்மநெறி தவருமல் ப்ரஜைகளைப் பாதுகாக்கும் மன்னவன் விஷயத்தில் கர்மஸாக்ஷியாகிய ஸர்வேஶ்வரன் ஸந்தோஷம் அடைந்து மோக்ஷத்தையும் கொடுப்பான். ஆனபின்பு வேதவாதிகளான பெரியோர்கள் அத்தகைய மன்னவனுக்கு விருப்பங்களை யெல்லாம் விளைக்க வல்ல எந்தெந்தப் புண்ய லோகங்கள் உண்டாகுமென்று சொல்லுகிருர்களோ அவையெல்லாம் உண்டாகுமென்பதில் ஸந்தேஹமில்லை. எவன் ப்ரஜைகளைத் தர்மத்தில் நடத்தப் பாராமல் அவர்களிடத்தினின்று கப்பத்தைமாத்ரம் வாங்கிக் கொள்ளுகிருனே, அவன் ப்ரஜைகளின் பாபத்தைப் பெறுவது மாத்ரமேயன்றித் தன் ஜ்ஞானசக்தி பல ஐஶ்வர்யாதிகளையும் இழப்பான். ஆகையால், என் ப்ரஜைகளே! உங்களைப் பாதுகாக்கும் ப்ரபுவாகிய என்னுடைய பரலோக ஹிதத்தின்பொருட்டு, உங்கள் ப்ரயோஜனத்தைக் கைகூடுவிப்பதாகிய வர்ணாஶ்ரம தர்மத்தைப் பொருமையின்றிப் பகவானுடைய ஆராதனமென்னும் புத்தியுடன் அனுஷ்டிப்பீர்களாக அதுவே நீங்கள் எனக்குச் செய்யும் அனுக்ரஹமாம். பித்ருக்களே! தேவதைகளே! ரிஷிகளே! நிர்மலரான நீங்கள் என் கட்டளையை அனுமோதனம் செய்வீர்களாக. தர்ம கார்யத்தைச் செய்கிறவனுக்கும் தூண்டுகிறவனுக்கும் அனுமதி செய்பவனுக்கும் பரலோகத்தில் பலன் துல்யமே. நல்லியற்கையுடையவர்களே! ஈஶ்வரனே இல்லையாகையால் புண்யபாபங்களும் பரலோக சிந்தையும் மூதலே இல்லையென்று நாஸ்திகர்கள் சொல்லுவார்கள். ஆயினும் அது பொருளல்ல. யஜ்ஞங்களால் ஆராதிக்கப்படுகின்றவனும் அவற்றிற்குப் பலன் கொடுப்பவனுமாகிய ஸர்வேஶ்வரனென்பவன் ஒருவன் உளனென்று ஆஸ்திகர்கள் ஒப்புக் கொள்கின்ருர்கள். இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் சில விடங்களில் வெளிச்சம் நிறைந்த விசித்ரமான போக பூமிகளும் விசித்ரமான சரீரமுடைய அவற்றை அனு

பஜிக்கும் புருஷர்களும் புலப்படுகின்றார்கள். இது ஈஶ்வரனை யொழியப் பொருந்தாது. மனு உத்தானபாதன் த்ருவன் ப்ரியவ்ரதன் என் பாட்டனாகிய அங்கராஜன் ப்ரஹ்ம தேவன், ருத்ரன் ப்ரஹ்லாதன் பலி சக்ரவர்த்தி ஆகிய இவர்களும் இவர்களைப்போன்ற மற்றும் பலரும் ஈஶ்வரன் உளனென்று ஒப்புக்கொண்டவர்கள். இவர்கள் அந்தப் பகவானால் பலன்களையும் பெற்றிருக்கிறார்கள். தர்ம அர்த்த காமங்களையும் தர்மத்தின் பலனான ஸ்வர்க்காதி லோகங்களையும் மோக்ஷத்தையும் கொடுப்பவன் ஈஶ்வரனொருவனே யென்று ஶ்ருதிகளும் ஸ்ம்ருதிகளும் பெரும்பாலும் சொல்லுகையாலும் மனு முதலியவர் ஈஶ்வரனை ஒப்புக்கொண்டார்கள். தர்ம ஸ்வரூபத்தை அறியாதவர்களும் சோகிக்கத் தகுந்தவர்களும் ம்ருத்யுவுக்குப் பேரன் போன்றவருமான வேனன் முதலிய பாபிஷ்டர்களைத் தவிர மற்றவர் அனைவரும் ஈஶ்வரனை ஒப்புக்கொண்டவர்களே. ஸம்ஸார தாபங்களால் வருந்துமவர்க்குப் பகவானுடைய பாதாரவிந்தங்களில் பக்தி நாள்தோறும் வளர்ந்துவருமாயின், அது அவன் கால் கட்டை விரலில் உண்டான கங்கைபோல், பல ஜன்மங்களில் ஏற்பட்ட அவர்களது மனமலங்களை யெல்லாம் உடனே போக்கிவிடும். அங்ஙனம் மனமலங்களெல்லாம் தீரப்பெற்ற புருஷன் ஸம்ஸாரத்தில் விரக்தியும் ஆத்ம ஜ்ஞானமுமாகிற வீர்யமுடையவனாகிப் பகவானுடைய பாதமூலத்தில் மிக்க மனவூக்கம் பெற்றுக் கர்ப்ப ஜன்ம ஜரா மரணாதி வருத்தங்களுக் கிடமான ஸம்ஸாரத்தை மீளவும் அடைய மாட்டான். ஆகையால் உங்கள் வர்ணாஶ்ரமங்களுக்கு ஏற்பட்ட பஞ்சமஹாயஜ்ஞாதி கர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டு சமம் தமம் முதலிய குணங்களும் அமையப் பெற்று மனத்தினால் சிந்தித்து வாயினால் புகழ்ந்து சரீரத்தினால் பணிந்து மனக் கபடமின்றி நமது விருப்பத்தின்படி பலன் கைகூடுமென்று மனவுறுதி யுடையவர்களாகி வேண்டினவற்றையெல்லாம் கறக்கவல்ல பாதாரவிந்தங்களை யுடைய அந்தப் பகவானையே பஜிப்பீர்களாக. சுத்த ஜ்ஞான

ஸ்வரூபனும் கெட்ட குணங்கள் எவையும் தீண்டப் பெருத வனும் கல்யாண குணங்களெல்லாம் நிறைந்தவனுமாகிய அந்தப் பகவான் பற்பல வகைப்பட்ட வஸ்துக்களும் குணங்களும் க்ரியைகளும் மந்த்ரங்களும் தனக்குச் சரீரமா யிருக்கப் பெற்றவனுகையால் தானே யாக ஸ்வரூபனுகி அந்த யாகத்தினுல் ஸாதிக்கப்படுகிற ஸ்வர்க்காதி பலன் களும் அவற்றைக் கொடுக்கிற அக்னி இந்த்ராதி தேவதா ரூபமான சரீரங்களும் அவற்றிற்கு வாசகமான அக்னி இந்த்ராதி நாமங்களும் தானேயாகிருன். விபுவாகிய இந்தப் பகவான், ப்ரக்ருதி காலம் வாஸனை கர்மம் இவற்றுல் உண்டாகிற சரீரத்தில் ஜீவன் மூலமாய் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கும் ஜ்ஞானத்தைப் பெற்றுயாகாதி கர்மங்களால் உண்டாகும் ஸ்வர்க்காதி பலனுயிருக்கிருனென்று பெரியோர்கள் நிச்சயிக்கிருர்கள். அக்னி கட்டைகளில் பற்றி அவற்றின் குணமுடையதுபோல் தோன்றினும் இயற்கையில் அவற்றின் குணம் தீண்டப்பெருதிருப்பது போல், ஈஶ்வரன் சேதன அசேதனங்களில் வ்யாபித்து அவையெல்லாம் தானே யென்னும்படி யிருப்பினும் அவற்றின் குணம் தீண்டப்பெருதவனே. இந்தப் பூமியில் என் தேசத்தில் வஸிக்கின்ற இந்த மனிதர்கள், யாகங்களில் கொடுக்கப்படும் ஹவிஸ்ஸுக்களைப் புசிக்கிற இந்த்ராதி தேவதைகளுக்கு அந்தராத்மாவா யிருப்பவனும் ஹிதோப தேசம் செய்பவனும் தன்னைப் பற்றினுருடைய பாபங்களைப் போக்குந் தன்மையனுமாகிய பகவானை மனவுறுதியுடன் தமது வர்ணுஶ்ரம தர்மங்களால் என்றும் பூஜிக்கின்றுர்க ளாகையால் என் மீது அருள்புரிகின்றுர்கள். பலவகை ஸம்ருத்திகளும் நிறைந்திருக்கிற மன்னவர்கள் மதிமயங்கி ஐஶ்வர்யமில்லாமற்போயினும் பொறுமையாலும் தவத்தி னுலும் அதிதிகளை ஆராதிக்கையில் ஊக்கமுற்றிருக்கை யாலும் சமம் தமம் முதலிய மற்ற குணங்களாலும் அக்னி போல் ஜ்வலித்துக்கொண்டிருப்பவரும் பகவானையே தேவதையாக வுடையவருமாகிய ப்ராஹ்மணர் விஷயத்தில்

அபராதப்பட்டு அழியாதிருப்பார்களாக. ப்ராஹ்மணர்களும் ஐஸ்வர்ய மதத்தினால் மதிமயங்கின க்ஷத்ரியர் விஷயத்தில் கோபங்கொள்ளாமல் அருள்புரிந்து வருவார்களாக. ப்ராஹ்மணர்களைப் பணியுந் தன்மையரான மனு முதலியவர்களுக்கும் தேவனும் புராண புருஷனுமாகிய ஸர்வேஸ்வரன் இந்த ப்ராஹ்மணர்களின் பாதாரவிந்தங்களைப் பணிகையால் என்றும் தன்னைவிட்டுப் பிரியாத ஸ்ரீமஹாலக்ஷ்மியையும் ஜகத்தையெல்லாம் பாவனமாக்கும் புகழையும் பெற்று மேன்மையுள்ள பெரியோர்களுக்குத் தலைவனுமாயிருக்கிறான். ஸமஸ்த ப்ராணிகளின் ஹ்ருதய குஹையிலும் வாஸம் செய்பவனும் கர்மத்திற்குட்படாத ஸ்வதந்த்ரனும் ப்ராஹ்மணர்களுக்கு அன்பனுமாகிய ஈஸ்வரன் இந்த ப்ராஹ்மணர்களைப் பணிவோரிடத்தில் மிகுதியும் ஸந்தோஷம் அடைகின்றானாகையால், அந்தப் பகவானுடைய முகமலர்த்தியையே எதிர்பார்த்திருக்கையாகிற பரம தர்மத்தில் மனவூக்கமுடையவர் அனைவரும் வணக்கத்துடன் மனோ வாக் காயங்களென்கிற மூன்று கரணங்களையும் அடக்கிக்கொண்டு அந்த ப்ராஹ்மண குலத்தையே பணிந்து வருவது யுக்தமாம். ப்ராஹ்மணர்களை என்றும் மாறாமல் பணிந்து வருவானாயின், தானொரு ப்ரயத்னம் செய்யாமலே சீக்ரத்தில் மனம் தெளியப்பெற்றுச் சாந்தியைப்பெறுவான். சாந்தியுடையவனுக்கு எதுதான் அஸாத்யம்? யாகங்களில் ஹவிஸ்ஸைப் புசிக்கிற இந்த்ராதி தேவதைகளுக்கும் ப்ராஹ்மணர்களே முகமாகையால் அவர்களைப் பணியில் அந்த இந்த்ராதி தேவதைகளையும் பணிந்ததாம். உண்மையை உணர்ந்த பெரியோர்கள் இந்த்ராதி தேவதைகளின் நாமங்களைச் சொல்லி ப்ராஹ்மணர்களின் முகத்தில் ஹோமம் செய்கிற ஹவிஸ்ஸைப் பகவான் புஜிப்பதுபோல் அசேதனமான அக்னியில் ஹோமம் செய்த ஹவிஸ்ஸைப் புஜிக்கிறதில்லை. பகவான் ஜ்ஞான நிஷ்டையில் நின்றிருக்குந் தன்மையரான அந்தணர்களை என்றும் விட்டுப் பிரியாதவ

னுகையால் அவர்கள் வாய் மூலமாய்ப் புஜிப்பது அவனுக்கு மிகவும் ப்ரியமாயிருக்கும். ப்ராஹ்மணர்கள் யஜ்ஞாதி ஸ்வரூபத்தையும் உபாஸனையின் ஸ்வரூபத்தையும் அறிந்து அவ்வழியில் பரப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரிக்க விரும்பி நித்யமாயிருப்பதும் ராகாதி தோஷங்களும் ப்ரமம் ப்ரமாதம் முதலிய தோஷங்களுமின்றிப் பரப்ரஹ்ம ஸ்வரூபத்தையும் இந்த ஜகத் ஸ்வரூபத்தையும் கண்ணாடிபோல் தெளிவாய்க் காட்டக்கூடியதும் அநாதியுமாகிய வேதத்தை ஶ்ரத்தை தவம் நல்லொழுக்கம் மௌனம் இந்த்ரிய நிக்ரஹம் த்யானம் ஆகிய இவைகளால் இவ்வுலகத்தில் மறக்காமல் தரித்துக்கொண்டு வருகின்றார்கள். ஆகையால் நல்லியற்கையுடையவர்களே! நான் அந்த ப்ராஹ்மணர்களின் பாதாரவிந்தங்களில் படிந்த [1]ரேணுவை எனது வாழ்நாள் முழுவதும் என் க்ரீடத்தில் தரிப்பேனாக. இதை என்றும் தரிக்கும் புருஷனுடைய பாபங்களெல்லாம் சீக்ரத்தில் பறந்துபோம். ஸமஸ்த கல்யாண குணங்களும் இவனைத் தேடிக்கொண்டு வந்து பணிகின்றன. இங்ஙனம் ப்ராஹ்மணர்களின் பாததூளி படுதலால் நற்குணங்களுக் கிருப்பிடமானவனும் சீலத்தையே தனமாகவுடையவனும் பிறர் செய்த நன்றியை மறவாதவனும் ஜ்ஞான வ்ருத்தர்களைப் பணியுந் தன்மையனுமாகிய அம்மனிதனுக்கு ஸமஸ்த ஸம்பத்துக்களும் உண்டாகின்றன. அத்தகைய ப்ராஹ்மணர்களும் பசுக்களும் பகவானும் மற்றுமுள்ள அவனுடைய பக்தர்களும் எனக்கு அருள்புரிவார்களாக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் மொழிகின்ற அம்மன்னவனது வசனத்தைக் கேட்டுப் பித்ருக்களும் தேவர்களும் ப்ராஹ்மணர்களும் நல்லியற்கையுடைய மற்றவர்களும் மனக்களிப்புற்று நல்லது நல்லதென்று புகழ்ந்து 'தந்தை பிள்ளையினால் உலகங்களை ஸாதிப்பானென்னும் பழமொழி உண்மையே. ப்ராஹ்மண சாபத்தினால்

---

1. தூளியை.

பாழடைந்த பாபிஷ்டனான வேனனும் அவன் பிள்ளையாகிய உன்னால் நரகத்தைக் கடந்தான். ஹிரண்யகசிபு பகவானைப் பழித்தமையால் நரகத்தை அடையவேண்டியவனாயிருந்தும் தன் புதல்வனாகிய ப்ரஹ்லாதனுடைய மஹிமையால் நரகத்தைக் கடந்தான். வீரர்களில் தலைவனே! பூமண்டலத்திற்கெல்லாம் பர்த்தாவாகிய நீ பலவாண்டுகள் வாழ்ந்திருப்பாயாக. உனக்கு ஸர்வலோக ரக்ஷகனாகிய பகவானிடத்தில் இப்படிப்பட்ட பக்தி உண்டாயிருக்கிறதல்லவா? நீ நெடுநாள் மன்னவனாயிருப்பின், உனது ஸம்பந்தத்தினால் ப்ரஜைகளெல்லாம் பகவானிடத்தில் பக்தி உண்டாகப் பெற்றுக் கடைத்தேறுவார்கள். பவித்ரகீர்த்தி! ப்ராஹ்மணர்களைப் பாதுகாக்குந் தேவனும் உத்தமஶ்லோகர்களில் சிறந்தவனுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவின் கதைகளை வெளியிடுகிற உன்னை நாதனாகப் பெற்று நாங்கள் இப்பொழுது உன் ஸம்பந்தத்தினால் மோக்ஷப்ரதானான அந்தப் பகவானுக்குத் தொண்டு பூண்டு அவனையே நாதனாகப் பெற்றோம். நாதா! நீ உன் ப்ருத்யர்களான எங்களுக்கு நல்வழியில் நடக்கும்படி கற்பிப்பது ஆச்சர்யமன்று. மனஇரக்கமே இயற்கையாகப் பெற்ற பெரியோர்களுக்கு ப்ரஜைகளிடத்தில் ப்ரீதி உண்டாவது ஸ்வாபாவிகமே. ப்ரபு! ஞானமென்னும் கண்ணை இழந்து கர்மங்களால் ஸம்ஸாரத்தில் உழல்கின்ற எங்களை நரகத்தினின்று கரையேற்றினை. ப்ராஹ்மண குலத்தில் ஆவேசித்து க்ஷத்ரிய குலத்தையும் க்ஷத்ரிய குலத்தில் ஆவேசித்து ப்ராஹ்மண குலத்தையும் அவ்விரண்டிலும் ஆவேசித்து இவ்வுலகத்தையும் பாதுகாப்பவனும் ரஜஸ் தமஸ்ஸுக்கள் தீண்டாத சுத்த ஸத்வமே வடிவாயிருக்கப்பெற்றவனும் பரம புருஷஸ்வரூபனுமாகிய உனக்கு நமஸ்காரம்' என்று மொழிந்தார்கள். இருபதாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஸனத்குமாரர் ப்ருதுவுக்கு ஜ்ஞாநோப தேசம் செய்தல்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—மஹா பராக்ரமசாலியான அந்த ப்ருது மன்னவனைக் குறித்து இங்ஙனம் ஜனங்கள் சொல்லிக்கொண்டிருக்கையில், ஸூர்யனோடொத்த ஒளியுடைய நான்கு முனிவர்கள் அவ்விடம் வந்தார்கள். உலகங்களை யெல்லாம் பாவனமாக்குகின்ற ஒளியினாலேயே இவர்கள் ஸனகாதிகளென்று அறியக்கூடிய ஸித்தேஸ்வரர்களான அம்முனிவர்கள் ஆகாயத்தினின்று இழிந்து வரும்பொழுதே அம்மன்னவன் அவர்களைக் கண்டமாத்ரத்தில் மேற்கிளம்பின ப்ராணன்களை நிலைநிறுத்த விரும்பி, ஜீவன் சப்தாதி விஷயங்களை எதிர்கொள்வது போல் மிக்க மன விருப்பத்துடன், ஸபையிலுள்ளவர்களோடும் தன் ப்ருத்யர்களோடும் எழுந்து நின்றான். கௌரவத்தினால் மெய்ம்மறந்து உடனே தலை வணங்கப்பெற்று அவர்களுக்கு அர்க்யமும் ஆஸனமும் கொடுத்து அவர்களை விதிப்படி பூஜித்தான். அவன் பெரியோர்களின் ஆசாரத்தை வெகுமதிக்க முயன்று அம்முனிவர்களின் பாதங்களை விளக்கி அந்த ஜலத்தைத் தன் சிரஸ்ஸில் ப்ரோக்ஷித்துக்கொண்டான். யாக வேதிகையில் அக்னிகள் ஜ்வலிப்பதுபோல் அம்முனிவர்கள் ஸ்வர்ணமயமான ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கையில், ச்ரத்தையோடும் மனவூக்கத்தோடும் அவர்களை நோக்கி:—'மங்கள ஸ்வபாவர்களே! ஆ! நான் என்ன புண்யம் செய்தேனோ? யோகிகளாலும் வருந்தியும் காணமுடியாத உங்களுடைய காட்சி எனக்குக் கிடைத்ததல்லவா? உங்களைப்போன்ற அந்தணர்களும் மங்கள ஸ்வரூபனான ஸ்ரீ மஹாவிஷ்ணுவும் அவனுடைய பக்தர்களான மற்றவரும் எவனுக்கு அருள்புரிகின்றார்களோ, அவனுக்குப் பரலோகத்திலாவது இவ்வுலகத்திலாவது எதுதான் கிடைக்க அரிதாயிருக்கும்? எங்கும் நிறைந்த ஸர்வஜ்ஞனான பரமாத்மாவை ப்ரஹ்மாதிகளான ப்ராணிகள் அனைவரும் காணமுடியாதிருப்பது

போல், நீங்கள் இவ்வுலகம் முழுவதும் திரிந்துகொண்டிருப்பினும் உலகத்திலுள்ளவர் ஒருவரும் உங்களைக் காண்கிறதில்லை. க்ருஹஸ்தர்கள் பணமற்றவராயினும் ஸாதுக்களாயிருப்பார்களாயின், பணமுடையவர்களே. அவருடைய வீட்டிலுள்ள ஜலம் புல் பூமி வீட்டிற்குடையவன் மற்ற ப்ருத்யர் முதலிய அனைத்தும் உங்களைப்போன்ற பெரியோர்களால் அங்கீகரிக்கப்படுகிறதல்லவா? எவருடைய க்ருஹங்கள் உங்களைப்போன்ற பாகவதர்களின் ஸ்ரீபாத தீர்த்தம் படும்படியான பாக்யமற்றவைகளோ, அவை ஸமஸ்த ஸம்பத்துக்களும் அமைந்தவையாயினும், ஸர்ப்பங்களுக்கிடமான சந்தன மரம் போன்றவைகளே. உங்களுக்கு நல்வரவே யல்லவா? நீங்கள் பால்யம் தொடங்கி மோக்ஷத்தில் விருப்பமுடையவர்களாகி இந்த்ரியங்களை வென்று பெரிய வ்ரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு வருகின்றீர்கள். சப்தாதி விஷயங்களையே புருஷார்த்தமாக ப்ரமித்து வ்யஸனங்களுக்கு விளைநிலமாகிய ஸம்ஸாரத்தில் கர்மங்களால் விழுந்து உழல்கின்றவர்களுக்கு க்ஷேமம் உண்டாகுமா? பரமாத்ம ஸ்வரூபனான ஆத்மாவின் ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்து அதை அனுபவிப்பதிலேயே மிக்க மனவூக்கமுடையவர்களாகிய உங்கள் விஷயத்தில் க்ஷேமம் விசாரிக்கவேண்டிய அவஸ்யமில்லை. உங்களுக்கு நன்மை தீமைகளைப்பற்றின மதி விகற்பங்களே கிடையாது. ஆகையால் நான் உங்களிடத்தில் நம்பிக்கையுடையவனாகி, ஸம்ஸார தாபங்களால் வருந்துகின்ற என்போன்றவர்களுக்கு நண்பர்களான உங்களை வினவுகின்றேன். இந்த ஸம்ஸாரத்தில் உழல்கின்ற ஜீவனுக்கு எந்தக் காரணத்தினால் அனாயாஸமாக க்ஷேமம் உண்டாகும்? ஜ்ஞானிகளிக்கு மிகவும் ப்ரியனும் ஸம்ஸாரிகளான ஜீவாத்மாக்களுக்கு ஜ்ஞான ப்ரதானம் செய்து கடைத்தேற்றுந் தன்மையனும் பிறவியற்றவனுமாகிய பகவான் உங்களைப்போன்ற ஜ்ஞானிகளாய் அவதரித்துத் தன் பக்தர்களை அனுக்ரஹிக்கும் பொருட்டு இப்பூமண்டலம் முழுவதும் திரிகின்றான். ஆகை

யால் பகவானுடைய அம்சமான உங்களுக்குத் தெரியாதது ஒன்றுமே இல்லை" என்றான். அந்த ப்ருது மன்னவன் மொழிந்த வார்த்தை ஸாரமும் பொருளடக்க முடையதும் மிதமும் இனியதுமாயிருந்தது. அதைக் கேட்ட ஸனத்குமாரர் ப்ரீதியினால் புன்னகையுடன் இங்ஙனம் மொழிந்தார்:—'மஹாராஜனே! நீ எல்லாமறிந்தவனாயினும் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஹிதத்தைச் செய்ய விரும்பி நன்றாக வினவினை. ஸாதுக்களின் நடத்தை இத்தகையதே. ஸாதுக்களுடைய ஸஹவாஸம் போக மோக்ஷங்களை விரும்புவோரிருவர்க்கும் அவரவர் விருப்பங்களை நிறைவேற்றிக்கொடுக்குமென்று பெரியோர்கள் புகழ்கின்றார்கள். ஸாதுக்களோடு ஸஹவாஸம் நேர்ந்தால் அவர்களோடு ஸம்பாஷணம் செய்ய நேரும். அப்பால் தமது விருப்பங்களை நிறைவேற்றிக்கொடுக்கும் உபாயங்களைப்பற்றி வினவ நேரும் பிறகு ஸ்வர்க்காதி போகங்களுக்கு உபாயமான யாகாதிகளின் ஸ்வரூபத்தையும் மோக்ஷ ஸாதனமான உபாஸனாதி ஸ்வரூபத்தையும் அவர்களால் உபதேசிக்கப் பெறுவார்கள். அதனால் அனைவரும் ஸுகத்தை அடைவார்கள். மன்னவனே! உனக்குப் பகவானுடைய பாதாரவிந்தங்களின் குணங்களைக் கேட்பதில் மாறாத ப்ரீதி ஸ்வயமாகவே உண்டாயிருக்கின்றது. இது மனமலமான கர்மத்தை யெல்லாம் அடியோடு அழித்துவிடும். மனிதர்களுக்கு மோக்ஷம் உண்டாகும் வழியை விவரித்துச் சொல்லுகிற ஶாஸ்த்ரங்களில், ஸத்வாதிகுணங்கள் தீண்டப் பெறாதவனும் அளவிடமுடியாத ஸ்வரூப ஸ்வபாவங்களுடையவனுமாகிய பரமாத்மாவினிடத்தில் மாறாத பக்தியும் மற்றவைகளில் மனப்பற்றின்மையும் ஆகிய இவ்வளவே மோக்ஷத்தை நிறைவேற்றிக் கொடுக்கும் உபாயமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. அவையிரண்டும் உண்டாகும் விதத்தைக் கேள். பாகவதர்களைப் பணிதலும், பகவானுடைய புண்ய கதைகளைக் கேட்டலும், அர்த்தத்தையும் காமத்தையுமே பெரிய புருஷார்த்தமாக நினைக்கும் ஸம்

ஸாரிகளுடைய கோஷ்டியில் விருப்பின்மையும், அவர்கள் விரும்புகிற அர்த்த காமங்களில் மனம் தாழாமையும், தத்வத்தை அறியவேண்டுமென்னும் விருப்பமும், அசார்யனைப் பற்றுதலும், ஆசார்யன் உபதேசித்த ஆத்ம யோகத்தை மனனம் செய்தலும், அதை அனுஷ்டிக்க வேண்டுமென்கிற ப்ரார்த்தையும், பகவதாராதன ரூபமான பஞ்ச மஹா யஜ்ஞாதி நித்ய நைமித்திக கர்மங்களை அனுஷ்டிக்கையும், ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை அனுஸந்திக்கையாகிற பரமஹம்ஸர்களின் நடத்தையும், பரிசுத்தமான ஆஹாரத்தில் ப்ரீதியும், ஆத்ம ஸ்வரூபானுஸந்தானமும் அம்ருதம்போன்ற பகவானுடைய குணங்களை அனுஸந்திக்கையும் தவிர மற்ற எதனாலும் ஸந்தோஷமுறாமையும், ப்ராணிகளை ஹிம்ஸிக்காமையும், போஜனம் முதலிய அகாலங்களிலும் பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை த்யானிக்கையும், இதர காலங்களிலும் பகவானுடைய சரித்ரங்களாகிற மேலான மதுவைப் பானம் செய்கையும், கண் காது முதலியவற்றையும் மனத்தையும் வேறு விஷயங்களில் போகவொட்டாமல் தடுத்துப் பகவானிடத்திலேயே நிலைநிறுத்துகையும், மற்ற புருஷார்த்தங்களையும் அவற்றின் உபாயங்களையும் எடுத்துக் கழிக்கவுங் கூட நெஞ்சில் நினையாமையும், தேஹதாரணத்திற்கு வேண்டிய செயல் தவிர மற்ற எவ்வகைச் செயல்களிலும் மனம் செல்லாமையும், சீத உஷ்ணாதிகளைப் பொறுக்கையும், செவிக்கின்பமான பகவானுடைய குணங்களையும் பாகவதர்களின் குணங்களையும் நெஞ்சார நினைத்து வாயார மொழிந்து மேன்மேலும் பக்தி வளரப்பெறுகையும் ஆகிய இவைகளால் பகவானிடத்தில் பரம பக்தியும் மற்ற விஷயங்களில் மனப்பற்றின்மையுமாகிற இவ்விரண்டும் உண்டாகும். பிறகு ஆசார்யானுக்ரஹத்திற் கிலக்கான புருஷன் வைராக்யத்தோடு கூடின பக்திரூப ஜ்ஞானத்தின் வேகத்தினால் பஞ்ச பூதங்களின் பரிணாமமான சரீரத்தை மீளவும் வேறொன்றவொட்டாமல், அக்னி அரணிக் கட்டையைத்

தஹிப்பதுபோல் தஹித்துவிடுவான். இங்ஙனம் பகவத் பக்தியால் சரீர ஸம்பந்தம் உண்டாகாதபடி அதன் வேரான புண்ய பாப கர்மங்களும் அச்சரீரத்தின் குணங்களான ராகாதிகளும் பஸ்மமாகப் பெற்று ஜீவாத்ம பரமாத்மாக்களுக்குள்ள ஸம்பந்தத்தை ஸம்ஸார தசையில் மறைத்துக் கொண்டிருந்த சரீரத்தையும் அதன் கார்யங்களான ராகாதி தோஷங்களையும் ஸ்வப்னத்திற்போல் காணமாட்டான். கரண கலேபராதிகளில் மனவிருப்பமாகிற வாஸனை மாறுதிருக்கும்வரையில் தான் தேஹத்தையும் சப்தாதி விஷயங்களையும் மற்றவைகளையும் காண்பான். அவ்வாஸனை தீரும்பொழுது எதையும் காணமாட்டான். சரீர ஸம்பந்தம் உள்ளவரையில் ஜீவன் தனக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள ஸம்பந்தத்தை அறியமாட்டான். பேதத்தையே நினைத்துக் கொண்டிருப்பான். சரீரம் நீங்குகையில் பரமாத்ம ஸாயுஜ்யத்தை அடைந்து வைஷம்யத்தையே பார்க்கமாட்டான். சப்தாதி விஷயங்களை நினைப்பார்களாயின், அவை இந்த்ரியங்களையும், அவ்விந்த்ரியங்கள் மனத்தையும் இழுத்துக் கொண்டு போய்விடும். ஏரி கரையில் முளைத்திருக்கும் புல் செடி முதலியவற்றின் தாள் வேருடன் பிடுங்கப்பெற்றுக் கரையை உறுதியற்றதாக்கி ஜலம் வெளியில் ஊறிப் பாய்வதற்கிடமாவதுபோல், சப்தாதி விஷயங்களில் சென்ற மனம் வலிவற்று நிச்சய ஜ்ஞானம் மாறி அழிந்துபோவதற்கிடமாகும். நிச்சய ஜ்ஞானம் மாறுகையில் பரமாத்மோபாஸனம் நழுவும் அதனால் மற்ற காலங்களில் பரமாத்மாவின் உருவத்தைச் சிந்திக்கையும் அழியும். உபாஸனம் நடைபடுகையில் ஆத்ம ஸ்வரூபத்தின் உண்மையைப்பற்றின அறிவும் தொலையும். தன்னைத் தானே மறைத்துக்கொள்கை இதுவேயென்று பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். ஜீவன் ப்ரீதிக்கிடமான ஆத்ம ஸ்வரூபத்தை அறியாமல் சப்தாதி விஷயங்களையே ப்ரியமாக நினைப்பானாயின், புருஷார்த்தம் கைசோரப்பெறுகையென்பது இதைக்காட்டிலும் மற்றொன்றும் இல்லை. இந்த்ரியங்கள் இயற்கையாகவே சப்தாதி

விஷயங்களில் இழியுந்தன்மை யுள்ளவை. அவற்றை அடக்காமல் தாமே சப்தாதி விஷயங்களை ஆவலுடன் சிந்திப்பார்களாயின் அம்மனிதர்களுக்கு எத்தகைய நன்மையும் கைகூடாது. மற்றும், அவர் ஜ்ஞானத்தை இழந்து ஸ்தாவர ஜன்மத்தைப் பெறுவார்கள். அனர்த்தங்களுக்கெல்லாம் இடமான அஜ்ஞானத்தைக் கடக்க இச்சிப்பவன் சப்தாதி விஷயங்களில் எவ்விதத்திலும் மனப்பற்று செய்யலாகாது. அது தர்ம அர்த்த காம மோக்ஷங்களில் எதையும் கைகூட வொட்டாமல் அடியோடு பாழ்செய்துவிடும் அந்நான்கில் மோக்ஷமே அழியாத புருஷார்த்தமென்று அதையே விவேகிகள் விரும்புகிறார்கள். மற்ற மூன்றும் காலத்தினால் பயம் நேரக்கூடியவை யாகையால் அநித்யங்கள். ப்ரஹ்ம தேவன் முதல் பூச்சிப் புழு வரையிலுமுள்ள மேன்மையும் தாழ்மையுமான வஸ்துக்களெல்லாம் பகவானுடைய ஸ்ருஷ்டிக்கு உட்பட்டவைகளே; ப்ரளயத்திலிருப்பவையல்ல. காலஸ்வரூபனான பகவானால் மேன்மைகளெல்லாம் த்வம்ஸமாகப்பெற்ற அவற்றிற்கு க்ஷேமம் கிடையாது. மன்னவனே! ஆகையால் தேஹம் இந்த்ரியம் மனம் இவற்றால் மறைக்கப்பட்டு ஜங்கம ஸ்தாவர ரூபமான ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாகி அவரது ஹ்ருதயத்தில் நிலை நின்றிருப்பவனும் ஸ்வயம்ப்ரகாசனும் எங்கும் நிறைந்தவனும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய பகவானுக்கு உன்னைச் சரீரமாகவும், அவனை உனக்கு அந்தராத்மாவாகவும் நன்றாக உணர்ந்து 'நான் அந்தப் பரப்ரஹ்மமே' என்று பாவிப்பாயாக. கயிற்றில் ஸர்ப்பமென்னும் புத்தி உண்டாவதுபோல், ஜீவாத்மாவினிடத்தில் தேவ மனுஷ்யாதியான பலவகை உருவங்களும் தோற்றுகின்றன. அவை ஆத்மாவுக்குள்ள விவேகத்தைப் போக்கும் கார்ய காரண ரூபமாயிருப்பவை. ஆத்மாக்கள் இயற்கையில் ப்ரக்ருதி ஸம்பந்தமற்றவர்கள். ஆகையால் அவர்களுக்கு இந்தத் தேவ மனுஷ்யாதி உருவங்கள் எவையும் உண்மையல்ல. ஆத்மாக்கள் ஸ்வயம்ப்ரகாசர்கள்; கர்ம ஸம்பந்தமற்றவர்கள்.

ஆயினும் அவர்கள் அறுதியான கர்மத்தினால் ப்ராக்ருதி ஸம்பந்தம் மாறாதிருக்கின்றார்கள். அத்தகைய ஜீவாத்மாக்கள் அனைவர்க்கும் அந்தராத்மாவாகி அவர்களெல்லாரும் தானே யென்னும்படி விளங்குகின்ற அப்பரம புருஷனைச் சரணம் அடைகின்றேன். எல்லாம் பரப்ரஹ்ம ஸ்வரூபமே யென்னும் நினைவு நிறைந்த மதியுடையவர்களும் இந்த்ரிய வர்க்கத்தை அடக்கியாள்பவர்களுமாகிய பெரியோர்கள் இந்தப் பகவானுடைய பாதாரவிந்தங்களின் இதழ்கள்போன்ற விரல்களின் அழகை ப்ரீதியுடன் பாவித்துத் தமது மனத்தில் அழுந்தியிருக்கின்ற கர்ம வாஸனையாகிற முடிச்சை அறுக்கின்றார்கள். ஆகையால் நீயும் அந்தப் பகவானையே சரணம் அடைவாயாக. ஸர்வேச்வரனாகிற ஓடத்தைக் கொள்ளாமல் காமம் க்ரோதம் முதலிய அரிஷ்டவர்க்கமாகிற ஸமுத்ரத்தை வேறு உபாயங்களால் வருந்திக் கடக்க விரும்புவார்களாயின், அந்தப் பெருவருத்தமே மிகுமன்றிக் கரையேறமாட்டார்கள். ஆகையால் அனைவராலும் ஸுகமாய்ப் பஜிக்கக்கூடிய பகவானுடைய பாதங்களையே ஓடமாகக்கொண்டு கடக்க முடியாத ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தைக் கடப்பாயாக' என்றார். பரப்ரஹ்மத்தை உணர்ந்தவரும் ப்ரஹ்மாவின் புதல்வருமாகிய ஸனத்குமாரரால் ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றி நன்றாக உபதேசிக்கப்பெற்ற ப்ருது மன்னவன் அவரைப் புகழ்ந்து மொழிந்தான்:—'ஸம்ஸார தாபங்களால் வருந்தும் ப்ராணிகளிடத்தில் மன இரக்கமுடைய பகவான் என்மேல் முன்னமே இங்ஙனம் அருள்புரிந்தான். அதை நிறைவேற்றுவதற்கு நீங்கள் இவ்விடம் வந்தீர்கள். என்மேல் கருணை கூர்ந்து என் விருப்பத்தையெல்லாம் நிறைவேற்றினீர்கள். என்னுடைய தேஹமும் மற்றுமுள்ள வஸ்துக்களும் பெருமை பொருந்திய உங்கள் அனுக்ரஹத்தினால் எனக்குக் கிடைத்தவை. இவற்றில் எதை என்னுடையதென்று நினைத்து நான் உங்களுக்குக் கொடுப்பேன்? ஆயினும், ப்ருத்யன் ராஜனது பணத்தை அவனுக்குக்

கொடுப்பதுபோல், ப்ராணன் தனம் பிள்ளை க்ருஹம் ராஜ்யம் ஸைன்யம் பூமி பொக்கஸம் ஆகிய இவற்றை யெல்லாம் உங்களுக்கு அர்ப்பணம் செய்தேன். இவை யெல்லாம் எமக்குத் தகுமோ வென்ன வேண்டாம். ஸேனைகளுக்குத் தலைவனுயிருக்கை ராஜ்யத்தை ஆளுகை தண்டாதிகாரத்தை நிறைவேற்றுகை உலகங்களுக்கெல்லாம் ப்ரபுவாயிருக்கை இவையெல்லாம் வேதஶாஸ்த்ரத்தை அறிந்த ப்ராஹ்மணனுக்குத் தகுந்தவைகளே. ப்ராஹ்மணன் புசிக்கும் அன்னமும் உடுக்கும் வஸ்த்ரமும் கொடுக்கும் த்ரவ்யமும் பிறரிடத்தில் யாசித்துப் பெற்றவையாயினும் அவனுடையவைகளே. க்ஷத்ரியன் முதலிய மற்ற மூன்று வர்ணத்தவர்களும் ப்ராஹ்மணனுடைய அனுக்ரஹத்தினால் கிடைத்த அன்னாதிகளையே அனுபவிக்கின்றார்கள். வேதங்களை ஆராய்ந்து ஆத்மஸ்வரூபத்தை உண்மையாக உணர்ந்த நீங்கள் துக்கமயமான ஸம்ஸார ஸாகரத்தைக் கடத்தும் உபாயத்தை இங்ஙனம் எனக்கு உபதேசித்தீர்கள், பெருங்கருணையராகிய நீங்கள் உங்களுடைய கார்யத்தினாலேயே ஸந்தோஷிக்க வேண்டுமேயன்றி, அதற்கு நான் ப்ரத்யுபகாரம் செய்ய வல்லேனே? ஜலத்தைக் கொடுத்து அஞ்சலித்து நிற்கை யொழிய எவன் தான் ப்ரஹ்ம வித்யோபதேசத்திற்கு ப்ரத்யுபகாரம் செய்ய வல்லவனாவான்?' என்றான். ஆத்மயோகத்தைப் பாதுகாப்பவர்களான அந்த ஸனகாதி முனிவர்கள் ப்ருது மஹாராஜனால் பூஜிக்கப்பட்டு அங்குள்ள மனிதர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் அம்மன்னவனுடைய சீலத்தைப் புகழ்ந்துகொண்டே ஆகாயத்திற் கிளம்பிச் சென்றார்கள். பிறகு ஸமர்த்தனாகிய ப்ருது மன்னவன் ஸனகாதிகளால் ப்ரஹ்ம ஜ்ஞானோபதேசம் பெற்று அந்தப் பரமாத்மாவினிடத்தில் நிலைநின்று தன் விருப்பங்களெல்லாம் கைகூடினதாக நினைத்து, தேச காலங்களையும் தேஹ பல மனோபலங்களையும் தனத்தையும் மற்றவைகளையும் அனுஸரித்து ப்ரஹ்மோபாஸனத்திற்கு

அங்கமாகத் தனது வர்ணாச்ரமங்களுக்குரிய கர்மங்களை யெல்லாம் ப்ரஹ்மார்ப்பணமாக அனுஷ்டித்து வந்தான். பலன்களெல்லாம் பரமபுருஷனுடைய அனுக்ரஹத்தினு லன்றி நமது செயல்களால் உண்டாகக் கூடியவையன் றென்றும் நான் செய்கிறேனென்றும் என்னுடையதென்றும் விளைகிற அபிமானங்களெல்லாம் ப்ரக்ருதி ஸம்பந்தத்தைப் பற்றினவைகளே யென்றும் ஆத்மா ப்ரக்ருதியைக்காட்டி லும் விலக்ஷணனென்றும் நினைத்துப் பற்றின்றிக் கர்மங்களை நடத்தினான். அவன் காம போகங்களுக்கிடமான இல்லற வாழ்க்கையிலிருந்தும் மஹாராஜனுகையால் ஸமஸ்த ஸம் பத்துக்களும் அமைந்தவனுயினும் தேஹாத்ம ப்ரமமின்றி ஸூர்யன் சேறு முதலிய இடங்களில் கிரணங்களால் நிறைந் திருப்பினும் அவற்றின் தோஷம் தீண்டப்பெருதிருப்பது போல், சப்தாதி விஷயங்களில் மனப்பற்று செய்யாமலே யிருந்தான். அவன் பக்தி யோகத்தை நிறைவேற்ற விரும்பித் தேச காலங்களை அனுஸரித்து வர்ணாச்ரம தர்மங்களை ஆசரித்துக்கொண்டே அர்ச்சிஸ்ஸென்கிற தன் பார்யையிடத்தில் விஜிதாச்வன் தன்வகேசன் ஹர்யக்ஷன் த்ரவிணன் வ்ருகன் என்கிற ஐந்து புதல்வர்களைப் பெற்ருன். அவர்களெல்லோரும் அம்மன்னவனை நிகர்த்து அவனுக்கு அனுகூலர்களாயிருந்தார்கள். பகவத் பக்த ஞை அவ்வரசன் பரமபுருஷனுல் படைக்கப்பட்ட உலகங் களைப் பாதுகாப்பதற்காக இந்த்ராதி லோகபாலர்களின் குணங்களை யெல்லாம் அந்தந்த ஸமயத்திற்குத் தகுந்தபடி தன்னிடத்தில் ஏற்றுக்கொண்டான். அவன் மனே வாக் காயங்களாலும் ப்ரஜைகளை ஆநந்தப்படுத்திக் கொண்டு, மற்றெரு சந்த்ரன்போல் ராஜனென்று பேர் பெற்ருன். ஸூர்யன் பூமியினின்று ஜலத்தை இழுப்பதும் விடுவதுமாயிருப்பதுபோல், அவன் ப்ரஜைகளிடத்தினின்று கப்பம் வாங்குவதும் அதை அவர்களுக்கே உபயோகப் படுத்துவது மாயிருந்தான். அவன் ப்ரஜைகளை நல்வழியில் செலுத்துமதிகாரத்தில் நின்று அக்னியைப்போல் தேஜஸ்வி

னால் அவமதிக்கமுடியாமலும், மஹேந்த்ரனைப்போல் பிறர்க்கு வெல்லமுடியாமலும் ப்ரகாசித்தான். பொறுமையில் பூமியையும், அபிஷ்டங்களைக் கொடுப்பதில் ஸ்வர்க்கத்தையும் நிகர்த்திருந்தான். பர்ஜன்யன்போல் ப்ரஜைகளுக்கு அவரவர்கள் விருப்பத்தின்படி த்ருப்தியை விளைவித்துக்கொண்டிருந்தான். ஸமுத்ரம்போல் அளவிடக்கூடாதிருந்தான். ஸத்யத்தில் மேருவைப்போலவும், ப்ரஜைகளைச் சிக்ஷிப்பதில் யமன்போலவும், ஐஶ்வர்யத்தில் ஹிமவத் பர்வதம்போலவும் திகழ்ந்தான். குபேரன்போல் நிறைந்த கருவூலமுடையவனும், வருணன்போல் ஆலோசனையை வெளியிடாதவனும், வாயுவைப்போல் எங்கும் நிறைந்து தேஹபலம் இந்த்ரிய பலம் தேஹ காந்தி முதலியவைகளை யுடையவனும், ருத்ரனைப்போல் பிறர்க்குப் பொறுக்கமுடியாதவனும், மன்மதனைப்போல் திவ்ய ஸௌந்தரனும், ஸிம்ஹம்போல் தடையில்லாமல் ஸஞ்சரிப்பவனும், மனுவைப்போல் ப்ரஜைகளிடத்தில் மிகுந்த வாத்ஸல்ய முடையவனும், ப்ரஹ்மதேவனைப்போல் உலகங்களுக்கெல்லாம் ப்ரபுவும், ப்ருஹஸ்பதியைப்போல் வேதங்களுக்குப் பொருள் கூறுந் திறமையுடையவனும், ஸ்ரீமஹாவிஷ்ணுவைப்போல் ஸ்வதந்த்ரமுடையவனுமாயிருந்தான். பசுக்களிடத்திலும் குருக்களிடத்திலும் ப்ராஹ்மணர்களிடத்திலும் பகவானிடத்தில் பக்தியுடைய பெரியோர்களிடத்திலும் பக்தி வெட்கம் வணக்கம் ஒழுக்கம் இவையுடையவனும் பரோபகாரத்தில் தனக்கு நிகரில்லாதவனுமா யிருந்தான். மூன்று லோகங்களிலும் ஆங்காங்குள்ளவர்கள் அனைவரும் அவன் புகழை உரத்துப் பாடிக்கொண்டிருந்தார்கள். ராமன் ஸத்புருஷர்களின் செவிகளில் நுழைந்திருப்பதுபோல், அம்மன்னவன் ஒன்றுமறியாத மாதர்கள் செவிகளிலும் நுழைந்திருந்தான்.

இருபத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ப்ருது மன்னவன் விமானத்திலேறி வைகுண்டமேறுதல்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ஸ்வர்க்காதி போகங்களெல்லாம் நிலையற்றவையென்றும் அற்பங்களென்றும் நிச்சயித்திருக்கிற அந்தப்ருது மன்னவன் தன் தேசத்திலுள்ள ப்ரஜைகளையெல்லாம் நெடுநாள் பாதுகாத்துவந்து ஒருநாள் தான் வயது முதிர்ந்திருத்தலைக் கண்டான். அம்மன்னவன் ஜங்கம ஸ்தாவர ரூபமான ஜகத்திற்கெல்லாம் ஜீவனங் கற்பித்து ஸத்புருஷர்களின் தர்மத்தை அழியாமல் பாதுகாத்து வந்து பகவானுடைய ஆஜ்ஞையை நிறைவேற்றித் தான் எதற்காக அவதரித்தானோ அதையெல்லாம் முடித்து, தன்னை விட்டுப் பிரியமுடியாமல் வருந்தி ரோதனம்செய்வதுபோன்ற தன் புதல்வியாகிய பூமியைத் தன் புதல்வரிடம் ஒப்புவித்து, ப்ரஜைகளெல்லாம் தன்னைப் பிரிந்திருக்க முடியாமல் வருந்திக்கொண்டிருக்கையில் பார்யையுடன் தானொருவனே தபோவனத்திற்குச் சென்றான். அவ்விடத்திலும் அவன் சமதமாதி நியமங்களை அங்கீகரித்து முன்பு பூமண்டலத்தை ஜயிக்கும்பொழுது முயற்சிகொண்டாற்போலவே வானப்ரஸ்தர்கள் ஆசரிக்கும்படியான கொடிய தவத்தில் முயற்சிகொண்டான். அவன் சில நாள் காய் கிழங்கு வேர்களையும், சிலநாள் உலர்ந்த இலைகளையும், சில பக்ஷம்வரையில் ஜலத்தையும் ஆஹாரமாக உட்கொண்டிருந்து, அப்பால் வாயுவைப் பக்ஷித்துத் தவம்செய்து வந்தான். க்ரீஷ்மருதுவில் பஞ்சாக்னி மத்யத்திலும் வர்ஷருதுவில் விடாமழையினிடையிலும் சிசிரருதுவில் கழுத்தளவு ஜலத்திலும் இருந்து பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை த்யானிப்பதும் வெறுந்தரையிலேயே படுப்பதுமாயிருந்தான். குளிர் வெயில் முதலியவற்றைப் பொறுத்துக்கொண்டு மௌனவ்ரதம் தரித்து இந்த்ரியங்களை வென்று ஸ்த்ரீ ஸம்போகமின்றிச் சாந்தனாகி ப்ராணவாயுவை அடக்கி, பகவானை ஆராதிக்க விரும்பி இங்ஙனம் கொடிய தவம்

செய்துவந்தான். அம்மன்னவன் இவ்வாறு நாளுக்கு நாள் தவத்தை வளர்த்தி அதனால் கர்மங்களெல்லாம் த்வம்ஸமாகப்பெற்றுப்ராணாயாமங்களால் தூயமனத்தனாகி இந்த்ரியங்களையெல்லாம் அடக்கி வ்யஸனங்களையெல்லாம் வேரோடறுத்து ஸனத்குமாரர் உபதேசித்த மேலான ஆத்மயோகத்தின்படி பரமபுருஷனை ஆராதித்தான். நிவ்ருத்தி தர்மத்தில் ஶ்ரத்தையுடன் இவ்வாறு யத்னம் செய்கின்ற அம்மன்னவனுக்கு ஷாட்குண்யம் நிறைந்த பரப்ரஹ்மத்தினிடத்தில் மாறாத பக்தி உண்டாயிற்று. பகவானுக்குச் செய்தபணிவிடையால் சுத்த ஸத்வம் நிறைந்த மனமுடைய ப்ருதுவுக்கு அந்தப் பக்தியின் நிறைவினால் ஜ்ஞானமும் விரக்தியும் உண்டாயின. அவன் அந்த ஜ்ஞானத்தினால் ஸம்சயத்திற்கிடமான ப்ரக்ருதி ஸம்பந்தத்தை வேருடன் அறுத்துக்கொண்டான். அம்மன்னவன் தேஹாத்மப்ரமத்தைக் கடந்து ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை உணர்ந்து செயலற்றுத் தான் ப்ரக்ருதி ஸம்பந்தத்தை அறுத்துக் கொண்டதற்குக் காரணமான தேஹஜ்ஞானத்தையும் கடந்து பரமாத்மாவுக்குட்பட்ட ஆத்ம ஸ்வரூபத்தையே அனுபவித்து வந்தான். யோகம் செய்பவன் பகவானுடைய கதைகளை ப்ரீதியுடன் கேளாதிருப்பானாயின், யோகமார்க்கத்தில் மனவூக்கம் தவறாதிருக்கமாட்டான். இவன் பகவத் கதைகளில் மிக்க ஊக்கமுடையவனாகையால் யோகமார்க்கத்தில் இம்மியும் தவறாதிருந்தான். அம்மஹாவீரன் ஆத்மாவைப் பரமாத்மாவினிடத்தில் ஸமர்ப்பித்துப் பாபமற்றிருக்கை முதலிய எட்டுக்குணங்களும் தோன்றப்பெற்றமையால் பரப்ரஹ்ம ஸாரூப்யத்தை அடைந்து ப்ராரப்த கர்மம் முடியும்படியான காலம் நேர்ந்தமையால் தன் சரீரத்தைத் துறந்தான். அவன் சரீரத்தை விட்ட விவரம் சொல்லுகிறேன், கேள். அம்மன்னவன் குதிகால்களால் ஆஸனத்தை அழுக்கிக்கொண்டு மூலாதாரத்தினின்று வாயுவை மெல்லமெல்ல மேலுக்குக் கிளப்பி நாபி சக்ரத்தில் நிறுத்தி, பிறகு ஹ்ருதயம் மார்பு கண்டம் புருவங்களி

னிடை ஆகிய இவ்விடங்களில் க்ரமமாகக் கொண்டுவந்து நிறுத்தி, அப்பால் அவ்வாயுவை ப்ரஹ்மரந்த்ரத்தில் செலுத்தி, அக்காலத்தில் விளையக்கூடிய அணிமாதி ஸித்திகளில் விருப்பின்றித் தன் தேஹத்திலுள்ள வாயு மஹாவாயுவிலும், தேஹத்திலுள்ள பூமி மஹா பூமியிலும், தேஜஸ்ஸு மஹாதேஜஸ்ஸிலும், கண் காது முதலிய இந்த்ரியங்களுக்கு அதிஷ்டானமான ரந்த்ரங்கள் மஹாகாசத்திலும், ஜலம் மஹா ஜலத்திலுமாகத் தன் தேஹத்திலுள்ள கார்யமான பஞ்ச பூதங்களும் அவற்றிற்குக் காரணமான மஹா பூதங்களில் மறைந்தனவாக அநுஸந்தித்தான். பிறகு மஹா பூமி மஹாஜலத்திலும், அது மஹா தேஜஸ்ஸிலும், அது மஹாவாயுவிலும், அது மஹாகாசத்திலும் மறைந்ததாகப் பாவித்தான். மனஸ்ஸு இந்த்ரியங்களிலும், அவை தன்மாத்ரைகளிலும், அவை அஹங்கார தத்வத்திலும், அது மஹாதத்வத்திலும் அது ப்ரதான மென்கிற ப்ரக்ருதியிலும் மறைந்ததாகப் பாவித்தான். பெரும்பாலும் கர்மங்களை அநுபவித்துச் சிறிதுமாத்திரம் மிகுந்திருக்கப்பெற்ற இந்த ப்ருது ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற ஆத்மஸ்வரூபத்தை அநுஸந்தித்து அநுபவித்து மிகுந்த சிறிது கர்மத்தையும் ஜ்ஞான வைராக்யங்களின் மஹிமையால் துறந்தான். அப்பால் கர்மத்திற்குட்பட்டிருக்கை நீங்கப்பெற்று முக்தி அடைந்தான். அம்மஹாராஜனது பத்தினியாகிய அர்ச்சிஸ்ஸென்பவள் வனவாஸத்தினால் விளையும் வருத்தங்களுக்குத் தகாதவளாயினும், அம்மன்னவனோடு கூடவே வனத்திற்கு வந்திருந்தாள். அவள் மிகவும் மேன்மைக்கிடமான அங்கங்களுடையவள்; பாதங்களால் பூமியைத் தொட்டு நடக்கத் தகுந்தவளல்லள். ப்ருது அநுஷ்டித்த வ்ரதங்களை யெல்லாம் அவள் தானும் ஊக்கத்துடன் அநுஷ்டித்துக்கொண்டு வந்தாள். பர்த்தாவுக்கு வேண்டிய ஸுஶ்ரூஷைகளை யெல்லாம் தவறுமல் நடத்திக்கொண்டிருந்தாள். ரிஷிகளைப் போல் காய் கிழங்குகளையே உட்கொண்டு தேஹ யாத்

ரையை நடத்திவந்தாள். ஆதலால் அவள் மிகவும் இளைத்திருந்தாள். ஆயினும் அன்பிற்கிடமான கணவனுடைய கைதீண்டல் முதலிய ஸம்மானங்களால் ஸந்தோஷமுற்றுச் சிறிதும் வருத்தமுறாதிருந்தாள். பூமண்டலத்திற்கும் தனக்கும் நாதனாகிய அந்த ப்ருதுவின் சரீரம் ஜ்ஞானேந்த்ரியங்களும் ப்ராணன்களும் தொலைந்து கேவலம் கட்டையாயிருப்பதைக் கண்டு, சோகத்தினால் சிறிது புலம்பிப் பதிவ்ரதையாகையால் பர்வதத்தின் தாழ்வரையில் சிதை ஏற்படுத்தி அதில் தன் கணவனது சரீரத்தை ஏற்றினாள். பிறகு அங்குள்ள ஓர் தாமரை யோடையின் ஜலத்தில் ஸ்னானம் செய்து அக்காலத்திற்குரிய செயல்களையும் முடித்து மஹானுபாவனான தன் கணவனுக்குத் தர்ப்பணம் செய்து ஆகாயத்திலுள்ள தேவதைகளை வணங்கித் தன் கணவனுடைய பாதங்களை த்யானித்துக் கொண்டே சிதையை மூன்று தரம் வலம் செய்து அவ்வக்னியில் ப்ரவேசித்தாள். வரங்கொடுக்க வல்லவர்களான தேவ பத்னிகள் வீரச்ரேஷ்டனான கணவனைத் தொடர்ந்து போகின்ற அம்மாதரசைக் கண்டு தேவதைகளுடன் பலவாறு புகழ்ந்தார்கள். அவர்கள் அம்மந்தர பர்வதத்தின் தாழ்வரையில் புஷ்பங்களை விடாமழையாகப் பொழிந்து பற்பல தேவவாத்யங்கள் முழங்க ஒருவர்க்கொருவர் 'இப் பெண்மணி மிகுந்த பாக்யமுடையவள். என்ன ஆச்சர்யம்! பரமபுருஷனை ஸ்ரீ மஹாலக்ஷ்மி மணம்புரிந்தாற்போல், இவள் ப்ருது மஹாராஜனை மணம் புரிந்தாள். இவள் அம்மஹானுபாவனை எல்லா விதத்திலும் அனுஸரித்து வந்தாள். இவள் செய்த புண்யத்தின் பெருமையை நம்மால் சிந்திக்க முடியாது. ஆகையால் இவள் நாமெல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கையில், நம்மைக் கடந்து தன் கணவனைத் தொடர்ந்து ஊர்த்வ லோகத்திற்குப் போகின்றாள். இது நிச்சயம். ஆயுள் மின்னலைப்போல் நிலையற்றதென்பதை அறிந்து அற்பமான புருஷார்த்தங்களை விரும்பாமல் பரமபுருஷனைப் பெறுதற்கு ஸாதனமாகிய நிவ்ருத்தி

தர்மத்தை ஆசரிக்கின்ற மானிடர்களுக்கு ஸ்வர்க்கம் முதலிய மற்றவைகளில் எதுதான் கிடைப்பதரிது? மோக்ஷத்தை ஸாதித்துக்கொடுக்கவல்ல மனுஷ்ய ஜன்மத்தைப் பெரிய புண்ய கர்மத்தினால் பெற்றும், சப்தாதி விஷயங்களில் மனப்பற்று கொள்வானாயின், அவன் தெய்வத்தினால் வஞ்சிக்கப்பட்டவனேயாவான். அவனே ஆத்மத்ரோஹியாவான். இதற்கு மேற்பட்ட மதிகேடு மற்றொன்றும் இல்லை' என்று புகழ்ந்து சொன்னார்கள். இங்ஙனம் தேவபத்னிகள் ஸ்தோத்ரம் செய்துகொண்டிருக்கையில், அம்மடந்தையர் மணி ஆத்ம ஜ்ஞானிகளில் சிறந்தவனும் பகவத் பக்தனுமாகிய ப்ருது மன்னவன் பெற்ற லோகத்தை அடைந்தாள். ப்ருதுமன்னவன் இப்படிப்பட்ட வைபவமுடையவன்; பகவானிடத்தில் மிகுந்த பக்தியுடையவன். இவனது சரித்ரம் மிகுந்த மஹிமையுடையது. இதை உனக்கு மொழிந்தேன். மஹாத்மாவான இப்புண்ய சரித்ரத்தை ச்ரத்தையோடு படிக்கிறவனும் சொல்லுகிறவனும் கேட்கிறவனும் ப்ருது சக்ரவர்த்தியின் பதவியைப் பெறுவார்கள். இதை ப்ராஹ்மணன் படிப்பானாயின் ப்ராஹ்ம தேஜஸ்ஸையும், க்ஷத்ரியன் பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவாயிருக்கும் பெருமையையும், வைஸ்யனும் சூத்ரனும் தம்மினத்தில் தலைமையையும், பெறுவார்கள். புருஷனாவது ஸ்த்ரீயாவது இதை ப்ரீதியுடன் மூன்று தரம் கேட்பார்களாயின், பிள்ளையில்லாதவர் பிள்ளையையும், பணமில்லாதவர் பணத்தையும், புகழில்லாதவர் பெரும் புகழையும் பெறுவார்கள். ஒன்றும் தெரியாத மூடனும் பண்டிதனாவான். இச்சரித்ரம் ப்ராணிகளின் அமங்கலத்தைப் போக்கி மங்கலத்தைக் கொடுக்கும். பணம் புகழ் வாழ்நாள் ஆகிய இஹலோக பலன்களையும் ஸ்வர்க்கம் முதலிய பரலோக பலன்களையும் கொடுக்கும்; கலிதோஷங்களையெல்லாம் போக்கும்; தர்ம அர்த்த காம மோக்ஷங்கள் நன்றாகக் கைகூடவேண்டுமென்று விரும்புவோர் இதை ச்ரத்தையுடன் கேட்கவேண்டும். இதுதான் அந்நான்கு புருஷார்த்தங்களையும்

நிறைவேற்றிக் கொடுப்பதற்கு மேலான காரணம். யுத்தத்தில் ஜயம்பெற விரும்புவோன் இச்சரித்ரத்தை ஒருதரம் கேட்டு யுத்த யாத்ரை செய்வானாயின், அவனால் எதிர்க்கப்பட்டவர். ப்ருதுவுக்கு மற்ற ராஜாக்கள் அனைவரும் கப்பங் கட்டினாற்போல், அவனுக்குக் கப்பங் கட்டுவார்கள் இங்ஙனம் பலவகைப் பலன்களையும் கொடுக்குமாயினும் வேறு விஷயங்களில் மனம் செலுத்தாமல் பகவானிடத்தில் மாறாத பக்தியுடன் இப்புண்ய சரித்ரத்தைக் கேட்பதும் கேட்பிப்பதும் படிப்பதும் செய்வானாயின், அவன் பகவானிடத்தில் மதி ஊன்றப்பெற்று ப்ருது மன்னவன் பெற்ற கதியைப் பெறுவான். இச்சரித்ரம் வீரர்களால் புகழப்படும் பெருமையுடையது. பகவானுடைய மஹிமையை வெளியிடுந் தன்மையது. ஒரு பலனையும் விரும்பாமல் இந்த ப்ருதுவின் சரித்ரத்தைத் தினந்தோறும் ப்ரீதியுடன் கேட்பதும் பிறர்க்கும் கூறுவதுமாயிருப்பவன் ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்திற்கு ஓடம்போன்ற பாதங்களையுடைய பகவானிடத்தில் சிறந்த பக்தி உண்டாகப்பெறுவான். இருபத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

ப்ருதுவின் ஸந்ததியைக் கூறுதல்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ப்ருதுவின் புதல்வனாகிய விஜிதாச்வன் ப்ருதுவுக்குப் பின்பு பூமண்டலத்தை யெல்லாம் பாதுகாத்து வந்தான். அவன் பெரும்புகழன்; ப்ராதாக்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவன். அவன் ஹர்யக்ஷனுக்குக் கிழக்குத் திக்கையும், தூம்ரகேசனுக்குத் தெற்குத் திக்கையும், வ்ருகனுக்கு மேற்குத் திக்கையும், த்ராவிணனுக்கு வடக்குத் திக்கையுமாகத் திசைகளை யெல்லாம் தம்பிகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்தான். இவன் இந்த்ரனுடைய அனுக்ரஹத்தினால் அந்தர்த்தான சக்தியைப் பெற்றானாகையால் இவனுக்கு அந்தர்த்தான

னென்று மற்றெருரு பேரும் உண்டாயிற்று. இவன் சிகண்டினி யென்னும் தன் மனைவியிடத்தில் மிகவும் புகழுத் தகுந்த மூன்று பிள்ளைகளைப் பெற்றான். அவர்கள் பாவகன் பவமானன் சுசி என்னும் பேருடையவர்கள். கார்ஹபத்யம் முதலிய அக்னிகள் மூவரும் முன்பு வஸிஷ்டருடைய சாபத்தால் மனுஷ்ய ஜன்மம் பெற்றார்கள். அவர்களே இந்தப் பாவகன் முதலியவர்கள். இவர்கள் யோகமஹிமை யால் மீளவும் தமது கதியைப் பெற்றார்கள். அந்தர்த் தானன் நபஸ்வதி யென்கிற மற்றொரு மனைவியிடத்தில் ஹவிர்த்தான னென்னும் புதல்வனைப் பெற்றான். இவ் வந்தர்த்தான மன்னவன் தன் தகப்பனாருடைய யாகக் குதிரையை இந்த்ரன் பறித்துக்கொண்டு போகையில் அவனைத் தொடர்ந்து சென்று, இவன் குதிரையைப் பறித்தவனென்று தெரிந்தும் கொல்லாமலே விட்டான். ஆனதுபற்றியே அவ்விந்த்ரன் ஸந்தோஷம் அடைந்து இவனுக்கு அந்தர்த்தான சக்தியைக் கொடுத்தான். கப்பம் வாங்குவது தண்டிப்பது சுங்கம் வாங்குவது முதலியவற்றால் ராஜாக்களின் ஜீவனம் தாருணமாயிருப்பதைக் கண்டு அம்மன்னவன் தீர்க்கஸத்ரமென்னும் யாகத்தை நடத்தும் வ்யாஜத்தினால் அந்த ஜீவனத்தைத் துறந்தான். ஆத்மஸ்வ ரூபத்தை உள்ளபடி உணர்ந்த அம்மன்னவன் அந்த ஸத்ரத் தில் தன்னைப் பற்றினாருடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையனும் ஆத்மாக்களுக்கு அந்தராத்மாவாகையால் பரமாத்மாவுமாகிய பரமபுருஷனைத் தடைபடாத ஸமாதியி னால் ஆராதித்து அவனுடைய லோகத்தை அடைந்தான். ஹவிர்த்தானன் ஹவிர்த்தானி யென்னுந் தன் பார்யை யிடத்தில் பர்ஹிஷதன் கயன் சுக்ரன் க்ருஷ்ணன் ஸத்யன் ஜிதவ்ரதன் என்ற ஆறு பிள்ளைகளைப் பெற்றான். அவர்களில் பர்ஹிஷதன் மிகுந்த பாக்யமுடையவன். ஹவிர்த்தான னுக்குப் பின்பு அவன் ப்ரஜைகளைப் பாதுகாத்து வந்தான். அவன் யஞ்ஞாதி கர்மங்களை விதிக்கிற வேதபாகங்களிலும் அவற்றை விவரிக்கிற கல்பஸூத்ரம் ஸ்ம்ருதி இதிஹாஸம்

புராணம் முதலியவற்றிலும் யோகமார்க்கங்களிலும் மிக்க வல்லவனாயிருந்தான். அவன் ஓரிடத்தில் யாகம் செய்து முடித்து அவன் ஸமீபத்திலேயே மற்றொரு யாகம் செய்வதும் அதன் ஸமீபத்தில் மற்றொரு யாகம் செய்வதுமாகி இப்பூமண்டலத்தை யெல்லாம் யாகபூமியாகக்கொண்டு கிழக்கு நுனியாகப் பரப்பின தர்ப்பங்களால் பூமி முழுவதும் நிறைத்துவிட்டான். அதனால் அவன் ப்ராசீனபர்ஹி யென்று பேர்பெற்றான். அவன் ப்ரஹ்மதேவனால் உரைக்கப் பெற்ற ஸமுத்ரராஜனது புதல்வியாகிய சதத்ருதி யென்பவளை மணம்புரிந்தான். அவள் அங்கங்களெல்லாம் அழகாயிருக்கப்பெற்றவள். இளம்பருவமுடையவள். அவள் ஸமஸ்த ஆபரணங்களையும் அணிந்து விவாஹகாலத்தில் அக்னியை வலம் செய்யும்பொழுது அக்னிதேவன் முன்பு சுகியை விரும்பினாற்போல் அவளை விரும்பினான். புது மண மடந்தையாகிய அவள் சிலம்புத் தண்டைகளை ஒலிப்பித்துக் கொண்டு திசைகளில் உலாவும்பொழுது தேவதைகளும் அஸுரர்களும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் உரகர்களும் முனிவர்களும் மற்ற மனிதர்களும் மோஹங்கொண்டார்கள். ப்ராசீனபர்ஹியென்று பேர்பெற்ற பர்ஹிஷதனுக்கு இங்ஙனம் பேரழகியாகிய சதத்ருதியிடத்தில் பத்துப் பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களெல்லோரும் ப்ரசேதஸ்ஸுக்களென்று ஒரே நாமமுடையவர்கள். எல்லோரும் ஓரே வ்ரதத்தை ஆசரித்துக்கொண்டிருந்தார்கள். தர்மத்தின் கரை அறிந்தவர்கள். அவர்கள் ப்ரஜைகளைப் படைக்கும்படி தந்தையினால் கட்டளையிடப்பெற்றுத் தவம் செய்யும் பொருட்டு அரண்யம் சென்று பதினாயிர மாண்டுகள் தவங்களுக்கு நாதனாகிய பகவானைத் தவத்தினால் ஆராதித்தார்கள். அவர்கள் தவம் செய்வதற்காக அரண்யத்திற்குப் போகும்பொழுது அவர்மேல் ருத்ரன் அருள் புரிந்து வழியில் வந்து தோன்றி ஒன்று உபதேசித்தான். அவர்கள் அதை ஜபித்து அதன் பொருளான பகவானை த்யானித்துக்கொண்டு மிக்க ஊக்கத்துடன் தவம் செய்து வந்தார்கள்.

இங்ஙனம் மொழிகின்ற மைத்ரேயரைப் பார்த்து விதுரர்:—'ப்ரசேதஸ்ஸுக்களுக்கு அரண்யம் போகும் வழியில் ருத்ரனோடு ஸமாகமம் நேர்ந்த விதத்தையும் அவன் அவர்களுக்கு உபதேசித்த பொருளடக்கமுடைய ரஹஸ்யத்தையும் எனக்கு விவரித்து மொழிவீராக. ப்ரஹ்மரிஷீ! ஸம்ஸாரத்தில் உழலும் ப்ராணிகளுக்கு ருத்ரனோடு ஸமாகமம் நேருவது ஸாதாரணமாய்க் கிடைக்கக் கூடியதன்றே; முனிவர்கள் பலரும் இந்த ருத்ரனைப் பெற விரும்பி வேறு விஷயங்களில் மனப்பற்றின்றி நெடுங் காலமும் த்யானித்தார்களன்றி அவனைப் பெறவில்லை யல்லவா? ருத்ரன் கோரனும் அமங்கலனுமாகையால் முனிவர்களுக்கு அவனைப்பற்றி யென்னென்று சிலர் நினைப் பார்கள். அவனை அங்ஙனம் பழிக்கலாகாது. அவன் ப்ராணி களுடைய உற்பத்தி முதலியவற்றை யெல்லாம் நன்றாக அறிந்தவன். அவன் ஆத்மானுபவத்தினால் த்ருப்தி அடைந் திருப்பவன். ஆகையால் அவனுக்கு லோக ஸஞ்சாரத்தி னால் ஆகவேண்டிய ப்ரயோஜனம் ஒன்றுமே இல்லை. ஆயினும் ஸம்ஸாரத்தில் அழுந்தி மன இறக்கத்திற்கிட மான ஜனங்களை அனுக்ரஹிக்கும்பொருட்டு மனைவியுடன் கூடிக் கோரமான உருவத்துடன் உலாவிக்கொண்டிருக் கிறான்' என்றார்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ஸாதுக்களாகிய ப்ர சேதஸ்ஸுக்கள் ப்ரஜைகளைப் படைக்கவேண்டுமென்ற தந்தையின் வசனத்தைச் சிரஸா வஹித்து ப்ரஜைகளைப் படைக்குந் திறமை உண்டாவதற்காகத் தவஞ் செய்ய விரும்பி வடதிசையை நோக்கிச் சென்றார்கள். வழியில் ஸமுத்ரத்திற்கு அருகில் மற்றொரு ஸமுத்ரம் போன்றதும் பெரியோர்களின் மனம்போல் தெளிந்திருப்பதும் தெளிந்த ஜல ஜந்துக்களையுடையதும் மிகப் பெரியதுமான ஓர் தாமரையோடையைக் கண்டார்கள். அதில் கருநெய்தல் களும் செந்தாமரைகளும் வெண்டாமரைகளும் செங்கழுநீர்

களும் நிறைந்திருந்தன. மற்றவைகளைக்காட்டிலும் கரு நெய்தல்கள் அபாரமாயிருந்தன. ஹம்ஸம் ஸாரஸம் சக்ரவாகம் தீர்க்காகம் முதலிய ஜல பக்ஷிகள் அதில் கூவிக்கொண்டிருந்தன. வண்டுகள் மலர்ந்த பூக்களின் தேனைப் பருகி மதித்துப் பாடுகிற குரலினிமையைக் கேட்டு ஸந்தோஷத்தினால் மரங்களும் செடி கொடிகளும் மயிர்க்கூச்சம் உண்டாகப்பெற்றிருந்தன. தாமரை மலர்களின் தூளைக் கிளப்பி இறைக்கின்ற காற்றினால் அவ்விடம் மஹோத்ஸவம் நடக்கப்பெற்றாற்போலிருந்தது. அந்தத் தாமரையோடையில் ம்ருதங்கம் உடுக்கை முதலிய வாத்யங்களுடன் திவ்யமான வகைகளால் மனத்திற்கு மிகவும் இனிதான ஓர் ஸங்கீதம் செவிப்பட்டுக்கொண்டிருந்தது. அந்த ராஜ குமாரர்கள் அதைக் கேட்டு வியப்புற்றார்கள். அப்பொழுதே தன் ப்ருத்யர்களோடு கூடித் தேவதைகளால் பாடப்பெற்ற தேவர் தலைவனாகிய ருத்ரன் அவ்வோடையினின்று மேற்கிளம்பி வரக் கண்டார்கள். உருக்கி யழுக்கெடுத்த பொன்னின் நிறமுடையவனும் கார்கொண்ட கண்டத்தனுமாகிய அம்முக்கண்ணதேவன் அனுக்ரஹத்தினால் அழகிய முகத்துடன் புலப்படக் கண்டு அந்த ராஜ குமாரர்கள் குதூஹலத்துடன் அவனை நமஸ்கரித்தார்கள். அவன் தன்னைப் பற்றினவருடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையன்; ஜ்ஞானம் முதலிய குணங்கள் நிறைந்தவன்; தர்மத்தில் மிக்க விருப்பமுடையவன். ஆகையால் அவன் தர்மத்தை உணர்ந்தவர்களும் சீலம் நிறைந்தவர்களுமான அந்த ராஜ குமாரர்கள் தன்னைக் கண்டு ஸந்தோஷமுற்றிருப்பதை அறிந்து அவர்களை நோக்கி 'நீங்கள் ப்ராசீன பர்ஹிஸின் புதல்வர்களென்பதும் நீங்கள் நினைத்திருப்பதும் எனக்குத் தெரியும். நான் உங்களை அனுக்ரஹிக்கும் பொருட்டே உங்களுக்கு என் காட்சியை விளைத்தேன். உங்களுக்கு க்ஷேமம் உண்டாகுக. சேதன அசேதனங்களைக்காட்டிலும் விலக்ஷணனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய வாஸுதேவனைச் சரணம் அடைந்தவன் எனக்கு

மிகவும் அன்பிற்கிடமானவன். ஒருவன் நூறு ஜன்மங்கள் வரையில் தனது வர்ணாஶ்ரம தர்மங்களைக் குறைவற நடத்திக்கொண்டு வருவானாயின், ப்ராஹ்மதேவனோடு ஸாலோக்யத்தையும், அதன் பிறகு என்னுடைய ஸாலோக்யத்தையும் பெறுவான். அப்பால் நிவ்ருத்தி தர்மத்தை அனுஷ்டித்துப் பகவானிடத்தில் சிறந்த பக்தி உண்டாகப் பெற்று, நானும் ப்ராஹ்மதேவனும் இந்த்ரன் முதலிய மற்ற தேவதைகளும் எங்கள் அதிகாரத்தின் முடிவில் மிகுந்த மஹிமை அமைந்த விஷ்ணுவின் ஸ்தானத்தை அடைவதுபோல் அடைவான். நீங்கள் பகவானிடத்தில் பக்தியுடையவர்களாயிருக்கின்றீர்கள். ஆகையால் அந்தப் பகவானைப்போல் நீங்கள் எனக்கு ப்ரீதிக்கிடமாயிருக்கின்றீர்கள். எனக்குப் பாகவதர்களைக் காட்டிலும் அன்பன் மற்றெவனுமே இல்லை. (பகவானிடத்திலுங் கூட எனக்கு அவ்வளவு ப்ரீதி கிடையாது) ஆகையால் உங்களுக்கு ஒன்று உபதேசிக்கிறேன். நீங்கள் இதை ஏகாந்தத்தில் ஜபிக்கவேண்டும். இது ப்ரக்ருதி புருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணனான பரமாத்மாவின் ஸ்வரூபத்தை நன்றாக அறிவிக்கும்; பரிசுத்தமானது; மங்களங்களை யெல்லாம் விளைக்கும்; மோக்ஷத்தையும் கைகூட்டுவிக்கும். ஆகையால் இது எல்லாவற்றிலும் மேன்மையுடையது. இதைச் சொல்லுகிறேன், கேட்பீர்களாக' என்று மொழிந்து பகவானிடத்தில் மன ஊக்கமுடைய அச்சிவபெருமான் கருணாநிதியாகையால் கைகூப்பிக்கொண்டு நிற்கிற அந்த ராஜகுமாரர்களுக்கு ரஹஸ்யத்தை உபதேசித்தான்.

ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்து அவ்வாத்மாவை உன்னிடத்தில் ஸமர்ப்பித்து உன்னையே பாவித்துக்கொண்டிருக்கும் ஞானிகளின் பாரத்தையெல்லாம் தன்மேல் ஏற்றுக்கொண்டு அவர்களைப் பாதுகாக்குந் தன்மையனே! பரமபுருஷ! நீ அந்த ஞானிகளின் க்ஷேமத்திற்காகப் பல்லாண்டு பல்லாண்டு மேன்மை யுற்றிருப்பாயாக. எனக்கு

உன்னை அனுபவித்து வாழும் தன்மை உண்டாருக. ஸித்த ஸ்வரூபனான உன்னை அனுபவிப்பதால் உண்டாகும் ஆநந்த மானது ஸாதிக்கக் கூடியவைகளான. மற்ற விஷயங்களை அனுபவிப்பதாலுண்டாகும் ஆநந்தம்போல் அநித்யமாகா மல் ஶாஶ்வதமாயிருக்கும். இந்த ப்ரபஞ்சமெல்லாம் நீயே. நீ இதிலுள்ள வஸ்துக்களுக்கெல்லாம் அந்தராத்மாவா யிருப்பவன். உனக்கு நமஸ்காரம். நீ தாமரையுந்தியன், பூத ஸூக்ஷ்மங்களுக்கும் இந்த்ரியங்களுக்கும் ஆஶ்ரயமா யிருப்பவன். நீ எல்லாவற்றிலும் நிறைந்து எல்லாம் உன் னிடத்தில் நிலைநின்றிருக்கையால் வாஸுதேவனென்று பேர்பெற்றனை. நீ பசி தாஹம் முதலியன தீண்டப்பெரு தவன்; விகாரமற்றவன்; ஸ்வயம்ப்ரகாசன். உனக்கு நமஸ் காரம். முகத்தினின்று அக்னியைக் கிளப்பி உலகங்களை யெல்லாம் தஹித்து ஸம்ஹரிப்பவன் நீயே. நீ ஸூக்ஷ்ம சேதன அசேதனங்களைச் சரீரமாக வுடையவன்; அழி வில்லாதவன். ப்ரபஞ்சத்திற்கு முதலில் வேதத்தை உபதே சித்து நல்வழி தீயவழிகளைக் காட்டி உபகரித்தவன் நீயே. ப்ரத்யும்னனென்னும் வ்யூஹாவதாரம் செய்து உலகத்தை வாழ்வித்தவனும் நீயே. ஸர்வதேச ஸர்வகால ஸர்வா வஸ்தைகளிலும் அந்தராத்மாவாயிருந்து ஜகத்தைப் பாதுகாப்பவனும் நீயே. உனக்கு நமஸ்காரம். நீயே அநிருத்தனென்னும் வ்யூஹாவதாரம் செய்தவன். மனத் திற்கும் மற்ற இந்த்ரியங்களுக்கும் ப்ரபு. நீ கர்ம ஸம்பந்த மற்ற பரிசுத்தன். உன்னைப் பற்றினார்க்கும் நீ அத் தன்மையை விளைப்பவன். நீ எங்கும் நிறைந்தவன். ஆநந்த ஸ்வரூபன். உனக்கு நமஸ்காரம். நீ ஸ்வர்க்க மோக்ஷங்களை நிறைவேற்றிக் கொடுப்பவன். பரிசுத்தமான யோகிகளின் மனத்தில் வாஸம் செய்பவன். அக்னிஸ்வரூபன். ருத்விக்கு களால் நடத்தப்படுகிற யஜ்ஞமும் நீயே. பித்ருக்களின் ஆஹாரமும் தேவதைகளின் ஆஹாரமும் நீயே நீ வேதங் களைக் காப்பவன். யாகங்களால் விளையும் ஸ்வர்க்காதி பலன்களெல்லாம் நீயே. சப்தாதி விஷயங்களை அனுப

விப்பதாலுண்டாகும் ஸுகத்தைக் கொடுப்பவனும் நீயே. தித்திப்பு முதலிய ரஸங்களெல்லாம் நீயே. ஸ்தூலரூபத்தை யுடைய ப்ருதிவி முதலான பூதங்களும் நீயே. சேதன அசேதனங்களெல்லாம் உனது சரீரம். கார்யங்களில் முயற்சி கொள்ளுந் திறமையாகிற இந்த்ரிய சக்தி தேஜஸ்ஸு தாரண ஸாமர்த்யமாகிற தேஹபலம் ஆகிய இவை யெல்லாம் நீயே. இவைகளால் மூன்று லோகங்களையும் நீ பாதுகாக்கின்றனை. உனக்கு நமஸ்காரம். சப்தத்தை அடையாள மாகவுடைய ஆகாசமும் மற்ற வாயு முதலிய பூதங்களும் நீயே. நீ அவற்றில் உள்ளும் புறமும் நிறைந்திருப்பவன். யாகம் தானம் முதலிய புண்ய கர்மங்களும் நீயே. அவற்றால் ஸாதிக்கப்படுகிற ஸ்வர்க்காதி பரலோகங்களும் நீயே. புண்ய கர்மங்களை ஆசரிக்கும் ஜனங்கள் வஸிக்கிற இவ்வுலகமும் நீயே. ஜ்ஞான ஸ்வரூபரான ஜீவாத்மாக்களும் நீயே. உனக்கு நமஸ்காரம். ப்ரவ்ருத்திகர்மம் நிவ்ருத்திகர்மம் ஆகிய இருவகைக் கர்மங்களும் நீயே. ப்ரவ்ருத்தி கர்மங்களால் ஆராதிக்கப்படுகிற பித்ருதேவதை முதலியவர்களும் நிவ்ருத்தி கர்மத்தின் பலனும் நீயே துக்கத்தை விளைக்கிற ம்ருத்யுவும் நீயே. உனக்கு நமஸ்காரம். தர்மாதி புருஷார்த்தங்களின் பலன்களை வெளியிடுகிறவன் நீயே. நாதா! நீ எல்லாமறிந்தவன். தர்மங்களெல்லாம் ப்ராணிகளால் ஸாதிக்கப்பட்டுப் பலன்களைக் கொடுக்கின்றன. நீ அவர்களுடைய செயலை எதிர்பாராமல் பலன் கொடுக்க ஸித்தமாயிருக்கின்றனை யாகையால் பெரியோர்கள் உன்னை ஸித்த தர்மமென்று கூறுகிறார்கள். பூமியின் க்ஷேமத்திற்காக நீ க்ருஷ்ணனென்னும் பேர்பூண்டு அவதாரம் செய்பவன். உன் ஸ்வரூபமும் குணங்களும் அளவிட முடியாதவை. நீ எக்காலத்திலும் எவ்விதத்திலும் தடைபடாத ஜ்ஞானமுடையவன். உனக்கு நமஸ்காரம். நீ புராண புருஷன்; ஸாங்க்ய சாஸ்த்ரத்தை வெளியிட்ட கபிலரும் யோக சாஸ்த்ரத்தை வெளியிட்ட ஹிரண்யகர்ப்பனும் நீயே. ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களென்கிற மூன்று சக்திகளும் உன்னைச்

சேர்ந்தவைகளே. மழை பொழியும் பர்ஜன்யனும் அஹங்கார தத்வமும் மனஸ்தத்வமும் நீயே. மனத்தினாலும் வாயாலும் சரீரத்தினாலும் அனுபவிக்கத் தகுந்த வஸ்துக்களெல்லாம் நீயே. உனக்கு நமஸ்காரம். பாகவதர்களால் ஆராதிக்கப்படுவதும் அவர்களுக்கு மிகவும் அபிஷ்டமாயிருப்பதுமாகிய உன்னுருவத்தை நாங்கள் ஸமஸ்த இந்த்ரியங்களாலும் அனுபவிக்க விரும்புகிறோம். எங்களுக்கு உன் காட்சியைக் கொடுப்பாயாக. நீர்கொண்டு திகழ்கின்ற வர்ஷாகாலத்து மேகம்போல் கறுத்து ஸமஸ்த ஸௌந்தர்யங்களும் நிறைந்து திரண்டுருண்டு நீண்டு அழகிய நான்கு புஜங்களும், மேன்மைக்கிடமான அழகிய முகமும், தாமரையின் உள்ளிதழ்போன்ற கண்களும், அழகிய புருவங்களும் அத்தகைய மூக்கும், பற்களும் கபோலங்களும், ஏற்றக்குறைவின்றி ஆபரணம்போன்ற காதுகளும், ப்ரேமத்தினால் மலர்ந்த கடைக்கண்களும் அமைந்து முன்னெற்றி மயிர்களால் விளக்கமுற்று அழகிய தாமரைத்தாதுபோல் திகழ்கின்ற பட்டுவஸ்த்ரம் தரித்து ஜ்வலிக்கின்ற குண்டலங்களும் கிரீடம் கைவளை முத்துமாலை சிலம்புத் தண்டை அரைநாண் மாலை சங்கு சக்ரம் கதை தாமரை மலர் கௌஸ்துபமணி இவைகளும் அணிந்து விளங்குவதும், ஸிம்ஹத்தின் கழுத்துப்போன்று குண்டலம் முதலிய ஆபரணங்களின் காந்திகள் படிந்து கௌஸ்துப மணியோடுகூடின கழுத்துடையதும், ஸ்ரீ மஹாலக்ஷ்மி வாஸம் செய்யப்பெற்ற மார்பின் சோபையால் பொன்னுரையோடு கூடின உரைகல்லைத் திரஸ்கரிப்பதும், மூச்சை உள்ளிழுக்கும்பொழுது மறைவதும் வெளிவிடும் பொழுது விளங்குவதுமான த்ரிவலிகளால் அழகாகி அரசஇலைபோன்ற உதரமும் நீர்ச்சுழி போலாழ்ந்து உலகங்களையெல்லாம் உள்ளடக்கிக்கொள்வதுபோன்ற நாபியும் கறுத்து நிதம்பத்தின்மேல் உடுத்த பொன்னிறமான பட்டுவஸ்த்ரத்தின்மேல் படிந்து விளங்கும் பொன்னரைநாண் மாலையும் ஒன்றோடொன்று ஸமமான பாதங்களும் கணைக்

கால்களும் துடைகளும் அழுங்கின முழந்தாள்களும் அமைந்து அழகிய காட்சியுடையதுமான உன்னுருவத்தை நாங்கள் காண விரும்புகிறோம். சரத்காலத்தில் மலர்ந்த தாமரையின் இதழ்போல் திகழ்வதும் நகவொளிகளால் நங்கள் மனமலங்களைப் போக்குவதுமாகிய பாதாரவிந்தங்களால் பக்தர்களின் பயத்தைப் போக்குந்தன்மையுள்ள உன்னுடைய யுருவத்தை எங்களுக்குக் காட்டுவாயாக. நீ, அஜ்ஞர்களான ஸம்ஸாரிகளுக்கு ஆசார்யனை அடைந்து உஜ்ஜீவிக்கும்படி வழிகாட்டுந் தன்மையன். அஜ்ஞானமெல்லாம் தொலைந்து மனம் பரிசுத்தமாக வேண்டுமென்று விரும்புகிற நாங்கள் இப்படிப்பட்ட உன்னுருவத்தை எப்பொழுதும் த்யானிக்கும்படி அருள்புரிவாயாக. எவரேனும் உன்னுருவத்தை த்யானித்துக்கொண்டு தமது வர்ணாஶ்ரம தர்மங்களை அனுஷ்டித்துவருவார்களாயின், அவர்களுக்கு மோக்ஷத்தை விளைக்கும்படியான பக்தி யோகம் தானே உண்டாகும். நீ எப்படிப்பட்டவர்களுக்கும் கிடைக்க அரியன். ஆயினும் உன்னிடத்தில் சிறந்த பக்தி யுடையோர்க்கு நீ எளியன். ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்து உன்னிடத்தில் பக்தியோகம் செய்யும் பெரியோர்களுக்கு ப்ராப்யனாகிய உன்னைப் பெற்றனுபவிக்கையாலுண்டாகு மாநந்தம் எல்லாவற்றிலும் சிறந்த கைவல்யமென்கிற ஆத்மானுபவத்திலும் இனிதாயிருக்கும். மற்ற உபாயங்களால் ஆராதிக்கமுடியாத உன்னைப் பெரியோர்களுக்கும் அஸாத்யமான ஏகாந்த பக்தியினால் ஆராதித்து உன் பாதமூலத்தையொழிய மற்ற ஸ்வர்க்காதி பலன்களை எவன் விரும்புவான்? வீரத்தன்மையாலும் சூரத்தன்மையாலும் புருவங்களை நெரித்து உலகத்தையெல்லாம் த்வம்ஸம் செய்கின்ற யமன், உன் பாதாரவிந்தங்களைப் பணியும் பெரியோனை 'இவன் எனக்குட்பட்டவன்' என்று நினைக்கவு மாட்டான். ஸ்வர்க்கத்தையாவது மோக்ஷத்தையாவது உன் பக்தர்களுடைய ஸஹவாஸத்தின் அரைக்ஷணத்திற்கும் ஈடாக நினைக்கமாட்டேன். பாபங்களைப்போக்குந்

தன்மையுள்ள பாதாரவிந்தங்களை யுடைய உனது கீர்த்தியிலும் உன் பாததீர்த்தமாகிய கங்கா நதியிலும் உள்ளும் புறமும் ஸ்நானம் செய்து பாபங்களை உதறி ப்ராணிகளிடத்தில் தயையும் ஸத்வம் நிறைந்த மனமும் நேர்மையும் அமைந்து பரிசுத்தரான பெரியோர்களோடு ஸஹவாஸம் நேரும்படி அருள்வாயாயின், இதுவே நீ எங்களுக்குச் செய்யும் அனுக்ரஹமாம். எவனேனும் உன் பக்தர்களோடு ஸஹவாஸம் செய்வானாயின், அவனுடைய மனம் அப்பெரியோர்களின் பக்தி யோகத்தினால் வழிப்பட்டுச் சுத்தஸத்வம் நிறைந்து வேறு விஷயங்களில் பற்றின்றி அஜ்ஞானமாகிற குஹையில் நுழையாது. அவன் உன் திவ்யமங்கள விக்ரஹத்தை மனனம் செய்பவனாகி உன் ஸ்வரூபத்தை அநாயாஸமாக உணர்வான். இந்த ப்ரபஞ்சமெல்லாம் உன் ஸ்வரூபத்திலும், உன் ஸ்வரூபம் இந்த ப்ரபஞ்சத்திலும் ப்ரகாசிக்கின்றன. இத்தகைய உன் ஸ்வரூபமே பரப்ரஹ்மமென்று கூறப்படும் தத்வமாம். இது ஸூர்யன முதலிய தேஜஸ்ஸுபோலவும் ஆகாயம் போலவும் எங்கும் நிறைந்திருக்கும். இத்தகைய ஸ்வரூபத்தையுடைய நீ பலவாறாக மாறுந்தன்மையுடைய உன் மாயையினால் இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் படைப்பதும் காப்பதும் அழிப்பதும் செய்கின்றனை. ஆயினும் நீ நிர்விகாரன். உன் மாயையினால் ஜீவாத்மாக்கள் பலவகை துக்கங்களுக்கிடமான ஸம்ஸாரத்தை அனுபவிக்கின்றார்கள். பலவகை தேஹங்களாய்ப் பரிணமிக்கின்ற உன் மாயையின் ஸம்பந்தத்தினால் ஜீவாத்மாக்கள் தம்மை ஈச்வரனைக்காட்டிலும் வேறாகவும் ஸ்வதந்த்ரராகவும் தேஹத்தை ஆத்மாவாகவும் நினைக்கின்றார்கள். அந்நினைவு பொய்யாயினும் உன் மாயையின் மஹிமையால் அவர்களுக்கு உண்மைபோல் தோற்றுகிறது. நீ ஸ்வதந்த்ரன். நாங்கள் உன்னைச் சரணம் அடைவோமாக. அப்ராக்ருதமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடைய உன் ஸ்வரூபத்தை ச்ரத்தையுடன் தமது வர்ணாச்ரம தர்மங்களால் காமனையின்றி ஆராதிக்கிறவர்களே,

யஜ்ஞாதி கர்மங்களை அறிவிக்கிற வேதத்தையும் ஆத்ம ஸ்வரூபத்தை அறிவிக்கிற ஸாங்க்ய சாஸ்த்ரத்தையும் உணர்ந்த அறிஞராவார்கள். இப்படிப்பட்ட ஸ்வரூப ரூப குண விபூதிகளையுடைய நீயே புராண புருஷன். ஸ்ருஷ்டிக்கு முன்பு நீ யொருவனே இருந்தாய். அப்பொழுது சேதனம் அசேதனம் முதலிய சக்திகளெல்லாம் உன்னிடத்தில் மறைந்திருந்தன. பிறகு நீ ஸ்ருஷ்டிக்க விரும்புகையில் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களையுடைய ப்ரக்ருதி தத்வம் பிரிந்தது. அதினின்று மஹத்தத்வமும், அதினின்று அஹங்கார தத்வமும், அதினின்று ஆகாயமும், அதினின்று [1] வாயுவும், அதினின்று அக்னியும், அதினின்று அப்பும், அதினின்று ப்ருதிவியும், ஆகாயம் முதலிய அப்பஞ்ச பூதங்களினின்று அண்டமும், அதில் ப்ரஹ்மாதி தேவதைகளும், மரீசி முதலிய ரிஷிகளும், மனுஷ்யர் முதலிய மற்ற ப்ராணி ஸமூஹங்களும் உண்டாயினர். இங்ஙனம் பல விசித்ரங்களடங்கின இந்த ப்ரபஞ்சத்திற்கெல்லாம் காரணன் நீயே. தேவர் திர்யக்கு மனுஷ்யர் ஸ்தாவரமென்று நான்கு வகைப்பட்ட சரீரங்களையும் தன் சக்தியால் படைத்துத் தனது அம்சமாகிய ஜீவன்மூலமாய் அவற்றில் ப்ரவேசித்திருக்கின்றனையாகையால் உன்னைப் புருஷனென்று சொல்லுகிறார்கள். ஜீவன் தேவாதி சரீரங்களில் தன் கர்ம பரிபாகத்தினால் புகுந்து, தேனீக்கள் புஷ்பங்களினின்று ஆராய்ந்து வைத்திருக்கும் தேன்களை வண்டுகள் பருகுவதுபோல், இந்த்ரியங்களால் கொண்டுவரப்பட்ட சப்தாதி விஷயங்களை அனுபவிக்கின்றான். அவனுக்கு அந்தராத்மாவாயிருந்து அங்ஙனம் தூண்டுகிறவனும் நீயே. நீ காலத்தைச் சரீரமாகக்கொண்டு மிகவும் பயங்கரமான வேகமும் அறிய முடியாத உருவமும் உடையவனாகி, காற்று மேகங்களைப் பறக்கடிப்பதுபோல், ப்ராணிகளைக் கொண்டே ப்ராணிகளை ஹிம்ஸித்து ஸம்ஹரிக்கின்றனை.

---

1. ஜலமும்.

உலகத்திலுள்ள ஜனங்கள், 'இதை இங்ஙனம் செய்ய வேண்டும், அதை அங்ஙனம் செய்யவேண்டும்' என்னும் பலவகைச் சிந்தையால் மதிமயங்கிக் கையில் கிடைத்த வஸ்துவிலும் பேராசை வளரப்பெற்றுச் சப்தாதி விஷயங்களில் மிகவும் விருப்பமுற்றுத் திரிகையில், காலஸ்வரூபனான நீ இம்மியும் மதிமயக்கமின்றி ஸர்ப்பம் பசியெடுத்து நாக்கினால் உதட்டை நக்கிக்கொண்டு எலியின் மேல் விழுவதுபோல், அந்தகரூபனாய்த் தோன்றி அங்ஙனம் வீணாய்த் திரிகின்ற ஜனங்கள்மேல் வந்து விழுகின்றனை. ஜீவாத்மாக்கள் உன்னை அநாதரிக்கையால் ஜ்ஞானம் க்ஷீணிக்கப்பெற்று ஸம்ஸாரத்தில் விழுந்து வருந்திக் கொண்டிருப்பினும் தெய்வாதீனமாய்ச் சிறந்த மதி தேரப் பெறுவார்களாயின், உனது பாதாரவிந்தங்களைத் துறக்க முடியுமா? ஆனதுபற்றியே பதினான்கு மன்வந்தரங்கள் ஒரு நாளாகப்பெற்ற எங்கள் தந்தையாகிய ப்ரஹ்மதேவன் மனக்கலக்கமின்றி உன் பாதாரவிந்தங்களையே என்றும் ஆராதித்து வருகின்றான். பரமாத்மனே! பரப்ரஹ்மமே! இந்த ப்ரபஞ்சமெல்லாம் ருத்ரஸ்வரூபியாகிய உன்னிடத்தில் பயந்து வருந்துகின்றது. ஜ்ஞானிகளான எங்களுக்கு நீ எவ்விதத்திலும் பயமில்லாத கதியாயிருக்கின்றனை.

இங்ஙனம் சிவபெருமான் பரமாத்மாவைப்பற்றின ஸ்தோத்ரத்தை மொழிந்து மீளவும் அந்த ப்ரசேதஸர்களைப் பார்த்து 'ராஜகுமாரர்களே! நீங்கள் பகவானிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி உங்கள் வர்ணாஸ்ரம தர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு விஸ்வாஸத்துடன் இந்த ஸ்தோத்ரத்தை ஜபஞ்செய்வீர்களாக. இதனால் உங்களுக்கு மங்களம் உண்டாகும். நீங்கள் இந்த ஸ்தோத்ரத்தை ஜபித்துக்கொண்டு, ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாகையால் உங்கள் ஹ்ருதயத்தில் வஸிக்கின்ற பரமாத்மாவை த்யானிப்பதும் துதிப்பதும் செய்து அடிக்

கடி அவனையே பூஜிப்பீர்களாக. இந்த ஸ்தோத்ரம் யோகாதேசமென்னும் பேருடையது. நீங்களெல்லோரும் இதைப் படித்து மனத்தில் நிறுத்திக்கொண்டு மனவூக்கத்துடனும் மிகுந்த ஆவலுடனும் அப்யஸிப்பீர்களாக. ஸ்ருஷ்டிகர்த்தாக்களான மரீசி முதலியவர்களுக்கும் ப்ரபுவான ப்ரஹ்மதேவன் தன் புதல்வர்களான ப்ருகு முதலிய எங்களைக்கொண்டு உலகங்களைப் படைக்க விரும்பி, ஸ்ருஷ்டி ஸாமர்த்யத்தை விரும்புகிற எங்களுக்கு இந்த ஸ்தோத்ரத்தை முன்பு உபதேசித்தான். இதைப்பெற்ற ப்ரஜாபதிகளான நாங்கள் அனைவரும் ப்ரஹ்மதேவனால் ப்ரஜைகளைப் படைக்கும்படி தூண்டப்பெற்று இந்த ஸ்தோத்ரத்தினால் அஜ்ஞானத்தைப் போக்கிக்கொண்டு பற்பல ப்ரஜைகளைப் படைத்தோம். வாஸுதேவனையே முக்கியமாகக்கொண்டு, இதைத் தினந்தோறும் நியமத்துடன் ஜபிக்கும் புருஷன் சீக்ரத்தில் தான் விரும்பும் நன்மையைப் பெறுவான். எல்லா நன்மைகளிலும் பகவானிடத்தில் விளையும் பக்தியே சிறந்த நன்மையாம். இந்த ஜ்ஞானமுடையவர் வேறு உபாயங்களால் கடக்க அரிதான துக்கஸாகரத்தை அனுயாஸமாகக் கடப்பார்கள். ஒருவன் நான் பாடின இப்பரமாத்ம ஸ்தோத்ரத்தை ஶ்ரத்தையுடன் ஓதுவானாயின், மற்ற உபாயங்களால் ஆராதிக்க முடியாத பகவானிடத்தில் சிறந்த பக்தி உண்டாகப் பெறுவான். மற்றும், ஸமஸ்த புருஷார்த்தங்களையும் அளிக்கவல்ல தனித் தெய்வமாகிய பரமபுருஷன், நான் பாடின இந்த ஸ்தோத்ரத்தினால் பாடப்பெற்று மிக்க மனக்களிப்புற்று அவன் விரும்புமவற்றையெல்லாம் சீக்ரத்தில் கொடுப்பான். விடியற்காலத்தில் எழுந்து கைகளைக் குவித்து ஶ்ரத்தையுடன் இந்த ஸ்தோத்ரத்தைக் கேட்பவர்களும் சொல்பவர்களும் புண்ய பாப ரூப கர்மங்களினின்று விடுபடுவார்கள். ராஜகுமாரர்களே! நான் மொழிந்த இந்தப் பரமபுருஷ ஸ்தோத்ரத்தை மனவூக்கத்துடன் ஜபித்துக்கொண்டு தவம் செய்து வருவீர்களாயின், கடைசி

யில் விருப்பம் கைகூடப்பெறுவீர்கள். இருபத்து மூன்றுவது அத்யாயம் முற்றிற்று.

---

### புரஞ்ஜனோபாக்யானம்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:— மஹானுபாவனாகிய ருத்ரன் ப்ரசேதஸர்களுக்கு ஸ்தோத்ரத்தை உபதேசித்து அவர்களால் பூஜிக்கப்பட்டு, அவர்கள் பார்த்துக்கொண்டேயிருக்கையில், அவ்விடத்திலேயே மறைந்தான். அப்பால் அவர்களெல்லோரும் ருத்ரன் மொழிந்த பரமாத்ம ஸ்தோத்ரத்தை ஜலத்தில் நின்று ஜபித்துக்கொண்டு பதினாயிரமாண்டுகள் தவம் புரிந்தார்கள். இவர்கள் தந்தையாகிய ப்ராசீனபர்ஹி கேவலம் யாகாதி கர்மங்களிலேயே மிக்க மனவூக்கமுற்றிருந்தான். பிறகு ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்த நாரதமுனிவர் அவன்மேல் மன இரக்கங்கொண்டு அவனுக்கு ஜ்ஞானோபதேசஞ்செய்ய விரும்பி அவனிடம் வந்து 'மன்னவனே! நீ பலவகை யஜ்ஞாதி கர்மங்களை நடத்திக்கொண்டு வருகின்றனை. இதனால் நீ எந்த நன்மையைப்பெற விரும்புகின்றனையோ? தெரியவில்லை. துக்கங்கள் கழியவேண்டுமென்றாவது ஸுகங்களைப் பெறவேண்டுமென்றாவது நீ விரும்புவாயாயின், இந்தக் கேவல கர்மத்தினால் அவ்விரண்டில் எதையும் ஸாதிக்கமுடியாது' என்றார். அதைக்கேட்ட மன்னவனும் 'மஹானுபாவரே! என் மனம் கேவல கர்மங்களால் பற்றியுண்டிருக்கின்றது. ஆதலால் நான் மற்ற எந்த நன்மையையும் அறியேன். நான் கர்மங்களினின்று மீண்டுவருமாறு எனக்கு நீர் தத்வஜ்ஞானத்தை உபதேசிப்பீராக. விடமுடியாத பலவகை ப்ரவ்ருத்தி தர்மங்கள் தொடரப்பெற்று மேன்மேலும் ஸம்ஸாரத்தை வளர்ப்பதான மனைவாழ்க்கையில் மமகாரத்தை ஏற்றுக்கொண்டு பிள்ளை பெண்டிர் பணம் முதலியவற்றையே புருஷார்த்தமாக நினைத்து மதிகெட்டுத் திரிகிற என்

போன்ற மூடன் சிறந்த நன்மையைப் பெறமாட்டான்' என்றான். அதைக் கேட்டு நாரதர் மன்னவனை நோக்கி இங்ஙனம் மொழிந்தார்:—ப்ரஜைகளுக்கெல்லாம் ப்ரபுவாகிய மன்னவனே! நீ யாகங்களில் பசுக்களென்று பேரிட்டு மன இரக்கமின்றி வதித்த ப்ராணிகள் பலவாயிரங் கூட்டங்களாயிருக்கின்றன. அவை, நீ தங்களுக்குச் செய்த ஹிம்ஸையை நினைத்து 'இவன் எப்பொழுது மரணம் அடையப்போகிறான்?' என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன. நீ மரணம் அடைகையில், அவை கோபம் மேலெழப்பெற்று இரும்புபோல் உறுதியான தமது கொம்புகளால் உன்னைக் குத்தி ஹிம்ஸிக்கப்போகின்றன. இவ்விஷயத்தில் புரஞ்ஜனோபாக்யானமென்னும் பேருடைய ஓர் பழையதான இதிஹாஸம் சொல்லுகிறேன். அதைக் கேட்டுத் தெரிந்துகொள்வாயாக. புரஞ்ஜனனென்னும் பேருடைய ஓர் மன்னவன் இருந்தான். அவன் பெரும் புகழன். அவனுக்கு அவிஜ்ஞாதனென்ற ஓர் நண்பன் இருந்தான். அவனுடையசெயல் அனைவர்க்கும்ப்ரஸித்தமாயிருந்தது. அப்புரஞ்ஜன மன்னவன் சப்தாதி விஷயங்களை அனுபவிக்க விரும்பி அதற்குத் தகுந்த ஓர் வாஸஸ்தானத்தைத் தேட முயன்று இந்த ப்ரபஞ்சம் முழுவதும் திரிந்தும் இடம் அகப்படாமையால் மனவருத்தமுற்றிருந்தான். அவன் பூமண்டலத்திலுள்ள பட்டணங்களையெல்லாம் பார்த்தும் அவற்றில் எதையும் தனக்கு உரியதாக நினைக்கவில்லை. பிறகு ஒரு காலத்தில் ஹிமவத் பர்வதத்தின் தென்புறத் தாழ்வரையில் ஒன்பது த்வாரங்களுடையதும் லக்ஷணங்களெல்லாம் அமைந்ததுமாகிய ஒரு பட்டணத்தைக் கண்டான். அதில் கோட்டைகளும் உத்யானங்களும் பெரிய மாடமாளிகைகளும் அகழிகளும் சாளரங்களும் கோபுர வாசல்களும் பொன் வெள்ளி இரும்பு இவைகளால் இயற்றின சிகரங்களோடு கூடின க்ருஹங்களும் திகழ்வுற்றிருந்தன. இந்த்ரநீலம் ஸ்படிகம் வைடூர்யம் முத்து மரகதம் பத்மராகம் முதலிய ரத்னங்க

ளால் இயற்றின உப்பரிகைகளையுடைய அந்நகரம் [1] போக வதிபோல் மிகுந்த சோபையுடன் விளங்கிற்று. அந்நகரத்தில் ஸபைகளும் நாற்சந்தி வீதிகளும் ராஜமார்க்கங்களும் சூது சதுரங்கம் முதலியன ஆடுமிடங்களும் கடைத்தெருக்களும் ஜனங்கள் இளைப்பாறுமிடங்களும் த்வஜங்களும் பதாகைகளும் பவழத்திண்ணைகளும் ஏற்படுத்தப் பட்டிருந்தன. அப்பட்டணத்திற்கு வெளியில் அழகான வ்ருக்ஷங்களும் கொடி செடிகளும் நிறைந்த ஓர் உத்யான வனம் உண்டு. பறவைகளின் ஒலிகளாலும் வண்டுகளின் ஜங்காரங்களாலும் பெரிய கோலாஹலம் நிறைந்த ஜலாதாரங்கள் பலவும் அங்குண்டு. மற்றும், அவ்வுத்யானத்தில் குளிர்ந்த அருவிகள் பலவும் பெருகிக்கொண்டிருக்கும். அவ்வருவிகளின் திவலைகளோடும் புஷ்பவாஸனையோடும் கூடிக் காற்று மெல்ல மெல்ல வீசிக்கொண்டிருக்கும். அங்குத் தாமரையோடைகள் பலவும் திகழ்வுற்றிருக்கும். அவற்றின் கரையில் வ்ருக்ஷங்கள் பலவும் அடர்ந்திருக்கும். அவற்றின் தளிர்கள் காற்றினால் அசைந்துகொண்டு அழகாயிருக்கும். அங்குப் பற்பலவகைக் காட்டு ம்ருகங்கள் கூட்டங் கூட்டமாய் உலாவிக்கொண்டிருக்கும். அவையெல்லாம் பிறர்க்கு ஹிம்ஸைசெய்யுந் தன்மையற்று முனிவர்கள்போல் மிகவும் சாந்தமாயிருக்கும். வழிப்போக்கர்கள் தம்மை அழைக்கின்றனவோவென்று நினைக்கும்படி அங்குக் குயிலினங்கள் மிகவும் இனிமையாய்க் கூவிக்கொண்டிருக்கும். அப்புரஞ்ஜன மன்னவன் அவ்வுத்யான வனத்தில் உலாவிக்கொண்டிருக்கையில் திடீரென்று ஒரு பெண்மணி வரக்கண்டான். அவளைப் பத்து ப்ருத்யர்கள் சுற்றிக்கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒவ்வொருத்தனுக்கும் நூறு வேலைக்காரர்கள் ஸித்தமாயிருந்தார்கள். மற்றும், ஐந்துதலைப்பாம்பொன்று அவளை நாற்புறத்திலும் காத்துக்கொண்டிருந்தது. அவள் யௌவனப் பருவம் நிறைந்தவள். நினைத்த வடிவங்கொள்ள வல்லவள். அவள்

---

1. பாதாளத்திலுள்ள நாகராஜன் பட்டணம்.

தனக்குரிய கணவனைத் தேடிக்கொண்டு அவ்விடம் வந்தாள். அவளது மூக்கும் பற்களும் கபோலமும் முகமும் அழகாயிருந்தன. அவள் நாண் மடம் அச்சம் முதலிய குணங்களெல்லாம் அமைந்தவள். அவளுடைய காதுகள் ஒன்றோடொன்று நிகர்த்து மிகவும் அழகாயிருந்தன. அக்காதுகளில் அழகான குண்டலங்களை அணிந்து அவற்றின் சேர்வையால் அவள் நிரம்பவும் திகழ்வுற்றிருந்தாள். அவள் பொன்னிறமான பட்டு வஸ்த்ரம் தரித்து அழகிய நிதம்பம் அமைந்து பொன்னரைநாண் பூண்டு தண்டைகளால் ஒலிக்கின்ற பாதங்களால் இங்குமங்கும் உலாவிக்கொண்டிருந்தாள். தேவ கன்னிகைபோல் யௌவனப் பருவத்தினிடையில் மாறுதிருக்கின்ற அப் பெண்மணி தன் பருவ நிலைமையை அறிவிப்பனவாகி ஒன்றோடொன்று ஸமமாகப் பருத்துருண்டு இடையில் இம்மியும் இடமின்றி இணைந்திருக்கின்ற தன் கொங்கைகளை ஆடையின் நுனியால் வெட்கித்தவள்போல் அடிக்கடி இழுத்து மூடிக்கொண்டு யானைப்பேடுபோல் மிகவும் அழகாக நடையாடினாள். வெட்கம் வழிகின்ற புன்னகையினால் திகழ்கின்ற அம்மாதரார்மணி ப்ரீதியால் சுழல்கின்ற புருவங்களோடுகூடி ஸ்நேஹம் நிறைந்த கண்ணோக்கமாகிற பாணத்தினால் அம்மன்னவனை ஸ்பர்சிக்க, அவனும் அவளைப் பார்த்து 'தாமரை யிதழ்போன்ற கண்களையுடையவளே! நீ யாவள்? யாருடையவள்? எங்கிருந்து வந்தனை? நல்லியற்கையுடையவளே! நீ இந்தப் பட்டணத்தின் அருகாமையில் என் செய்ய விரும்பி உலாவுகின்றனை? இதை எனக்குச் சொல்வாயாக. உன்னைத் தொடர்ந்து வருகிற இவ்வீரர்கள் பதினொருவரும் யாவர்? இவர்களில் ஒருவன் மஹா வீரனா யிருக்கின்றான். அழகிய புருவமுடையவளே! உன்னைத் தொடர்ந்திருக்கின்ற இப்பெண் மணிகள் யாவர்? உனக்கு முன்னே வருகின்ற இந்த ஸர்ப்பம் யாது? உன் கணவன் உனது பாதங்களில் விருப்பம் உண்டான மாத்ரத்தினால் தன் கருத்தெல்லாம் நிறைவேறப்

பெற்றதாக யான் நினைக்கின்றேன். அத்தகையனான உன் கணவன் இவ்வனத்தில் எங்கேனும் ஏகாந்தமாக முனிவன் போல் மறைந்திருக்கிறானோயென்ன? நீ, வராஹ பகவானைத் தேடும் பூமிதேவியோ? அல்லது, ருத்ரனைத் தேடும் பார்வதியோ? அல்லது, ப்ரஹ்மதேவனைத் தேடும் ஸரஸ்வதியோ, அல்லது, ஸ்ரீ மஹாவிஷ்ணுவைத் தேடும் மலர் மங்கையோ? ஆம். ஆயின், உன் கையினின்று தாமரை மலர் எங்கு நழுவிற்று? அழகிய துடைகளுடையவளே! நீ பூமங்கை முதலியவர்களில் ஒருத்தியுமல்லை. ஏனென்னில், நீ பூமியில் படிந்து நடக்கின்றனை. அவர்கள் பூமியைப் பாதங்களால் ஸ்பர்சிக்கமாட்டார்கள். நான் அற்புதச் செயலுடையவன், வீரர்களில் தலைவன். ஸ்ரீ மஹாலக்ஷ்மி விஷ்ணுவுடன் வைகுண்டலோகத்தை அலங்கரிப்பதுபோல் இப்படிப்பட்ட என்னுடன் நீ இப்பட்டணத்தை அலங்கரிப்பாயாக. அழகியவளே! மஹானுபாவனாகிய மன்மதன், வெட்கமும் ப்ரீதியும் புன்னகையும் சுழல்கின்ற புருவங்களும் அமைந்த உன்னால் தூண்டப்பட்டு, உன் கடைக்கண்ணோக்கத்தினால் கண்டிக்கப்பட்ட மனமுடைய என்னை மிகவும் வருத்துகிறான். என்மேல் அருள்புரிவாயாக. அழகிய புருவங்களும் கருவிழிகளும் அமைந்த கண்களுடையதும் தொங்குகின்ற கருத்த முன்னெற்றி மயிர்களால் சூழப்பட்டிருப்பதும் அழகான உரைகளை உரைப்பதும் பரிசுத்தமான புன்னகையுடையதுமாகிய உன் முகம் வெட்கத்தினால் என்னெதிரில் புலப்படாமல் அப்புறம் மாறுகின்றது. அதைத் திருப்பி எனக்குக் காட்டுவாயாக' என்று இனிதாக மொழிந்தான். இங்ஙனம் இந்த்ரியங்களை வெல்ல முடியாமல் வேண்டுகின்ற புரஞ்ஜனனைப் பார்த்து அப்பெண்மணியும் மதிமயங்கிப் புன்னகை செய்துகொண்டு அவ்வீரனைப் புகழ்ந்து 'புருஷ ஶ்ரேஷ்டனே! உன்னையும் என்னையும் படைத்து நாமத்தையும் கோத்ரத்தையும் ஏற்படுத்தின கர்த்தாவை நாங்கள் நன்றாக அறியோம். இப்பொழுது இந்தப் பட்டணத்தில் வாஸம்செய்கின்ற

உன்னை மாத்ரமே அறிகின்றோமன்றி நமக்கு வாஸஸ்தான மாகிய இந்தப் பட்டணத்தை நிர்மித்தவனும் நம்மைக் காட்டிலும் வேறுபட்டவனுமாகிய மற்றொருவனை அறியோம். வெகுமதி அளிக்குந்தன்மையனே! இப்புருஷர்கள் பதினொருவரும் என்னுடைய நண்பர்கள். இப் பெண்கள் என் தோழிகள். இந்த ஸர்ப்பம் நான் உறங்கும் பொழுது விழித்துக்கொண்டிருந்து பட்டணத்தைப் பாது காக்கும். மற்றதெல்லாம் அப்படி இருக்கட்டும். நீ தெய்வா தீனமாய் இப்பட்டணம் வந்து சேர்ந்தனை. உனக்கு க்ஷேமம் உண்டாகுக. இந்த்ரியங்களுக்குரிய சப்தாதி விஷயங்களை இனியதேஷ்டமாக அனுபவிப்பாய். சத்ருக்களை அழிப்பவனே! நான் என் பந்துக்களைக்கொண்டு உனக்கு அந்தச் சப்தாதி போகங்களை அமைத்துக் கொடுக்கின்றேன். ப்ரபூ! ஒன்பது வாசல்களையுடைய இப்பட்டணத்தில் நீ நூறாண்டுகள் வரையிலும் நான் ஸம்பாதித்துக் கொடுக்கிற காமபோகங்களை அனுபவித்துக்கொண்டு ஸுகமாயிருப்பாயாக. ஸுரத ஸுகத்தை அறியாதவனும் ஸம்ஸாரத்தில் வெறுப்புற்று ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் வல்லமையற்றவனும் ம்ருத்யுவையும் ப்ரியமான அதிதிபோல் எதிர் பார்க்கின்றவனும் காலாந்தரத்தில் விளையக்கூடிய ஸ்வர்க்காதி ஸுகத்தை நெஞ்சிலும் நினையாதவனும் கேவலம் பசுவைப்போல் ஒன்றுமறியாதவனுமாகிய மற்றொருவனை நான் எங்ஙனம் களிக்கச்செய்ய வல்லவளாவேன்? இந்த ப்ரவ்ருத்திமார்க்கத்தில் ஸ்வர்க்காதிலோகங்களை விளைக்க வல்ல யாகாதிரூப தர்மமும் அர்த்த காமங்களும் ஸந்தான ஸௌக்யமும் அழிவில்லாத புகழும் மோக்ஷமும் சோகத் திற்கிடமின்றி நிவ்ருத்திமார்க்க நிஷ்டர்களால் அறியப் படாத நிர்மலமான புண்யலோகங்களும் ஸித்திக்கின்றன. இந்த ஸம்ஸாரத்தில் புகழ்பெற்றதான க்ருஹஸ்தாஸ்ரமம் பித்ருக்களுக்கும் தேவதைகளுக்கும் ரிஷிகளுக்கும் மனுஷ்யர்களுக்கும் மற்றுமுள்ள ப்ராணிகளுக்கும் தனக்கும் க்ஷேமத்தை விளைவிக்குமிடமென்று சொல்லுகிறார்கள்.

புகழும் தானசீலமும் ப்ரீதிக்கிடமான காட்சியும் அமைந்த உன்னைப்போன்ற அன்புள்ள கணவன் தெய்வாதீனமாய் அகப்படின், என்னைப்போன்ற பெண்மணி எவள்தான் மேல்விழுந்து வரிக்கமாட்டாள்? நீண்ட புஜமுடையவனே! ஸர்ப்பத்தினுடல்போன்ற உனது புஜங்களில் எவளுடைய மனந்தான் தாழாது. நீ தயையினாலெழும் புன்னகை யமைந்த கண்ணோக்கத்தினால் அநாதவர்க்கங்களின் மன வருத்தங்களைப் போக்க விரும்பி உலாவுகின்றனை' என்றாள். இங்ஙனம் புரஞ்ஜனனும் புரஞ்ஜனியுமாகிய அந்தத் தம்பதிகள் இருவரும் ஒருவர்க்கொருவர் ஸங்கேதம் பண்ணிக் கொண்டு அப்பட்டணத்திற்குள் நுழைந்து நூறாண்டுகள் வரையிலும் மனக்களிப்புற்றிருந்தார்கள் அம்மன்னவன் பாடகர்களால் இனிதாகப் பாடப்பெற்று ஸ்த்ரீகளுடன் ஆங்காங்கு விளையாடிக்கொண்டிருந்து ஆடி மாதத்தில் ஜலக்ரீடைக்காகத் தாமரையோடையில் இழிந்தான். அப் பட்டணத்தரசன் வெளித்தேசங்களுக்குத் தனித்தனியே ஸுகமாய்ப் போகும்படி அந்தப் பட்டணத்திற்கு மேல் பாகத்தில் ஏழு த்வாரங்களும் கீழ்ப்பாகத்தில் இரண்டு த்வாரங்களும் ஏற்பட்டிருந்தன. அவ்வொன்பது த்வாரங் களில் ஐந்து கிழக்கு முகமாகவும் ஒன்று தெற்கு முக மாகவும், மற்றொன்று வடக்கு முகமாகவும், மற்ற இரண்டு த்வாரங்கள் மேற்கு முகமாவும் இருந்தன அவற்றின் பேர் களைச் சொல்லுகிறேன், கேள். கிழக்கு த்வாரங்களில் கத்யோதை யென்றும் ஆவிர்முகி யென்றும் இரண்டு த்வாரங் கள் ஓரிடத்தில் ஏற்பட்டிருந்தன. புரஞ்ஜன மன்னவன் த்யுமானென்னும் நண்பனுடன் அவ்விரண்டு த்வாரங்க ளாலும் பட்டணத்தினின்று புறப்பட்டு விப்ராஜித மென்னும் தேசத்திற்குப் போவான். நளினியென்றும் நாளினியென்றும் மற்ற இரண்டு த்வாரங்கள் ஓரிடத்தில் விளங்கின. அம்மன்னவன் அவதூதனென்னும் நண்ப னுடன் அந்த த்வாரங்களால் புறப்பட்டு ஸௌரபு மென்னும் தேசத்திற்குப் போவான். மற்றொன்று முக்யை

யென்னும் பேருடையது. அவ்வரசன் ரஸஜ்ஞனென்றும் விபணனென்றும் இரண்டு நண்பர்களோடு அந்த த்வாரத்தினால் புறப்பட்டுப் பணமென்றும் பஹுதனமென்றும் வழங்கிவருந் தேசங்களுக்குப் போவான். அப்பட்டணத்தின் தெற்கு வாசற்படி பித்ருஹூவென்றும் வடக்கு வாசற்படி தேவஹூ வென்றும் வழங்கும். அம்மன்னவன் ஸ்ருததரனென்னும் நண்பனுடன் பித்ருஹூவென்னும் தெற்கு வாசல்வழியாய்த் தக்ஷிண பாஞ்சால தேசத்திற்கும், தேவஹூ வென்னும் வடக்கு வாசல் வழியாய் உத்தர பாஞ்சால தேசத்திற்கும் போவான். மேற்கு வாசல்களில் ஒன்று ஆஸுரியென்றும் மற்றொன்று நிருதியென்றும் வழங்கி வரும். அம்மன்னவன் துர்மனென்னும் நண்பனுடன் ஆஸுரி யென்னும் வாசலால் க்ராம்யகமென்னும் தேசத்திற்குப் போவான். லுப்தகனென்னும் நண்பனுடன் நிருதி யென்னும் வாசலால் புறப்பட்டு வைசஸமென்னும் தேசத்திற்குப் போவான் இப்பட்டணத்திற்கு இந்த த்வாரங்கள் தவிரப் பாணியென்றும் பாதமென்றும் மற்றும் இரண்டு த்வாரங்கள் உண்டு. இவை, கூடுகட்டி அதன் வாயையும் மூடி அதற்குள் அகப்பட்டுக்கொண்டு வருந்தும் புழுக்களைப்போல் ஒன்றும் தெரியாதவை; சக்தியில்லாதவை. அப்புரஞ்ஜனன் அவ்விரண்டில் பாதமென்னும் வாசல்வழியால் போவது வருவதாயிருப்பான். பாணியென்கிற மற்றொருவாசல் வழியாய்ச் சென்று செயல்களைச் செய்வான். அம்மன்னவன் விஷூசீனனென்னும் நண்பனுடன் கூடி அந்தப்புரத்திற்குள் சென்று, பெண்டிர் பிள்ளை பெண் முதலியவர்களின் ஸம்பந்தத்தினால் உண்டாகும் மோஹத்தையும் தெளிவையும் ஸந்தோஷத்தையும் பெறுவான். அப்புரஞ்ஜனன் உண்மை அறியாமல் காமத்தில் மனம் சென்று அதை நிறைவேற்றிக் கொடுப்பவைகளான செயல்களில் கால்தாழ்ந்ததுபற்றித் தெய்வத்தினால் வஞ்சிக்கப்பட்டுத் தன் பார்யை விரும்புமவற்றையே அநுஸரித்திருந்தான். அவள் மத்யபானம் செய்கையில் தானும்

ம்தபாவசனுய் அவளோடு மத்யபானம் செய்வதும், அவள் போஜனம் செய்கையில் புஜிப்பதும், பக்ஷணங்களைப் பக்ஷிக்கையில் தானும் அவற்றைப் பக்ஷிப்பதும், அவள் பாட்டுப் பாடுகையில் தானும் அவளுடன் பாடுவதும், அவள் அழுகையில் அவளோடுகூடத் தானும் அழுவதும், அவள் சிரிக்கையில் சிரிப்பதும், பேசுகையில் பேசுவதும், அவள் ஓடிப் போகையில் அவளைப் பிரிந்திருக்கமுடியாமல் அவளைத் தொடர்ந்தோடுவதும், நிற்கையில் நிற்பதும், படுக்கையில் படுப்பதும், உட்காருகையில் உட்காருவதும், (ஏதேனுமொன்றைச் செவிகொடுத்துக் கேட்பதும், பார்க்கையில் பார்ப்பதும், முகருகையில் முகருவதும், தொடுகையில் தொடுவதும்,) வருந்துகையில் வருந்துவதும், ஸந்தோஷிக்கையில் ஸந்தோஷிப்பதும், ஆநந்திக்கையில் ஆநந்திப்பதுமாகிய தொழில்களைச் செய்து தனக்கு இயற்கையில் ஏற்பட்டிருந்த சாந்தி முதலிய குணங்களெல்லாம் மறைந்து, விளையாட்டிற்காக வளர்க்கப்பட்ட ம்ருகம்போல் ஒன்றுமறியாமல் தனக்கு இஷ்டம் இல்லாதிருப்பினும் மன உறுதியின்றி அவளாடின ஆட்டங்களுக்கெல்லாம் உட்பட்டு அவளையே பின்றொடர்ந்திருந்தான். இருபத்துநான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

## புரஞ்ஜனன் வேட்டையாடப் போதல்.

நாரதர் சொல்லுகிறார்:—மஹாவீரனுகிய அப்புரஞ்ஜனன் ஒருகால் வேட்டையாட விரும்பி ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு பஞ்சப்ரஸ்த மென்னும் வனத்திற்குப் போனுன். அந்த ரதம் மிக்க வேகத்துடன் போகுந் தன்மையது. அதற்கு ஐந்து குதிரைகளும், இரண்டு தண்டுகளும், இரண்டு சக்ரங்களும், ஓரிருசும், மூன்று மூங்கில்களும், ஐந்து கட்டுக்களும், ஒரு கயிறும், ஒரு ஸாரதியும், ரதிகன் உட்காரும்படியான ஓரிடமும், இரண்டு ஏர்க்கால்களும், ஐந்து ஆயுதங்களும், ஏழு மூடல்களும், ஐந்து நடை

களும், ஸ்வர்ணமயமான பலவகை அலங்காரங்களும் ஏற்பட்டிருந்தன. அப்புரஞ்ஜனன் ஸ்வர்ணமயமான கவசம் பூண்டு பாணங்கள் அழியாதிருக்கப்பெற்ற அம்பறாத்தூணிகளையும் எடுத்துக்கொண்டு அந்த ரதத்தின்மேல் ஏறிப் பதினொரு ஸேனைகளுடன் வனத்திற்குப் போனான். கொழுப்புடைய அம்மன்னவன் தனுஸ்ஸையும் பாணத்தையும் கொண்டு தன்னைவிட்டுப் பிரிந்திருக்கப்பொறாத பார்யையையும் துறந்து பெரிய விருப்பத்துடன் வனத்திற்குச் சென்று வேட்டையாடினான். அம்மன்னவன் தாமஸ ஸ்வபாவத்தை ஏற்றுக்கொண்டு கொடும் புத்தியனாகிச் சிறிதும் மன இரக்கமின்றிக் காடு காடாகச் சென்று ஆங்காங்குள்ள ம்ருகங்களைக் கூரான பாணங்களால் அடித்தான். மன்னவனே! ராஜாக்களுக்கு வேட்டையாடுவது யுக்தமேயாகையால், அதில் விரோதமேனென்று நினைக்கவேண்டாம். சாஸ்த்ரங்கள் வேட்டையாடவேண்டுமென்று விதிக்கவில்லை. ஒருவன் விருப்பமுற்று நினைத்தபடி வேட்டையாடுவானாயின், அது கூடாதென்றும், ப்ரஸித்தமான ஶ்ராத்தம் முதலிய காரணங்களைப்பற்றியே வேட்டையாடலாமென்றும் மன்னவனே வேட்டையாடலாமென்றும், பரிசுத்தமான, ம்ருகங்களையே வதிக்கலாமென்றும் எவ்வளவு உபயோகப்படுமோ அவ்வளவே வதிக்கலாமென்றும் சாஸ்த்ரங்களில் நியதி ஏற்பட்டிருக்கின்றது. அதைக் கடந்து இரக்கமின்றி மனம் போனபடி வேட்டையாடுவானாயின், அது மன்னவனுக்குத் தோஷத்தையே விளைவிப்பதாம். இங்ஙனம் சாஸ்த்ரத்தின் கருத்தை அறிந்து அதற்கு விரோதமில்லாமல் நடப்பினும், அல்லது, இதை அவஶ்யம் செய்தேயாகவேண்டுமென்று ஶாஸ்த்ரம் விதிக்காமையால் இது நமக்கு வேண்டியதில்லையென்று அதினின்று மீண்டு திரும்பினும், அவன் அச்செயலின் பாபத்தினாலும் அந்த ஜ்ஞானத்தினாலும் தீண்டப்படமாட்டான். அப்படியின்றி இதைச் செய்தே ஆகவேண்டுமென்ற பிடிவாதத்துடன்

மனம்போனபடி கார்யங்களைச் செய்பவன் புண்ய பாபங்களால் கட்டுண்டு மேன்மேலும் ஸம்ஸாரத்தில் ஆழ்ந்து அறிவழிந்து நரகத்தில் விழுவான். (ஆகையால் அம்மன்னவன் கொடுமதியனாகி மனம் போனபடி வேட்டையாடினது குற்றமே). அவ்வனத்தில், பலவகை இறகுகள் கட்டப் பெற்ற வேகமுடைய அம்மன்னவனது பாணங்களால் தேஹமெல்லாம் பிளவுண்டு வருந்துகின்ற ம்ருகங்களின் அழிவு மன இரக்க முடையோர்க்குப் பொறுக்கமுடியாதிருந்தது. அம்மன்னவன், முயல்களையும் பன்றிகளையும் கடாக்களையும் கவய ம்ருகங்களையும் கறுப்புச்சாயலையுடைய கலைமான்களையும் முள்ளம்பன்றிகளையும், பரிசுத்தங்களும் அல்லாதவைகளுமான மற்றும் பல ம்ருகங்களையும் அடித்து இளைப்புற்றான். அப்பால் அம்மன்னவன் பசிதாஹங்களால் வருந்தி வேட்டையினின்று திரும்பி வீட்டிற்கு வந்து ஸ்நானம்செய்து வேளைக்குரிய ஆஹாரம் செய்து ஶ்ரமம் தீர்ந்து உட்கார்ந்தான். பிறகு தூபத்தினாலும் சந்தனம் முதலிய பூச்சுக்களாலும் பூமாலை முதலியவைகளாலும் தன்னை மேன்மைப் படுத்திக்கொண்டு ஸமஸ்த அங்கங்களிலும் ஆபரணங்களை நன்றாக அணிந்து பார்யையிடத்தில் மனம் செல்லப்பெற்றான். ஆஹாரத்தினால் த்ருப்தி அடைந்து சந்தன புஷ்பாதிகளால் ஸந்தோஷமுற்று மதித்து மன்மதனால் இழுக்கப்பட்ட மனமுடையவனாகிய அம்மன்னவன் தன் பார்யையைக் காணாமல் மனவருத்தமுற்று அந்தப்புரத்திலுள்ள பெண்களை நோக்கி 'பெண் மணிகளே! நீங்களும் உங்கள் தோழியும் க்ஷேமமேயல்லவா? வீட்டில் ஸம்பத்துக்களெல்லாம் முன்போல் விளங்கவில்லையே. இதற்கென்ன காரணம்? தாயாவது பதிவ்ரதையான மனைவியாவது இல்லாது போவாளாயின், சக்ரமும் குதிரையுமில்லாத தேர்போன்ற உபயோகமற்ற வீட்டில் அறிவுடையவன் எவன்தான் தீனன்போல் வாஸம் செய்வான். அம்மாதரசி எங்கே இருக்கின்றாள்? அவள் மிகுந்த அறிவுடையவளல்லவா? நான் மனவருத்தமாகிற ஸமுத்

ரத்தில் மூழ்கிக்கிடக்கும் பொழுதெல்லாம் எனக்கு நன்மை தீமைகளை எடுத்துரைத்து அடிக்கடி என்னைத் தேற்றிக் கொண்டிருப்பாளல்லவா? அவள் எங்கே?' என்று வினவினான். அதைக் கேட்ட பெண்களும் அம்மன்னவனைப் பார்த்து 'உனது அன்புள்ள நாயகி என்கினைத்திருக்கிறாளோ? தெரியாது. சத்ருக்களை அழிப்பவனே! அவள் வெறுந்தரையில் இதோ படுத்திருக்கிறாள், காண்' என்றார்கள். புரஞ்ஜனனும் வெறுந்தரையில் விழுந்திருக்கின்ற தன் காதலியைக் கண்டு ப்ரீதியினால் மதி கலங்கி மிகவும் தழுதழுப்புற்று மனவருத்தத்துடன் நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்த முயன்று, அவள் தன்மேல் கோபித்துக் கொண்டதற்குக் காரணம் தெரியாதிருந்தான். ஸமாதானப்படுத்த வல்லவனாகிய அம்மன்னவன் அவளைத் தெளிவிக்கத்தொடங்கி அவளுடைய பாதங்களை ஸ்பர்சித்து அவளை எடுத்து மடியில் உட்கார வைத்துக்கொண்டு தடவிக்கொடுத்து 'மங்கல ஸ்வபாவமுடையவளே! வேலைக் காரர்கள் அபராதம் செய்யும் ப்ரபுக்களால் நம்முடையவரென்று அபிமானித்து, தண்டனை விதிக்கப்பெறுவார்களாயின், அவர்கள் மந்தபாக்யர்களே. ப்ரபுக்கள் வேலைக் காரர்களுக்கு தண்டனை விதிப்பார்களாயின், அதுவே அவர்க்கு அவர் செய்யும் பேரருளாம். நன்மனமுடைய ப்ரபுக்கள் விதிக்குந் தண்டனையை அனுக்ரஹமென்று நினையாமல் அதைப் பொறுது கோபிப்பவன் மூர்க்கனேயாவான். அழகிய பற்களும் ஆழ்ந்த மனமுடையவளே! எனக்கு நீயே ப்ரபு. ப்ரீதியின் பெருக்கும் வெட்கமும் நிறைந்து அழகான புருவங்களும் புன்னகை அமைந்த கண்ணோக்கமும் கறுத்த முன்னெற்றி மயிர்களும் உயர்ந்த மூக்கும் இனிய உரைகளும் உடைய உன் முகத்தை எனக்குக் காட்டுவாயாக. வீரமுடைய என் அருமைக் காதலி! உனக்கு அபராதம் செய்தவனைச் சொல்வாயாக. அவனை நான் தண்டிக்கிறேன், ஆனால் அவன் ப்ராஹ்மண குலத்திற் சேர்ந்திருந்தாலும், ஸ்ரீ மஹாவிஷ்ணுவின்

தாஸனாயிருந்தாலும் நான் தண்டிக்கமாட்டேன். நான் கோபமுறுவேனாயின், இம்மூன்று லோகங்களிலாவது இவற்றிற்கு வெளியிலாவது பயமின்றி மனக்களிப்புற்றிருப்பவன் எவன்? அப்படிப்பட்டவன் எவ்னும் எனக்குத் தெரியவில்லை. உன் முகம் திலகமில்லாதிருக்க நான் ஒரு நாளும் கண்டதில்லை. இப்பொழுது அழுக்கடைந்து ஸந்தோஷமின்றிக் கோபத்தினால் கலங்கி விளக்கமற்று அனுராகமும் அழிந்து பார்க்க வழங்காதிருக்கின்றது. அழகான உன் கொங்கைகளும் அங்ஙனமே சோகக் கண்ணீர்களால் அடிபட்டிருக்கின்றன. கோவைப்பழம் போன்ற உன் அதரமும் குங்குமக் குழம்புபோன்ற தாம்பூலராகமில்லா திருக்கின்றது. நான் அபராதம் செய்திருப்பினும் உனது நண்பனாகையால் என்மேல் அருள்புரிவாயாக. நீ என்ன அபராதம் செய்தாயென்னில், சொல்லுகிறேன், கேள். நான் உன்னைக் கேளாமலே வேட்டையாட வனம் போனேனல்லவா? இதுவே நான் செய்த அபராதம். வேட்டையிலுள்ள விருப்பம் என்னை மெய்ம்மறக்கச் செய்து இழுத்துக்கொண்டு போய்விட்டது. காமவேகத்தினால் தைர்யமற்றுச் சொன்னபடி செய்கின்ற காதலனை எவள்தான் ப்ரீதியுடன் தொடாமாட்டாள்? இதுவல்லவா பெண்டிர்களுக்கு அவஶ்யமாய்ச் செய்யவேண்டிய கார்யம்? ஆகையால் நீ கோபத்தைத் துறந்து என்மீது அருள் புரிவாயாக. இருபத்தைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

## புரஞ்ஜனன் கோபம் தெளிந்த பார்வையுடன் கலந்திருத்தல்.

நாரதர் சொல்லுகிறார்:—மஹாராஜனே! புரஞ்ஜனி இங்ஙனம் தன் விலாஸங்களால் புரஞ்ஜனனை மதிமயக்கி வசப்படுத்திக்கொண்டு மனக்களிப்புற்றிருந்தாள். அம் மன்னவன், கோபம் தெளிந்தெழுந்து ஸ்நானம் செய்து அழகிய ஆடை உடுத்துக் குங்குமம் முதலிய மங்கலாங்

காரம் செய்து அன்னபானாதிகளால் த்ருப்தி அடைந்து அருகே வந்த காதலியைப் புகழ்ந்தான். அவன் அப் பெண்மணியால் அணைக்கப்பட்டுத் தானும் அவளைக் கண்டத்தில் அணைத்து ஏகாந்தத்தில் ரஹஸ்ய வார்த்தைகளால் மதிமயங்கி அவளுடன் கூடி இரவு பகல் தெரியாமல் காலவேகத்தைச் சிறிதும் அறியாதிருந்தான். யௌவனக் கொழுப்புடைய அம்மன்னவன் பெரிய மனக்களிப்புடன் சிறப்புடைய கட்டில்மேல் காதலியின் புஜத்தையே தலையணையாகக் கொண்டு சயனித்துக் காமபோகத்தில் ஆழ்ந்து அஜ்ஞானத்தினால் விவேகமற்று அப்பெண்மணி யொருத்தியை மாத்ரம் நினைத்திருந்தானேயன்றித் தன் ஸ்வரூபத்தையாவது தனக்கு அந்தராத்மாவான பரமாத்மாவின் ஸ்வரூபத்தையாவது நினைக்கவேயில்லை. அவன் அப்பெண்மணியுடன் இங்ஙனம் காமக்கலவியிலாழ்ந் திருக்கையில், அவனுடைய யௌவனப் பருவம் அரைக்ஷணம்போல் கடந்தது. அப்புரஞ்ஜனன் தன் பார்யையான புரஞ்ஜனியிடத்தில் நூற்றுப் பதினொரு பிள்ளைகளைப் பெற்றான். அப்பொழுது அவனுடைய வாழ்நாளில் பாதி கழிந்தது. அம்மன்னவனுக்கு, சீலம் ஔதார்யம் முதலிய குணங்கள் அமைந்து தாய் தந்தைகளுக்குப் புகழை விளக்கவல்ல நூற்றுப்பத்துப் பெண்களும் பிறந்தார்கள். பாஞ்சால தேசாதிபதியாகிய, அப்புரஞ்ஜனன் தாய்தந்தைகளின் வம்சத்திற்கு மேன்மையை விளக்கவல்ல பிள்ளைகளை அவர்களுக்குத் தகுந்த மனைவிகளோடும், பெண்களை அவர்க்குத் தகுந்த மணவாளர்களோடும் சேர்த்தான். அவனுடைய பிள்ளைகளில் ஒவ்வொருவனுக்கும் நூறு நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களால் அப்பாஞ்சால தேசம் முழுவதும் புரஞ்ஜன வம்சமாய் நிரம்பிற்று. அப்புதல்வர்கள் புரஞ்ஜனனுடைய பௌரந்தையெல்லாம் பங்கிட்டுக்கொள்கையில், க்ருஹத்திலும் பொக்கிஷத்திலும் ப்ருத்யர்களிடத்திலும் என்னுடையதென்ற பெரிய அபிமானமுடையவனாகையால்,

மிகவும் மனக்கலக்கமுற்று ஒன்று மறியாதிருந்தான். அவன் மீளவும் பலவகையான சப்தாதி விஷயங்களில் விருப்பமுற்று தீக்ஷித்துக்கொண்டு, பசுக்களின் ஹிம்ஸைக் கிடமாய் பயங்கரங்களுமான பலவகை யாகங்களால் தேவதைகளையும் பித்ருக்களையும் பைரவன் முதலிய பூதபதிகளையும் உன்னைப்போல் ஆராதித்தான். குடும்பத்தில் மிக்க மனவிருப்பமுடைய அம்மன்னவன் இங்ஙனம் பெரிய ஆவலுடன் யாகாதிகர்மங்களை நடத்திக்கொண்டிருக்கையில், காதலர்க்கும் காதலிக்கும் இனியதல்லாத மூப்பின் க்காலம் வந்தது. மன்னவனே! சண்டவேகனென்று ஓர் கந்தர்வ ராஜன் உண்டு. அவனுக்கு ப்ருத்யர்களான மூந்நூற்றறுபது கந்தர்வர்கள் உண்டு. அவர்களெல்லாரும் மஹா பலசாலிகள். அங்ஙனமே அவனுக்குத் தாஸிகளான மூந்நூற்றறுபது கந்தர்வ கன்னிகைகளும் உண்டு. அவர்கள் அக்கந்தர்வர்களோடு இணைபிரியாதிருப்பவர்கள். அவர்களில் சிலர் வெளுத்தும் சிலர் கருத்தும் இருப்பார்கள். அவர்கள் பூமியில் சுற்றிக்கொண்டே ஆங்காங்கு ஸமஸ்த காமங்களும் நிறைந்த பட்டணங்களைப் பறித்துக்கொண்டு வருவது வழக்கம். சண்டவேகனுடைய வேலைக்காரரான அக்கந்தர்வர்கள் க்ரமமாக வந்து புரஞ்ஜனனுடைய பட்டணத்தைப் பறிக்கத் தொடங்குகையில், அதைக் காத்துக் கொண்டிருந்த பலிஷ்டனான ப்ரஜாகரனென்பவன் ஒருவனே இருபத்தேழு பாணங்களால் நூறு வர்ஷங்கள் வரையில் அந்தக் கந்தர்வர்களோடு யுத்தம் செய்தான். தன் பட்டணத்தைப் பாதுகாக்குந் தனியனான ப்ரஜாகரன் பலிஷ்டரும் பலருமான கந்தர்வர்களோடு நெடுநாள் சண்டை செய்தும் அவர்களை வெல்லமுடியாமல் அவர்களால் அடியுண்டு ஓய்கையில், புரஞ்ஜனன் நகரமும் தானும் தன் பந்துக்களுமாகப் பெரிய இக்கட்டில் ஆழ்ந்தான். அம்மன்னவன் பெண்வலையில் பிடியுண்டு அந்தகாரத்தில் மதுபானம் செய்வதும் தன் ப்ருத்யர்களால் பாஞ்சால தேசத்தினின்று கொண்டுவரப்பட்ட கப்பத்தை வாங்கிப் புசிப்பதுமா

யிருந்தானேயன்றி அதுவரையில் ஒரு பயத்தையும் அறிந்தவனல்லன். காலனுக்கு ஒரு புதல்வி உண்டு. அவள் தனக்கு மணவாளனை விரும்பி மூன்று லோகங்களும் திரிந்தாள். அவளை ஒருவனும் அபேக்ஷிக்கவில்லை. அவள் அழகுக்கிடமல்லாத உருவமுடையவளாகையால் உலக மெங்கும் துர்ப்பகையென்று பேர்பெற்றாள். அவள் முன்பு பூருவென்னும் ராஜரிஷியால் அங்கீகரிக்கப்பட்டு ஸந்தோஷம் அடைந்து அவனுக்கு வரங்கொடுத்தாள். ஒருகால், ஸத்யலோகத்தினின்று பூலோகத்திற்கு வருகின்ற என்னைப் பார்த்து, நான் நைஷ்டிகனென்பதை அறிந்தும் காம விகாரத்தினால் மதிமயங்கி என்னை வரித்தாள். நான் ஒப்புக்கொள்ளாதிருக்கையில், என்மேல் கோபங்கொண்டு 'என் வேண்டுகோளைத் தடுத்தாயாகையால் நீ ஓரிடத்தில் நிற்காமல் எப்பொழுதும் திரிந்துகொண்டே யிருப்பாயாக' என்று மிகவும் பொறுக்கமுடியாத பெரிய சாபத்தைக் கொடுத்தாள். அப்பால் தன் விருப்பம் நிறைவேறப்பெறாத அக்கால கன்னிகை 'பயனென்னும் பேருடைய யவனேஸ்வரன் ஒருவன் இருக்கிறான், அவனைப் போய் வரிப்பாயாக' என்று என்னால் மொழியப்பெற்று அவனிடம் சென்று 'வீரனே! யவனர்களுக்கு ப்ரபுவாகிய உன்னிடத்தில் அன்புற்று உன்னைக் கணவனாக வரிக்கின்றேன். உன்னிடத்தில் யாராவது எதையாவது விரும்புவார்களாயின், நீ அதை அப்படியே நிறைவேற்றிக்கொடுப்பவனல்லவா? ஆகையால் நீ என் விருப்பத்தை வீணாக்கலாகாது. உலகத்திலும் சாஸ்த்ரத்திலும் கொடுக்கவும் வாங்கவும் உரியதாக ஏற்பட்டிருக்கும் வஸ்துவை வேண்டினவர்க்குக் கொடாதிருக்கலாகாது. ஒருவன் கொடுக்கில் அதை மற்றவனும் வாங்காதிருக்கலாகாது. இப்படியிருக்க, இதைக் கடந்து கொடாதவனும் வாங்காதவனும் வீண் பிடிவாதமுடையவர்களே. மற்றும், இவர்கள் ஒன்றுமறியாத பாலர்களே. இவர்களைப்பற்றிப் பெரியோர்கள் சோகிக்கிறார்கள். மங்கல ஸ்வபாவமுடையவனே! நான் உன்னை விருப்பத்துடன்

பணிகின்றேன். என்னைக் கருணைகூர்ந்து அங்கீகரிப்பாயாக. வருந்தினவர்களை மன இரக்கத்துடன் பாதுகாக்கையே புருஷனாகப் பிறந்தவன் செய்யவேண்டிய தர்மம்' என்று மொழிந்து யவனேஶ்வரனைக் கணவனாக வரித்தாள். இங்ஙனம் காலகன்னிகை மொழிந்த வசனத்தைக் கேட்டு அந்த யவனேஶ்வரன் தேவகுஹ்யத்தை (தேவதைகளால் மறைக்கப்பட்டு வருகிற மரணத்தை) நடத்த விரும்பி அம்மடந்தையைப் பார்த்துப் புன்னகைசெய்து 'நான் மன ஊக்கத்துடன் நன்றாக ஆலோசித்து இவ்வுலகத்தையெல்லாம் உனக்குக் கணவனாக நிச்சயித்தேன். நீ அமங்கல ஸ்வபாவமும் துஷ்டத்தனமும் அமைந்தவளாகையால் உன்னை இவ்வுலகம் அங்கீகரிக்கமாட்டேனென்கிறது. ஆகையால் உன் கதி ஒருவர்க்கும் தெரியாதபடி மறைந்து வந்து கர்மத்திற்குட்பட்டதாகிய இவ்வுலகத்தை யெல்லாம் நீ அனுபவிப்பாயாக. நான் மேல் விழுந்து அனுபவித்தால் அவர்கள் என்னை ஹிம்ஸிக்கில் என் செய்வேனென்று நீ வருந்த வேண்டாம். என்னிடத்திலுள்ள யவனர்களின் ஸைன்யத்தைக் கூட்டிக்கொண்டு போவாயாயின், நீ அந்த ப்ரஜைகளை நாசஞ் செய்வாய். இவன் ப்ரஜ்வாரனென்பவன்; எனது உடன்பிறந்தவன். நீ எனக்கு உடன் பிறந்தவளாவாயாக. நான் உங்களிருவரோடும் பயங்கரமான யவன ஸைன்யங்களோடுங்கூடி ஒருவர்க்கும் தெரியாமல் இவ்வுலகத்தில் ஸஞ்சரிக்கின்றேன். இருபத்தாறுவது அத்யாயம் முற்றிற்று.

---

## புரஞ்ஜனன் கால கன்னிகையால் பிடியுண்டு வருந்துதல்.

நாரதர் சொல்லுகிறார்:—பர்ஹிஷதனே! பயனென்கிற அந்த யவனேஶ்வரனுடைய ஸைன்யமான யவனர்கள் அனைவரும் அவனது ஆஞ்ஞையின்படி நடப்பவர்களாகையால் ப்ரஜ்வாரனோடும் கால கன்னிகையோடுங் கூடி இப்புவனி முழுவதும் திரிந்தார்கள். மன்னவனே! அவர்கள்

ஒருக்கால் கிழப்பாம்பினால் காக்கப்பட்டுப் பூமியிலுள்ள போகங்களெல்லாம் நிறைந்த புரஞ்ஜன பட்டணத்தைத் தகைந்தார்கள். புருஷர்களைத் தீண்டினமாத்ரத்தில் நிஸ்ஸாரமாக்கும் திறமையுடைய காலகன்னிகையும் புரஞ்ஜனனுடைய பட்டணத்தைப் பலாத்காரமாகக் கைப்பற்றி அனுபவித்தாள். அப்பொழுது யவனர்கள் அப்பட்டணத்து வாசல்களின் வழியாக அதற்குள் நாற்புறத்திலும் நுழைந்து அப்பட்டணம் முழுவதையும் பாழ்செய்யத் தொடங்கினார்கள். குடும்பத்தில் மனக்கவலையுற்ற அப்புரஞ்ஜனன் தன் பட்டணம் யவனர்களால் பிடிக்கப்படுவது கண்டு அதில் மிகுந்த அபிமானமுடையவனாகையால் பலவகை வருத்தங்களைப் பெற்றான். காலகன்னிகையால் பிடியுண்டு சப்தாதி விஷயங்களில் மனம் மாறப்பெறாமல் விவேகமற்றுச் சோபை அழிந்து கந்தர்வர்களாலும் யவனர்களாலும் பலாத்காரமாகத் தனது ஐஶ்வர்யமெல்லாம் பறிக்கப்பெற்று மன இரக்கத்திற்கிடமான அப்புரஞ்ஜனன், தன் பட்டணம் சத்ருக்களால் பாழாயிருப்பதையும், பிள்ளைகளும் பேரன்களும் வேலைக்காரர்களும் மந்த்ரிகளும் தனக்கு ப்ரதிகூலராயிருப்பதையும், பார்யை ஸ்நேஹம் மாறியிருப்பதையும், தான் காலகன்னிகையால் பிடியுண்டிருப்பதையும், தன் பாஞ்சால தேசம் முழுவதும் சத்ருக்களால் தூஷிக்கப்பட்டிருப்பதையும் கண்டு முடிவில்லாத சிந்தையில் மூழ்கி அதற்குப் பரிஹாரம் இன்னதென்று தெரியாதிருந்தான். இங்ஙனம் மனக்களிப்பற்ற அப்புரஞ்ஜனன் காம போகங்களெல்லாம் காலகன்னிகையின் தீண்டலால் நிஸ்ஸாரமாயிருப்பினும் அவற்றில் விருப்பமுற்று ஆத்மகதியில் விருப்பின்றிப் பெண்டிர்களையும் புதல்வர்களையும் சீராட்டிக் கொண்டிருந்தான். கந்தர்வர்களும் யவனர்களும் காலகன்னிகையும் சேர்ந்து தன் பட்டணத்தை அடியோடு பாழ்செய்வதைக் கண்டு அம்மன்னவன் மனம் இல்லாதிருப்பினும் வேறு கதியில்லாமையால் அதை விட்டுப் போகத்தொடங்கினான். பயனென்னும் யவனேஶ்வரனுக்கு

மூத்தவனாகிய ப்ரஜ்வாரன் தன் ப்ராதாவுக்கு ப்ரியம் செய்ய விரும்பி அவ்விடம் வந்து அப்பட்டணம் முழுவதையும் கொளுத்திவிட்டான். அப்பொழுது புரஞ்ஜன மன்னவன் பட்டணத்து ஜனங்களோடும் மற்ற பரிவாரங்களோடும் பார்யையோடும் பிள்ளை பேரன் முதலிய குடும்பத்தோடும் பரிதபித்தான். பட்டணத்தைப் பாதுகாக்கும் ப்ரஜாகரன் பட்டணம் காலகன்னிகையால் கைகொள்ளப்பட்டு இடங்களெல்லாம் யவனர்களால் பறியுண்டிருக்கையில் தானும் ப்ரஜ்வாரனால் தீண்டப்பட்டு வருந்தினான். அவ்வருத்தத்தினால் நடுக்கமுற்று அங்கு நிலைகொள்ளமுடியாமல், நெருப்புப் பற்றியெரிகிற மரத்தின் பொந்தினின்று ஸர்ப்பம் கிளம்பிப்போவதுபோல், அதினின்று வெளிப்பட விரும்பினான். கந்தர்வர்கள் பௌருஷத்தைப் பறித்து, பலமுள்ள யவனர்கள் பட்டணத்தைத் தகைந்து நிற்கையில் அங்கங்களெல்லாம் தளர்ந்து ஒன்றும் செய்யமுடியாமல் ஐயோவென்று கதறினான். குமதியாகிய அம்மன்னவன், தனது பெண் பிள்ளை பேரன் மருகியர் மணவாளர் பரிஜனம் மனைவி இவர்களையும், தனக்கு உபயோகப்படாமல் தன்னுடையதென்ற அபிமானத்திற்கு மாத்ரமே இடமான வீடு வாசல் கருவூலம் கருவி முதலியவற்றையும் நானென்றும் என்னுடையதென்றும் அங்கீகரித்து இவற்றைத் துறக்க நேர்ந்ததேயென்று பெருஞ் சிந்தையில் ஆழ்ந்தான். 'நான் லோகாந்தரம் போகையில், நாதனற்ற இவள் தனியளாகிக் குழந்தைகளைப்பற்றி வருந்தி எங்ஙனம் இருப்பாள்? இவள் என்னிடத்தில் மிக்க அன்புடையவள். நான் சாப்பிடாவிடின் சாப்பிடமாட்டாள்; நான் ஸ்நானம் செய்யாவிடின் ஸ்நானம் செய்யமாட்டாள். நான் கோபங்கொள்ளில் பயப்படுவாள். நான் விரட்டுகையில் பயந்து மௌனமாயிருப்பாள். நான் அறிவற்று வருந்துங் காலத்தில் புத்திசொல்லித் தேற்றுவாள். நான் தேசாந்தரம் போகையில் சோகித்திளைத்திருப்பாள். நான் போனபின்பு வீரர்களைப் பெற்ற இவள் க்ருஹஸ்த தர்மத்தை அநுஸரித்திருப்பாளோ?

அல்லது என்னைப் பிரிந்திருக்க முடியாமல் அனுமரணம் செய்வாளோ? நான் போகையில், என் பிள்ளைகளும் பெண்களும் கதியற்று மன இரக்கத்திற்கிடமாகி, ஸமுத்ரத்தினிடையில் பிளவுண்ட ஓடங்கள்போல் எப்படி இருக்கப் போகின்றனர்?' என்று அவன் தன் குடும்பத்தைப்பற்றி வருந்தினான். இங்ஙனம் தனக்குத் தகாத வீணான சிந்தையில் ஆழ்ந்திருக்கின்ற அம்மன்னவனை யவனேச்வரன் பிடித்துக் கொண்டுபோக நினைக்கையில், அவனது ப்ருத்யர்களான யவனர்கள் பசுவைப்போல் பிடித்து அவனது கர்மங்களுக்குத் தகுந்தபடி அவன் சேரவேண்டிய இடத்திற்குக் கொண்டுபோனார்கள். அவனுடைய பந்துக்கள் அனைவரும் சோகத்தினால் மிகவும் வருந்தி அவனையே பின்பற்றினார்கள். புரஞ்ஜனன் யவனர்களால் தகையப்பட்டு வ்ருக்ஷத்தின் பொந்தினின்று ஸர்ப்பம்போல் புறப்படும்பொழுதே அப்பட்டணம் உருவழிந்தது. பலிஷ்டனான யவனனால் பலாத்காரமாகப் பட்டணத்தினின்று இழுக்கப்பட்ட அப்புரஞ்ஜனன் இருட்டில் நுழைந்து தன்னோடு கூடவே யிருக்கும் நண்பனை நினைக்காமலே சென்றான். அவன் முன்பு மன இரக்கமின்றி யஜ்ஞத்தில் வதித்த பசுக்களெல்லாம் தமக்கு அவன் செய்த ஹிம்ஸையை நினைத்துக் கோபமுற்றுக் கோடாலிகள்போன்ற தமது கொம்புகளால் அவனைக் குத்தி ஹிம்ஸித்தன. ஸ்த்ரீலோலனாகி மதிகெட்ட அம்மன்னவன் கரையில்லாத காடாந்தகாரத்தில் அமிழ்ந்து நினைவற்றுப் பல ஸம்வத்ஸரம் வரையிலும் துக்கங்களை அனுபவித்து அந்த மனைவியையே மனத்தில் சிந்தித்துக்கொண்டிருந்தானாகையால் விதர்ப்ப மஹாராஜன் க்ருஹத்தில் ஓர் பெண்மணியாகப் பிறந்தான். சத்ருக்களை அழிக்குந் திறமையுடைய மலயத்வஜனென்ற பாண்ட்ய தேசத்தரசன் யுத்தத்தில் ஸமஸ்த ராஜாக்களையும் ஜயித்து வீர்யத்தையே பந்தயமாகவுடைய அவ்விதர்ப்பராஜன் மகளை மணம்புரிந்தான். அவன் அவளிடத்தில் கருங்கண்ணியாகிய ஓர் பெண்ணையும் த்ரமிடதேசத்தரசர்களான ஏழு

பிள்ளைகளையும் பெற்றான். அவ்வெழுவர்களில் ஒவ்வொருவனுக்கும் அர்ப்புதம் அர்ப்புதம் பிள்ளைகள் பிறந்தார்கள். இவர்களுடைய வம்சத்தில் பிறந்தவர்களே இம்மன்வந்தரம் முழுவதும் பூமியை அனுபவிக்கப்போகிறார்கள். நல்லொழுக்கமுடைய அம்மலயத்வஜனது புதல்வியை அகஸ்த்யர் விவாஹம் செய்துகொண்டார். அவருக்கு அம்மனைவியிடத்தில் த்ருடவ்ருதரென்னும் முனிவர் பிறந்தார். அவருடைய புதல்வர் இத்மவாஹரென்பவர். ராஜரிஷியாகிய மலயத்வஜன் தன் புதல்வர்களுக்குப் பூமியைப் பங்கிட்டுக்கொடுத்து ஸ்ரீக்ருஷ்ணனை ஆராதிக்க விரும்பி மலயமென்னும் குலபர்வதத்திற்குப் போனான். கண்ணழகியான அவனது மனைவி அழகான வீடு வாசல்களையும் ஸுகமான போகங்களையும் துறந்து நிலவு சந்த்ரனைப் பின்பற்றுவதுபோல், அம்மன்னவனையே பின்பற்றினாள். மலயபர்வதத்தில் தூநீருடைய தாம்பரபர்ணி யென்னும் நதி பெருகி வருகின்றது. அதைச் சந்த்ரமஸையென்றும் வழங்குவார்கள். அம்மன்னவன் அந்நதியின் புண்ய ஜலத்தில் ஸ்நானபானம் செய்து உள் மலம் புற மலங்களைக் கழித்துக்கொண்டிருந்தான். அவன், கிழங்கு வேர் பழம் பூ இலை புல் ஜலம் இவற்றில் ஒவ்வொன்றைச் சில சில நாள் புசித்துக்கொண்டிருந்து அப்பால் ஆஹாரமேயின்றிச் சரீரத்தை உலர்த்துந் தவத்தில் நின்றான். எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையுடைய அம்மன்னவன், குளிர் வெயில் காற்று மழை பசி தாஹம் இஷ்டம் அனிஷ்டம் ஸுகம் துக்கம் ஆகிய இவற்றால் மனத்தில் சிறிதும் விகாரமே உண்டாகப்பெறாதிருந்தான். அவன் கர்மயோக ஜ்ஞான யோகங்களால் மனமலங்களை அழித்து யம நியமங்களால் இந்த்ரியம் ப்ராணன் மனம் இவற்றை வென்று பரமாத்ம ஸ்வரூபனான ஆத்மாவை அனுஸந்தித்தான். ஷாட்குண்ய பூர்ணனான வாஸுதேவனிடத்தில் பரிபூர்ண பக்தியுடைய அம்மன்னவன் வேறொன்றையும் நினையாமல் ஒரே இடத்தில் தேவமானத்தினால் நூறு வர்ஷங்கள்

வரையில், மொட்டை மரம்போல் அசையாது நின்றிருந்தான். அம்மன்னவன் ஸர்வஸாக்ஷியான பரமாத்மா ஆத்மாவினிடத்தில் வ்யாபித்து விலக்ஷணனாயிருப்பதை அறிந்து தேஹ வ்ருத்தாந்தமெல்லாம் ஸ்வப்ன வ்ருத்தாந்தம்போல் அநித்யமென்பதை ஆராய்ந்து அதினின்று மீண்டு, ஜகத்குருவான பகவான் மொழிந்ததும் நாற்புறத்திலும் திகழ்வதுமான சுத்த ஜ்ஞானமாகிற விளக்கினால் ஆத்மாவைப் பரமாத்மாவிடத்திலும் பரமாத்மாவை ஆத்மாவிடத்திலும் ஸாக்ஷாத்கரித்துச் சரீரம் விடும்வரையில் அவ்வுபாஸனத்தை நடத்திக் கடைசியில் சரீரத்தைத் துறந்தான். பர்த்தாவையே பரதெய்வமாக நினைத்திருந்த அவ்வைதர்ப்பி ஸமஸ்த போகங்களையும் துறந்து, தர்ம நுட்பங்களை அறிந்த கணவனாகிய மலயத்வஜனுக்கு ப்ரீதியுடன் சுஶ்ரூஷை செய்துவந்தாள். மரவுரி உடுத்து உபவாஸங்களால் இளைத்து ஒரே பின்னலாகப் பிணைத்த குழல் கற்றையையுடைய அப்பெண்மணி, அணைந்த அக்னியின் அருகில் புகையில்லாத ஜ்வாலைபோல், பர்த்தாவினருகில் நின்று விளங்கினாள். அவள் தன் கணவன் முக்தி அடைந்த பின்பும் அவனது சரீரம் யோகாஸனத்தில் திடமாயிருப்பதைக் கண்டு அதை அறியாமல் அவனருகிற் சென்று முன்போலவே சுஶ்ரூஷை செய்து வந்தாள். அவ்வைதர்ப்பி அம்மன்னவனுடைய பாதங்களைத் தினந்தோறும் பூஜிப்பது வழக்கம். அன்றைத்தினமும் அங்ஙனமே பூஜிக்கத் தொடங்குகையில், அவனுடைய பாதங்கள் சூடுகையின்றிச் சில்லிட்டிருப்பது கண்டு தன்னினத்தில் பிரிந்த மான்பேடு போல் திகிலடைந்து பந்துவான கணவனை இழந்த தன்னைப் பற்றி வருந்திக் கண்ணீர்களால் கொங்கைகளை நனைத்து ஏகாந்தத்தில் அழகான குரலுடன் 'ராஜர்ஷீ! எழுந்திரு எழுந்திரு. தர்மத்தைக் கடந்து திருடர்போல் நடக்கின்ற க்ஷத்ரியாதமர்களிடத்தில் பயப்படுகின்ற இப்பூமியைப் பாதுகாப்பாயாக' என்று பற்பலவாறு கதறினாள். பர்த்தாவைத் தொடர்ந்து நிர்ஜனமான அரண்யத்திற்குச்

சென்ற அப்பெண்மணி இங்ஙனம் புலம்பிப் பர்த்தாவின் பாதங்களில் விழுந்து கண்ணீர் பெருக்கினாள். அவள் கட்டைகளைக் கொண்டு சிதை அடுக்கி அதில் கணவனது சரீரத்தை ஏற்றி அக்னி ப்ரதானம் செய்து புலம்பிக் கொண்டே அநுமரணம் செய்ய நினைத்தாள். அப்பொழுது, பழைய நண்பனும் ஆத்ம குணங்கள் அமைந்தவனுமாகிய ஓரந்தணன் வந்து வருந்துகின்ற அப்பெண்மணியை இனிய நல்வார்த்தையால் உபலாலனம் செய்து 'பெண்ணே! நீ யார்? யாருடையவள்? இதோ சிதைமேல் படுத்திருப்பவன் யாவன்? இவனைப்பற்றியல்லவா நீ சோகிக்கின்றனை? ஸ்னேஹிதனாகிய நான் உனக்குத் தெரிகின்றேனா? என்றால் தான் நீ முன்பு தேவமனுஷ்யாதி உருவங்களைப் பெறும்படியான விகாரத்தை அடைந்தனை. என்னை அறியாமை இருக்கட்டும். உன்னையாவது நீ அறிவாயா? உனக்கு அவிஜ்ஞாதனென்ற ஓர் நண்பன் இருந்தானென்பதாவது தெரியுமா? அப்பொழுது நீ என்னைத் துறந்து சப்தாதி விஷயங்களை அநுபவிக்க விரும்பிப் பூமியிலுள்ள பட்டணங்களைத் தேடிக்கொண்டோடினை. [1] பெரியவளே! நீயும் நானும் மானஸ ஸரஸ்ஸில் ஓரிடத்தில் அனேகமாயிர மாண்டுகள் நட்புடைய இரண்டு ஹம்ஸ பக்ஷிகளாயிருந்தோம். அப்பொழுது நீ உன் பந்துவாகிய என்னை மறந்து க்ராம்ய போகங்களை விரும்பிப் பூமியெல்லாம் திரிந்தனை கடைசியில் ஓர் பெண்ணால் நிர்மிக்கப்பட்ட ஓர் ஸ்தானத்தைக் கண்டனை. அவ்விடத்தில் ஐந்து உத்யான வனங்களும், ஒன்பது வாசங்களும், ஒரு காவலனும், மூன்று கோட்டைகளும், விரும்பினவற்றைக் கொடுக்கவல்ல ஆறு இடங்களும், ஐந்து கடைத்தெருக்களும், ஐந்து காரணங்களும் உண்டு. அதற்குடையவள் ஒரு பெண்மணி. ஐந்து வகையான சப்தாதி விஷயங்களே ஐந்து உத்யான வனங்கள். கண் காது முதலிய இந்த்ரியங்களின் த்வாரங்களே ஒன்பது வாசங்கள். தேஜஸ்ஸு ஜலம் பூமி இம்மூன்றும்

1. இது ஆத்மஸ்வரூபத்தைப்பற்றின ஸம்போதனம்.

மூன்று கோட்டைகள். ஜ்ஞானேந்த்ரியங்கள் ஐந்தும் மனமும் ஆகிய இவ்வாறும் ஆறு இடங்கள். கர்மேந்த்ரியங்கள் ஐந்தும் ஐந்து கடைத்தெருக்கள். பூமி ஜலம் முதலிய ஐந்து பூதங்களே ஐந்து காரணங்கள். இத்தகைய சரீரமாகிற ஸ்தானத்தைப் புத்தி சக்தியே ஆள்கின்றது. ஜீவனாகிய நீ அதற்குட்பட்டு இந்தச் சரீரத்திற்குள் புகுந்து உன்னையும் என்னையும் அறியாதிருக்கின்றனை. நீ அச்சரீரத்தில் புத்தியின் வழியிற்சென்று சப்தாதி விஷயங்களை அனுபவித்துக்கொண்டு ஆத்ம பரமாத்மாக்களைப்பற்றின நினைவற்று மடந்தையரிடத்தில் மனப்பற்று செய்தமையால் பெண்ணாய்ப் பிறக்கும்படியான இப்படிப்பட்ட பாபிஷ்டதசையைப் பெற்றனை. நீ இயற்கையில் எங்கும் நிறைந்த ஜ்ஞானமுடையவன். இச்சரீர ஸம்பந்தத்தினால் இப்படி ஒன்றுமறியாதிருக்கின்றனை. நீ விதர்ப்பராஜன் மகளல்லை. இவ்வீரனும் உனக்கு நண்பனல்லன். ஒன்பது த்வாரங்களையுடைய சரீரமாகிற பட்டணத்தில் அடைத்துத் தகைந்த புரஞ்ஜனிக்கு நீயும் கணவனல்லை. நீ முன் ஜன்மத்தில் உன்னைப் புருஷனாகவும் இப்பொழுது சிறந்த மடந்தையாகவும் நினைப்பதற்குக் காரணம் என்னுடைய மாயையே. ஆத்மாவுக்கு ஆண்மை பெண்மை இரண்டும் இயற்கையில் கிடையாது. நாமிருவரும் சுத்த ஸ்வரூபர்கள். நமது ஸ்வரூபத்தை விவரித்துச் சொல்லுகிறேன். இதை உணர்வாயாக. நான் உனக்கு அந்தராத்மாவாய் உன்னைச் சரீரமாகவுடையவன். ஆகையால் நானே நீ. என்னைக்காட்டிலும் வேறுபட்டவனல்லை. நீயே நான். இதை நன்குணர்வாயாக. அறிவுடையோர் நம்மிருவர்க்கும் எப்பொழுதும் சிறிதும் பேதத்தை நினைக்கமாட்டார்கள். ஒருவன் தன்னைக் கண்ணாடியில் ஒருவாறாகவும், பிறனுடைய கண்களில் ஒருவாறாகவும் காண்கின்றான். அங்ஙனமே நாமிருவரும் ஒருவாறாயிருப்பவராயினும் பலவகைச் சரீரங்களில் புகுந்து பலவாறு தோற்றுகின்றோமன்றி, நமக்கு இயற்கையில் அவ்வுருவங்கள் கிடையாது' என்று மொழிந்தான்.

இங்ஙனம் அந்த ஜீவன் பரமாத்மாவினால் உபதேசம் செய்யப்பெற்று முன்பு அஜ்ஞானத்தினால் இழந்த நினைவை மீளவும் பெற்றான். பர்ஹிஷத மன்னவனே! ஜகத்காரணனான பரமபுருஷன் மறைத்துச் சொல்லும் விஷயத்தில் ப்ரியமுடையவனாகையால், ஜீவாத்மாவின் நிலைமையை இங்ஙனமே லோக வ்ருத்தாந்தத்தில் மறைத்துச் சொன்னேன். இருபத்தேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

## கீழ்ச் சொன்ன புரஞ்ஜநோபாக்யானத்தின் கருத்தை வெளியிடுதல்.

ப்ராசீனபர்ஹி சொல்லுகிறான்:—நாரத மஹர்ஷீ! நீர் மொழிந்த விஷயம் எமக்கு நன்றாகத் தெரியவில்லை. நாங்கள் ப்ராசீன கர்மவாஸனையால் மதிமயங்கி யஜ்ஞம் முதலிய கேவல கர்மங்களில் மனம் செல்லப்பெற்றவர்கள். தேவரீர் சொன்ன விஷயம் பெரிய பண்டிதர்களாலன்றி, மந்த மதிகளான எங்களால் அறியக்கூடியதல்ல. ஆகையால் அதை விவரித்துச் சொல்லவேண்டும்.

நாரதர் சொல்லுகிறார்:—மன்னவனே! புரமென்று சரீரத்திற்குப் பேர். ஜீவன் அதில் புகுந்து மனப்பற்றுடையனாயிருக்கையால் புரஞ்ஜனனென்று சொல்லப்படுகிறான். அச்சரீரங்களில் சில ஒற்றைக்காலுடையவைகளும், சில இரண்டு காலுடையவைகளும், சில மூன்று காலுடையவைகளும், சில நான்கு காலுடையவைகளும், சில பலகாலுடையவைகளும், சில காலில்லாதவைகளுமாயிருக்கும். அந்தப் புரஞ்ஜனனுக்கு அவிஜ்ஞாதனென்று ஒரு நண்பன் உண்டென்று மொழிந்தேனல்லவா? அவனே ஸர்வேஸ்வரன். அவன் இன்ன பேருடையவனென்றும் இன்ன செயலுடையவனென்றும் இன்ன குணமுடையவனென்றும் ஒருவராலும் அறியமுடியாதவனாகையால் அவிஜ்ஞாதனென்று கூறப்படுகிறான். ராம க்ருஷ்ணாதி நாமங்களாலும் ஜகத் ஸ்ருஷ்டி முதலிய செயல்களாலும் ஸத்ய ஜ்ஞாநாதி குணங்களாலும்

சாஸ்த்ரங்களில் சொல்லியபடி பெரியோர்களால் அவன் அறியப்படுகிறானாயினும், அவனுடைய நாமங்களும் செயல்களும் குணங்களும் இவ்வளவென்றாவது இத்தகைய பெருமையுடையவை யென்றாவது உள்ளபடி அறியமுடியாதவை யாகையால் அவனை அவிஜ்ஞாதனென்பது யுக்தமே. இந்த ஜீவன் ப்ரக்ருதியின் குணங்களான சப்தாதி விஷயங்களை அனுபவிக்க விரும்பிக் கண் காது முதலிய ஒன்பது த்வாரங்களும் இரண்டு கை கால்களுமுடைய மனுஷ்ய சரீரத்தைக் கண்டு தான் போகங்களை அனுபவிப்பதற்கு உரிய இடமென்று நினைத்தான். அஹங்கார மமகாரங்களை விளைக்கும் புத்தியை மடந்தையென்று மொழிந்தேன். இந்தப் புத்தியின் தூண்டுதலால் தான் ஜீவன் இச்சரீரத்தில் இருந்து இந்த்ரியங்களால் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கின்றான். ஜ்ஞானேந்த்ரியங்களும் கர்மேந்த்ரியங்களும் ஆகிய இந்த்ரியங்கள் பத்தும் தமது தமது வ்யாபாரங்களில் புத்தியை எதிர்பார்க்கின்றவை யாகையால் அவை அப்புத்தியாகிற மடந்தைக்கு நண்பர்களாகவும் ப்ருத்யர்களாகவும் சொல்லப்பட்டன. அவ்விந்த்ரியங்களின் வ்யாபாரங்களே தோழிகளாகவும், ஐந்து வகையான ப்ராணன் ஐந்துதலைப் பாம்பாகவும், இருவகை இந்த்ரியங்களிலும் ப்ரதானமாகி வலிவுள்ள மனது மஹாவீரனாகவும், சப்தாதி விஷயங்கள் ஐந்தும் பாஞ்சால தேசங்களாகவும் கூறப்பட்டன. சரீரமாகிற பட்டணத்திற்கு ஒன்பது வாசங்கள் உண்டென்று சொன்னேனல்லவா? அவையாவன—கண்களிரண்டும் மூக்குகள் இரண்டும் காதுகளிரண்டும் முகமொன்றும் மல மூத்ர த்வாரங்களிரண்டும் ஆகிய இவ்வொன்பதே. கண் காது முதலிய இந்த்ரியங்களோடு கூடி அந்தந்த த்வாரங்களின் வழியாய் ஜீவன் வெளியிலுள்ள சப்தாதி விஷயங்களை அனுபவிக்கின்றானென்பதைக் கருதியே புரஞ்ஜனன் நண்பர்களோடு கூடி இந்த த்வாரங்களால் அந்தந்தத் தேசங்களுக்குப் போவானென்று சொன்னேன். கண் த்வாரங்களிரண்டும் மூக்கு

த்வாரங்களிரண்டும் வாயொன்றுமாகிய இவ்வைந்தும் கிழக்கு முகமாயுள்ள ஐந்து வாசங்களாகவும், வலக் காது தெற்கு வாசலாகவும், இடக்காது வடக்கு வாசலாகவும், மலமூத்ர த்வாரங்களிரண்டும் மேற்கு முகமாயுள்ள இரண்டு வாசங்களாகவும் சொல்லப்பட்டன. கத்யோதை யென்றும் ஆவிர்முகி யென்றும் இரண்டு வாசங்கள் ஒரே இடத்தில் இருக்கின்றன என்றேன். அவ்விரண்டும் கண்களே. ஜீவன் அக்கண்களின் வழியாய்ச் சென்று சக்ஷுரிந்த்ரியத்தினால் வெளுப்பு கறுப்பு முதலிய நிறங்களை அறிகிறானென்பதைப் பற்றியே, புரஞ்ஜனன் இந்த த்வாரங்களில் த்யுமானென்னும் நண்பனுடன் விப்ராஜித தேசத்திற்குப் போவானென்று சொன்னேன். மூக்கின் த்வாரங்களை நலினி நாலினி யென்கிற இரண்டு த்வாரங்களாகவும், கந்தமென்கிற மனத்தை ஸௌரபமென்னும் தேசமாகவும், ப்ராணேந்த்ரியத்தை அவதூதனென்னும் நண்பனாகவும், வாயை முக்யையென்னும் த்வாரமாகவும், வாகிந்த்ரியம் ரஸனேந்த்ரியம் இவைகளை விபணன் ரஸஜ்ஞன் என்கிற இரண்டு நண்பர்களாகவும், வாக்வ்யவஹாரத்தை விபணமென்னும் தேசமாகவும், பலவகை அன்னத்தைப் பஹூதனமென்னும் தேசமாகவும், வலக்காதைப் பித்ருஹூவென்னும் வாசலாகவும், இடக்காதைத் தேவஹூவென்னும் வாசலாகவும் சொன்னேன். ஸம்வத்ஸரத்தைச் சண்டவேகனென்னும் கந்தர்வராஜனாகவும், அதன் பகல்களைக் கந்தர்வர்களாகவும் ராத்ரிகளைக் கந்தர்விகளாகவும் மொழிந்தேன். இந்நாட்கள் முன்னூற்றறுபதும் கந்தர்வர்களைப்போல் தெரியாமல் சுழன்று வந்து ப்ராணிகளின் வாழ்நாளைப் பறிக்கின்றன. கிழத்தனத்தைக் காலகன்னிகையென்றேன். இதை உலகத்திலுள்ளவர் ஒருவரும் விரும்புகிறதில்லையாகையால், இக்காலகன்னிகையை ஒருவனும் மணம்புரிய விரும்பவில்லையென்றேன். ம்ருத்யு கொடியனாகையால் யவனேஶ்வரனென்றும் பயங்கரனாகையால் பயனென்றும், அவனுக்குக் கிழத்தனம் ஸஹாயமாகையால்

காலகன்னிகையை அவன் தனக்கு உடன்பிறந்தவளாக அங்கீகரித்தானென்றும் கூறினேன். மனோவ்யாதிகளும் சரீர வ்யாதிகளும் ம்ருத்யுவுக்கு உதவிசெய்கின்றனவாகையால் அவற்றை அந்த ம்ருத்யுவாகிற யவனேஶ்வரனுடைய ஸேனையிற்சேர்ந்த பொல்லாத யவனர்களாகவும், ஸுகதுக்காதிகளைச் சத்ருக்களாகவும், பலவகை ஜ்வரத்தை பரஜ்வாரனென்றும், இது ம்ருத்யுவுக்கு ஸஹாயமாகையால் இதை அவனுக்கு உடன்பிறந்தவனென்றும் மொழிந்தேன். பித்ருக்களை அடையும் வழியை அறிவிக்கிற ப்ரவ்ருத்தி ஶாஸ்த்ரத்தை தக்ஷிண பாஞ்சால தேசமென்றும், தேவர்க்குத் தேவனான பகவானை அடையும் வழியை அறிவிக்கிற நிவ்ருத்தி ஶாஸ்த்ரத்தை உத்தர பாஞ்சால தேசமென்றும் ஶ்ரோத்ரேந்த்ரியத்தை ஶ்ருததரனென்னும் நண்பனாகவும் சொன்னேன். ஜீவன் ஶ்ரோத்ரேந்த்ரியத்தினால் ப்ரவ்ருத்தி ஶாஸ்த்ரத்தையும் நிவ்ருத்தி ஶாஸ்த்ரத்தையும் கேட்கிறானென்னுங் கருத்தை உட்கொண்டு, புரஞ்ஜனன் ஶ்ருததரனென்னும் நண்பனோடு தெற்கு வாசலால் தக்ஷிண பாஞ்சால தேசத்திற்கும், வடக்கு வாசலால் உத்தர பாஞ்சால தேசத்திற்கும் போகிறானென்று மொழிந்தேன். ஆண் குறியை ஆஸுரி யென்ற மேற்கு வாசலாகவும், மைதுனத்தை க்ராம்யகமென்னும் தேசமாகவும், உபஸ்தேந்த்ரியத்தைத் துர்மதனென்னும் நண்பனாகவும், மலத்வாரத்தை நிருதி யென்னும் த்வாரமாகவும், நரக துக்கத்தை வைசஸ மென்னும் தேசமாகவும், பாயுவென்னும் இந்த்ரியத்தை லுப்தகனென்னும் நண்பனாகவும் சொன்னேன். கண்ணில்லாத (த்வாரமில்லாத) வாசங்கள் இரண்டு உண்டென்று சொன்னேனல்லவா? அவற்றை விவரிக்கின்றேன், கேள். கை கால்களை கண்ணில்லாத வாசங்களாம். ஜீவன் பாணி யென்கிற இந்த்ரியத்துடன் கூடிக் கைகளால் கார்யங்களைச் செய்வான். பாதமென்கிற இந்த்ரியத்துடன் கூடிக் கால்களால் போவது வருவதாயிருப்பான். ஹ்ருதயத்தை அந்தப்புரமாகவும், மனத்தை விஷூசீனனென்னும் நண்ப

ளுகவும், சொன்னேன். ஜீவன் அந்த ஹ்ருதயத்தில் இருந்துகொண்டு அதன் குணங்களால் கலக்கத்தையும் தெளிவையும் சந்தோஷத்தையும் அனுபவிக்கின்றான். புத்தி விகாரத்தை அடையும்படியான ஸ்வப்னவஸ்தையிலும், அப்புத்தி இந்த்ரியங்களை அவற்றின் வ்யாபாரங்களில் தூண்டும்படியான [1] ஜாக்ரதவஸ்தையிலும் ஜீவன் பக்கத்தி லிருந்து வெறுமனே பார்த்துக்கொண்டிருக்குந் தன்மைய னயினும் அப்புத்தியின் குணங்களால் தீண்டப்பட்டுக் காட்சி கேள்வி முதலிய இந்த்ரிய வ்யாபாரங்களைத் தன் னிடத்தில் ஏற்றுக்கொள்கின்றான். இதைக் கருதியே, அப்புரஞ்ஜனன் தன் மனைவியாகிய புரஞ்ஜனி எழுந்திருந் தால் எழுந்திருப்பதும் உட்கார்ந்தால் உட்காருவதுமாகி அவள் போனவழி யெல்லாம் போய்க்கொண்டிருந்தா னென்று மொழிந்தேன். தேஹத்தை ரதமாகவும், இந்த்ரி யங்களைக் குதிரைகளாகவும், ஸம்வத்ஸரத்தின் வேகத்தை அக்குதிரைகளின் விரைந்த நடையாகவும், புண்ய பாபங்க ளென்கிற இருவகைக் கர்மங்களை இரண்டு சக்ரங்க ளாகவும், ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களை மூன்று த்வஜங்களாகவும், ப்ராணன் அபானன் முதலிய ஐந்து வாயுக்களை ஐந்து கட்டுக்களாகவும் மனத் தைக் கடிவாளமாகவும், புத்தியைத் தேர்ப்பாகனுகவும், ஹ்ருதயத்தைத் தேராளி உட்காருமிடமாகவும், சோக மோஹங்களை இரண்டு ஏர்க்காலாகவும், சப்தாதி விஷயங்க ளைந்தை ஐந்து ஆயுதங்களாகவும், த்வக்கு மாம்ஸம் முதலிய ஏழு தாதுக்களை ஏழு மூடல்களாகவும், கர்மேந்த்ரி யங்களை ஐந்து பராக்ரமங்களாகவும் சொன்னேன். ஜீவன் மனத்தை அடக்காமல் கானல்போல் புலப்படுகிற சப்தாதி விஷயங்களில் திரிகின்றான். ஜீவன் இந்தப் பதினெரு இந்த்ரியங்களை உதவியாகக்கொண்டு ஐந்து வகையான ஹிம்ஸைகளை நடத்துகிறான். அவ்விந்த்ரியங்களைப் பதினெரு சேனைகளாவும், அந்த ஹிம்ஸையை வேட்டை

1. விழித்துக்கொண்டிருக்கும் காலத்திலும்.

யாகவும் மொழிந்தேன். இங்ஙனம் ஜீவன் அவித்யையால் மறைக்கப்பட்டு தேஹஸம்பந்தம் பெற்று ஆதிதெய்விகம் ஆதிபௌதிகம் ஆத்யாத்மிகம் என்று மூன்று வகையான ஸம்ஸார தாபங்களாலும் அவற்றின் பிரிவினைகளான பலவகை துக்கங்களாலும் வருத்தமுற்றவனாகவே நூறு வர்ஷங்கள் வரையிலும் தேஹத்தில் இருக்கின்றான். ப்ராணன் இந்த்ரியம் மனம் இவற்றின் தர்மங்களான பசி தாஹம் பார்வை கேள்வி ஸுகம் துக்கம் முதலியவற்றை ஸத்வாதி குணங்களுக்கிடமல்லாத ஆத்மாவினிடத்தில் ஏறிட்டு அற்பமான காமஸுகங்களை நினைத்து அஹங்கார மமகாரங்களுடன் மீளவும் தேஹாந்தரங்களைப் பெறுதற்கிடமான கர்மங்களைச் செய்துகொண்டு சரீரத்தில் விழுந்து கிடக்கிறான். ஜீவன் ஜ்ஞான ஸ்வரூபனான தன்னையும், ப்ரக்ருதி புருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணனாய் ஹிதோப தேசம் செய்து அஜ்ஞானத்தைப் போக்குந் தன்மை அமைந்து ஷாட்குண்ய பூர்ணனான பரமாத்மாவையும் உள்ளபடி அறியாமல், இயற்கையில் தன்னைத் தான் அனுபவிக்கையாகிற மஹாநந்தத்திற்கு உரியவனாயினும் அதை இழந்து ப்ரக்ருதியின் குணங்களான சப்தாதி விஷயங்களில் மிக்க மனப்பற்று கொள்கிறானாகையால் அச்சப்தாதி விஷயங்களையே போக்யமாக அபிமானித்து மெய்ம்மறந்து அவற்றைப் பெறுதற்காக ஸாத்விகம் தாமஸம் ராஜஸமென்ற மூன்று வகையான கர்மங்களைச் செய்து அவற்றிற்குரிய ஜன்மங்களைப் பெறுகின்றான். ஒருகால் ஸாத்விகமான கர்மத்தைச் செய்து ப்ரகாசம் அதிகமான தேஹத்தைப் பெறுகின்றான். ராஜஸ கர்மத்தினால் மேன்மேலும் துக்கத்திற்கிடமான தேஹங்களையும், தாமஸ கர்மத்தினால் அஜ்ஞான சோகங்களுக்கிடமான தேஹங்களையும் பெற்று ம்லேச்சாதி தேசங்களில் பிறப்பான். கர்மங்களால் மதி குலைந்து ஜீவன் அக்கர்மங்களுக்குத் தகுந்தபடி ஒருகால் புருஷனாகவும், ஒருகால் ஸ்த்ரீயாகவும், ஒருகால் நபும்ஸகனாகவும், ஒருகால் தேவனாகவும் ஒருகால் மனுஷ்யனாகவும்

ஒருகால் திர்யக்காகவும் பிறப்பான். நாய் பசியினால் வருந்தி ஆஹாரத்திற்காக வீடுகள் தோறும் நுழைந்து தன் அத்ருஷ்டத்திற்குத் தகுந்தபடி ஒருகால் அங்குள்ளவர்களால் காணப்பெற்று அடியுண்டு வருந்துவதும் உண்டு. ஒருகால் ஆஹாரத்தைப் பெற்றுப் புசித்துவருவதும் உண்டு. அங்ஙனமே ஜீவன் காமபோகங்களை விரும்பி அதற்காக நற்செயல்களையும் தீச்செயல்களையும் செய்து ஊர்த்வலோகங்களிலும் அதோலோகங்களிலும் மத்யலோகங்களிலும் திரிந்து தெய்வாதீனமாய் ஏற்பட்ட நன்மை தீமைகளை அனுபவிக்கிறான். 'ஒருகால் ஸுகத்தை அனுபவிக்கலாமாகையாலும் துக்கத்திற்குப் பரிஹாரமாகச் சில கார்யங்களைச் செய்யலாமாகையாலும் ஸம்ஸாரத்தில் துக்கமேயென்று எப்படி சொல்லலாம்?' என்னில், சொல்லுகிறேன். ஆதிதெய்விகம் ஆதிபௌதிகம் ஆத்யாத்மிகமென்று மூன்றுவகையான துக்கங்களில் ஏதேனுமொன்று நேரில், அதற்குப் பரிஹாரம் செய்யினும், மற்றொன்றும் நேரும். இரண்டுக்கும் ஒரே காலத்தில் பரிஹாரம் செய்ய முடியாது. ஆகையால் துக்கமில்லாமல் கேவலம் ஸுகத்தையே ஒருகாலும் அனுபவிக்க நேராது. தலையில் பாரத்தைச்சுமக்கும்புருஷன் தலைநோவெடுத்து அடிக்கடி அதைக் கழுத்தில் இறக்கிக்கொண்டு தலைநோவு சிறிது நீங்கப் பெறினும் தோள் நோவெடுக்கப் பெறுவான். அங்ஙனமே ஒருவன் தனக்கு நேர்ந்த துக்கத்திற்குப் பரிஹாரமாக ஒரு செயலைச் செய்யினும், அச்செயலும் துக்கமாகவேயிருக்குமாகையால் எப்பொழுதும் துக்கம் நீங்கப் பெறமாட்டான். ஜ்ஞானமில்லாமல் செய்யும் கர்மம் துக்கத்திற்கிடமான கர்மங்களை வேரோடறுக்கும் பரிஹாரமாக மாட்டாது. பரிஹாரமாகச் செய்யும் கர்மமும் பரிஹரிக்கப்படும் கர்மமும் ஆகிய இரண்டும் அஜ்ஞானத்தை உட்கொண்டவைகளே. ஒருவன் தலையறுப்புண்பதாக ஸ்வப்னங்கண்டு விழித்துக் கொண்டு அவ்வருத்தம் நீங்கப் பெறுவானாயினும், மீளவும் அத்தகைய ஸ்வப்னம் காண்பானாயின் வருந்த

வேண்டியவனே யல்லவா? துக்கத்திற்கிடமான கர்மத்திற்கு மற்றொரு கர்மத்தினால் பரிஹாரம் செய்யினும், மற்றொரு துக்கம் உண்டாயின் வருந்தவேண்டியதாகவே யிருக்கும். ஆகையால் அங்ஙனம் வருந்துவதற்குக் காரணமான அஜ்ஞானத்தையே போக்கவேண்டும். அதற்குக் காரணம் மனமாகையால் அதையே முதலில் வெல்லவேண்டும். ஆத்மாவிடத்தில் தேவத்வம் மனுஷ்யத்வம் முதலிய உருவங்கள் இல்லையாயினும் மனம் நீங்கும் வரையில், அவ்வுருவங்களை ஆத்மாவிடத்தில் இருப்பதாக நினைக்கைக்கிடமான ஸம்ஸாரம் நீங்காது. ஸ்வப்னத்தில் மனோவிகாரத்தினால் தேசாந்தரம் போவது ராஜ்யமாளுவது தலையறுப்புண்பது முதலியவற்றால் ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறான். அவை அந்த ஸ்வப்னாவஸ்தை நீங்கும்வரையில் நீங்கமாட்டா. அங்ஙனமே இந்த ஸம்ஸாரமும் மனம் நீங்காதவரையில் நீங்காது. இங்ஙனம் மனமே பலவகை அனர்த்தங்களுக்கிடமான ஸம்ஸாரத்திற்கு ஹேதுவாகையால் அதையே முதலில் நீக்க ப்ரயத்னம் செய்ய வேண்டும். அம்மனம் நீங்கப் பெறுகையே மோக்ஷமாம் அது ஜகத்குருவான பரமபுருஷனிடத்தில் சிறந்த பக்தியால் உண்டாகவேண்டும். பகவானிடத்தில் வேறு பலன்களை விரும்பாமல் செய்யும் பக்தியோகம் வைராக்யத்தையும் ஜ்ஞானத்தையும் விளைக்கும். நாம் பகவானுக்கு என்றும் அடிமைப்பட்டவரென்னும் புத்தியுடன் அவனுடைய கதைகளைக் கேட்டு அவற்றை ஶ்ரத்தையுடன் தினந்தோறும் மனனம் செய்து வருவோமாயின், சீக்ரத்திலேயே அந்தப் பக்தியோகம் உண்டாகும். பகவானுடைய கதைகளைச் சொல்லுவதிலும் கேட்பதிலும் விரைகின்ற தூய மனமுடைய ஸாதுக்களான பாகவதர்கள் வஸிக்குமிடத்தில் ஸத்புருஷர்களால் பாடப்படுகிற பகவானுடைய சரித்ர மாகிற அம்ருதம் நிறைந்த சிறப்புடைய நதிகள் நாற்புறத்திலும் பெருகிக்கொண்டிருக்கும். அங்ஙனம் நதீப்ரவாஹம் போன்ற பகவானுடைய கதைகளை ஊக்கமுடைய காதுக

ளால் சிறிதும் த்ருப்தியில்லாமல் பானம் செய்பவர் பசி தாகம் பயம் சோகம் மோஹம் இவைகளால் தீண்டப் படமாட்டார்கள். உலகத்திலுள்ளவர் அனைவரும் தேஹ ஸ்வபாவத்தினால் விளைபவைகளான இப்பசி தாஹம் முதலிய வைகளால் வருந்துவதுபற்றியே பகவானுடைய கதையாகிற அம்ருதஸாகரத்தில் ப்ரீதி உண்டாகப் பெறாதிருக்கின்றார் கள். இதுவே உண்மை. ஆகையால் பாகவதர்களோடு ஸஹவாஸம் செய்து பகவானுடைய கதைகளைக் கேட்டு அவ்வாநந்தத்தினால் இந்தப் பசி முதலியவற்றை வெல்ல வேண்டும். பகவானிடத்தில் பக்தி உண்டாகவேண்டு மென்றால் அவனுடைய அனுக்ரஹத்தினால் தான் உண்டாக வேண்டும். அதில்லாமல் பாகவத ஸஹவாஸம் முதலியன எவையும் கிடைக்கமாட்டா. கிடைக்கினும் பயன்பட மாட்டா. ஒன்று சொல்லுகிறேன் கேள். ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்து ப்ரஜாபதிகளுக்கும் ப்ரபுவான ஸாக்ஷாத் ப்ரஹ்மதேவனும் மஹானுபாவனான ருத்ரனும் ஸ்வாயம்புவ மனுவும் தக்ஷர் முதலிய ப்ரஜாபதிகளும் நைஷ்டிகரான ஸனகாதிகளும், மரீசி அத்ரி அங்கிரஸ்ஸு புலஸ்த்யர் புலஹர் க்ரது ப்ருகு வஸிஷ்டர் முதலாக என் வரையிலுள்ள ப்ரஹ்மவாதிகளான மஹர்ஷிகளும் ப்ருஹஸ் பதி வ்யாஸர் முதலியவர்களும் தவம் வித்யை ஸமாதி இவைகளால் பரமபுருஷனை உபாஸித்துக்கொண்டிருப் பினும், இவனை இத்தகைய ஸ்வரூப ஸ்வபாவங்களுடையவ னென்று அளவிட்டறிந்தவரல்லர். சாகோப சாகமாய்ப் பிரிந்து அறிதற்கரிய கருத்துடையதான வேதத்தில் மேலெழச் சொன்ன பசு புத்ராதி ஐஹிக பலன்களையும் விரும்பி இந்த்ரன் முதலிய தெய்வக் குழாங்களைப் பணிகிற உன்னைப்போன்ற காமஜடர்கள் அப்பரமபுருஷனை அறிய மாட்டார்கள். அவனை அளவுடையவனாக அறிவது எவர்க்குமே முடியாது. அளவிட முடியாதவனென்றறிவ தற்கும் அவனையே உபாஸிக்கவேண்டுமன்றி இந்தக் கேவல கர்மம் உபயோகப்படாது. பகவான் எப்பொழுது

ஆனுஷங்கிகம் ப்ராஸங்கிகம் யாத்ருச்சிகம் முதலிய அஜ்ஞாத ஸுக்ருதங்களில் ஏதேனுமொன்றை ஏறிட்டு அதனால் ஸந்தோஷம் அடைந்து எவனை அனுக்ரஹிக்கிருனே, அவன் அப்பொழுதே லோக வ்யாபாரத்திலும் வைதிகமான யஜ்ஞாதி கர்மங்களிலும் நெடுநாளாய் வேரூறின புத்தியைத் துறப்பான். ப்ராசீனபர்ஹீ! இங்ஙனம் பகவானுடைய அனுக்ரஹமே நன்மைக்குக் காரணமாகையால், அந்தப் பகவானுடைய அனுக்ரஹத்தினுல் ஸத்புருஷ ஸஹவாஸம் நேரப்பெற்ற நீ, ஸ்வர்க்காதி பலன்களால் விளக்கமுற்றுச் செவிக்கினியவைபோல் தோற்றிப் பரவஸ்துவான பரமபுருஷனைத் தீண்டமாட்டாத கேவல கர்மங்களில் அஜ்ஞானத்தினுல் புருஷார்த்த ஸாதன மென்னும் புத்தியைக் கொள்ளவேண்டாம். ரஜஸ் தமஸ் ஸுக்களால் மதிமயங்கி, பூர்வபாகத்தில் யஜ்ஞாதிகர்மங்களால் ஆராத்யனென்றும் உத்தர பாகத்தில் ஜ்ஞானத்தினுல் உபாஸ்யனென்றும் பகவானையே எடுத்துரைக்கிற வேதத்திற்குக் கேவல கர்மங்களில்தான் தாத்பர்யமென்று சொல்லுகிறவர்கள் அவ்வேதத்தின் உட்கருத்தான பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை அறியாதவர்களே. அவர்கள் ஆத்ம ஸ்வரூபத்தையும் அறிந்தவரால்லர். தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்த மூடர்கள். நீயும் கேவல கர்மஜடனுகிக் கிழக்கு நுனியாகப் பரப்பின தர்ப்பங்களால் பூமண்டலத்தையெல்லாம் மறைத்துப் பல யாகங்களைச் செய்து, பல ஜந்துக்களை ஹிம்ஸித்தோமே யென்று வருந்த வேண்டியிருக்க, அஃதின்றி நாம் பெரிய பெரிய யாகங்கள் செய்தோமென்று துரபிமானங் கொண்டு கர்வித்து வேதத்தில் பகவானுடைய ஆராதனமாக விதித்த கர்மங்களின் ஸ்வரூபத்தை அறியாதிருக்கின்றனை. பகவானுக்கு ஸந்தோஷத்தை விளைக்குங் கர்மமே கர்மமாம். ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாய் ஜகத்காரணனுமான பகவானை உள்ளபடி அறிவிக்கும் வித்யையே வித்யையாம். அந்த ஸர்வேஶ்வரனுடைய பாதமூலமே ரக்ஷகம். ஸமஸ்த

ப்ராணிகளுக்கும் அதினின்றே க்ஷேமம் உண்டாகுமன்றி மற்ற எதனாலும் உண்டாகாது. பரமாத்மாவான அந்த ஸர்வேச்வரன் தன்னைப் பற்றினவர்களுக்கு மிகவும் அன்பனாயிருப்பான். அவர்களுக்கு எவ்வித பயமும் உண்டாகாது. இங்ஙனம் ஸர்வேச்வரனே பாதத்வமென்றும் அவனே ஹிதனென்றும் அவனே சிறந்த புருஷார்த்தமென்றும் எவன் அறிகிறானோ, அவனே அறிஞனென்று கூறப்படுவான். அவனே பிறருடைய அஜ்ஞானத்தைப் போக்குமாசார்யன். அவனே ஸர்வேச்வரன். புருஷர்களில் சிறந்த ப்ராசீனபர்ஹி! நீ ஜ்ஞானத்தைப்பற்றி வினவினை யல்லவா? அதற்கு மறுமொழி கூறினேன். உன்னுடைய ஸந்தேஹம் தீர்ந்ததல்லவா? மன்னவனே! பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட ஒரு ரஹஸ்யம் சொல்லுகிறேன், கேள். புஷ்பங்களுக்கிடமான ஆச்ரமத்தில் ஒரு ம்ருகம் தன் பேடையுடன் கூடி அதினிடத்தில் மிகுந்த அநுராகங் கொண்டு வண்டினங்கள் பாடும் பாட்டில் ப்ரீதியுடன் காது கொடுத்து எதிரே யிருக்கிற கொடிய செந்நாய்களை எண்ணாமல் போகின்றது. அதைப் பின்பற்றி வேடன் பாணத்தினால் அடிக்கின்றான். அந்த மருகத்தின் ஸ்வரூபத்தை ஆலோசிப்பாயாக. இதன் கருத்தை விவரித்துச் சொல்லுகிறேன், கேள். ஜீவன், புஷ்பம் போன்ற பெண்டிர்களோடிணங்கி வாழ்க்கைக்கிடமான க்ருஹஸ்தாச்ரமத்தில் இருந்து, ஜிஹ்வேந்த்ரியம் உபஸ்தேந்த்ரியம் முதலிய இந்த்ரியங்களால் அநுபவிக்கக்கூடிய காமபோகங்களை விரும்புகிறான். அவை புஷ்பத்திலுள்ள தேன் துளிபோல் அற்பமென்றும் ஜன்மாந்த்ரத்தில் பலன்களை விரும்பிச் செய்த கர்மங்களுக்குப் பலனாக ஏற்பட்டவை யென்றும் நினைக்காமல் இவை மேலான புருஷார்த்தமென்றும் அவற்றை யெல்லாம் தானே வருந்தித் தேடவேண்டுமென்றும் அபிமானித்து அதற்காகப் பல யத்னங்களைச் செய்கின்றான். பெண்டிர்களை மணம்புரிந்து அவரிடத்தில் மிகுந்த அநுராகத்தை ஏற்றுக்கொள்கின்றான். வண்டு

களின் ஜங்காரம்போல் மிகவும் மனத்தை இழுப்பதான பெண்டிர்களின் பேச்சுக்களை ப்ரீதியுடன் செவி கொடுத்துக் கேட்கிறான். இரவும் பகலுமான காலம் செந்நாய்போல் தனது வாழ்நாளைப் பறிப்பதை அறியாமல் காம ஸுகங்களை அனுபவிக்கிறான். வேடன் பின்னால் நின்று பாணத்தினால் ம்ருகத்தை அடிப்பதுபோல், அவனை யமன் தூரத்தி னின்றே மரணமாகிற பாணத்தினால் அடிக்கிறான். இங்ஙனம் ஸம்ஸாரத்தில் உழல்கின்ற ஆத்மாவை ஆலோசிப்பாயாக. அப்படிப்பட்ட நீ ம்ருகத்தின் வ்ருத்தாந்தத்தை ஆலோசித்து உன் ஹ்ருதய குஹையில் மனத்தை அடக்குவாயாக. செவிகளில் பட்டுக் கேவல கர்மங்களில் ப்ரீதியை விளைக்கின்ற வேதத்தில் நீ கொண்டிருக்கும் கருத்தைத் துறப்பாயாக. பரமபுருஷனை ஆராதிக்கவேண்டுமென்பதே அவ் வேதத்தினுடைய உட்கருத்தென்பதை உணர்வாயாக. காமக் கலவியில் கால் தாழ்ந்து ஆத்ம ஸ்வரூபத்தை அழிக்கும் தன்மையுள்ள அஸத்துக்களின் பேச்சுக்களையே அடிக்கடி கேட்க இடங்கொடுப்பதும் பெண்டிர்களின் ஸஹவாஸத்திற்கிடமுமான க்ருஹஸ்தாச்ரமத்தைத் துறப்பாயாக. பற்றற்றவர்களுக்கு இஷ்டங்களை நிறைவேற்றிக் கொடுக்கும் உபாயமான பரமபுருஷனைச் சரணம் அடைவாயாக. இங்ஙனம் மெல்ல மெல்ல ஸம்ஸார மார்க்கத்தினின்று மீண்டு வருவாயாக' என்றார். இங்ஙனம் நாரத முனிவர் மொழிந்ததைக் கேட்டு ப்ராசீனபர்ஹியென்னும் மன்னவன் 'அந்தணர் தலைவரே! ஆத்மஸ்வரூபத்தைப் பற்றி நீர்மொழிந்ததையெல்லாம் கேட்டேன். இவ்விஷயங்களை எங்கள் உபாத்யாயர்கள் அறிந்திலர் போலும். தெரியுமாயின், எனக்கு ஏன் சொல்லாதிருப்பார்கள்? 'நமது உபாத்யாயர் சொல்லாத விஷயத்தை இவர் சொல்லுகிறாரே' இது உண்மையோ அல்லவோ என்று எனக்குப் பெரிய ஸந்தேஹம் உண்டாயிருந்தது. இப்போது அதுவும் தீர்ந்தது. இவ்விஷயம் மிக்க ரஹஸ்யமாகையால் அவர்கள் இதை அறிந்திலர். ஆனால் இவ்

விஷயத்தில் எனக்கு ஒரு ஸம்சயம் உண்டாயிருக்கின்றது. இவ்விஷயம் இந்த்ரியங்களால் அறியக்கூடியதன்று. ஆகையால் இதில் ரிஷிகளும் மதிமயங்குகிறார்கள். மூடனாகிய எனக்கு ஸம்சயம் உண்டாவது யுக்தமே. அந்த ஸம்சயத்தைச் சொல்லுகிறேன். ஜீவன் இவ்வுலகத்தில் எந்த தேஹத்தினால் புண்ய பாப ரூபமான கர்மங்களைச் செய்கின்றானோ, அத்தேஹத்தை இவ்விடத்திலேயே துறந்து பரலோகம் சென்று தன்னுடைய கர்மத்திற் குறியபடி சேர்ந்த வேறு தேஹத்துடன் ஸுக துக்கங்களை அடிக்கடி அனுபவிக்கிறான். இங்ஙனம் வேதங்களை உணர்ந்த உம்மைப்போன்ற பெரியோர்கள் ஆங்காங்குச் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஸுக துக்கங்களுக்குக் காரணமென்று பெரியோர்கள் சொல்லுகிற புண்ய பாப கர்மங்களை ஜனங்கள் செய்கின்றார்கள். அவை அடுத்த க்ஷணத்திலேயே கண்ணுக்குத் தெரியாமல் மறைகின்றன. ஆகையால் அவை எப்படி ஸுக துக்கங்களுக்குக் காரணமாகக் கூடும். இதுவே எனக்குள்ள ஸம்சயம். இதைப் போக்கவேண்டும்' என்றான். அதற்கு நாரதர் சொல்லுகிறார்:—ஜீவன் பூர்வ ஜன்மத்தில் எந்த தேஹத்தினால் புண்ய பாபங்களைச் செய்கின்றானோ, அந்த தேஹத்தைத் துறந்தே பரலோகம் போகின்றானாகையால் புண்ய பாபங்களுக்கிடமான தேஹம் போனபின்பு அதைப் பற்றின ஸுக துக்கங்கள் ஜீவனுக்கு எங்ஙனம் உண்டாகக் கூடுமென்றும், செய்த தர்மம் உடனே நசித்துப் போகிறதாகையால் அது ஸுக துக்கங்களுக்கு எங்ஙனம் காரணமாகுமென்றும் ஸந்தேஹிக்கின்றனை. இதற்கு ஸமாதானம் சொல்லுகிறேன், கேள். ஜீவன் புண்ய பாப கர்மங்களைச் செய்வதற்குக் காரணம் மனம். அவன் அம்மனத்தோடு கூடவே பரலோகம் சென்று தான் செய்த கர்மங்களுக்குத் தகுந்தபடி ஸுக துக்கங்களை அனுபவிக்கிறான். ஜீவன் ஸ்வப்னத்தில் படுத்திருக்கின்ற தேஹம் ப்ராணனோ டிருக்கும்பொழுதே அதைத் துறந்து மனத்தில் வாஸனை

ரூபமாய்ப் படிந்திருக்கின்ற கர்மத்தின் பலனை ஸுக துக்கங்களைத் தன்னுடைய தேஹத்தோடொத்த மனுஷ்ய தேஹத்தினாலாவது வேறு தேஹத்தினாலாவது அனுப விக்கின்றான். அங்ஙனமே லோகாந்தரத்திலும் ஜீவன் கர்மபலன்களை அனுபவிக்கத் தடையில்லை. ஒரு க்ஷணத்தில் செய்த கர்மம் மற்றொரு க்ஷணத்தில் புலப்படுகிற தில்லை யென்பது வாஸ்தவமே. ஆயினும் அக் கர்மம் மனத்தில் வாஸனாரூபமாயிருக்கின்றது. ஜீவன் அம்மனத்தோடுகூடவே போகிறானாகையால் கர்மமும் மனத்திலுள்ள வாஸனாரூபமாய் அவனைப் பின்தொடர் கின்றது. மற்றும், ஸர்வஜ்ஞனான ஈச்வரன் ஜீவனுடைய புண்ய பாப கர்மங்களைக் கணக்கிட்டு இன்னின்னவற்றிற்கு இன்னின்ன பலனென்று ஸங்கல்பித்திருக்கிறானாகையால் அவனுடைய ஸங்கல்பத்திற்கு விஷயமான ஜீவன் பர லோகத்தில் புண்ய பாபங்களின் பலன்களை அனுபவிப்பதில் விரோதமில்லை. மற்றும், ஜீவன் தேஹாத்மாபிமானத்தி னால் 'நான் ப்ராஹ்மணன்' என்றும் 'நான் க்ஷத்ரியன்' என்றும் பலவாறு சொல்லிக்கொண்டு என்னுடையதென்று மனத்தினால் அபிமானித்துச் செய்யுங் கர்மம் அவ்வப் பொழுதே நசித்துப்போயினும், பரமபுருஷனுடைய நிக்ர ஹானுக்ரஹ ரூபமான அதன் சக்தி என்றும் மாறாதிருக் கின்றதாகையால் அவ்வழியால் அக்கர்மமும் இருக்கிற தென்று கொள்ளவேண்டும். அக்கர்மத்தின் பலனாக ஈச்வர னுடைய ஸங்கல்பத்தின்படி ஜீவனுக்கு மீளவும் ஜன்மம் உண்டாகின்றது. ஜ்ஞானேந்த்ரியங்களும் கர்மேந்த்ரியங் களும் தத்தம் செயல்களில் ஒருகால் முயற்சிகொள்வதும் ஒருகால் முயற்சிகொள்ளாதிருப்பதும் நமக்குத் தெரிகின்ற தல்லவா? அது மனத்தின் கார்யம். ஜீவனுடைய ஜ்ஞானம் எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்குந் திறமையுடையது. அதை மனமே தடுக்கின்றது. ஜ்ஞானம் வெளியாகும் த்வாரமே மனமென்று கூறப்படுகின்றது. அம்மனம் எந்த இந்த்ரியத்துடன் சேருகின்றதோ, அவ்விந்த்ரியமே தன்

கார்யத்தில் முயற்சி கொள்ளும். மனம் இல்லாதபக்ஷத்தில் எல்லாக் காலங்களிலும் எல்லா இந்த்ரியங்களும் தத்தம் செயல்களில் முயற்சிகொள்ள வேண்டிவரும். அம்மனம் பல செயல்களிலும் ஸஹஜமாய் முயற்சிகொள்கிறதாகை யால், ஜீவன் முன் ஜன்மத்தில் பல செயல்களைச் செய்திருக்க வேண்டுமென்று ஊஹிக்கலாம். ஜீவன் எந்த வஸ்துவை இந்தத் தேஹத்துடன் ஒருகாலும் கண்ணுற் கண்ட தில்லையோ, காதாலும் கேட்டதில்லையோ, அப்படிப்பட்ட வஸ்துவை அவன் ஸ்வப்னத்திலும் காண்பதரிது. ஆன பின்பு அதை அவன் ஆசைப்படுவதற்கு ப்ரஸக்தியே இல்லை. ஆயினும் அவ்வஸ்துவும் ஜீவனுக்கு ஒருகால் மனத்தில் தோற்றுகிறது. ஆகையால் ஜீவன் முன் தேஹத்தில் பல வஸ்துக்களை அனுபவித்த மனத்தோடுகூடவே தேஹாந்த ரத்தைப் பெறுகிறானென்பதை நம்புவாயாக. அனுப விக்காத வஸ்து ஒருகாலும் மனத்தில் தோன்றாது. மனத்தி னுடைய வாஸனையைக் கொண்டே ஜீவனுடைய ஜன்மாந்தர உருவங்களின் ஸ்வரூபத்தையும் மேல்வரக்கூடிய உருவங் களையும் அப்பொழுதுள்ள உருவங்களின் ஸ்வரூபத்தையும் தெளிவாக அறியலாம். மன்னவனே! உனக்கு க்ஷேமம் உண்டாகுக. இதையெல்லாம் நன்குணர்வாயாக ஜீவனுக்கு இந்த ஜன்மத்தில் கண் காதுகளால் அனுபவிக்கப்படாத வஸ்துவும் ஒருகால் மனத்தில் தோற்றுகிறதாகையாலும், 'நான் இன்ன தேசத்தில் வஸிக்கவேண்டும்' என்றும் 'என் னுடைய காலம் இங்ஙனம் நடக்கவேண்டும்' என்றும் 'நான் இன்னின்ன செயல்களைச் செய்யவேண்டும்' என்றும் தேச கால கர்மங்களை மனத்தில் நினைக்கிறானாகையாலும் அவன் பூர்வ ஜன்மத்தில் அவ்வப்படி இருந்தானென்று ஊஹிக்க லாம். முன் ஜன்மத்தில் இந்த்ரியங்களுக்கு விஷயமான வஸ் துக்களெல்லாம் க்ரமமாக மனத்தில் வாஸனாரூபமாய்ப் படிந்திருக்கின்றன. அவற்றையே இந்த ஜன்மத்தில் ஜீவன் ஆசைப்படுகின்றான். அவ்வாஸனை மாறுகையில் அவ் வஸ்துக்களின் தோற்றமும் மறைகின்றது. ஆகையால்

ப்ராணிகள் அனைவரும் மனமுடையவர்கள். மனம் ஸத்வ குணம் தலையெடுத்துப் பகவானைப் பணிவதில் முயற்சி கொள்ளுமாயின், சந்த்ரன் உதிக்கும்பொழுது அவனுடைய கிரணங்களோடு இருளும் கலந்திருப்பதுபோல், முதலில் அஜ்ஞானமும் ஜ்ஞானத்தோடு கலந்து தோற்றும். ஜீவன், புத்தி மனம் இந்த்ரியம் சப்தாதி விஷயம் ஸத்வாதி குணம் இவைகளால் மூடப்பெற்றிருக்கும் வரையில் அவனுக்கு அஹங்கார மமகாரங்களாகிற அஜ்ஞானம் நீங்காது. அது அவனுடைய ஸ்வரூபத்தை அதுவரையில் மறைத்துக் கொண்டேயிருக்கும். ஜீவன் அஜ்ஞானத்தினால் நானென்று நினைக்கும் தேஹம், உறக்கம் மூர்ச்சை துக்கம் மரணம் ஜ்வரம் முதலிய அவஸ்தைகளில் ஜ்ஞானஸங்கோசத்தினால் அவனுக்குத் தோற்றுகிறதில்லை. அங்ஙனமே உண்மையான ஆத்மாவும் அஹங்கார மமகாரங்களால் ஜ்ஞான ஸங்கோசத்தை அடைந்த அவனுக்குத் தோற்றுகிறதில்லை. உறக்கம் முதலிய அவஸ்தைகளிலும் இந்த்ரியங்களும் மனமும் இருக்கின்றனவாகையால் தேஹத்தில் நானென்னும் புத்தி ஏன் உண்டாகிறதில்லை யென்னில், யௌவனப் பருவமுடைய வனுக்கு இந்த்ரியங்களும் மனமும் வ்யக்தமாயிருப்பது போல், கர்ப்பம் பால்யம் உறக்கம் முதலிய தசைகளில் அவ்விந்த்ரியங்களும் மனமும் வ்யக்தமா யிருக்கிறதில்லை. அமாவாஸ்யையின்று சந்த்ரகலை புலப்படாதிருப்பதுபோல் அத்தசைகளில் அவை இருந்தும் இல்லாதவைகள்தான். அத்தசைகளில் இந்த்ரியங்களும் மனமும் நிறைவற்றிருக்கையால் சப்தாதி விஷயங்களின் அனுபவம் இல்லையாயினும், அதுவரையில் அவற்றை அனுபவித்துக்கொண்டிருந்தாலுகையால் ஜீவனுக்கு அவற்றின் வாஸனை மாறுகிறதில்லை. அதனால் ஸம்ஸாரம் நீங்குகிறதில்லை. ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்கள் விழித்துக்கொண்ட பின்பு புலப்படாமற் போயினும், அவை மங்கலமாயிருப்பின் ஸுகத்தையும், அமங்கலமாயிருப்பின் துக்கத்தையும் விளைப்பதுபோல், முன்பு அனுபவித்த சப்தாதி விஷயங்கள் வாஸனையின்

மூலமாய் கர்ப்பம் பால்யம் முதலிய தசைகளிலும் ஸுக துக்கங்களுக்கிடமான ஸம்ஸாரத்தையே தொடரச்செய்கின்றன. இங்ஙனம் பஞ்ச பூதங்களின் பரிணாமமாய்ப் பதினொரு இந்த்ரியங்களும் ஐந்து ப்ராணன்களுமாகிய பதினாறு விரிவுகள் அமைந்து ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் அடங்கினதுமாகிய இவ்வுருவமே சரீரமென்றும், நானென்கிற அறிவுடன் தோற்றுகிற இப்பொருளே ஜீவனென்றும் கூறப்படும். இத்தேஹத்தோடு கூடின இந்த ஜீவனே பல தேஹங்களைப் பெறுகின்றான். ஆயுள் முடிவில் அவ்வவற்றைத் துறக்கின்றான். தான் பெற்ற தேஹம் இனிதாயிருக்குமாயின், நம்முடைய தேஹம் அழகாயிருக்கிறதென்கிற ஸந்தோஷத்தையும், அத்தேஹத்தினால் நாம் ஸுகத்தை அனுபவிக்கலாமென்கிற ஸந்தோஷத்தையும், அத்தேஹம் அனிஷ்டமாயிருக்குமாயின் நம்முடைய தேஹம் நன்றாயில்லையே யென்கிற சோகத்தையும், அத்தேஹத்தைத் துறக்கும்பொழுது பயத்தையும் துக்கத்தையும் அடைகிறான். நீர்ப்புழு ஒரு புல்லில் ஒட்டிக்கொண்டு அதை விட்டுப் போக விரும்பாமல் அதையே உறுதியாய்ப் பிடித்துக் கொண்டிருப்பதுபோல், ஜீவன் மரணம் அடையும்பொழுது அச்சரீரத்தில் அபிமானத்தை விடமாட்டான். மரணம் அடைந்த பின்பும் மற்றொரு சரீரஸம்பந்தம் நேரும் வரையிலும் முன்சரீரத்திலுண்டான அபிமானம் அவனுக்கு நீங்காது. வேறு சரீரம் பெற்ற பின்பு முன் சரீரத்தைப் பற்றின நினைவு கர்மத்தினால் மறைக்கப்படுகின்றது. ஆத்மஸ்வரூபத்தை அறியும் வரையில் ஜீவனுக்குச் சரீராபிமானம் மாறாது. அதை அறிவானாயின் அவ்வபிமானம் தானே மாறிப்போம். மன்னவனே! ப்ராணிகள் முன் ஜன்மத்தில் இந்த்ரியங்களால் அனுபவித்த சப்தாதி விஷயங்களை மனத்தினால் சிந்தித்துக்கொண்டு அவற்றைப் பெறுதற்காக அடிக்கடி பற்பல கர்மங்களைச் செய்கின்றார்கள். ஆகையால் மனமே அவர்கள் ஜன்மங்களைப் பெறுதற்குக் காரணமாயிருக்கின்றது. கர்மத்தினால் தேஹத்தையும், தேஹ

ஸம்பந்தத்தினால் அஹங்கார மமகாரங்களையும் மாறாமல் பெறுகின்றார்களாகையால் ஜீவாத்மாக்களுக்குக் கர்மத்தைப்பற்றின ஸம்ஸாரபந்தம் தொடர்ந்துகொண்டேயிருக்கின்றது. தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிந்தால்தான் அது நீங்கும். ஆகையால் அவ்வாத்ம ஸ்வரூபத்தை அறியும்பொருட்டு ஜகத்தெல்லாம் பரம புருஷனே யென்னும் நினைவுடன் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துங் காரண புருஷனாகிய ஸர்வேஶ்வரனையே எல்லாவிதத்திலும் சரணம் அடைவாயாக

மைத்ரேயர் சொல்லுகிறார்:—பகவானுடைய பக்தர்களில் சிறந்த நாரத முனிவர் ப்ராசீனபர்ஹிக்கு ஜீவாத்ம பரமாத்மாக்களின் ஸ்வரூபத்தை அறிவித்து அவனிடம் விடைபெற்றுக் கொண்டு ப்ரஹ்மலோகம் போனார். அப்பால் ராஜர்ஷியாகிய ப்ராசீனபர்ஹியும் பிள்ளைகளை ப்ரஜைகளைப் படைக்கவும் காக்கவும் ஆஜ்ஞாபித்துத் தவம் செய்யும் பொருட்டுக் கபிலாஶ்ரமத்திற்குப் போனான். அவ்விடத்தில் அம்மன்னவன் இந்த்ரியங்களை வென்று மனவூக்கத்துடன் பகவானுடைய பாதாரவிந்தங்களை த்யானித்துக்கொண்டிருந்து பக்தியோகம் கைகூடப்பெற்று அவனோடு ஸாரூப்யத்தை அடைந்தான். தேவர்ஷி உபதேசித்த இந்த ஜ்ஞானோபதேசத்தைச் சொல்லுகிறவனும் கேட்கிறவனும் ஸம்ஸாரத்தினின்று விடுபடுவார்கள். இது பகவானுடைய புகழை உட்கொண்டதாகையால் உலகத்தையெல்லாம் புனிதம் செய்யும். இது தேவர்ஷியான நாரதருடைய முகத்தினின்று வெளியானது; மன மலங்களையெல்லாம் போக்கி அதைப் பரிசுத்தமாக்கும்; எல்லாவற்றிலும் சிறந்த பலனைக் கொடுக்கும் இதைப் பிறர் சொல்லக்கேட்டு இதன் கருத்தை அறிபவன் ஸமஸ்த பந்தங்களும் தீரப்பெற்று மீளவும் இந்த ஸம்ஸாரத்தில் விழுந்தலையமாட்டான். ஆத்ம ஸ்வரூபத்தை மறைத்துச் சொல்லுகிற இந்த உபாக்யானம்

அற்புதமாயிருக்கும். இதில் ஜீவனுக்கு க்ருஹஸ்தாஶ்ரம ரூபமான ஸம்ஸாரத்தினால் விளையும் அனர்த்தங்களெல்லாம் தெளிவாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. மற்றும், ஜீவன் பரலோகத்திற்சென்று கர்மபலன்களை அனுபவிக்கும் விஷயத்தில் வரும் ஸந்தேஹங்களெல்லாம் தீர்க்கப்பட்டன. இத்தகைய உபாக்யானத்தை உனக்கு மொழிந்தேன். இருபத்தெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ப்ரசேதஸர்கள் திரும்பிவந்து ராஜ்யமாளுதல்.

ஸ்ரீவிதுரர் சொல்லுகிறார்:—ப்ராஹ்மர்ஷியான மைத்ரேயரே! ப்ராசீனபர்ஹியின் புதல்வர்களான ப்ரசேதஸர்கள் தவம் செய்யப்போனார்களென்றும், அவர்களுக்கு ருத்ரன் ஒரு ஸ்தோத்ரத்தை உபதேசித்தானென்றும் உரைத்தீர். அவர்கள் அந்த ஸ்தோத்ரத்தினால் பரமபுருஷனைக் களிப்பித்து எந்த ஸித்தியைப் பெற்றார்கள்? மோக்ஷங் கொடுக்கவல்ல பரமபுருஷனுக் கன்பனாகிய ருத்ரன் திடீரென்று தோற்றி அனுக்ரஹம் செய்யப்பெற்ற அவர்கள் மோக்ஷகதியைப் பெற்றிருப்பார்களென்பதில் ஸந்தேஹமில்லை. அதற்கு முன்பு இந்த லோகத்திலாவது பரலோகத்திலாவது அவர்கள் பெற்ற நன்மையை எனக்குச் சொல்வீராக. ப்ருஹஸ்பதியின் சிஷ்யராகிய உமக்குத் தெரியாதது ஒன்றுமே இல்லை.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—“தந்தையின் கட்டளைப்படி நடப்பவரான ப்ரசேதஸர்கள் ஸமுத்ர ஜலத்தினிடையில் ஜப யஜ்ஞத்தினாலும் த்யானத்தினாலும் அபஹதபாப்மாவான பரமபுருஷனை ஆராதித்தார்கள். ஆதிமூலமாகிய அப்பரமபுருஷன் பதினாயிரமாண்டுகள் கழிந்த பின்பு தன் தேஹகாந்தியால் அவர்களுடைய வருத்தத்தைப் போக்கிக்கொண்டு சுத்த ஸத்வமயமான திருமேனியுடன் அவர்களுக்கு ப்ரத்யக்ஷமானான். அவன் கருத்மானுடைய தோளின்மேல் ஏறிக்கொண்டு மேரு பர்வதத்தின் சிகரத்

தில் படிந்த நீலமேகம்போன்று பொன்னிறமுடைய பட்டு வஸ்த்ரந் தரித்துக் கழுத்தில் கௌஸ்துபமணி அணிந்து தன் தேஜஸ்ஸினால் திசைகளை யெல்லாம் இருளறச் செய்து கொண்டு விளங்கினான். அவனுடைய முகம் பேரொளி யுடைய பொற்குண்டலங்களால் விளங்கும் கபோலங்கள் அமைந்து ரமணீயமாயிருந்தது. அவனுடைய கிரீடம் ஜ்வலித்துக்கொண்டிருந்தது. சங்கு சக்ரம் முதலிய எட்டு ஆயுதங்களைத் தரித்த கண நாயகர்களும் ஸனகஸனந்த னாதி முனிவர்களும் ப்ரஹ்மதேவன் முதலிய தேவதை களும் அவனைத் தொடர்ந்து வந்தார்கள். கருடர்களும் கின்னரர்களும் அவனுடைய புகழைப் பாடிக்கொண்டிருந் தார்கள். திரண்டுருண்டு நீண்ட எட்டுப் புஜங்களினிடை யில் வீற்றிருக்கின்ற ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன் சோபையில் பொருகின்ற வனமாலையால் அவன் திகழ்வுற்றிருந்தான். இத்தகைய அவ்வாதி புருஷன் கருணை நிறைந்த கண்ணோக் கத்துடன் தன் பக்தர்களான ப்ரசேதஸர்களை நோக்கி மேக கர்ஜனைபோல் கம்பீரமான ஒலியுடன் மொழிந்தான். "ராஜ குமாரர்களே! என்னிடத்தில் வரம் வேண்டிக் கொள்வீர்க ளாக. உங்களுக்கு க்ஷேமம் உண்டாகுக. நீங்களெல்லோரும் ஸ்னேஹத்துடன் ஒரே தர்மத்தை அவலம்பித்து நடத்தி னீர்கள். உங்களுடைய ஸ்னேஹத்தினால் நான் ஸந்தோ ஷம் அடைந்தேன். காலை மாலைகளில் படுக்கையில் உங்களை நினைப்பவன் ப்ராதாக்களிடத்தில் மிகுந்த ப்ரீதியும் ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் ஸ்னேஹமும் உண்டாகப்பெறுவான். காலை மாலைகளில் மனவூக்கத்துடன் இந்த ருத்ரகீதத்தினால் என்னை ஸ்தோத்ரம் செய்பவர்க்கு அவர் விரும்பும் வரங் களையும் சிறந்த மதியையும் கொடுப்பேன். நீங்கள் தந்தை யின் கட்டளையை மனக்களிப்புடன் அங்கீகரித்தீர்களாகை யால் உங்கள் கீர்த்தி ரமணீயமாய் மூன்று லோகங்களிலும் நிரம்பப்போகின்றது. நான் ஒன்று சொல்லுகிறேன், கேளுங்கள். விப்ருதரென்பவர் ஒருவர் இருக்கிறார். அவருக்குக் கண்டுவென்று ஓர் புதல்வர் உண்டு. அவர்

குணங்களில் தந்தைக்குக் குறையாதவர்; பெரும்புகழர். அவர் தனது ஸக்தியால் மூன்று லோகங்களையும் நிறைக்கப் போகிறார். அவரிடத்தில் ப்ரம்லோசையென்னும் அப்ஸர மடந்தை அழகான கண்களையுடைய ஒரு பெண் குழந்தையைப் பெற்றுப் போகட்டுப்போகையில், அதை வ்ருக்ஷங்கள் எடுத்து வளர்த்தன. அக்குழந்தை பசியினால் வருந்தி அழுகையில் வ்ருக்ஷங்களுக்கு ராஜனாகிய சந்த்ரன் அம்ருதப்பெருக்குடைய தனது ஆள் காட்டி விரலை அதன் வாயில் வைத்து மன இரக்கத்தினால் அம்ருதபானம் செய்வித்தான். என் பக்தனாகிய உங்கள் தகப்பன் உங்களுக்கு ப்ரஜைகளைப் படைக்கும்படி கட்டளையிட்டானையால் அதை நிறைவேற்ற முயன்ற நீங்கள் கணவனை விரும்புகின்ற அப்பெண்மணியை மணம்புரிவீர்களாக தாமதம் செய்ய வேண்டாம். நீங்களெல்லோரும் சிறிதும் மாறாத நடத்தையும் சீலமும் குணமும் உடையவராகி ஒருவர்க்கொருவர் ஸ்னேஹத்துடனிருக்கின்றீர்கள். அழகிய இடையுடைய அப்பெண்மணியும் உங்கள் தர்ம சீலங்களுக்கொத்து உங்களெல்லோரிடத்திலும் ஒரே விதமான மனக்கருத்துடையவளாயிருப்பாள். நீங்கள் எனது அனுக்ரஹத்தினால் தேவமானத்தினால் அநேகமாயிரமாண்டுகள் வரையில் சிறிதும் மாறாத இந்த்ரிய சக்தியுடன் பூமியிலுள்ள போகங்களையும் தேவலோகத்துப் போகங்களையும் அனுபவிக்கப் போகிறீர்கள். பிறகு என்னிடத்தில் மாறாத பக்தி உண்டாகப்பெற்று அதன் மஹிமையால் காமம் க்ரோதம் முதலிய மலங்களெல்லாம் கழிந்து சுத்த மனத்தராகி நரகம் போன்ற இந்த ஸம்ஸாரத்தில் வெறுப்புற்று என்னுடைய லோகத்தை அடையப்போகிறீர்கள். என் பக்தர்கள் க்ருஹஸ்தாஸ்ரமத்தில் புகுந்து காம ஸுகங்களை அனுபவித்துக்கொண்டிருப்பினும், ஒரு பலனையும் விரும்பாமல் கர்மங்களை அனுஷ்டிப்பதும் என்னுடைய கதையைக் கேட்பதும் சொல்லுவதுமாயிருந்து காலத்தைக் கழிக்கும் தன்மையுள்ள அவர்களுக்கு வீடு வாசல் முதலியன மேன்

மேலும் பந்தத்தை விளைப்பவையாக மாட்டா. வேதங்களை உணர்ந்து என் ஸ்வரூப ரூப குண விபூதிகளை உள்ளபடி அறிந்து என் கதைகளைச் சொல்லுந் திறமையுடைய பெரியோரிடம் சென்று என் கதைகளைக் கேட்பவருடைய நெஞ்சில் ஸர்வஜ்ஞனும் ஸர்வேச்வரனுமாகிய நான் க்ஷணந் தோறும் புதிது புதிதாய்த் தோற்றிக்கொண்டிருப்பேன். பரப்ரஹ்மமென்று கூறப்படுகிறவன் நானே. என்னை அடைந்தவர்கள் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமிக்கையும் பிள்ளை பெண்டிர் வீடு வாசல் முதலியவற்றை என்னுடைய தென்று ப்ரமிக்கையுமாகிற மதிமயக்கம் உண்டாகப்பெற மாட்டார்கள். பிள்ளை பெண்டிர் முதலிய பந்துக்கள் மரணம் அடையினும் சோகிக்கமாட்டார்கள். ஸாம்ஸாரிக ஸுகங்களைப்பெற்று அதற்காக ஸந்தோஷத்தையும் அடையமாட்டார்கள்" என்றான்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—தர்ம அர்த்தகாம மோக்ஷங்களென்கிற புருஷார்த்தங்களை நிறைவேற்றிக் கொடுக்குந்தன்மையுள்ள மிகுந்த நண்பனாகிய பகவான் இங்ஙனம் சொல்லக்கேட்ட ப்ரசேதஸர்கள் அம்மஹானு பாவனுடைய காட்சியால் ரஜஸ் தமோ குணங்களின் கார்ய மான காமம் க்ரோதம் முதலிய மன மலங்களெல்லாம் தொலையப்பெற்றுக் கைகூப்பிக்கொண்டு தழதழத்த உரை யுடன் அவனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார்கள்:— "மஹானுபாவனே! நீ உன்னுடைய பக்தர்களின் வருத்தங்களை யெல்லாம் போக்குந் தன்மையன். நீ கம்பீரமான குணமுடையவனென்பதை உன்னுடைய நாமங்கள் நிரூபிக்கின்றன. நீ வாக்குக்கும் மனத் திற்கும் எட்டாத வேகமுடையவன். உன் வழி ஸமஸ்த இந்த்ரியங்களுடைய மார்க்கங்களுக்கும் விஷயமாகாதது. உனக்கு நமஸ்காரம். நீ புண்ய பாப கர்மங்கள் தீண்டப் பெறாமல் பரிசுத்தனாயிருக்கிறாய்; நீ உன் ஸ்வரூபத்தையே அனுபவித்துப் பசி தாஹம் முதலிய ஊர்மிகள் எவையும்

நீண்டப்பெருதவனுயிருக்கிருய். உன்னைப் பணிகிறவர்கள் ஆத்மஸ்வரூபத்தை அறியாதிருப்பினும் நீ அவர்கள் மனத்தில் நின்று ஆத்மஸ்வரூபத்தையும் தேஹ ஸ்வரூபத்தையும் உள்ளபடி அறிவித்து அவர்கட்கு மிகவும் அன்பனுயிருக்கிருய். நீ ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ப்ரளயங்களை நடத்த விரும்பி உன் ஸங்கல்பத்திஞல் ரஜோகுணம் தலையெடுக்கப்பெற்ற ப்ரஹ்மாவைப் படைத்து அவனுக்கு அந்தர்யாமியாயிருந்து ஸ்ருஷ்டியையும் தமோகுணம் தலையெடுத்த ருத்ரனைப் படைத்து அவனுக்கு அந்தர்யாமியாயிருந்து ப்ரளயத்தையும் உன் ஸங்கல்பத்திஞல் அப்ராக்ருதமான திவ்ய மங்கள விக்ரஹங்களைக்கொண்டு ஸ்திதியையும் நடத்துகிருய். உனக்கு நமஸ்காரம். ஜகத் ரக்ஷணத்திற்காகக் கொள்கிற உன்னுடைய உருவங்களெல்லாம் சுத்த ஸத்வமயமாயிருக்கும். நீ உன்னைப் பற்றினுருடைய ஸம்ஸாரபந்தத்தைப் போக்குந் தன்மையன். நீ பாபமற்ற மனத்திற்கே விஷயமாவாய். நீ வாஸுதேவனென்னும் பேர் பூண்டவன். நீ பூமண்டலத்திற்கு க்ஷேமம் செய்பவன்; உன் பக்தர்களுக்கு அனிஷ்டத்தைப்போக்கி இஷ்டத்தை நிறைவேற்றிக்கொடுப்பவன். உனக்கு நமஸ்காரம். நீ தாமரையுந்தியன்; தாமரை மாலை அணிந்தவன்; தாமரை மலர் போன்ற பாதங்களும் திருக்கண்களுமுடையவன். உனக்கு நமஸ்காரம். நீ, தாமரைத்தாதுபோல் பொன்னிறமுடைய நிர்மலமான பீதாம்பரம் உடுத்தவன்; ஸமஸ்த பூதங்களுக்கும் ஆதாரன்; எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிப்பவன்; உனக்கு நமஸ்காரம். வருத்தங்களை யெல்லாம் போக்கவல்ல இந்த உன்னுருவத்தை வருந்தின எங்களுக்குக் காண்பித்தனை. நீ செய்யவேண்டிய அனுக்ரஹம் வேறு என்னிருக்கின்றது? அமங்களத்தைப் போக்குந் தன்மையனே! வாத்ஸல்யமுடைய பெரியோர்கள் மன இரக்கத்திற்கிடமான தம்மடியார்களை நம்முடையவரென்று தகுந்த காலத்தில் தம் புத்தியில் நினைப்பார்களாயின், அவர்கள் அவரிடத்தில் செய்யவேண்டியது அவ்வளவே. நீ அங்ஙனம் நினைப்

பாயாயின் க்ஷுத்ர ஜந்துக்களும் தம்முடைய பாபங்க ளெல்லாம் தீரப்பெறுவார்கள். 'அது வேண்டும் இது வேண்டும்' என்று பற்பலவற்றையும் விரும்புகிற எங்கள் மனத்தில் அந்தராத்மாவாயிருக்கிற உனக்கு எங்கள் மன விருப்பம் ஏன் தெரியாது? ஆகையால் எங்கள் விருப்பத்தை நாங்கள் சொல்லவேண்டிய அவஶ்யமில்லை. ஆயினும் சொல்லுகிறோம், கேள். ஜகந்நாத! நீ அருள்புரியவேண்டு மென்பதுவே நாங்கள் விரும்பின வரம். நீ மோக்ஷ மார்க் கத்தை உபதேசிப்பவன். அம்மோக்ஷ மார்க்கமும் நீயே. அப்படிப்பட்ட நீ அருள்புரிவாயாயின் அதைவிட வேறென்ன வேண்டும்? ஆயினும், சேதன அசேதன விலக்ஷணனான உன்னிடத்தினின்று ஒருவரம் வேண்டு கிறோம். உன் விபூதிகளுக்கு முடிவே இல்லை. ஆகையால் உன்னை அனந்தனென்று பாடுகிறார்கள். பாரிஜாத வ்ருக்ஷம் அகப்படுமாயின் வண்டு மற்றொன்றையும் பணியாது. அங்ஙனமே, நாங்கள் உன் பாதாரவிந்தங்களை நேரே பெற்றபின்பு வேறு என்ன வேண்டுவோம்? நாங்கள் உன் மாயையால் தீண்டப்பெற்றுப் புண்ய பாப கர்மத்தின்படி இந்த ஸம்ஸாரத்தில் எவ்வளவு காலம் திரிகின்றோமோ. அது வரையில் ஜன்மங்கள்தோறும் உன் ஸ்வரூப ரூப குண விபூதிகளை அநுஸந்தித்துக்கொண்டு உன்னை மறவா திருக்கும் பாகவதர்களோடு எங்களுக்கு ஸஹவாஸம் நேரு மாக. ஸ்வர்க்க ஸுகத்தையாவது மோக்ஷ ஸுகத்தை யாவது பாகவதர்களோடு ஸஹவாஸம் செய்யுங்காலத்தில் அடங்கின அரைக்ஷணத்தோடாயினும் ஈடாக நினைக்க மாட்டோம். இனி மரணம் அடையுந்தன்மையரான மானிடவர் விரும்பும் ராஜ்யபோகம் முதலிய ஸுகங்களை அதற்கு ஈடாக நினைக்கமாட்டோமென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? பாகவதகோஷ்டியில் செவிக்கினிய வைகளான பகவத் கதைகள் ஓயாமல் நடந்துகொண்டிருக் கும். அக்கதைகளைக் கேட்பதால் சப்தாதி விஷயங்களை அநுபவிக்கவேண்டுமென்னும் விருப்பம் தீரும். பாகவதர்க

ளோடு ஸஹவாஸம் நேருமாயின் ஸமஸ்த ப்ராணிக ளிடத்திலும் வைரமின்றி நட்போடிருக்குந் தன்மை உண்டாகும். எவ்வித பயமும் உண்டாகாது. ஸம்ஸாரத்தில் மனப்பற்றில்லாத ஸத்புருஷர்கள் எப்பொழுதும் பகவானுடைய கதைகளையே பேசிப் பொழுதுபோக்கிக்கொண்டிருப்பார்கள். அந்தக் கதா ப்ரஸங்கங்களில் துறவிகளால் 'நமக்கு இவனே கதி' என்று பற்றப்படும் பகவானான ஸ்ரீமந் நாராயணன் ஸர்வகாலமும் ப்ரஸ்தாவம் செய்யப்பெற்றிருப்பான். கங்காதி புண்ய தீர்த்தங்களைப் பாவனஞ் செய்வதற்காக ஆங்காங்கு உலாவுந் தன்மையரான உன் பக்தர்களுடைய ஸஹவாஸம் ஸம்ஸாரத்தினின்று பயந்த எவனுக்குத்தான் ருசிக்காது? பகவானே! நாங்கள் உனது நண்பனாகிய ருத்ரனோடு க்ஷணகாலம் ஸஹவாஸம் நேரப்பெற்று எவ்விதத்திலும் சிகித்ஸை செய்யமுடியாத ஸம்ஸாரமாகிற வியாதியைப் போக்கும் வைத்யசிகாமணியாகிய உன்னைச் சரணம் அடையப் பெற்றோம். நாங்கள் நன்றாக ஓதினதும், குருக்கள் அந்தணர் மற்றுமுள்ள வ்ருத்தர்கள் ஆகிய இவர்களை அருள்புரியும்படி அனுஸரித்திருந்ததும், பெரியோர்களைப் பணிந்ததும், நண்பர்களையும் உடன் பிறந்தவர்களையும் ஸமஸ்த ப்ராணிகளையும் பொறாமையின்றி ஸந்தோஷப்படுத்தினதும், ஆஹாரமில்லாமல் நெடுநாள் ஜலத்தில் தவம் செய்ததும் இவையெல்லாம் உனக்கு ஸந்தோஷத்தை விளைப்பவையாகும்படி வேண்டுகிறோம். ஸ்வாயம்புவ மனுவும் ப்ரஹ்மதேவனும், ருத்ரனும் ஜ்ஞான யோக கர்மயோகங்களால் தூயமனத்தரான மற்றவரும் உன் மஹிமையின் கரை அறியாதவராயினும் தமது புத்திக்குத் தகுந்தபடி ஸ்தோத்ரம் செய்கின்றார்கள். அங்ஙனமே நாங்களும் எங்கள் புத்திக்குத் தோற்றினவளவு உன்னை ஸ்தோத்ரம் செய்கின்றோம். நீ ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் ஸமமாயிருப்பவன். நீ சுத்தஸ்வரூபன்; பரமபுருஷன்; சுத்த ஸத்வ மூர்த்தி; வாஸுதேவன்; ஷாட்குண்யபூர்ணன்; உனக்கு நமஸ்காரம்" என்று ப்ரசேதஸர்களால் துதி

செய்யப்பெற்ற பகவான் ஸந்தோஷம் அடைந்து சரண்ய னும் வத்ஸலனுமாகையால் அவர்கள் விரும்பினதை யெல்லாம் அங்கீகரித்து அப்படியே ஆகட்டுமென்றான். அவர்கள் தன் தேஹ ஸௌந்தர்யத்தைக் கண்டு த்ருப்தி யுடையாமல் தான் போவதையும் அங்கீகரிக்காதிருக்கை யில், தன்னுடைய லோகம் போய்ச் சேர்ந்தான். அப்பால் ப்ரசேதஸர்கள் ஸமுத்ர ஜலத்தினின்று கரையேறி, ஸ்வர்க் கத்தைத் தகையவேண்டுமென்னும் எண்ணங்கொண்டவை போல் உயர்ந்திருக்கிற வ்ருக்ஷங்களால் பூமியெல்லாம் மறைக்கப்பட்டிருப்பது கண்டு அந்த வ்ருக்ஷங்களின்மேல் கோபங் கொண்டார்கள். அவர்கள் பூமியில் கொடி செடி முதலியன எவையுமில்லாமல் சீர்திருத்த விரும்பி ப்ரளய காலத்தில் உண்டாகும் அக்னியையும் வாயுவையும் நிகர்த்த அவ்விரண்டையும் தமது முகத்தினின்று கோபத்தினால் வெளியிட்டார்கள். அவற்றால் பூமியிலுள்ள வ்ருக்ஷங்க ளெல்லாம் பஸ்மமாவதைக் கண்டு ப்ரஹ்மதேவன் வந்து நல்வார்த்தைகளால் அவர்களுடைய கோபத்தை அணைத் தான். அப்பொழுது பஸ்மமானவைபோக மிகுந்த வ்ருக்ஷங் கள் பயந்து ப்ரஹ்மதேவனால் மொழியப்பெற்றுத் தாம் பெண்ணாக அபிமானித்து வளர்த்துவந்த அப்பெண் மணியை அந்த ப்ரசேதஸர்களுக்குக் கொடுத்தன. அவர் களும் ப்ரஹ்மாவின் கட்டளையை அங்கீகரித்து மாரிஷை யென்னும் பேருடைய அப்பெண்மணியை மணம்புரிந்தார் கள். ப்ரஹ்மதேவன் புதல்வராகிய தக்ஷர் பெருமையுள்ள ருத்ரனை அவமதித்த தோஷத்தினால் இவளுக்குப் பிள்ளை யாகப் பிறந்தார். அவர் கடந்த சாக்ஷுஷ மன்வந்தரத்தில் ஜகத்தெல்லாம் கால ஸ்வரூபியான பகவானால் ஸம்ஹரிக்கப் பட்டிருக்கையில் ஈஸ்வரனால் தூண்டப்பெற்று இஷ்டமான ப்ரஜைகளைப் படைத்தார். அவர் பிறக்கும்பொழுதே தன் தேஹகாந்தியால் ஒளியுடைய ஸமஸ்த பூதங்களின் தேஜஸ் ஸையும் பறித்தார். அதனாலும் யஜ்ஞாதி கர்மங்களை அனுஷ்டிப்பதில் திறமையுடையவராகையாலும் ஜனங்கள்

அவரைத் தக்ஷரென்றே அழைத்தார்கள். பரத வம்சத்தவர்களில் சிறந்தவனே! ப்ரஹ்மதேவன் அவரை ப்ரஜைகளைப் படைக்கவும் அவற்றைக் காக்கவும் ஏற்படுத்தினன். அவர் மரீசி முதலிய மற்ற ப்ரஜாபதிகளை அந்த வ்யாபாரங்களை நடத்தும்படி நியோகித்தார். இருபத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

—••◆{ ப்ரசேதஸர்கள் தக்ஷரை ராஜ்யத்தில் ஏற்படுத்தி வனத்திற்குப் போதல். }◆••—

மைத்ரேயர் சொல்லுகிறார்:—அந்த ப்ரசேதஸர்கள் அனேகமாயிரமாண்டுகள் ராஜ்யபாரம்செய்து அப்பால் விரைவில் விவேகம் உண்டாகப்பெற்றுப் பகவானுடைய வார்த்தையை நினைத்துப் பார்யையைப் புதல்வனிடம் ஒப்புவித்து இல்லற வாழ்க்கையைத் துறந்து சென்றார்கள். அவர்கள் ஸர்வாந்தர்யாமியான பகவானுடைய ஸ்வரூபத்தை அனுஸந்திக்கையாகிற ஜ்ஞான யஜ்ஞத்தினால் அவனை ஆராதிக்கவேண்டுமென்று ஸங்கல்பித்துக்கொண்டு, மேற்கு ஸமுத்ரக்கரையில் ஜாஜலி மஹர்ஷி முக்தி அடைந்த இடத்திற்குப் போய்ச் சேர்தார்கள். அவர்கள் ஆஸனத்தை ஜயித்து மூலாதாரம் முதல் சிறிதும் கோணுமல் சரீரத்தை நேராக நிறுத்தி உட்கார்ந்து ப்ராணன் மனம் வாக்கு கண் இவைகளையும் வென்று பரிசுத்தனை பரம புருஷனிடத்தில் ஆத்ம ஸமர்ப்பணம் செய்து அவனையே த்யானித்துக்கொண்டிருக்கையில், தேவதைகளாலும் அஸுரர்களாலும் புகழத்தகுந்த மஹானுபாவராகிய நாரத முனிவர் அவர்களைக் கண்டார். அந்த ப்ரசேதஸர்கள் நாரதர் வந்ததைக்கண்டு எழுந்து நமஸ்கரித்துக் கோத்ர ஸூத்ராதிகளைச் சொல்லி விதியின்படி பூஜித்து ஆஸனம் அளித்து, அதில் அவர் ஸுகமாக உட்கார்ந்திருக்க இங்ஙனம் மொழிந்தார்:—'தேவரிஷீ! உமக்கு நல்வரவா? இப்பொழுது நீர் எங்களுக்குத் தெய்வாதீனமாய்க் காணப்பட்டீர். ஸூர்யனைப்போல் நீர் உலகங்களின் க்ஷேமத்திற்

காக ஆங்காங்கு ஸஞ்சரிக்கின்றீர். வல்லவரே! சிவனும் ஸ்ரீமஹாவிஷ்ணுவும் முன்பு எங்களுக்கு ஆத்ம தத்வத்தை உபதேசித்தார்கள். நாங்கள் நெடுநாளாய் ஸம்ஸாரத்தில் உழன்றுகொண்டிருந்தோமாகையால் அது மறந்துபோய் விட்டது. தாண்டமுடியாத ஸம்ஸார ஸாகரத்தை நாங்கள் அனாயாஸமாகத் தாண்டும்படி, மறந்துபோன தத்வங்களின் உண்மையையும் புருஷார்த்தங்களின் ஸ்வரூபத்தையும் அறிவிக்கிற வேதாந்த சாஸ்த்ரத்தை எங்களுக்கு விளங்க உபதேசிப்பீராக" என்றார்கள். உத்தம ச்லோகனான பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடைய நாரத முனிவர் பகவானை மனனம்செய்யுந் தன்மையுள்ள அந்த ராஜகுமாரர்களுக்கு இங்ஙனம் மொழிந்தார்:—"ப்ராணிகளுடைய பிறவி செயல் வாழ்நாள் மனம் வாக்கு இவை பரம புருஷனைப் பணிவதற்கு உபயோகப்படுமாயின் அவையே பயன்பெற்றவையாம். மேலான ஜாதியில் பிறவியும் உபநயனப் பிறவியும் யாக தீக்ஷைகளால் உண்டாகும் பிறவியும் ஆகிய மூன்றும் பகவானைப் பணிவதற்கு உபயோகப்படாவிடின் அவற்றால் ஸாதிக்கவேண்டிய வேறு ப்ரயோஜனம் என்ன விருக்கின்றது? ஜ்யோதிஷ்டோமம் முதலிய யஜ்ஞாதி கர்மங்களும், தேவதைகளைப்போல் நெடுநாள் ஜீவித்திருக்கையும் பெரிய நற்குலத்தில் பிறக்கையும், தவமும், பேசுந்திறமையும், நினைவுகளும், ஸாமர்த்யமுடைய புத்தியும், தேஹ பலமும் இந்த்ரிய சக்தியும், யோகாப்யாஸமும், ஆத்ம ஜ்ஞானமும், துறவறமும், வேதாப்யாஸமும், மற்றும் பல நன்னெறிகளும், தன்னைப் பற்றினருடைய ஸம்ஸார பந்தத்தைப் போக்கித் தன்னைக் கொடுக்கவல்லனான பரம புருஷனுடைய ஆராதனத்திற்கு உபயோகப்படாவாயின், அவற்றால் என்ன ப்ரயோஜனம்? வாஸ்தவத்தை ஆராய்ந்தால் பரமாத்மாவான பரம புருஷனே ஸமஸ்த நன்மைகளுக்கும் கடைசி யெல்லை. அவனே ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அன்பிற்கிடமானவன்; அவர்களுக்கு அந்தராத்மாவாயிருப்பவன்; அவன் விரும்பினவர்க்குத் தன்னையுங்

கொடுப்பான் என்றால் மற்ற நன்மைகளை அவன் கொடுப்பது ஓரற்புதமோ? வ்ருக்ஷத்தின் வேரில் ஜலம் கொட்டினால், அதனால் அதன் அடிப்பாகமும் பெருங் கிளைகளும் சிறு கிளைகளும் அவற்றிலுள்ள இளஞ்சிறு கிளைகளும் தளிர் இலை பூ காய்களும் த்ருப்தி அடைவதுபோலவும், ப்ராணாஹுதியால் (போஜனத்தினால்) ஸமஸ்த இந்த்ரியங்களும் த்ருப்தியடைவதுபோலவும், பகவானுடைய ஆராதனத்தினால் ஸமஸ்த தேவதைகளும் ஆராதிக்கப்பெற்றவராவார்கள். மழை காலத்தில் ஸூர்யனிடத்தினின்று ஜலம் உண்டாகின்றது. வெயிற் காலத்தில் மீளவும் அவனிடத்திலேயே போய்ச்சேருகின்றது. அசையும் பொருளும் அசையாப் பொருளுமாகிய ஸமஸ்த பூதங்களும் பூமியிலேயே உண்டாகின்றன. அதிலேயே மறைகின்றன. அங்ஙனமே ப்ரபஞ்சமெல்லாம் பகவானிடத்தினின்றே உண்டாகின்றது; அவனிடத்திலேயே மறைகின்றது. அந்த ப்ரபஞ்சமெல்லாம் பரமாத்மாவுக்கு வாஸஸ்தானமாயிருக்கும். ஸூர்யனுடைய கிரணங்கள் அவனை விட்டுப் பிரியாதிருப்பது போல இதுவும் அவனை விட்டுப் பிரியாதிருக்கும். இந்த ப்ரபஞ்சம் ஸ்ருஷ்டி தசையில் ஸ்தூலாகாரமாய்த் தோற்றுகிறது. ஸம்ஹார தசையில் ஸூக்ஷ்ம தசையை அடைந்திருக்கும். இவ்வளவேயன்றி இந்த ப்ரபஞ்சம் எப்பொழுதும் உள்ளதுதான். ஸ்தூல தசையிலும் ஸூக்ஷ்ம தசையிலும் பரமாத்மா இந்த ப்ரபஞ்சத்தை விடாமல் இதைச் சரீரமாகக்கொண்டிருப்பான். நாம் விழித்துக்கொண்டிருக்கும் பொழுது நமது இந்த்ரியங்கள் தத்தஞ் செயலில் முயற்சி கொள்கின்றன. உறங்கும்பொழுது அவை செயலற்றிருக்கின்றன. அங்ஙனமே இப்த ப்ரபஞ்சமும் ஸ்ருஷ்டி தசையில் தோற்றி ஸம்ஹார தசையில் தோற்றாதிருக்கும். ஆகாயத்தில் மேகம் இருள் வெளிச்சம் இவை ஒருகால் தோற்றி ஒருகால் மறைகின்றன. அங்ஙனமே ஸத்வ ரஜஸ் தமஸ் ஸூக்களென்கிற இச்சக்திகளென்னும் ப்ரவாஹம் (ப்ரபஞ்சமென்னும் ப்ரவாஹம்) பரம புருஷனிடத்தில் ஒருகால்

தோற்றி ஒருகால் மறைகின்றது. அது எப்பொழுதும் அவனுக்குச் சரீரமாயிருக்கும். ஆகையால் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அவனொருவனே அந்தராத்மாயிருப்பவன். காலமும் ஜீவனும் ப்ரக்ருதியும் அவனுக்குச் சரீரமாயிருக்கும். அவன் தன் ஜ்ஞான ப்ரகாசத்தினால் ஸம்ஸாரம் தீண்டப்பெறாதவன்; உலகத்தில் மேன்மையுள்ள ப்ரஹ்மாதிகளுக்கும் ஈஶ்வரனாயிருப்பவன். அப்பரம புருஷனை 'இவனொருவனே ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அந்தராத்மா' என்கிற எண்ணத்துடன் நேரே ஆராதிப்பீர்களாக. அவன் மனத்தின் மூலமாய் விளையும் புத்தி ஸுகம் துக்கம் இச்சை த்வேஷம் முதலிய விகற்பங்கள் தீண்டப்பெறாதவன்; தன்னைப்போன்ற வஸ்து மற்றொன்று மில்லாதவன்; தேஹமே ஆத்மாவென்னும் ப்ரமம் தொலைந்தால் தோற்றுந் தன்மையன்; ஜ்ஞானமே வடிவாயிருக்கப்பெற்றவன்; நித்யாநந்த ஸ்வரூபன்; அத்தகைய ஆநந்தத்தையே குணமாகவுடையவன்; ஆதி நடு அந்த மில்லாதவன். அத்தகையனான பரமபுருஷனை இப்பாவனையுடன் பஜிப்பீர்களாக. ஸமஸ்த பூதங்களிடத்திலும் தயையும், தெய்வாதீனமாய்க் கிடைக்கும் அன்னாதிகளைக் கொண்டு ஸந்தோஷமுற்றிருக்கையும், ஸமஸ்த இந்த்ரியங்களையும் அடக்கியாள்கையுமாகிய இவற்றால் பரம புருஷன் சீக்ரத்தில் ஸந்தோஷம் அடைவான். இந்நிலையில் நின்று விருப்பங்களெல்லாம் தொலைந்து சுத்த மனத்தரான பெரியோர்கள் எப்பொழுதும் பகவானிடத்தில் பக்தி வளரப்பெற்று அவனையே த்யானித்துக் கொண்டிருப்பார்கள். அழியாத பெருந் தத்வமாகிய அப்பரம புருஷனும் அவருடைய பக்தியால் அழைக்கப்பெற்று அவரது மனத்தில் நிலைநின்று 'தான் பக்த பராதீனன்' என்பதை வெளியிட்டுக்கொண்டு அம்மனத்தின் தர்மம் போன்று அங்கேயே அமைந்திருப்பானன்றி அதினின்று சிறிதும் பெயரமாட்டான். மற்றொன்றையும் பொருள் செய்யாமல் பகவானையே பெரும் பொருளாக நினைக்குந் தன்மையுடைய ஸத்புருஷர்கள் அவனுக்கு மிகவும் அன்பிற்

கிடமாயிருப்பார்கள். அவன் அவர்களோடு கலந்து பரிமாறுகையால் விளையும் ஆநந்தத்தின் ரஸம் அறிந்தவன். கல்வி செல்வம் குலம் செயல் இவைகளால் பெரிய மதங்கொண்டு விவேகங்கெட்டு, ஈஸ்வரனையே எல்லாவுறவு முறையுமாகப் பற்றித் தமக்கென்று ஒரு கைம்முதலுமில்லாத ஸத்புருஷர்களை அவமதிக்குந் தன்மையுள்ள கெடுமதியர் செய்யும் பூஜையை அவன் அங்கீகரிக்க மாட்டான். தன் பக்தர்களுக்கு விதேயனாகிய அப்பரம புருஷன் தன்னையே அநுஸரித்திருக்குந் தன்மையளான ஸ்ரீ மஹாலக்ஷ்மியையும் அவளைப் பணிந்து அவளருளை விரும்புகின்ற ராஜாதிராஜரான மானிடவர்களையும் அத்தகைய தேவதைகளையும் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டான். அவன் ஸ்வயமாகவே நிறைவாளனாயிருப்பவன். இங்ஙனம் பக்தவத்ஸலனான ஸர்வேஸ்வரனை ருசியறிந்தவன் எவன்தான் பணியமாட்டான்? நீங்கள் அவனையே பணிவீர்களாக" என்றார். விதுரனே! ப்ரஹ்மாவின் புதல்வராகிய நாரத முனிவர் இவையும் மற்றும் பலவகையுமான பகவத் கதைகளை ப்ரசேதஸர்களுக்குச் சொல்லி ப்ரஹ்மலோகம் போனார். அப்பால் அவர்களும் உலகங்களின் பாபங்களையெல்லாம் போக்குந் திறமையுடையதான பகவானுடைய புகழை நாரத முனிவர் மூலமாய்க் கேட்டு அவனுடைய பாதாரவிந்தங்களையே த்யானித்துக்கொண்டிருந்து, கடைசியில் அவனுடைய லோகத்தை அடைந்தார்கள், விதுரனே! நாரதருக்கும் ப்ரசேதஸர்களுக்கும் நடந்த ஸம்வாதமென்னும் வ்யாஜத்தினால் உனக்கு ஹரி கீர்த்தனத்தை மொழிந்தேன். ப்ரசேதஸர்களைப்பற்றியல்லவோ நீ என்னை வினவினை. அதையெல்லாம் இதில் உள்ளடக்கிச் சொன்னேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பரீக்ஷித்து மன்னவனே! ஸ்வாயம்புவ மனுவின் புதல்வனாகிய உத்தானபாதனுடைய வம்சத்தை இங்ஙனம் உனக்கு மொழிந்தேன். இனி அவ்

வுத்தானபாதனுடைய தம்பியாகிய ப்ரியவ்ரதனது வம்சத்தைச் சொல்லுகிறேன், கேள். இவ்வம்சம் அரசர்களால் மிகவும் புகழ்பெற்றிருக்கும். இந்த ப்ரியவ்ரத மன்னவன் முதலில் ஸம்ஸாரத்தில் விரக்தியால் காட்டிற்குச் சென்று அங்கு நாரதரிடம் ஆத்மவித்யோபதேசம் பெற்று மீளவும் ராஜ்யத்திற்கு வந்து பூமியைப் பாதுகாத்துக்கொண்டிருந்து கடைசியில் புதல்வர்களுக்கு ராஜ்யத்தைப் பங்கிட்டுக் கொடுத்துப பகவானுடைய லோகத்தை அடைந்தான். பகவானுடைய குணங்களும் பாகவதர்களின் கதைகளும் நிறைந்து ரமணீயமான இந்த வ்ருத்தாந்தத்தையும் மைத்ரேயர் சொல்லக்கேட்டு விதுரர் மிக்க மனோபாவத்துடன் கண்ணீர் பெருக்கி மனங்கலங்கி மைத்ரேய முனிவரது பாதாரவிந்தங்களைச் சிரத்தினால் தரித்து வணங்கி ஸ்ரீ ஹரியின் பாதாரவிந்தங்களை மனத்தில் த்யானித்துக்கொண்டிருந்தார். மீளவும் அவ்விதுரர் மைத்ரேய முனிவரைப் பார்த்து 'அப்பனே! யோகிகளில் சிறந்த மைத்ரேய மஹர்ஷி! நீர் கருணைகூர்ந்து ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தினின்றும் ஆத்மாக்களை ஏழைகளுக்கெளியனான பரமபுருஷன் விளங்கும் தேசமாகிய அக்கரையிலேற்றுவிக்கவல்ல அருமையான உபாயத்தை இங்ஙனம் எளிதில் எடுத்துக்காட்டினீர்' என்று மொழிந்து அம்முனிவரை நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு நிலைநின்ற மனமுடையவராகிப் பந்துக்களைப் பார்க்க விரும்பி ஹஸ்தினபுரத்திற்குப் போனார். ராஜனே! பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடைய மஹானுபாவரான ஸ்வாயம்புவமனு முதலிய அரசர்களைப்பற்றின இந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்கிறவன், ஆயுள் பணம் புகழ் ஐச்வர்யம் மோக்ஷம் இவைகளையெல்லாம் பெறுவான். முப்பதாவது அத்யாயம் முற்றிற்று.

நான்காம் ஸ்கந்தம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீக்ருஷ்ணாய நம: